உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.





# சிவரகசியம்

திரியாங்கிசை.

திருவாரூர்

ஸ்ரீலஸ்ரீ

## ஒப்பிலாமணிதேசிகரவர்கள்

அருளிச்செய்தது.

இஃது,

சேற்றூர்ச்சமஸ்தானவித்துவான்

## அருணாசலக்கவிராயரால்

பரிசோதித்து

திருச்செங்கோடு

அ. முத்துசாமிக்கோனரது

"சுப்பிராயக்கவுண்டர்" அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை ரூபா-௪.

ஜய-ஸ்ரீ ஆனி-மீ ௧௧-உ.

சிவமயம்.

# முகவுரை.



சிவரகசியம் என்பது இலட்சங் கிரந்தமுடைய பரமேதிகாசம் எனப்பெயர்பெறும். இதிகாசம் பாரதராமாயணங்களாம். இதிகாசங்களினும் பரமேதிகாசம் உயர்ந்ததென்பது சொல்லாமே யமையினும், இந்தப்பரமேதிகாசம் பரமபதியாகிய ஸ்ரீசிவபெருமான் உமாதேவியாருக்கு உபதேசித்தருளிய மகிமையை மேற்கொண்டதென்பது விசேடமாம். காந்தபுராணத்துள் சிவரகசியமென்பதொன்றுளது. அது சிவரகசிய கண்டமெனப்பெயர்பெறும். புராணாந்தர்க்கதமாகியசிவரகசியத்துக்கும், இதிகாசமாகிய சிவரகசியத்துக்கும் பேதமுணராது பெரும்பாலார் மயங்குகின்றனர். ஈண்டு யானுணர்த்தப் புகுந்த இதிகாசமாகிய சிவரகசியம் பன்னிரண்டு அமிசங்களை யுடையது. இவற்றுள், மூன்றாவது அமிசமே தமிழில் பத்தியரூபமாக மொழிபெயர்க்கப்பட்டது. இதற்கு ஆக்கியோர் சிவானுபூதிச்செல்வராய்த் திருவாரூரி லெழுந்தருளியிருந்த ஸ்ரீ ஒப்பிலாமணி தேசிகரவர்களென்றறிக. இப்பெருந்திருவாளர் - ௪௦௯௦ - பாடலிலமைத்த சிவரகசியப்பெருநூல் இரண்டுகாண்டங்களாக வகுக்கப்பட்டுத் திரியாங்கிசை என்று பிரசித்தியடைந்திருக்கின்றது. இந்தநூல் தஞ்சையில் ஸ்ரீ சரபோஜிமகாராஜா அவர்களது திவ்யசமுகத்தில் அரங்கேற்றப்பட்டது. நிற்க.

இதில், ஸ்ரீ சிவபெருமானது பரமகாரணத்வமும், அவர் ஆன்மாக்களிடத்தில் நடத்தும் பஞ்சகிருத்யப் பிரசங்கமும், அவரை மெய்யடியார்கள் வழிபட்டுய்யு மார்க்கங்களாகிய சரியை கிரியை யோக ஞான விவரணமும், அவற்றுள், சிவபூஜை-சிவனடியார்சேவை-பிரதோஷமகிமை-பஞ்சாக்கரமகிமை - வில்வமகிமை சிவநாமவைபவம்-ஸ்ரீருத்ரமான்மியம்-நமகசமகப் பிரபாவம்-வேதாகமவைபவம்-பக்திவைராக்கியவிசேடம்-மகேசுவரபூஜாபத்ததி-சிவார்ச்சனைவிகிதபுஷ்பவிதி-சிவவிரதம்-ஜெபம்-தபம்-மந்திரம்-கிரியை-பாவனை-தியானம்-தீர்த்தம்-தலம்-மூர்த்தி-திரிபதார்த்தபோத சங்கிரகம் முதலிய பலவிஷயங்களும், இவ்வழிநின்று சிவப்பிரசாத மெய்தினோ ரின்னோரென்பதும், இவைகளை அனுட்டிக்கத் தக்கவர் இவர் அனுட்டிக்கத்தகாதவர் இவர் என்னும்வியவஸ்தையும் அடங்கியுள்ளன.

இவ்வரிய சைவநூலை அச்சிட்டு வெளிப்படுத்துதல் சிவபுண்ணியமெனக்கருதி ஏட்டுப்பிரதிகளுக்கு அடியேன் முயற்சித்து வருகையில், திருநெல்வேலியில் ஸ்ரீ அனவரததானநாதர் வாயில் வித்வானவர்களாகிய தெற்குப்புதுத்தெரு கனந்தங்கிய ம-ா-ா-ஸ்ரீ, **நெல்லையப்பகவிராஜ**ரவர்கள் நான்கு பிரதிகள் சம்பாதித்துக்கொடுத்தார்கள். அவைகளையும், அடியேனிடத்தில் முன்பேயுள்ள திருக்கயிலாய பரம்பரைத்திருவாவடுதுறை யாதீனத்துச் சுத்தப்பிரதியையும் வைத்துக்கொண்டு மேற்படி கவிராஜரவர்களது சமுகத்திலேதானே ஒப்புமைநோக்கிப் பரிசோதித்து ஒழுங்குசெய்தேன், இவ்வாறு பரிசோதித்து ஒழுங்கு செய்கையில் மேற்படி தெற்குப் புதுத்தெருவில், கல்வியறி வொழுக்கங்களான் மாட்சிமைதங்கிய ம-ா-ா-ஸ்ரீ, **பால்வண்ணமுதலியா**ரவர்களும், அடியேனோடு கல்விபயின்ற துணைவரும், திருநெல்வேலி இந்துகாலேஜ் தமிழ்ப்பண்டிதருமாகிய ம-ா-ா-ஸ்ரீ, **அநந்தகிருஷ்ணகவிராய**ரவர்களும் தக்கவாறு உதவிசெய்தார்கள்.

பின்னர் இந்த நூலை அச்சிடுவதற்குத் திரவியோபகரணமுண்டாகும் விதமெப்படியென்று யோசித்துக் கொண்டிருக்கையில், உடுமலைப்பேட்டை போர்டுஸ்கூலில் தமிழ்ப்பண்டிதராயிருக்கும் என்னுடைய கனிஷ்ட சகோதரர் சிரஞ்

சீவி கந்தசாமிக்கவிராயரது நன்முயற்சியால் சேலம்ஜில்லா காட்டுப்பாளையம் மிட்டாதார் ம-ா-ா-ஸ்ரீ, இராஜாக்கவுண்டரவர்களும், ஷை ஜில்லா சங்ககிரி மிட்டாதார் ம-ா-ா-ஸ்ரீ, சுப்பராயக்கவுண்டரவர்களும் தக்கவாறுபொருளுதவி செய்தார்கள். இவ்வுதவி கிடைத்தவுடனே அடியேனது குலகுருவாகிய திருவாவடுதுறையாதீனம் ஸ்ரீலஸ்ரீ, அம்பலவாணதேசிகசுவாமிகள் சந்நிதிக்கு விண்ணப்பஞ்செய்தேன். அன்றியும், அடியேனையும் அடியேனது முன்னோரையும்பின்னோரையும் தமது சமஸ்தானத்துப் பிரதமவித்வான்களாகவைத்து ஆதரிக்கின்ற சேற்றூர்மகாகனந்தங்கிய ஸ்ரீசுந்தரதாசபாண்டிய மகாராஜா அவர்கள சமுகத்துக்குந்தெரியப்படுத்திக் கொண்டேன். இந்த இரண்டிடங்களி லிருந்துங்கூடிய வுதவிகிடைத்தது. மேலும், எளியேன் எடுத்துக்கொண்ட நன்முயற்சிகளெல்லாம் இனிதுமுடியும் வண்ணம் அவ்வக்காலங்களில் தக்கவுதவிசெய்துவரும்சிவகாசி ம-ா-ா-ஸ்ரீ, அ. சு. வேலாயுதம்பிள்ளையவர்களும், ஷையூர் ம-ா-ா-ஸ்ரீ, வெண்டர் ஆறுமுகம்பிள்ளையவர்களும், ஷையூர் ம-ா-ா-ஸ்ரீ, சிவஞானவுபாத்தியாயரவர்களும், திருச்செங்கோடு "விவேகதிவாகரப்" பத்திராதிபர் மகா-ா-ா-ஸ்ரீ, அ. முத்துசாமிச்சோனாரவர்களும், தங்கள் தங்களாலியன்றவளவில்பொருளுதவிசெய்தார்கள். இவ்வாறுகிடைத்த பேருதவியால் முன்பு பரிசோதித்து ஒழுங்குசெய்துவைத்த இச்சிவரகசியப் பெருநூலை அச்சிற்பதிப்பித்து முடித்தேன். இங்ஙனம் அச்சிற்பதிப்பித்துவருகின்றது திருவிடைமருதூர் ம-ா-ா-ஸ்ரீ, கோவிந்தசாமி யுபாத்தியாயரவர்களாலே மதுரைச்சில்லா கொத்தமங்கலத்தில் சிவபத்தி குருபத்தி அடியார்பத்திகளிற்சிறந்து விளங்கும் ம-ா-ா-ஸ்ரீ, சி. ரா. ம. அ. இராமன்செட்டியாரவர்கள் தெரிந்து சிவரகசியம் சீக்கிரம்பதிப்பித்து வெளியேற்றினால் பரமசாதுக்களுக்குத் தானஞ்செய்யும்பொருட்டு 70-புத்தகம் விலைக்கு வாங்கிக்கொள்கிறேனென்று ஒரு ஆப்தவாக்கியபாசுரமெழுதியனுப்பினார்கள். இன்னோரென்னவர்களன்றோ சிவபுண்ணியசீலத்திற்சிறந்தவர்கள். நிற்க. சைவசித்தாந்தவுண்மைநூலுணர்ச்சியிற்றெளிந்தபுலவர் பெருமான்களாற் பரிசோதித்து அச்சிற்பதிப்பித்தற்குரிய இந்நூலைக் கல்லாதவரிற்கடையனாகிய அடியேன் சிவத்தொண்டாகக்கருதி அச்சிற்பதிப்பித்து வெளிப்படுத்தினேனாகையால் இதனைப் பேரதிகாரங்களைப் பெரிதுமுணர்ந்த பெரியோர்கள் குறைகூறாரென்க. இந்நூலிலெளியேனால் விடுபட்டுப்போன பிழைகளையும், அவற்றின்றிருத்தங்களையும் பெரியோர்கள் கருணையோடு தெரிவிப்பார்களாயின், அவர்களாஞ்ஞையைச்சிரமேற்றாங்கி இரண்டாம் பதிப்பிலெல்லாருக்கும் பயன்படும்படி பதிப்பித்து விடுகிறேன்.

இச்சிவரகசிய நூலைப் பிறர்க்குத்தானமாக ஈந்தோருந் தம்மிடத்துச்சேமித்துவைத்துப் பூசித்தோரும், எழுதிவைப்பதற்கு ஏற்ற சாதனமாகிய சிற்சிலகருவி கொடுத்தோரும் சிவலோகத்திற்சென்று பன்னெடுங்காலம் சகலபோகத்துடனுங்கூடி வாழ்ந்திருப்பார்களென்பது சத்தியம்! சத்தியம்!! சத்தியம்!!!

இங்ஙனம்,

மு. ரா. ம. அருணாசலக்கவிராயன்.

சிவகாசி.

# சருக்க அகராதி


| பக்கம். | சருக்கங்களின்பெயர். | பாடற்றொகை. |
|---|---|---|
| ககச | அபுத்திபூருவசிவபுண்ணியச்சருக்கம் ... ... | உகூ |
| உடு௫ | ஆயுத்தேவச்சருக்கம் ... ... ... ... | உஉ |
| கரு௫ | இராசேந்திரச்சருக்கம் ... ... ... ... ... | டுக |
| அஅ | உருத்திரவீணைவரலாற்றுச்சருக்கம் ... ... ... | டுச |
| சகக | உருத்திராத்தியாயவியாக்கியானச்சருக்கம் ... ... ... | சஅ |
| கஎ௰ | உற்பத்திகாரணச்சருக்கம் ... ... ... | டுஉ |
| ௫க | கணபதிகுமரன்றேவியைக்கண்டசருக்கம்... ... ... | கஎ |
| சடு | கணபதிமறுத்துரைத்தசருக்கம் ... ... ... ... | கஎ |
| சரு | கணபதியுடன்கடவுளுத்தரச்சருக்கம் ... ... ... | க௫ |
| ச௰ | கணபதிவர்த்தனைச்சருக்கம் ... ... ... | உகூ |
| சஎ | கத்தரிப்பூவருச்சனைச்சருக்கம்... ... ... ... | சரு |
| ககூ | காயத்திரிவரம்பெற்றசருக்கம் ... ... ... | டு௰ |
| டுஅச | காலாக்கினிச்சருக்கம் ... .. ... ... | கூ |
| உச௰ | கீர்த்திகேதுச்சருக்கம் ... ... ... ... | டுஎ |
| கச௫ | கும்பமுனியுத்தரச்சருக்கம் ... ... ... .. | உஎ |
| டுருக | கூர்மச்சருக்கம் ... ... ... ... ... | சரு |
| கஎஎ | சதானந்தச்சருக்கம் ... ... ... ... | சஅ |
| கூஉ | சத்தியலோகச்சருக்கம் ... ... ... ... | உஎ |
| சசஎ | சத்தியவிரதருத்தரச்சருக்கம் ... ... ... | ௫டு |
| கஎச | சனகன்மனைவிசாரச்சருக்கம் ... ... ... | உஅ |
| சஉச | சாம்பவவிரதச்சருக்கம் ... ... ... ... | கஉஎ |
| சச௰ | சாம்பவவிரதவுத்தியாபனச்சருக்கம் ... ... ... | கூடு |
| டுஎ௰ | சாரணைசொற்டணபூசைச்சருக்கம் ... ... ... | ச௫ |
| உச௫ | சித்திரகுத்தர்பிரலாடச்சருக்கம் ... ... ... | டுக |
| டுகடு | சித்திரகேதுநாட்டுச்சருக்கம் ... ... ... | டுகூ |
| டுஉஎ | சித்திரகேதுமகிமைச்சருக்கம் ... ... ... | உகூ |
| கஉ௫ | சிலாதரன்சமகவரங்கேட்டசருக்கம் ... ... | சகூ |
| ௫டு | சிவகணவுத்தரச்சருக்கம் ... ... ... | உஉ |
| [illegible] | சிவ[illegible]டாலன்முத்திபெற்றசருக்கம் ... | எஅ |
| கூஉ | சிவதன்மாதன்மச்சருக்கம் ... ... ... | டுச |
| ககூச | சிவதர்மமகிமைச்சருக்கம் ... ... ... | உ௰ |
| ௫உஅ | சிவரகசியமான்மியச்சருக்கம் ... ... ... | சஉச |
| கக | சிவரகசியவரலாற்றுச்சருக்கம்... ... ... ... | சடு |
| அஉ | சிவனடியார்தரிசனமகிமைச்சருக்கம் ... ... ... ... | சச |
| உகூரு | சிவனுமமகிமைச்சருக்கம் ... ... ... ... | கூச |
| ௫கூ | சுகமுனிச்சருக்கம் ... ... ... ... | சஎ |
| கருக | சூரசேனச்சருக்கம் ... ... ... ... | உஉ |
| டுடுக | சேடன்வந்தசருக்கம் ... ... ... . | சக |
| எஎ | சைவர்பரிகலப்பிரசாதமகிமைச்சருக்கம் ... ... | டுஅ |
| உ௫௫ | ஞானவாலனுற்பத்திச்சருக்கம் ... ... ... | ௫௰ |
| உஎரு | ஞானவாலன்கல்யாணச்சருக்கம் ... ... ... | ௫[illegible] |
| உஎடு | ஞானவாலன்கல்யாணநிராசைச்சருக்கம் .. ... | டுஅ |
| [illegible] | ஞானவாலன்[illegible]சருக்கம் ... ... ... | [illegible] |

| பக்கம். | சருக்கங்களின்பெயர். | பாடற்றொகை. |
|---|---|---|
| ௧௪௬ | தக்கன்மகமழித்தசருக்கம் | ௪௧ |
| ௧௪௨ | தக்கன்வேள்விச்சருக்கம் | ௨௭ |
| ௭௧ | தண்டிகணாதிபன்வந்தனைச்சருக்கம் | [illegible] |
| ௪௫ | தாருகன்கதையுரைத்தசருக்கம் | ௩௫ |
| ௱௨ | தேவர்முறையிடுசருக்கம் | [illegible] |
| ௩௰ | தேவர்முனிவர்காட்சிச்சருக்கம் | [illegible] |
| ௭௫ | தேவிசிவனைப்பொருந்தினசருக்கம் | [illegible] |
| ௩௪ | தேவிநாட்டியம்பார்த்தசருக்கம் | ௨௯ |
| ௩௩ | தேவிமேருகயிலையுற்றசருக்கம் | ௨௩ |
| ௨௮ | தேவிமேருவரையைச்சார்ந்தசருக்கம் | [illegible] |
| ௨௫ | தேவியிமயம்விட்டெழுந்தருளியசருக்கம் | [illegible] |
| ௫௩ | தேவியுடன்குமாரருத்தரச்சருக்கம் | [illegible] |
| ௨௱௧ | நதிகள்வரம்பெற்றசருக்கம் | [illegible] |
| ௩௮ | நந்திகணங்களாலோசனைச்சருக்கம் | [illegible] |
| ௱௪ | நந்திகேசுரர்தேவர்க்கருள்புரிசருக்கம் | [illegible] |
| ௧௧௨ | நந்திகேசுரர்நமனுக்குப்புத்திசொன்னசருக்கம் | [illegible] |
| ௨௨௪ | நாரதருபதேசச்சருக்கம் | [illegible] |
| ௫ | நைமிசாரணியச்சருக்கம் | [illegible] |
| ௱௭ | பசாசுமோசனச்சருக்கம் | [illegible] |
| ௧௨௨ | பலிபீடவன்னமகிமைச்சருக்கம் | [illegible] |
| ௩௫௱ | பற்மாவதிச்சருக்கம் | [illegible] |
| ௧௧௬ | பாக்கியதேவதைச்சருக்கம் | [illegible] |
| ௧ | பாயிரம் | ௧ |
| ௨௨௱ | பாவநாசச்சருக்கம் | [illegible] |
| ௨௩௧ | பாவரூபமோசனச்சருக்கம் | [illegible] |
| ௧௩௪ | பாவனலிங்கச்சருக்கம் | [illegible] |
| ௪௱௱ | பிரவஞ்சவுற்பத்திச்சருக்கம் | [illegible] |
| ௩௱௫ | பிருங்கியுத்தரச்சருக்கம் | [illegible] |
| ௪௮௪ | புலோமைச்சருக்கம் | [illegible] |
| ௨௱௭ | பூசாயோக்கியவனச்சருக்கம் | [illegible] |
| ௩௱௮ | பெண்மணிசிவபூசைச்சருக்கம் | [illegible] |
| ௩௪௬ | பெண்மணியுபதேசம்பெற்றசருக்கம் | [illegible] |
| ௨௮௮ | பெண்மணிவயிராக்கியச்சருக்கம் | [illegible] |
| ௩௨௩ | மந்திரமூர்த்திகள்பூசைச்சருக்கம் | [illegible] |
| ௩௧௮ | மந்திரமூர்த்திச்சருக்கம் | [illegible] |
| ௨௧௭ | மறலியுத்தரச்சருக்கம் | [illegible] |
| ௩௬௮ | மன்மதபூசைச்சருக்கம் | ௫௩ |
| ௫௱௪ | மாரதன்பூசைச்சருக்கம் | [illegible] |
| ௬௫ | மானதபூசைச்சருக்கம் | [illegible] |
| ௧௱௮ | மிதிலைச்சைவநெறிவிளக்கச்சருக்கம் | [illegible] |
| ௧௯ | மேருச்சருக்கம் | [illegible] |
| ௧௫௩ | வசிட்டருத்தரச்சருக்கம் | [illegible] |
| ௫௧௱ | வருணைச்சருக்கம் | [illegible] |

| பக்கம். | சருக்கங்களின்பெயர். | பாடற்றொகை. |
|---|---|---|
| ௪௱௪ | வருணராசச்சருக்கம் ... ... ... ... | ௩௬ |
| ௧௯௰ | வாரீசலோசனைச்சருக்கம் ... ... ... | ௩௰ |
| ௪௫௭ | வானரங்கள்பூசைச்சருக்கம் ... ... ... ... | ௬௰ |
| ௩௪௩ | விசுவாசிபூசைச்சருக்கம் ... ... ... | ௪௮ |
| ௨௯௪ | 1விசுவாவசுச்சருக்கம் ... ... ... | ௩௮ |
| ௩௭௬ | 2விசுவாவசுச்சருக்கம் ... ... ... ... | ௬௧ |
| ௬௭ | விசையைசெயையுத்தரச்சருக்கம் ... ... ... ... | ௩௬ |
| ௩௩௭ | விட்டுணுவந்தனைச்சருக்கம் ... ... ... ... | ௫௪ |
| ௨௪௯ | விந்தமன்னவன்சருக்கம் ... ... ... ... | ௨௩ |
| ௪௪௯ | வியாக்கிரச்சருக்கம் ... ... ... ... | ௬௨ |
| ௪௭௪ | வில்வவனச்சருக்கம்... ... ... ... ... | ௭௮ |
| ௨௱ | வீரசித்துச்சருக்கம் — ... ... ... ... | ௪௩ |
| ௨௧௧ | வீரசித்துவிரத்தவயிராக்கியச்சருக்கம் ... ... ... | ௪௯ |
| ௨௨௧ | வீரசித்துவுற்பத்திச்சருக்கம் ... ... ... | ௨௪ |
| ௧௮௫ | வீரேசுரச்சருக்கம் ... ... ... ... | ௫௨ |
| ௧௩௧ | வேதபாதச்சருக்கம் ... ... ... ... | ௨௰ |


நைமிசாரணியச்சருக்கத்துடன் சருக்கம்-௧0௧-க்குத்
திருவிருத்தம். ஆ ௪0௮௯-காப்பு-௧-ஆ ௪0௯0.



கையொப்பஞ்செய்தகனவான்கள்:

ஸ்ரீவில்லிபுத்தூர்த்தாலூக்கா குன்னூர்

ம-ள-ள-ஸ்ரீ, வித்துவான் குமாரசுவாமிமுதலியாரவர்கள்.

சிவகாசி.

" சப்ரிஜஸ்தரார் கணபதி அய்யரவர்கள்.
" ரிவினியூஇனிஸ்பெக்டர் சுப்பிரமணிய அய்யரவர்கள்.
" கிராமமுனிசிபு சண்முகசுந்தரமுதலியாரவர்கள்.
" போஸ்டுமாஸ்டர் சுப்பிரமணியபிள்ளையவர்கள்.
" பிரமநாயகம்பிள்ளையவர்கள்.
" வீரபத்திரபிள்ளையவர்கள்.
" அ. குழந்தைவேலுப்பிள்ளையவர்கள்.
" மீ. வேலாயுதம்பிள்ளையவர்கள்.
" செகநாத இராஜா அவர்கள்.
" புட்பவனம்பிள்ளையவர்கள்.

கோயமுத்தூர்ஜில்லா புரவிபாளையம் ஜமீன்தார்

" செகமண்டலாதிபதி சந்திரகோப்பணமன்றாடியாரவர்கள்,

ஷை ஜில்லா மாதம்பட்டி

" ஆண்டியப்பக் கவுண்டரவர்கள்.

பால்க்காடு முனிசிபல் சேர்மேன்

" சின்னச்சாமிபிள்ளையவர்கள்.

நத்தம்பட்டி.

" கணக்கு சோமசுந்தரம்பிள்ளையவர்கள்.

அருணாசலபுரம்.

" பொன்னுச்சாமிபிள்ளையவர்கள்.

எட்டயபுரம்.

" க. ஆண்டியப்பபிள்ளையவர்கள்.
" " இராக்கப்பபிள்ளையவர்கள்.

குருவிகுளம்.

" பழனிச்சாமிநாயுடு அவர்கள்.

உடுமலைப்பேட்டை.

" வைக்கீல் பழனியாண்டிப்பிள்ளையவர்கள்.
" " இராமசாமிப்பிள்ளையவர்கள்.
" " மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள்.
" " வேங்கடசுப்பய்யரவர்கள்.
" " சீனிவாசய்யரவர்கள்.
" சோழியக்கவுண்டரவர்கள்.
" குப்பாண்டக்கவுண்டரவர்கள்.
" கந்தசாமிசெட்டியாரவர்கள்.

தூத்துக்குடி.

" ரா. ம. ப. வ. ஏஜண்டு பாடகலிங்கம்பிள்ளையவர்கள்.

திருச்செங்கோடு.

" மாணிக்கவோதுவாரவர்கள்.
" அப்பாவுசெட்டியாரவர்கள்.





உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவரகசியம்

கிரியாங்கிஷ்ச

## முதற்காண்டம்.

### பாயிரம்.

விநாயகர்வணக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பொன்னிமயப்பிடியானை தருமானை முகத்தானைப்பொருவிலானைச்
சொன்னயஞ்சேர்தாரகத்தினுருவானையன்பருளச்சோதியானைச்
சென்னியிலாறுடையானைத்தந்தையெனப்படைத்தானைத்திகழோராறு
மன்னுமுகன்றுணையானைவல்லபையின்பத்தானைவணங்கிவாழ்வாம்.

பரசிவம்.

உலகனைத்துமுளனாகியிலனாகியுண்மையாயுலப்பிலாறு
யலகிலுயிர்க்குயிராகியற்புதமாயாரமுதாயறிவுற்றோர்பா
னிலவியமர்ந்தனுபூதிநெறிவிளங்கவிளங்கவவர்நேயத்துள்ளே [ம்.
குலவியபேரொளியாகுங்கோமானைக்குணக்குன்றைக்குறித்துவாழ்வா

நடேசர்.

அருமறையதனுலளப்பதற்கரிதாயகண்டிதானந்தநல்வடிவாய்
மருவுபேரொளியாய்மதிப்பதொன்றாகாமனமணிவிளக்கதாய்மயறீர்ந்
தருகுமெய்யன்பருளநடம்புரிந்தேயொழிவறாதெங்கணுமேவித்
தெருளதாயருளம்பலத்தினின்றாடுஞ்சேவடிசென்னிசேர்த்திடுவாம். ()

உமையவள்.

உருவமாயருவாயுணர்வுமாயொழியாதொளிருநல்வியோமமுமாகி
மருவுமாமாயைபரையுமாயுலகின்மதிக்குமெய்ப்பொருளுமாயகண்ட
சொரூபமாயொன்றாயறிவுறாதொளிருஞ்சுயம்பிரகாசமாயடியார்
கருவுறாதருளாற்காத்தருள்புரியுங்கவுரிதன்கருணையேபணிவாம். (௩)

விநாயகர்.

பவளவரைச்சிகரமதிற்பயிறருவெண்பிறைபோலப்பணைகோடோ
ங்கத், தவழருவியெனக்கன்மதநாரைபொழிந்திழிபத்தாமபோலி, ॥

வமையில்சூரியருதித்தாலெனவொளிரவீற்றிருக்குமொருசெஞ்சோதிக்
கவளயானையின்முகத்துக்கணபதிசேவடிக்கமலங்கருத்துட்கொள்வாம்.

வேறு-சுப்பிரமணியர்.

அரவணையவனுமன்னவூர்தியுமறிகிலாத
பரவரும்பொருட்குவேதப்பழம்பொருள்பகர்ந்தகோமான்
குரவணிகுழலாள்வள்ளிக்கொடிபடர்குவவுத்திண்டோட்
சரவணபவன்பொற்பாததாமரைதலைமேற்கொள்வாம். (ரு)

வேறு-திருநந்திதேவர்.

சிலையுடைச்சிலையெம்பிரான்றிகழ்கயிலைக்கண்
ணிலைமைபெற்றிடுங்கணங்களின்முதன்மையுநிகரில்
புலமைபெற்றிடுஞ்சைவதேசிகர்க்கெலாம்பொருவி
றலைமையும்பெற்றநந்திதாடலைமிசைக்கொள்வாம். (சு)

தண்டியடிகள்.

பேதையாகியபிள்ளைநம்பிள்ளைசெய்பூசை
யீதையேதெனவியம்புகேமெனமனத்தெண்ணுன்
கோதையேபுரிகுணத்தொடுங்குடப்பயமுடைத்த
தாதைதாளறத்தண்டித்ததண்டிதாள்பணிவாம். (எ)

திருஞானசம்பந்தர்.

குவிகையேறியமணிமுடிப்பாண்டியன்கூன்போய்க்
கவிகையேறுசிங்காதனத்தேறிடக்கழுவி
லவிகையேறுறவமணர்களேறவெண்டரளச்
சிவிகையேறியகவிஞன்றாள்சென்னியிற்சேர்ப்பாம். (அ)

வர்கீசர்.

கதிருலாவியசடைதொறுங்காலொன்றுதூக்கி
யதிரவீசிநின்றுடியதாண்டவத்தவர்க்கே
மதுரமாதிருத்தாண்டகச்செந்தமிழ்வகுத்த
சதுரனுவினுக்கரையன்றன்சரணமேசரணம். (கூ)

திருநாவலூரர்.

சேனைமேற்கொண்டுசேரனுர்தூசிமுன்செல்ல
வானைமேற்கொண்டதேவர்கள்வணங்கிடக்கயிலைக்
கானைமேற்கொண்டுசென்றவனமுதமாங்கவிதைச்
சோனைமேற்கொண்டசுந்தரமுகில்பதந்தொழுவாம். (க0)

திருவாதவூரர்.

எம்பிரான்வெள்ளையிபநடத்திந்திரன்முதலோ
ரம்பிரானெனத்திரிபுரத்தகிலத்தேர்நடத்து

நம்பிரானரிப்பரிநடத்திடத்தமிழ்நடத்துந்
தம்பிரான்றிருவாதவூரான்சரண்சரணம். (கக)

வேறு-அறுபத்துமூவர்.

குழிதரும்பவப்பவ்வத்தைக்குருலிங்கசங்கமத்தின்
மொழிதிடபத்தியாகுழுந்தியநாவாயினீங்கிச்
சுழிபெறுங்கங்கைவேணிச்சோதிவாழ்கயிலைமேவி
வழிபடுமொன்பதிற்றேழன்பரைவணங்கிவாழ்வாம். (க௨)

திரிகாலத்திருக்கூட்டத்தார்.

சென்றகாலத்திற்பத்திசெய்துமுத்தியினைச்சேர்ந்தோர்
நின்றிடுநிகழ்காலத்தினிமலனுக்கன்புசெய்வார்
துன்றிடுமெதிர்காலத்திற்சேர்பொற்றொண்டுபூண்போர்
மன்றலார்கமலத்தாள்கண்மனத்துஞ்சென்னியிலுங்கொள்வாம். (க௩)

கலைமகள்.

நான்முகனுவின்மேவிநான்மறைவடிவாயின்னந்
தானரும்பொருள்கடோறநடக்கையின்முறையுந்தாங்கித்
தேனலர்கமலப்போதிற்செழித்துவீற்றிருக்குமம்மை
கான்மலர்போற்றிருங்கருத்துறவணக்கஞ்செய்வாம். (கச)

வாழ்த்து.

வானவர்வாழ்கயாகமறையவர்வாழ்கவானுந்
தானமாமழையும்பாருஞ்சைவர்களுந்தழைத்துவாழ்கத்
தேனலர்கொன்றைவேணிச்சிவபிரான்கருணைவாழ்க
வானநல்லடியார்கள்வாழ்கவாசாருமவாழ்கவென்றே. (கரு)

அவையடக்கம்.

கைக்கிரிபோலவுந்தகரியுரித்தாடல்கொண்ட
திக்குடையானைப்போற்றுஞ்சிவகவிபம்யான்செப்பல்
மைக்கடலுடனேமற்றுமாக்கடல்கடந்துசென்றே
நெய்க்கடல்பருகப்போந்தற்றெறும்பினையொக்குமன்றே. (கசு)

கூற்றுதைத்தவன்மேலன்புகொண்டிலோர்குழுகன்றன்சீர்
போற்றுமென்கவிதிக்குற்றம்போக்கியேபுகழ்ந்துகொள்வா
ரேற்றதோர்கலங்கற்றெண்ணீர்செய்திலுமதனைத்தேற்றிச்
சாற்றியபடி[illegible]மே. (கஎ)

மானெடுத்தவரைப்போற்றுமன்பரும்பெரியோர்பெம்மான்சீர்
யானெடுத்துரைத்தசெய்யுளிழிபுதீர்த்தினிதுகொள்வார்
கானெடுத்தநனிலுற்றகடியதோர்தீயும்போக்கித்
தேனெடுத்தருந்துவாரேதேடியிவ்வுலகுளோரே. (கஅ)

அல்லெறிசோதிவானோரமுதுணவிடமுண்டார்க்கென்
சொல்லெறிசொல்லதேனுஞ்சுந்தரமாகக்கொள்வார்
வில்லெறிவேடன்வில்லமெறிந்திடமேன்மைசெய்தார்
கல்லெறிசாக்கியர்க்குங்கருணையேபுரிந்தாரன்றே. (கஅ)

நொடியனவானைத்தேருநுண்ணறிவொன்றுமில்லேன்
முடிவரும்பொருளைச்சற்றேமுன்னினன்மொழிந்துவைத்தேன்
படியுளகாலமெல்லாமபரமனுக்கன்பரான
வடியர்பாராட்டுவாரென்றுரைசையாலடியனேனே. (உம)

நூற்பயன்.

நூற்பெயர்முதனூற்பேரேபுணைந்ததுநுவலுமுன்னூற்
பாற்படுபொருளுஞ்சைவப்பாகுபாடுணர்ந்துநோக்கன்
மேற்பரம்பொருளாமுக்கண்வித்தகன்சரிதம்வேட்கை
யேற்பொடுகேட்போர்பேறுமுத்திவீட்டின்பந்தானே. (உக)

வேறு-நூலியற்றியகாலமுதலியன.

திருமருவுகும்பகோணத்தில்வாழுஞ் செல்வமிகுபலர்சனங்கள்சிவன்பாலன்பர், பொருவில்சிவரகசியபுராணமாகும் பொருந்தும்வடமொழிதமிழாற்புனைவாயென்னத், தருமமிகுதவவணையாஞ்சைவன்றியாகர் சன்னிதியில்வரிசைபெறுந்தலைமைபூண்டோ, னிருமைநல்காரூர்ப்பிறந்தோனாரூரன்சேயிசைகொளொப்பிலாமணிதானிசைத்தவாறே.(உஉ)

மன்னர்புகழ்சரபோசிமகாராசராசன் மாநிலங்காத்திடுநாளிற்றஞ்சைமாநகரிற், றுன்னுமேவிளம்பியுற்றமகரமதியைந்திற்சோதிசிவரகசியமொப்பிலாமணிசொற்றமிழை,யிந்நிலத்தினரங்கேறச்செய்தனர்பொன்மாறையெழில்சேருந்தீராதவினைதீர்த்தான்பாகைப், புன்னைவனநாதனிவர்சைவநெறிவளர்க்கும்பூபாலரவனியெங்கும்புகழினிதோங்கிடவே

திருச்சிற்றம்பலம்.

பாயிரமுற்றிற்று.






உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# நைமிசாரணியச்சருக்கம்.



வேறு.

அற்புதனமலனகண்டிதனனகனனுபமனசலனநந்தன், றற்பரன்சாந்தன்சச்சிதானந்தன்சங்கரன்றத்துவாதீதன், சொற்பதங்கடந்துநின்றருள்சோதிதொண்டனேன்றுயர்துடைத்தாளுஞ், சிற்பரம்பொருளாஞ்சிவனவன் கமலச்சேவடிசென்னிசேர்த்திடுவாம். (க)

அத்திரிமரீசியங்கிராவசிட்டன்கவுசிகனுக்கினவற்கி,
பத்திசேர்வாமதேவன்குச்சரன்விபாண்டகன்பராசரன்கபிலன்
சித்திபெற்றிடுமார்க்கண்டன்பாற்கவன்றதீசியேகாசிபன்பிருகு
புத்திசேர்வைசம்பாயனன்சுசீலன்புலத்தியனகத்தியன்பூதன். (உ)

கங்கைவேணியனேர்பயில்வனமிருகசிருங்கனங்கார்த்தியாயனன்சீர்ப்
பிங்கிருடிப்பேர்முனிவன்வான்மீகன்பெருமைசேராதித்தவன்மன்
றுங்கனுகங்கன்கிஞ்சுகப்பிரியன்றுந்துபிசிலாதரன்சுமுகன்
சங்கரன்றருமன்சத்திசாண்டில்யனுயுட்டிமொன்சதானந்தன். (ங)

கண்ணுவன்சுமந்துகவுதமன்கற்கன்காகுத்தன்காலபத்திரன்மெய்ப்
புண்ணியன்போதாயனன்றுருவாசன்புகழ்பெறுமுரோமசனிடபன்
பண்ணுறுதவத்துமுற்கலன்சுகநற்பத்திரன்கிரீடிபாண்டவியன்
றண்ணளிபெறுமாண்டவிவிசாலாக்கன்சவுனகன்முதலியதவத்தோர். ()

முப்புரிநூலர்குண்டிகைக்கரத்தர்மோனமுத்திரையரஞ்செழுத்தே
வைப்பெனுமனத்தார்பூதிகண்டிகையும்வயங்கியநயங்கொளும்வடிவ
ரிப்புவனத்திலுயிரனைத்துந்தம்மின்னுயிரென்னவேபேணுந்
தப்பிலாநெறியன்புடையவந்தணராசாரசீலத்தர்மெய்த்தவத்தோர்.

குடைகொளுங்கரத்தர்செந்துவின் குலங்கள்குவலயத்திறுமெனக்குந்து, நடைகொளும்பதத்தரைவகையிடத்து நான்றிடுமுரோமத்தர்நார்ப்பட், டுடைகொளுமருங்குலுடையர் பொற்புரிபோலொளிர்தரநீண்டசெங்குஞ்சிச், சடைகொளுமுடியர்தத்துவஞானத்தன்மையர்நன்மையாதரிப்பார். (சு)

அருந்தவரினையராறெண்ணுயிரவரனைவருமொருங்குடன்கூடி
யிருந்துநாங்கருமமிதயமொத்திபற்றவேற்றதாயியல்புள தாகத்
திருந்திடும்பலங்கள்சாகமூலாதிசேர்ந்திடுந்தானமதாகி
வருந்திடாதிருந்தேதமியமமாற்றுதற்குவாய்ந்திடுந்தலமெவனென்[illegible] ()

சிந்தனையின்றியாஞ்சிவபூசைசெய்திடச்செபந்தவமோம, நை[illegible]டாதியற்றவுபகரணங்களுமேமிசைந்திடுநிலத்தான், முந்தியதலமொ

ன்றெமக்குறல்வேண்டுமுழுதுலகளித்தருண்முதலா, மெந்தைபாற்செ
ன்றேயாங்கவன்பணித்தவிடத்தினிலுறைதுமென் றெழுந்தார். (அ)

அரந்தைவெம்பிறவிப்பிணிதணிப்பதற்கோரவுடதமானநீறணிந்தார்
புரந்தமந்திரமாமஞ்செழுத்துரைத்தார்புனைமணிக்கண்டிகைபூண்டார்
நிரந்தரம்பயின்றயோகசாதனையானீடியவிசும்பெல்லைநேர்போய்
வரந்தரும்பிரமன்மன்னிவீற்றிருக்குமனோவதிதன்னில்வந்தடைந்தார்.

தேவர்முப்பத்துமூவர்கந்திருவர்சித்தர்வித்தியாதரரியக்கர்
கோவியலிருநான்கெனுந்திசைப்பாலர்குலவியபிரமரோர்பதின்மர்
நாவியல்சுருதித்தும்புருவுடனேநாரதாதியர்புடைசூழப்
பாவியல்வேதம்பாடவெள்வளையாப்பகர்தருசித்திநின்றாட. (க0)

ஒருகையிற்கரகமொருகையிற்றண்டமுபயமாந்திருக்கரமதனிற்
றருமுயிர்தழைப்பவரதமோடபயந்தயங்கவேபிரமமாம்பொருளைப்
பரிவுடனுன்னிப்பதுமவாசனத்திற்பண்புடன்வாணிதன்னோடுந்
திருமிகவிருந்தபிதாவெனும்பெரியதேவன்முன்சென்றுசேர்ந்தனரால்.

கண்டுகண்களித்தாரெட்டுறுப்பைந்தாங் கருதுறுப்பம்புவியுறவே,
தண்டெனவிழுந்தாரெழுந்துகூத்தாடித்தட்டமிட்டங்கைகள்கொட்டி,
மண்டுபேரன்புபுறம்பொழிந்தென்ன மலர்க்கணீர்பனிப்பமெய்யரும்ப
த்,தொண்டுறுமன்பாலுருகிவாய்குழறச்சுருதிமந்திரங்கொடுதுதித்தார்.

வேறு.

வானவர்முதுவாபோற்றிமண்பொதுத்தந்தைபோற்றி
ஞானமாமுதல்வாபோற்றிநான்மறைக்கிறையேபோற்றி
தேனலர்கமலம்போன்றுதிருவருட்செந்தேன்பொங்கு
மானனநான்குகொண்டவையனேபோற்றிபோற்றி. [கங]

ஐயனேபோற்றியெங்களப்பனேபோற்றிவேத
மெய்யனேபோற்றிமேலாம்விமலனேபோற்றிநாயே
முய்யவேவரந்தந்தாளுமொருதனிமுதலேபோற்றி
செய்யனேபோற்றிதேவதேவனேபோற்றிபோற்றி. [கச]

என்றடிபணிந்துநிற்குமிருவினைப்பகுதியோர்ந்து
நன்றறிவிரதமேய்ந்தநான்மறைமுனிவர்தம்மை
மன்றலார்கமலப்போதின்வானவன்மகிழ்ந்துநோக்கித்
துன்றியதவத்தீர்வந்தகாரியஞ்சொன்மினென்றான்.

ஓங்குநாற்பொருளுநல்குமொருவவுன்னடிமைபூண்ட
யாங்கள்சிந்தனைவேறின்றியிருந்தருந்தவங்களாற்றத்
தேங்குழலுமையாள்பாகர்க்கினிமையாய்ச்சிறந்தயாகம்
பாங்குடன்புரியப்பூசைப்பயன்றருந்தலமதாக. [கரு]

புடவியினிடத்தின்மிக்கபுண்ணியபூமியான
வடிவியொன்றருளாற்கற்பித்தருள்செய்வாயென்னலோடு
மடலவிழ்கமலப்போதில்வானவன்றருப்பையொன்றூற்
றடமிகுமாழியாகச்சமைத்தனன்சாற்றுகின்றூன். (கஎ)

இங்கிதன்பின்னரியாருமேகியேயிதுசென்றுற்ற
வங்கணீர்புகுந்துமேவியாச்சிரமங்கள்செய்தே
தங்குவீர்சைவநீதிதவறிடாதென்றுசாற்றித்
துங்கமாந்தருப்பைநேமிதூண்டினன்சுருதிவல்லான். (கஅ)

பூமியில்விசிட்டமானபுனிதமாமிமயத்தென்பா
னேமியுற்றதுபின்னந்தநேமியாம்பேராலோங்கும்
காமர்பூவனஞ்சிறந்தகாதல்சேர்முனிவர்யாருந்
தாமகிழ்ந்தன்புகூர்ந்துசார்ந்தனர்தவங்கள்செய்வார். (கசு)

சத்திரசாலையோமசாலைதேபூசைசெய்யுஞ்
சித்திரசாலைமேலாஞ்செபங்கள்செய்திருக்குஞ்சாலை
புத்திரர்பவுத்திராதிபொருந்தவீற்றிருக்குஞ்சாலை
நித்தராகமம்வேதங்கணிகழ்த்திடுங்கல்விச்சாலை. (உ0)

பன்னியர்மேவியேமுப்பத்திரண்டறம்வளர்க்குந்
தன்னிகரில்லாச்செல்வந்தருமறச்சாலையோடு
மன்னுமிப்பன்னசாலைவகுத்தனராங்கிருந்தார்
துன்னியவளங்கடம்மையாவராற்சொல்லலாமே. (உக)

திங்கண்மும்மாரிபெய்யத்திருந்தியநதிதடாகம்
பொங்கியபுனல்பெற்றோங்கப்பூமரத்துடவையாவு
மங்களமாகுந்தெய்வவாசபுட்பாதிமல்கத்
தங்கியசாகமூலபலாதிகடழைத்தவன்றே. (உஉ)

கடிகையைந்தெனவெழுந்துகடவுளைத்தியானஞ்செய்வார்
விடியலிற்றடாகம்புக்குமிக்கநீர்படிவார்மேலாம்
பொடிகமழ்பூதிமேனிபொலிதரப்பூசுவார்க
ளடிபணிந்தருணன்சார்ரவருக்கியமளிக்கின்றூரால். (உங)

கண்டிகைமாலைமார்பிற்கவினுறமேனியெங்கும்
புண்டரந்திகழமேலாம்புனிதமாமுருத்திராக்க
குண்டலங்காதிலோங்கக்கொடுவினைபுறந்தந்தோட
வண்டநாயகரைப்பூசையாற்றுவார்போற்றுவாரால். (உச)

அதிகவோமங்கள்செய்வாரதிதிகடமைக்கொண்டேகிப்
புதியவாசனத்தில்வைப்பார்பூசனைபுரிதல்செய்வார்
மதுரமாமம்பலவர்க்கத்தின்மன்னுபோசனஞ்செய்விப்பார்
கதிதருசிவபுராணகாவியம்பயிற்றுவாரே. (உரு)

வேறு.

பூசைத்தலம்புகுந்தேதிருமெழுக்காற்புதுக்கிடுவார்
வாசத்துறுதிருமஞ்சனம்வடித்தேகொடுவருவார்
நேசத்தொடுபலபுட்பமுநிரைத்தேதெரிந்திடுவார்
தேசுற்றிடுதிருமேனியின்பூச்சன்பொடுசேர்ப்பார். (உசு)

தேனெய்திலதயிலம்பலகனிச்சாறுசெவ்விளநீ
ரானல்குமஞ்சுடனேயபிடேகப்பொருளமைப்பார்
வானெய்துமின்னமுதேயெனநைவேத்தியம்வகுப்பார்
பானெய்யெனக்கலந்தோர்க்குபசாரம்பலபகுப்பார். (உஎ)

பத்திப்பொலிவொடுபூசையிற்பதுமாசனத்திருப்பார்
முத்திக்கிசைதருமாகமமூவொன்பதொன்றுரைக்குஞ்
சுத்திக்கியல்விதியாலேந்துசுத்தித்திறம்புரிவார்
சத்திக்கிறைசிவலிங்கவர்ச்சனைமந்திரந்தெரிவார். (உஅ)

நாத்தாம்புகழ்தருநித்தியநைமித்தியபூசை
பூத்தாமகத்துள்ளுஞ்செய்துபுறத்துஞ்செய்துபணிந்தே
காத்தாடிமுன்னின்றுடிக்கண்ணீராடிக்கைகொட்டிக்
கூத்தாடுவரேத்தாவெர்குழைந்தாடுவர்விழைந்தே. [உகூ]

அட்டோத்தரசதகஞ்சகத்திரநாமவர்ச்சனைபூந்
தட்டார்மலர்கொடுபூசனைசவுராதிசண்டாந்த
முட்டாதருச்சனையேசெய்வர்முத்தீவளர்த்திடுவொ
ரெட்டாச்சிவமனுவக்கரமிலக்கம்மிசைத்திடுவார். [௩ ௦]

வரதன்சிவவிரதம்பலமனத்தன்பொடுபுரிவார்
சரதம்பெறும்யோகம்பலதாமின்பொடுபயில்வார்
பரதந்தருசபைநாடகப்பரமன்றிருப்பாவித்
திரதந்தருமனத்தோடுமுற்றிருப்பார்தவவிருப்பார். [௩க]

கஞ்சாசனம்யோகாசனம்வீராசனங்கலங்கா
வஞ்சாசனத்திருப்பாருமையரனார்திருவுருவம்
நெஞ்சாசனத்திருத்தித்தொழுநினைவுற்றகமுருகாத்
துஞ்சாவெளிதனைக்கண்டுடன்றூங்குந்திறம்வல்லார் (௩உ)

யோகப்பொருடனையுன்னியயோகத்துறுமுணர்வா
லேகித்துணைவிழிபூருவினிடையேசெருகிடவே
யாகத்தினிலேறிப்பொழிகண்ணீர்தனையடவித்
தாகப்புளூரைத்தேறுசமாதித்தலஞ்சார்வார். [௩௩]

சருகுண்பதுகாலுண்பதுசாந்த்ராயணமாதி
பருகும்புனல்பாலுண்பதுபக்கம்மதியயனம்
மருகும்முபவாசம்விழிதுயிலாவருந்தவமும்
பெருகும்படிபுரிவார்சிவம்பேணுந்தகைமையினர். [௩௪]

வருந்துந்தவமுனிவோர்புரிமறைவேள்வியிலவியின்
விருந்துண்டனர்மருந்துண்டிடும்விண்ணோருளமகிழ்ந்தார்
பருந்தின்சிறைநிழலுற்றதுபாம்பின்கணம்பகைதீர்ந்
தருந்துந்தவளைகள்பாம்பினதளையுற்றவவ்வனத்தே. [௫௫]

உலகம்புகழ்தவவேதியரோமம்புரிசாலைக்
கிலகுங்கனல்சிறைவீசியெழுப்பும்மிளந்தோகை
பலவின்கனிவாழைக்கனிபலமாங்கனிபலவுங்
குலவுங்கருமுகமந்திகள்கொடுவந்துகுவிக்கும். [௫௬]

அல்லற்படுபிறவித்துயரகலத்தவமாற்று
மல்லற்றிருமறையோருறைவனமெங்கணுநிறைய
நெல்லிற்கதிர்புல்லிற்கதிர்நிரையும்முதிரைகளுஞ்
சொல்லிக்கொடுவந்தேதினஞ்சொரியுஞ்சுகத்தினமே. [௫௭]

ஞானத்தவர்மோனத்தவர்நாளும்புரிவேள்விக்
கானைத்திரளோமச்சமித்தனைத்துங்கொடுவருமாற்
கானக்கிழங்ககழ்ந்தேகொடுகருமாவினம்வரும்பா
றேனெய்க்கடன்முகந்தேமழைதினமும்பொழிதருமே. [௫௮]

இப்பெற்றிகள்பெறுநைமிசமென்னுந்தவவனத்தி
லெப்பற்றிடுதவவேதியருண்மைப்பொருளுணர்ந்தோர்
செப்பந்தருசிவன்சேவடிசிந்திப்பவர்பெரியோர்
முப்பத்தொருபத்தெட்டெனமொழியாயிரமுனிவர். [௫௯]

வேறு.

ஆழியிலெழுந்தோராழியரியதேரேறிப்பாரின்
வாழிருளகற்றுகின்றவபங்கொளியாலும்போகாத்
தாழிருவினையுநீக்குந்தன்மையைநோக்கிச்சார்ந்தோர்
சூழிருளகற்றுஞானசூரியர்போலுற்றார்ரால். [௬௰]

அருமறைவாசபேயமரியதோர்பவுண்டரீகம்
பொருவருசோமயாகம்புத்ரகாமேட்டியாக
மிருமையுந்தருமியாகங்களினையனபலவுஞ்செய்தார்
தருமமாஞ்சத்ரயாகந்தான்செயத்தொடங்கினாரால். [௬௧]

சாலைகள்புதுக்கினார்கடாமங்களலங்கரித்தார்
வாலிதாம்வாத்துசாந்திமறைமுறைதருவதாற்றி
யாலயமெனுஞ்சாலைக்குளங்குராற்பணமுஞ்செய்தார்
சீலமங்கலமெட்டோடுதெசாயுதஞ்சிறப்பித்தாரால். [௬௨]

கும்பபூசைகள்புரிந்தார்கூறுமந்திரங்கள்கொண்டே
விம்பபூசனைகள்செய்தார்வேதமந்திரங்களார்ப்பச்
செம்பொனுட்டவரையாமந்திரணங்கள்செய்தமைத்தார்
சம்புவைப்பணிந்தேயூபத்தம்பமுநாட்டினாரால். [௬௩]

வேதபண்டிதர்கள்வந்தார்வேள்விசெய்வதற்குவேண்டு
மோதருங்கலப்பையாதியுபகரணங்கள்சேர்த்தார்
சோதிசேர்தருஞ்சுருக்குச்சுருவமுந்தொகுத்திட்டார்கண்
மாதவச்சவுதிமார்கள்வந்தனர்மகிழ்ந்துற்றூரால். [சுச]

அங்கிபூசனைபுரிந்தாரவிப்பாகம்யாவும்வாய்ப்பப்
பொங்குமாகுதிகள்செய்தார்பூரணாகுதிபூரித்தார்
மங்களமாகும்யாகமண்டலந்தன்னில்வந்தே
செங்கண்மாலறியாதானுந்திருவருள்செய்தானன்றே. [சுரு]

இத்திறமுனிவரெல்லாமியம்பியவிதியினாலே
சத்திரயாகஞ்செய்துதாபதர்தங்கட்கெல்லாம்
பத்திரமாகப்பூசைபலவுபகாரஞ்செய்தே
சித்தமாதரவுகூரச்சிறந்துவீற்றிருந்தானன்றே. [சுசு]

வேறு.

அப்போதினில்வந்தானுயரரன்பூசனைநாளு
முப்போதினும்புரிவான்மறைமுறையோதியநாவான்
றுப்போவெனுஞ்சடையான்கண்டித்தொடையான்றயவுடையான்
மெய்ப்பூதியுமனுபூதியும்விளங்குஞ்சைவநடையான். [சுஎ]

வேதங்களோர்நாலுந்தனிவிளையாடல்செய்நாவான்
பூதங்களோரைந்தாகிமுப்பொருளாகியபொருளின்
பாதங்கணினைந்தேயுடல்புளகங்கள்பரிப்ப
நாதன்சிவகாதைப்பொருணுணுந்நவில்சூதன். [சுஅ]

வந்தானெனவறிந்தார்மனமகிழ்ந்தாருடனெழுந்தார்
சிந்தாகுலமின்றேயொழிந்தனம்யாமெனச்செழித்தார்
முந்தாவெதிர்நடந்தார்முகமலர்ந்தார்முறைமுறையே
கொந்தார்மலர்கைக்கொண்டனர்குழைந்தேகினர்விழைந்தே. [சுகூ]

தூரத்தினில்வரக்கண்டனர்தொழுதேவிழுந்தெழுந்தார்
வாரத்தினோடிருகண்களுமகிழ்ந்தாரெதிர்புகுந்தார்
சாரத்தொடுபுட்பாஞ்சலிதாண்மீதுசொரிந்தார்
பாருற்றதோரடியற்றிடுமரமேயெனப்பணிந்தார். [௭௰]

எழுந்தாருடன்மகிழ்ந்தாடினரினிதாகியமுகமன்
மொழிந்தார்சிவனெமையாளுடைமுதல்வந்தனனென்றார்
வழிந்தார்தருகண்ணீரினர்மனமும்வதனமுமே
பொழிந்தார்தயவொடுதாங்கொடுபுக்காருடனன்றே. [எக]

நைமிசாரணியச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-எசு.



முதலாவது,

# சிவரகசியவரலாற்றுச்சருக்கம்.



வந்தனைசெய்வோர்நெஞ்சில்வாசனைமாலயற்குஞ்
சிந்தனைசெய்தற்கெட்டாத்தேவனைத்தேவர்கோனைக்
கந்தனைக்காழிவாழ்சம்பந்தனைக்கடப்பந்தாமக்
கந்தனைத்தந்தேதான்றன்னைக்கருத்தனைக்கருத்துள்வைப்பாம். [க]

புனிதமாஞ்சாலையெங்கும்பூவினலலங்கரித்தா
ரினியதோராசனத்தினேற்றினர்தாம்வெவ்வேறே
தனிதனிபாத்யமோடாசமனவர்க்கியங்கடந்தே
மனமகிழ்பூசைசெய்தார்மாதவத்தோர்கள்யாரும். [உ]

சைவதேசிகனேவேததத்துவமுழுதுந்தேர்ந்த
தெய்வமேசிவஞானந்தான்சிவனமாகவாழ்வோய்
கைவல்யமேவுங்கோவேகண்டனமுன்னையாங்க
ளுய்வகைபெற்றோமேலக்குறுதியும்பெற்றோமென்றார். [௩]

வந்தனைபெர்மையெல்லாம்வாழ்விக்கும்படிக்கேயென்று
றெந்தைநீயுணராச்சைவரகசியப்பொருளொன்றின்றுற்
சிந்தனைசெய்துநன்றுத்தெரிபவாங்கவற்றையின்று
நந்தமையுய்யக்கொண்டுநவிற்றுகநாதவென்றார். [௪]

முடிவறும்வேதமெல்லாமொழியுமுக்கியமதாகும்
படியினிற்புண்யதீர்த்தம்பரமசாந்நித்யலிங்க
மிடிதவிர்புத்திமுத்திவிரைந்தெளிதாகப்போற்று
மடியவர்தமக்கெக்காலுமளித்திடுந்தலமுஞ்சொல்வாய். [௫]

எனப்புகல்சவுனகாதியிருடிகடம்மைநோக்கி
மனத்தினிற்சிவத்தியானமயிர்புளகரும்பச்சொல்வா
னினைத்தமைநன்றுநன்றுநீவிர்மெய்த்தவங்களாற்றிச்
சினத்திறந்தவிர்ந்திருங்கடெரிசனந்தனினுய்ந்தேனல்.

பரமர்பாற்பத்திபெற்றபாக்கியந்தழைத்தீர்நீவி
ருரமதாமுங்களோடுமுற்றுநானுறுதிபெற்றேன்
சிரமதாஞ்சைவரோடுசேர்ந்துறல்கிடைக்குமோநம்
மரனடியாருக்கெய்தாவரும்பொருள்யாதொன்றுண்டோ. [எ]

நாதனரன்பரோடுநட்புறவேண்டுமென்றே
காதலுற்றிருந்தேனின்றுகிடைத்ததுநண்டீர்தொண்ட
ராதிசெய்தவத்தோர்சனன்பருக்குறவாவாரென்
றோதினர்வசிட்டனாதியுயர்மறைமுனிவரெல்லாம். [அ]

சிட்டமாஞ்சிவசின்னங்கள்சேர்ந்துளீர்சென்மகோடி
மட்டிலாதியற்றும்புண்யபலத்திவைவரப்பெற்றீரா
லட்டமாமூர்த்திபூசைபுண்டரமணிருத்ராக்க
மிட்டமாய்ப்பொருந்தப்பெற்றீரிவையலாற்றவம்வேறுண்டோ. [௯]

அண்ணலாரன்பர்பாதரேணுவையடைந்ததீர்த்தம்
புண்ணியதீர்த்தமன்னோர்புகுமிடம்புனிதபூமி
மண்ணிடையவர்பாற்செய்தால்வர்த்தனையாகுந்தன்ம
நண்ணியவவீட்டமெல்லாநமர்கள்பாற்பெறலாமன்றே. [கO]

பத்தியன்பாகச்செய்வோர்பரமன்மெய்யடியார்வந்தான்
முத்திபெற்றோமென்றோடிமுன்விழுந்தடிவணங்கித்
துத்தியஞ்செய்தென்னையன்வரப்பெற்றேனென்றுண்டனேன்செய்
புத்தியென்னென்பார்கொண்டுபுகுந்துபூசனைகள்செய்வார். (கக)

பெருமனைபுகுந்தாற்றேவர்பிதிர்க்கள்கூத்தாடுவார்க
ளருமையாசனத்தில்வைத்தாலமரலோகத்தனுவ
னுரிமையாற்பாதபூசையுஞற்றினுற்பாசநீங்கித்
தெரிதருந்தவங்களோங்கிச்சிவதன்மவடிவனுவன். (கஉ)

அடிமிசைமுடியைச்சேர்த்தியடிக்கடிவணங்குவானை
முடியணிதேவரெல்லாமுதல்வனென்றிறைஞ்சுவார்கள்
படியிலிப்படியென்நாளும்பத்திசெய்திடுவோனுத
னடியவனவனேமேலாமளவில்புண்ணியஞ்செய்தோனும். (கங)

அன்பர்தம்பாதநீர்த்தபானமேயமுதபான
முன்புகுசிவசின்னஞ்சேர்மூர்த்திகடம்மைக்கண்டா
லென்செயலென்றிறைஞ்சாதிருந்தவன்கொடியபாவி
பின்பவன்வேதங்கொள்ளாப்பெற்றியன்பேதைகண்டீர். (கச)

அண்ணலாரடியார்க்கண்டாலவர்தமைச்சிவனுமென்றே
யெண்ணவும்வேண்டும்யாதானென்றிடிலவர்கடம்பா
னண்ணினுனலயம்போனுதனங்கவர்கடம்மைத்
திண்ணமார்சிவமாமென்றேசிந்தனைசெய்வர்மேலோர். (கரு)

சேர்தருமனந்தகோடிசென்மத்திற்றவஞ்செய்தானேற்
பார்தனிற்சைவனுவன்பண்புடனவனைக்கண்டே
யார்தருபத்திசெய்தோனடையாதபொருளொன்றுண்டோ
வேர்தருமவனைப்பூசித்தேத்தினேன்றனைப்பூசித்தோன். (கசு)

தேவர்மாதவர்க்குமேலாந்தேசிகனுவனிப்போ
தோவிலாச்சைவசீலத்துற்றுளீர்சிவசின்னங்கண்
மேவினீர்யானுமும்மைவிரும்பிப்பூசிப்பேனென்றே
பாவனையாகப்பூசைபண்ணினன்சூதன்றானே. (கஎ)

அன்னதுகண்டுநின்றசவுனகனுதியானோர்
பன்னருஞ்சூதன்றன்னைப்பார்த்தனர்கண்ணீர்மல்கி
யின்னதோர்சிவபத்திக்குளியாவர்களுன்னைப்போல்வா
ருன்னருமன்புபெற்றவுறுதிசெய்தவத்தாலென்றார். [கஅ]

சொல்லுதியென்றுசொல்லச்சூதமாமுனிவன்சொல்வான்
வல்லியோர்பாகனெம்மான்மகிழுங்கேதாரந்தன்னி
னல்லவன்வியாதனெங்கோனண்ணிப்பூசனைபுரிந்தே
யல்லறீர்முனிவரோடுமெளவளாயிருந்தானங்கே. (௧௯)

அப்பொழுதியானுஞ்சென்றேனடிபணிந்தவனைக்கண்டே
னெப்பருஞ்சிவத்தியானவுறுதிவந்தனையும்பார்த்தே
னிப்படியுனக்கிந்நேசமேய்ந்ததெத்தவத்தாலென்றேன்
செப்பினன்வியாதனெங்கோன்றேசிகத்தலைவன்றானே. (௨௦)

மனதருச்சனைமேல்வைத்தபாதவனென்னைநோக்கி
யனகவஞ்செழுத்தையுன்னியாதியைப்பூதிதன்னைத்
தனதுகைதன்னாற்றொட்டுச்சத்தியமிவைசான்றாக
வுனதுளந்தனில்வைப்பாயென்றுபதேசமுரைசெய்தானல். (௨௧)

அருமைசேர்பரமதாருமதிரகசியமிதாமற்
றிரமதாரீயுநல்லசிவபத்தனெமக்கும்பத்த
னுரிமையானீயுங்கேட்டியென்றுடனுறையுமங்கட்
பெருமுனிவோருங்கேட்கப்பிரியமாப்பேசினானல். (௨௨)

இப்பொருளன்பிலாருக்கிசைக்கொணாதியம்பும்போதிற்
றப்பிலாதெங்கும்பார்த்துச்சங்கரன்பத்தியில்லா
ரப்பொழுதங்கணுற்றாலப்புறத்தகற்றிப்பின்பு
செப்பிடவேண்டுமென்றுபின்னருஞ்செப்பலுற்றான். (௨௩)

தவமுறுமுனிவீர்தேடுந்தனக்குடந்தனைச்சீவன்போ
லுவமைதீர்மணியையாருஞ்சோரர்பாலுணர்த்துவாரோ
வவனியிலவைபோல்வேதத்தரும்பொருளாகுஞ்சைவச்
சிவரகசியமன்பில்லாச்சிதடர்பாற்செப்பொணாதே. (௨௪)

வேறு.

கயிலைவாழுங்கடவுள்கருணையான்
மயிலைநேருமையாட்குவகுத்தன
னயிலையேந்துமருமைமைந்தற்கவ
டயவினாலிதுசாற்றினளாமரோ. (௨௫)

சாற்றுமந்தப்பொருளைத்தனதுதாள்
போற்றுநந்திதனக்குப்புகன்றன
னேற்றமாங்குகனெம்பெருமானந்தி
யாற்றல்சாலச்சுதற்கறைந்தானன்றே. (௨௬)

அந்தமாப்பொருடன்னையயனெனு
மைந்தனுக்குவகுத்தனன்மாயவன்
சந்தமாமறையோன்சனகாதியாம்
புந்திமைந்தர்தமக்குப்புகன்றனன். (௨௭)

சனகராதிமுனிவர்தமைப்பணி
யனகனாரதனார்க்கருள்செய்தன
ரெனதுபத்திகண்டேமுன்னர்யாழ்முனி
மனதனோடும்வகுத்தனனென்றனன். (உஅ)

இறைவனாரதனெற்குரைத்தானஃ
துறவுமக்கின்றுரைக்கின்றனனது
துறவிர்காள்பத்தியோர்க்குச்சொல்வீரென
வறவன்வேதவியாதனனறைந்தனன். (உகூ)

அந்தணீரெந்தையார்கதைக்கன்பிலாச்
சிந்தையார்க்குச்சொல்லாதசெவ்வொன்றுமே
யிந்தமாநிலந்தன்னிலெமக்குநீர்
தந்திடுங்குருதக்கணையாகுமே. (௩0)

என்றுவேதவியாதனியம்பவே
நன்றுசொற்றனைநாயகநாமுய்ய
வுன்றனல்லருளன்றியுணர்த்திடோ
மொன்றுநீகினையேலென்றுரைத்துடன். (௩க)

ஐயனேயிவ்வரும்பொருளெங்களுக்
குய்யவேமுன்னுரைத்திலையாலின்று
செய்யனேநின்றிருவருள்செய்தெங்கண்
மையநீரவகுத்தருள்வாயென்றோம். (௩உ)

சிந்தைசெய்துசிவனைத்தியானித்தே
முந்துமன்பொடுரைக்கமுயல்கின்று
னந்தணீர்சிவவித்தைதக்கணியராய்
வந்தநீர்சிவசின்னங்கள்வாய்த்துளீர். (௩௩)

பைவரும்பணிப்பூணோன்பணிபுரி
சைவவேடத்தர்தாமடைந்தாரெனி
லுய்வகைக்கரனுண்மையுரைசெய்தான்
மெய்வழுத்துமிருவர்க்கும்வீடுண்டாம். (௩ச)

எங்கணேனுமெம்மான்றன்கதைப்பிர
சங்கமுற்றவமுதசமுத்திரம்
பொங்குகின்றவிடந்தொறும்போயுமை
நங்கைவேலவர்நந்திகணுதிபர். (௩ரு)

கூடவந்துமகிழ்ந்துறக்கோனட
மாடல்கொண்டிடுவானந்தியாணையா
னீடவேபயங்கொண்டுநெடுந்தேவரை
யோடமாயன்பிரம்புகொண்டோச்சுமே. (௩சா)

இனையமாக்கதைகேட்குமிடத்தினின்
மனதிலேந்தொடுக்கிம்மரப்பாவைபோ
னினைவுவேறற்றதினிற்கவேண்டுமா
லனையபத்திவருந்தவத்தன்பர்க்கே. (௩எ)

ஆற்றல்சான்முனிவீரரன்றன்னையே
போற்றுகின்றபுராணகதைதனைத்
தேற்றமாகத்தினந்தொறுங்கேட்பவர்
மாற்றரும்பலன்யாவர்வகுப்பரே. (௩அ)

அதிகமாதவத்தீரென்றறைந்துபின்
மதுரமாமதுவர்க்கவகையினு
மிதுவென்னாவுக்கினியதெனக்கொண்டே
கதிதருஞ்சிவன்றன்னைக்கருதுவான். (௩கூ)

உரமதாம்பத்தியோடொருநாளுமை
பரமனார்கதைகேட்போர்பகவன்றன்
புரமதெய்தல்புதுமையதோவவர்
மரபெலாஞ்சிவலோகத்தின்வைகுமே. (௪0)

மேருவிற்பிடித்தோர்கையில்விண்டுவாங்
கோரவாளியுங்கொண்டுமைகோனன்று
போரிலேறிப்புரம்பொடிக்கப்புவித்
தேரிலேறுந்திருவுருச்சிந்தித்தான். (௪க)

இனத்துத்தேவரரம்பையரேத்தவே
வனத்துக்கொன்றையன்வாமமகிழ்ந்துறை
யனத்தின்பாதமும்போற்றியருள்பெற்றே
மனத்திற்றூயவியாதன்சொல்வானரோ. (௪உ)

ஈதுதான்கருப்பாலையிலிட்டுறுங்
கோதுதீர்ந்தரசத்தினுங்கூர்ந்ததென்
றோதுசூதனுரைப்பச்சவுனக
ராதிவேதியர்கேட்டனரன்புற்றார். (௪௩)

முதலாவது சிவரகசியவரலாற்றுச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௪௩.



# காயத்திரிவரம்பெற்றசருக்கம்.

பாலினுற்றநெய்யிந்தனத்தங்கிபோற்பரமன்
சாலவெங்கணுநிறைந்தனன்பத்தியாந்தனித்த
வேலுங்கோலினையூன்றியேயுறுதிநாணிறுகக்
கோலியேகடைந்தால்வந்துகூடுவன்றானே. (க)

வேறு.

நன்றறிவியாதனென்னுநாயகனன்றுசொற்ற
பொன்றரும்பரமன்காதையெனுமறைப்பொருள்களின்னு
மின்றெமக்கருள்கவென்னநைமிசத்திருந்தோர்கேட்பத்
துன்றியதவத்துச்சூதமுனிவரன்சொல்லுகின்றான். (உ)

வேறு.

பூதிபூசியைந்தெழுத்தினைநினைந்தரும்பொருளாஞ்
சோதிதாளிணையுன்னியேகேளுமின்றொண்டீர்
வேதமாகமஞ்சொற்றிடும்விதியினின்மேலா
மாதியாந்தவவிலிங்கவர்ச்சனையெனலாமால். (ங)

மற்றுமேபுரிபுண்ணியம்யாவுமெம்மானை
யுற்றபூசனைபுரிவதற்குற்றிடுமுறுதி
சொற்றதேவனெத்தன்மையனென்னவேசொலுங்காற்
பற்றில்சச்சிதானந்தரூபப்பராபரமே. (ச)

மோனஞானவானந்தனென்றோடுறான்மோக
மானதொன்றிலானாதியுமந்தமுமில்லான்
வானநாடர்தம்மனத்தொடும்வாக்கினைக்கடந்தோன்
கானநான்மறையறிவரும்பொருளவன்கண்டீர். (ரு)

சோதிநிர்க்குணனிரஞ்சனன்றுன்பமொன்றில்லா
னாதிநாமமோடருவமுமுருவமுமில்லா
னாதன்வேதங்கடேர்வருநாயகன்பெருஞ்சீ
ரோதுகின்றநம்புராணத்துளடங்குமோவுரைக்கில். (சா)

விரதிகாளரன்கதைமிகுவெள்ளமென்றாலும்
வரதனார்தந்தவரத்திலென்மனத்தினுள்வருமாற்
பரமரின்னருளாலுமக்கின்றியான்பகர்வே
னிரவிமண்டலத்திருந்தொளிதரும்பற்கரியல்பே. (எ)

அந்தமில்லதோர்பற்கர்தாநமக்கறிவருள்வா
ரிந்துசூரியர்க்கொளிபுரிந்தியக்குவோரவரே
முந்துமப்பொருளன்றியோர்முதல்வருமில்லைச்
சந்தவேதமெலாஞ்சொல்வதவர்பெருந்தகைமை. (அ)

வணங்குமன்பர்க்குப்பிறவியாமுளைவித்தைவறுத்தே
யணங்குறுவகைசெய்வதாற்பற்கராமொருபே
ரிணங்கிநின்றதங்கவர்க்கெனவெம்பிரான்பெருஞ்சீர்
குணங்களோதியமாதவன்றன்பின்னுங்கூறும். [௯]

அரியவேதநாதத்துருவாய்வருங்காயத்
திரியருந்தவம்பற்பலகற்பமுஞ்செய்தே
புரிமகாலிங்கபூசைகண்டெம்பிரான்போந்தே
வரிசையாலவட்கின்னருள்சுரந்துரைவழங்கும். [௰]

அயுதகற்பநீயருந்தவமாற்றினையதனாற்
றயவுன்பாலுறவந்தனநினைந்தவைதருவோ
முயருந்தேவர்கடமக்கெலாமுறுவரமுதவு
மியலுளோமியாமுதவிடாவரமெவையென்றான். [கக]

பகவனின்னணம்பகரக்காயத்திரிபரிந்தே
முகமலர்ந்துகண்ணீர்மல்கவுரோமங்கண்முகிழ்ப்ப
வகநெகிழ்ந்திடப்பணிந்தெழுந்தானந்தமாடித்
தகைமைசேர்தருதோத்திரம்பற்பலசாற்றும். [கஉ]

பகவனேயண்டர்நாதனேபற்கனேயுன்சீர்
புகலுமன்பர்தஞ்செனனவித்தைப்பொடிப்படுத்தே
யகிலமீதருட்கடலெனவிளங்கியவரனே
முகமுன்வந்தனைதந்தருள்வரமெனமொழிவாள். [கங]

ஓதுன்னும்ங்களுற்றிடுமந்திரமவையே
வேதநான்குகொண்டாடவேவிளங்கியவாகும்
போதஞானியரவையன்றியொன்றையும்புகலார்
தீதிலாச்சிவமந்திரமேசித்திசெறிக்கும். [கச]

மைந்தரைப்பெறுமனைவியும்பலமிலாமரமு
மிந்துசூரியரெய்திடாநாள்களுமீன
முந்துகோவுமங்களமிலாமொய்குழலாரு
மெந்தைநாமமில்லாதமந்திரத்தையெய்ந்திடுமால். [கரு]

வாரியூடுறுபொருளெலாமிகழ்ந்துமற்றதனிற்
சேருமாணிக்கமொன்றையுமுடிமிசைச்சேர்ப்பார்
யாருமற்றதுபோன்மறைக்கடலினுளெய்துங்
கூருமந்திரமிகழ்ந்துநின்னுமங்கைக்கொள்வார். (கசா)

ஒளிகொளுஞ்சிவமந்திரமகத்திருளொழிக்குந்
தெளிவையன்றிமற்றவைகளுக்காதிக்கஞ்செலுமோ

வெளியனேனுற்றமந்திரஞ்சிவபதமின்றூற்
களிகொண்மாதவராங்கதுகருதிலர்கண்டே. (கஎ)

வேறு.

[illegible]பெரிதாநதேநயுணர்வாருளமன்னொருவாசரண [ங்
மினமாமறைபாலதிபாய்மனிதேவாரென்னும் பொருளேசரணஞ்சரண
கனமார்பொருளாபனுவாயுமையுங்கண்மூன்றுடையாய்சரணஞ்சரண
மனமாசுடையாரிடம்வைகலிலாமணியாமிடறாய்சரணஞ்சரணம்.

விடைமேல்வருவாய்சரணஞ்சரணம்விதிமாலறியாவிகிர்தாசரண
முடையாய்பிகழம்பாமூர்த்தருவாயுமையாள்கணவாசரணஞ்சரணங்
கடியார்கலையின்பொருளேயெனவுங்காயத்திரியாள்[illegible]ண
டொடியாவரமென்றொருமந்திரமீமூன்றுமுறைத்ருதவென்றனளே.

[illegible]பெருவானவருந்[illegible]
ளுன்னும்படிகண்டனன்மெய்த்தவமாலுறுபெருருவர்க்கொழிவுற்றிடு
மன்னுன்சரணத்தனையேயுணர்வோர்மறலிக்கிடையார்வரன்விடுறுவார்
பன்னுவத்தரமோவிழிப[illegible]முற்றவரே. (உ௦)

இறைவாவுனையெள்ளளவுங்கினைவார்க்கெப்தாப்பதமுஞ்சிறிதும்மு
ளதோ,குறைபாவலியுங்குறைபாகியுங்குறையாதகல்யாணபரம்பரையு
நிறைவார்திடபத்திகள்பெற்றுடையோர் விமலானந்தப்பொருளேபெறு
வார்,மலறயார்தருபற்கபதந்தனையென்மந்தாய்பெறுமேல்வரமற்றதுவே

வேறு.

என்றுபோற்றுகாயத்திரிபுகன்றிடவிறைவ
னன்றுநந்தனங்கேட்டுமெய்வரமெனநவின்றே
குன்றுபோலுமக்கணங்கருந்தானுமக்கொம்ப
ரன்றுபூசித்தவிலிங்கத்துண்மறைந்தனனன்றே. (உஉ)

ஒப்பிலாதவவ்விலிங்கத்தைத்தெரிசித்தோருவந்து
தப்பிலாதுபூசித்தவர்தொழுதவர்தாமே
மெய்ப்பயன்களும்பெறுகுவர்கினைத்தபேறெய்துந்
துப்புநேர்சடைமுனிவிர்காளென்றனன்சூதன். (உ௩)

உந்துமின்றகாயத்திரிமந்திரத்துள்ளே
பெக்கைபார்திருநாமமன்றிருந்திடுமியல்பாற்
சிக்கநகெசப்பவர்புந்தியுமுத்தியுஞ்சேர்வார்
முக்கேவாதியெமுந்திபெற்றோர்முடிவிலரால். [உ௪]

ஏத்துகின்றகாயத்திரிபிசைத்திடுமந்தத்
தோத்திரந்தனையொருதரந்துதித்துளோரெல்லா
மாத்தனுகிபசிவன்றிருநாமங்களனைத்து
நாத்தழும்புறவழுத்தியபலத்தைநண்ணுவரால். [உ௫]

அருந்தவத்திறமுன்னோநாளாற்றினர்க்கல்லாற்
றிருந்துமெந்தையார்நாமங்கள்செப்பிடவருமோ
பொருந்தும்வேதத்திற்காமுதலிழிவுப்பேர்பொருந்தி
யிருந்துமெந்தையார்நாமமுற்றிசைபடைத்தனவே. [உசு]

திலகமாமெந்தைநாமஞ்சேர்ந்தருமறைசிறந்த
விலகுநன்மணிபாற்கடலிரத்நவாகரமா
முலவுவாசமிஞருமேபுனைவதற்குரித்தா
மலர்களோடுற்றுமறைப்பொருளுணர்ந்தமர்தவத்தீர். [உஎ]

மதியணிந்தவனுமங்கள்வழுத்திடப்பெற்றோர்
கதிமடந்தையைக்கைப்பிடித்தேயுடன்கலப்பா
ரதிகலிங்கமாதீர்த்தமுற்றிடுந்தலத்தமர்ந்தே
முதிரவோதினோர்பெறும்பலன்யாவரேமொழிவார், (உஅ)

அரியநாமமெசுர்வேதத்திலணியுருத்திரத்திற்
றெரியுமெந்தையஞ்செழுத்தினைச்செபஞ்செயப்பெற்றே
முரியபூதியுங்கண்டியுமுவந்துடன்றரித்தேதம்
பெரியசைவமுற்றோநம்போற்பெற்றவர்யாரே. (உ௯)

இன்னதாகுமுன்னுநவேதத்துருவியைந்தே
மன்னுகின்றகாயத்திரிவரம்பெற்றவாறென்
றுன்னுசூதமாமுனிவரனுரைத்திடவுவந்தார்
நன்னயம்பெறுஞ்சைவர்சீர்நைமிசவனத்தோர். [௩0]

காயத்திரிவரம்பெற்றசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கசஎ.



மூன்றாவது,

# மேருச்சருக்கம்.



ஐந்தவித்துயர்வரையிருந்தருந்தவயோகஞ்
சிந்தையுற்றவர்களுஞ்செலற்கருங்கதிசெல்வார்
கந்தனைத்தந்திமாமுகக்கடவுளாங்கருணை
மைந்தனைத்தநதமைந்தனோர்நாமஞ்சொல்வாரே. [க]

வாதராயணனிமயகேதாரத்தின்மன்னி
யாதிநாமத்திலுண்மையேதென்றருந்தவர்கட்
கோதிறனவையுளங்கொண்டாருறுநுட்யுங்கொண்டார்
போதநீதியிரென்றுபின்சூதனும்புகல்வான். [உ]

எந்தையார்தமைப்பூசித்தலாதியாமியாவு
முந்தவேதவியாதன்முன்னருளொடுமொழிந்தா
னந்தவாறுசொல்வாய்மைகேட்டருந்தவர்யாரும்
புந்திகூர்ந்தனரானந்தக்கண்கணீர்பொழிந்தே. [௩]

சிவனைப்பூசித்தல்சிவதருமத்தர்சீரண்ணற்
குவகையாந்தருமம்மவனுறையுளாங்குறைவோர்
நவிலுமத்தலத்தற்புதமிவையெலாநம்பன்
கவுரிபாற்சொலுமவையெலாமுரையெனக்கழறும். [௪]

நல்லவாம்பொருள்சொற்றனரிவையெலாநவில
வெல்லையில்லதோரானந்தமெய்தியதெனக்கே
சொல்லரும்பவமலைதொலைந்ததுகடற்றுயர்போய்
மல்லலுற்றனனிப்பொருள்கேட்கநீர்வாய்த்தீர். (௫)

மேருமால்வரைச்சிகரத்தின்மேலதாஞ்சிகரஞ்
சாருமொன்றதிலெம்பிரானாலயந்தழைக்கு
மாரும்யோசனைபலவுள்வதனிடையகலம்
பாருமெண்டிசையளவுமேதன்கதிர்பரப்பும். (௬)

ஆலயத்தினின்மகிமைவேதஞ்சொலவறியா
சோலைகற்பகமமுதமேசூழ்ந்தியதனின்
வேலையிற்கிடந்தனநதசிந்தாமணிமிளிர்வ
காலையுற்றெழுமிரவியோரனந்தமாய்க்காணும். (௭)

குழகனார்மனத்தியற்றியகோயிலக்கோயி
லழகையார்புகல்வாரதன்சிகரத்திலழுத்து
மெழில்கொண்மாமணிக்கதிரெறித்திடவெதிரிந்து
தழுவிளங்கதிர்தானுமின்மினியெனத்தகுமால். (௮)

அனந்தகோடியுண்டதனிடைவாயில்கோபுரங்க
ளனந்தகோடிமண்டபமுயர்மாளிகையமைந்த
வனந்தகோடிசாளரந்திண்ணையதனையேதேவ
ரனந்தகோடிகற்பம்புகுந்தளவிடற்கரிதால். (௯)

அந்தவாலயச்சுற்றெலாந்தெற்றிகளருகே
யிந்திராதிகடருக்கணின்றிடுமிவற்றின்கீழ்
முந்துதேனபிடேகமும்பூவுமேமுடிக்கொள்
சந்திராதிபர்கோடிபோலிலிங்கங்கடழைக்கும். (௧௦)

நன்றிசூழ்தருமமுதமாநதித்தரங்கத்திற்
சென்றுதோய்ந்துபூமணங்கொடுதென்றல்வீசிடுமாற்
குன்றுபோலுயர்கோபுரவாயில்கடோறுந்
துன்றுபூதகணத்தியர்கோடிபேர்சூழ்வார். (௧௧)

சொல்லுமாலயச்சோதிபாற்சூழிருடொடரா
தொல்லைமுச்சுடரொளிகளும்வேண்டிடாரோங்கு
நல்லகற்பகநறுங்கனிநுகர்ந்திடுநலத்தால்
வல்லதேவர்தமமுதுமெண்ணாரங்கண்வாழ்வோர். (௧௨)

அனையவாலயநடுவினோங்குமண்டபந்தனை
நினையலாவதோவதன்கதிர்நிகர்சொலலாமோ
பனிதுரந்திடுமிளவெயின்மண்டபப்பாலிற்
புனிதவேதிகையதனிடையரியணைபொலியும். (௧௩)

கூடும்யோசனையாயிரநீண்டதிற்குலவ
நீடுகற்பகப்பூந்தொடர்விதானத்தானிலவு
நாடிலீந்திடுதருவுக்குநல்கியநம்பன்
றேடொணாதகோரழகுக்கோரழகெனத்திகழ. [௧௪]

ஐந்தவித்தவரகத்தினிலடங்குவோனடங்காச்
சிந்தையுற்றவருளம்புகானெமக்கருள்செய்வா
னுந்துபாற்கடல்பொன்வரையுடுத்தெனவொளிரப்
புந்திகூரும்வெண்பட்டுடீஇக்கந்தங்கள்பூசி. [௧௫]

பூதியோங்கியபுண்டரம்புனைந்துகண்டிகையே
யாதியாகியநவமணியணிகளுமணிந்தே
சோதிசேர்மணிமவுலியுங்கடகமுந்துலங்கக்
காதிலாதித்தர்கணமெனக்குண்டலங்கவின. (௧௬)

சன்னவீரமுமாரமுமார்பினிற்றயங்கத்
துன்னுபொன்னரைஞாண்கதிருலகெலாஞ்சூழப்
பன்னுகைவிரலாழிகள்பசுங்கதிர்பரப்ப
மன்னிவீற்றிருந்தானமையாளுடைவரதன். (௧௭)

முத்தினொளிர்கவிகைபொன்முடிமிசைக்கவிப்பப்
பத்தியாய்மணிக்காம்புறுசாமரைபயிலத்
தத்துமால்விடைக்கொடியொருபானின்றுதயங்கக்
கொத்துமாமலர்மாலிகைபுயந்தொறுங்குலவ. (௧௮)

ஈசனாசனத்திருந்தனன்றூரத்தேகணங்கண்
மூசிநின்றுகைப்பிரம்பொடுமுகிழ்த்தகையினராய்க்
கூசியேத்தொடுநின்றிடத்தேவர்தங்கூட்ட
மாசையெங்கணுங்கண்கொடுபார்த்திடலாமோ. (௧௯)

ஆரணன்புகழ்நாரணன்றேவர்கட்கதிபன்
காரணன்சமையம்புகுந்தேதொழுங்கருத்தாற்
சீரிணங்குமத்தாழ்வரைச்சாரலிற்சேர்வார்
பூரணன்றிருமுன்னரில்யாவரேபுகுவார். (௨௰]

தந்திமாமுகத்தைங்கரன்சண்முகத்தலைமை
மைந்தனீக்கிவர்சோபிடை யைநருமன்று
[illegible] விஸிமித்தமாய்க்கெழுந்தே
யந்தமால்வரைச்சாரலினடந்தனனருளால். (உக)

கண்டுகைதொழுநாரணனாதியர்கலந்தே
தொண்டுசேர்நருநந்திதன்னேவலாற்சூழ்ந்தார்
சண்டபூதகணாதிபர்பிரம்பினாற்சாட
மண்டியோடினர்சேயிடைவணங்கிவாழ்த்துவரால். [உஉ]

வந்துவாழ்த்துமங்கவர்க்கருள்புரிந்துவானவர்தஞ்
சிந்தைபாலுமெட்டரியவன்மீண்டனன்சிறந்தே
யந்தமால்வரைக்கோயில்வீற்றிருந்தனனவனைத்
தந்ததகோயிலினமர்ந்திடுமம்பிகைசார்வான். (உ௩)

வேறு.

அருந்தவஞ்செய்ததாயரருகுறப்
பொருந்துசாம்பவிபுன்முரல்கோட்டியே
மருந்துபோன்மணிவாய்திறந்தாசனத்
திருந்ததாதைதனக்கொன்றியம்புவாள், (உச)

கனககோயிற்கதிர்மணிபாசனத்
தெனதுகேள்வரிருக்குஞ்சிறப்பெலா
நனிகண்டேமகிழ்கூரநயனமு
மனதுமேமிகவாஞ்சித்தவென்றனள். (உரு]

ஞானபூமியினாயகனாரிடத்
தானகாதலையம்பிகைகூறவே
மேனையோடுறுமவேந்தனினிதுகேட்
டூனமின்றியுரைக்கலுற்றானரோ. [உசு)

உனைச்செல்கென்னவென்னுள்ளமுஞ்செல்கில
னினைந்தநின்செபனீக்கவுங்கிற்றிலே
னனைத்தையுந்தருமன்னைநின்கேள்வர்பான்
மனத்தைவைத்தநின்னோடும்வருகுவேன். (உஎ)

என்றுதாதையியம்பவுமையவ
ளன்றுநீர்தளரீரின்றுநாளையே
சென்றுமீள்குவன்சிந்தைகலங்கலீ
ரொன்றுமன்புடையீரென்றுரைசெய்தாள். (உஅ)

ஆளும்வெற்பரசும்மவன்றேவியு
நாளைநாளைநின்னுபகர்பாற்செலும்

வேளையென்றுவிளம்பவிளம்பவே
பாளையோதியொருதிங்கள்பாாத்தனள். (௨௯)

திங்களொன்றவர்செய்யுபசாரங்கள்
பொங்குபூசைபொலிந்திடமேவினு
ளங்கவட்குளமாதரங்கூரவே
மங்களத்தில்வரிசைபலசெய்தார். (௩௦)

இங்கிவ்வாறிவளுற்றவியல்பெலாங்
கங்கைவேணிக்கடவுளறிந்தன
ணங்கனையபகனாந்திசைபக்கூவிடுப
மங்கையைக்கொணர்வாயெனவந்தனன். (௩௧)

நாதனார்தங்கணங்களொடுநந்தி
யேதந்தீர்மவெற்பில்வந்தெய்தலுங்
காதல்கூரிமவேந்தன்கடிதெழுந்
தோதுமன்புடனோடியெதிர்கொண்டான். (௩௨)

அழைத்துவந்தனனாசனத்தேற்றினன்
றழைத்தவன்பொடுதானுபசாரங்க
ளுழைக்காத்தணைப்பூசையுளுற்றல்போன்
மழைக்கணீரொடும்வந்தித்துவாழ்த்தினன். (௩௩)

ஞானயோகிசிலாதனயந்தரு
ளானசைவத்தரசேயென்னையனே
யானுன்ருள்பணிந்தின்புற்றனனெனு
மேனைகாதலனன்பின்விளம்பினன். [௩௪]

ஆதியாரெமதன்னைமணாளனர்
சோதியார்சுகமோவெனச்சொல்லினு
னேதையாவிமயத்தரசேயெனு
நாதனேவியநந்திநவிற்றுவான். [௩௫]

பகருநாமமொன்ருேதும்பரிவினேர்க்
கிகபரச்சுகமீந்திடெம்பிரான்
சகலநன்மையுமாகுமத்தம்பிரான்
சுகமுறும்படிசொல்லவும்வேண்டுமோ. [௩௬]

காலகாலனவன்கணிமைத்திடின்
மாலும்வேதனுங்கோடியர்மாய்வரான்
ஞாலநாயகனல்லருள்பெற்றநா
ளேலுமன்னரீறெத்தனைகண்டுளேன். [௩௭]

சுகவுருக்கொளுஞ்சோதிக்கோர்துன்பந்தான்
புகல்வதோவவனுமம்புகன்றுளோர்

வெருவிதஞ்செயுமாயைவினையொரீஇ
கிகரிலாச்சுகவீட்டினிலைப்பரால். (௩அ)

நித்தியானந்தநின்மலனுன்மறை
சித்தியாஞ்சுத்திசெய்யுமாதேவன்றன்
சத்தியாமுமைதன்னைக்கொணர்கெனப்
பத்தியாலிங்ஙன்யான்வந்தபான்மையே. (௩௯)

எந்தையார்தந்தவாழிமற்றிங்கிதை
முந்தையார்மனையாண்முன்னருய்த்துநான்
வந்தகாரியமும்மென்வணக்கமுஞ்
சிந்தைகூர்தரச்செப்புதியாலென்றான். [௪0]

கொடுத்தமோதிரங்கொண்டிமயத்திறை
யடுத்தனன்னுமையாளிடத்தண்ணலார்
விடுத்தநந்திவரவும்விளம்பினு
னெடுத்துமுத்திரையாழியுமீந்தனன். (௪௧)

வாங்கினாண்மகிழ்ந்தாடந்தைவார்த்தைகேட்
டேங்குநுண்ணிடையாளென்னிறைவனார்
பாங்குசேர்திருவாழியெனப்பரிந்
தோங்குசென்னிவைத்தாள்கண்ணிலொற்றினள். [௪௨]

மனமகிழ்ச்சியிற்றன்னைமறந்தனள்
பனகபூடணன்பால்வைத்தவன்பினாற்
றனதுகண்ணீர்ததைழத்திடவேமுகிழ்த்
தனகிதானெடும்போதமர்ந்தாளரோ. [௪௩]

என்றுமேசுகமுற்றிருப்பாரையா
னன்றுற்றாரெனக்கேட்குநலத்ததோ
துன்றுமன்புபெற்றேசுகமுற்றுளேன்
சென்றுசேர்தறிடமெனச்சிந்தித்தாள். (௪௪)

அன்னையின்னணமாகவிருந்தனண்
மன்னுநந்திமகிழவரிசைகள்
பொன்னின்மால்வரைவேந்தன்புரிந்தனன்
பின்னிகழ்ந்தபரிசினிப்பேசுவாம். [௪௫]

மூன்றாவது மேருச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-க௨௨.



நான்காவது,

# தேவியிமயம்

# விட்டெழுந்தருளியசருக்கம்.

வேறு.

வானவருந்தொழும்வானவனம்பிகைமாதேவன்
றேனவிரம்புயபாதநினைந்தவர்சேர்வாரே
யூனமுறும்பவவாரிகடந்துணர்வுறலாகா
ஞானவனந்தசுகோதயவின்பநலந்தானே. (க)

சீதவளப்பனிமால்வரையுற்றசிவன்றேவி
யாதியிடத்துநன்மேருவினிற்செலலங்கார
மாதவருக்குவியாதனுரைத்திடும்வகையெல்லாஞ்
சூதன்முனிக்கணமேவவனத்திடைசொல்கின்றான். (உ)

அம்பிகைதன்செயல்கண்டிமவானெனுமரசன்றான்
வெம்பியசிந்தைவிசாரமொடும்மனைமேனையொடு
நம்பிசிவனைகளாம்பிகைக்கெதிர்மொழிநவில்வுற்றே
வெம்பெருமாட்டிசெலற்குபகாரமியற்றென்பான். (௩)

மங்கலமேவியகற்புடையாடன்மணாளரைவிட்
டிங்குறைகின்றதுநன்குறுமோவவரேவல்செய்தே
யங்குறைவதுவேமேலாந்தருமமதாமன்றோ
நங்கைமகிழ்ந்திடவிடையின்றுதவுதுநாமன்றே. (ச)

இன்றுவிடுத்திலெமெனினீசறவன்வெகுள்வுற்றிடுமா
னன்றுபகாரத்தொடுபலவரிசைகளுஞ்செய்து
மொன்றியவன்புடனென்றுரைசெய்தேயுமைதன்பாற்
சென்றுளமுருகிக்கண்டுமகிழ்ந்தேசிந்திப்பான். (ரு)

ஓடியறைக்குளுவந்துபுகுந்தனனொளிர்முத்தி
னீடியமாலைகணவமணிமாலைகணெடுநாளிற்
றேடியமகுடங்கடகங்கைவளைசிலவாரங்
கூடியவாபரணச்சுமைகோடிகள்கொடுவந்தான். (சு)

பொன்னரிமாலைகள்பன்னிறச்சேலைகள்புனையோலை
கன்னமணிந்திடுபூடணவர்க்கங்கண்டசரம்
பன்னியகைவிரலாழிசிலம்பொடுபதசாலஞ்
சொன்னபணிச்சுமைகோடியின்மேலுஞ்சொரிதந்தான். (எ)

வருணன்றிறைதரவந்தனமாநிலமன்னரெலாங்
கருணைபெறும்படிகொடுவந்திடுகைக்காணிக்கை

தருவின்வளந் தருநாடுறைவோர்கடரும்வரிசைக்
குருமணியாரச்சும்மையோர்கோடிகொணர்ந்துற்றான். (அ)

தன்னுடைமாமனைமேனையில்பின்னுஞ்சார்ந்துற்றே
யென்னுடையன்னையுடன்சென்மடந்தையரீசன்பாற்
றுன்னுகணங்களுமுண்டுசெலும்படி தூய்தாக
மன்னுமபூபவகைப்படியோதனவர்க்கங்கள். (௯)

ஆறுசுவைக்கறிநால்வகையுண்டிகளவையெல்லாம்
வேறுசமைத்தமைகனிவகைவர்க்கமும்விதமாகக்
கூறுமினிப்புறுமதுவர்க்கம்பலகோடிசுமை
யேறவமைத்தருளுண்டவர்கொண்டேகிடவென்றான். (௧௦)

அமைதலிலாமகிழ்வுடனேமற்றுளவரசரைநம்
மிமயவரைக்கும்மேருவரைக்குமிடையெல்லாங்
கமைதருபுட்பவிதானப்பந்தர்கடிதாகச்
சமையுமெனச்செய்தனர்மலர்மாலைத்தண்பந்தர். [௧௧]

ஏகுநெறிக்கிடையேபடமாளிகையிமநீரா
லாகியதவளத்தான்மதிமண்டலமெனவார்த்தார்
மாகககனஞ்செலுமேருவைமானும்விமானங்க
டோகைதேனுடுறுதோகையரேறச்சூழ்வுற்ற. [௧உ]

அடங்குபிடர்க்குளமைந்தவுளைத்திரளம்புலியாத்
தடங்கொளும்வெள்ளிவரைக்கெதிரேபொருதன்மையுட
னிடங்கொள்புறத்துறுகலணையிரத்தினவெழில்சேரு
மடங்கலின்வாகனமுமையவண்மேற்கொளவந்தனவே. [௧௩]

என்றுதனில்லவளுள்ளமகிழ்ந்திடவிமையக்கோ
னன்றுபுகன்றுநின்வரிசையுன்மகள்பெறநல்கென்றான்
சென்றுயர்கோபுரமுற்றமணைந்தெவையுஞ்செப்பித்
துன்றுகளிப்புடனேகறங்கென்னச்சுழல்கின்றான். [௧௪]

வந்தனன்முந்துறுவரையரசன்றன்மகடன்பாற்
சுந்தரநந்திக்கருளுபசாரத்தொழில்கொண்டே
நந்திதனக்குபசாரம்பலசொலிநல்கிப்போய்ப்
புந்திகொளம்பையைநோக்கிக்கண்மழைபொழிகின்றான். (௧௫)

வேறு.

நந்திதேவனுக்கம்பிகைசந்தனநலமுறுநறுசாந்தங்
கந்தமாலிகைபூடணம்பூந்துகில்கடிகமழ்முகவாச
மைந்துமீந்திடப்பெற்றுயரானந்தமடைந்துறைந்திடும்வேளை
வந்துகண்டனரெம்பிரான்விடுத்திடுந்தூதராமாபூதர். (௧௬)

என்னதாமதமெங்களையெந்தையாரேவினரெனச்சொன்னார்
மன்னனுமிமயத்திறைகண்டனன்மனத்திடைமருள்கொண்டான்

முன்னவர்க்கும்வந்துற்றவர் தமக்குமேமுறைமுறையுபசார
மன்னபானஞ்சந்தனங்கலைபூடணமனைத்துநல்கினனன்றே. (கஎ)

இனித்தரிப்பதன்றென்றிமயத்திறையிறைவிதன்னிடத்தெய்திப்
பனித்தகண்ணொடுமினித்தபூசனைபலபத்தியாற்பரிந்தாற்றி
மினிற்றுனும்படாம்பதுமராகப்பணிவெயில்விடுகதிராரந்
தனித்தனித்தனிகொடுவந்துசாத்தினன்சாற்றருங்களிகூர்வான். (கஅ)

அன்னையேசிவனனுப்பவிப்போதும்வந்தடுத்தனர்கணநாத
ரென்னதாமதமெனவுரைத்தாரவரினித்தரித்திடலாமோ
நன்னயம்பெறுபூசமுமோரையுநல்லவேளையுமீதான்
மன்னுசோதியின்விமானமும்வாய்தலின்வந்ததிங்கெழுகென்றான். (கசு)

தாயராகியமேனையார் வந்தனர்தபவினர்தயவாகத்
தூயவம்பிகையெழுந்தனள்வாய்தலிற்றோன்றினளதுபோதின்
மேயபல்லியமுழங்கினவூழியின்விரிகடலார்த்தென்ன
மாயனுன்முகன்வானவராதியர்மனைவியரொடும்வந்தார். [உ0]

முனிக்கணங்களுமுன்னரேதுன்னினர்முறைமுறைசிவனேவுந்
தனிக்கணங்களுமன்னினரன்னைதன்றொடொழுதனரன்றே
யினிக்குமின்சொலாரற்புதமடந்தையரேறினர்விமானங்கள்
கனிக்குமின்மொழியம்பிகைசிங்கவாகனத்தினிலிவர்ந்தாளே. [உக]

தந்தைதாயரும்பின்செலவிமானத்திற்சார்ந்தனளெமதன்னை
யந்தவேளையின்மூவுலகத்துளாவனைவரும்வந்தார்த்தார்
முந்தவேபுகுந்தோர்களுங்கூடியேமுறைமுறைநெருக்குற்றார்
நந்திபூதகணந்திபர்பிரம்படிநாடியோடினரன்றே. [உஉ]

சென்மகோடியிற்செய்தபுண்ணியத்தினாற்றெய்வநாயகிசேரும்
பொன்மயத்திருவிமானசேவையும்பெற்றோம்பொருந்துகாற்றுறப்பெற்
றன்மகிழ்ச்சிசேர்மருத்துற்றான்கந்தவாகன்னெனுநாமந்தா [ரோ
னின்மைதீர்த்தருடேவிசெந்தாமரையிணையடிதவழ்ந்தென்பார். (உ௩)

தூரத்தேபணிந்தடிதொழுவார்பலர்துதித்துநிற்பார்சிலோ
ராரத்தார்திகழ்விமானத்தின்முடிகண்டோமடிகண்டோமென்கின்றார்
சாரத்தார்தருநாடகத்தரம்பையர்தனித்தனிநடஞ்செய்தார்
வாரத்தேயிசைத்தும்புருநாரதர்வந்துபாடினரன்றே. (உச)

செய்யசோதிவிமானத்தின்காட்சியெத்தேசத்துமிருளோட்டத்
துய்யநேர்சிகரத்தினிலிடக்கயற்றொடக்கியேசுடரோட்ட
வையமீதினில்வந்தடிதொழுமவர்வல்வினைத்துயரோட்ட
வையையம்பிகைவிமானமும்பைப்பாயவடிபெயர்த்ததுவன்றே. (உரு)

கொடிநெருங்கினமகாதோரணங்கள்வெண்குடையொடுசேர்ந்திடப்
படிநெருங்கினசாமரைக்காடுகள்பரந்தனநிரந்தெங்கு

மடியிடுந்தலமிலையெனவட்டமாசித்திகளொடுந்தேவர்
முடிவின்முப்பதனுமூவருஞ்சூழ்ந்தனர்முறைமுறைநெருக்குற்றார்.
தேவர்பூமழைமேகங்கள்பொன்மழைசேவடிபணிகின்றார்
தூவுகண்மழையமயிகையருண்மழைசொரிதரவிரிந்தெங்கு
நாவில்வேதியர்தோத்திரவோசைகணுடகம்பயிலோசை
மேவுதேவவிமானத்தினோசையும்விரவியமிகவன்றே. (உஎ)

நீதிசேர்கணநாதர்கைப்பிரம்படிநினைந்துநாம்பயந்தோடி
லாதியார்திருத்தேவிதன்றரிசனமதுநமக்கரிதென்றே
பூதிசேர்தருமேனியர்ஞானியர்புனிதன்மெய்யடியார்கள்
சோதிசேர்ந்தவிமானத்தின்புடைவந்துசூழ்ந்தனர்தொழுவாரால். ()

இன்னவாறெமையுடையவளிமயம்விட்டெழுந்தருள்சிறப்பென்றே
சொன்னவேதவியாதனைத்தொழுதனர்துதித்தனர்முனிவோர்கள்
பின்னரன்னைதான்செய்தவெதன்னெனவவைபேசினனெனச்சூத
னன்னதும்புகன்றனனுயர்சக்கரத்தடவிவேதியர்க்கன்றே. [உகூ]

நான்காவதுதேவிஇமயம்விட்டெழுந்தருளியசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உஉக.



ஐந்தாவது

## தேவிமேருவரையைச்சார்ந்தசருக்கம்.

வேறு.

பூதநாயகனுதிரைநாயகன்புகழ்சேர்நால்
வேதநாயகன்விண்ணவர்நாயகன்விடையேறு
நாதநாயகனம்பலத்தேநின்றுநடமாடும்
பாதநாயகன்றோத்திரநாடொறும்பகர்வோமே. (க)

குன்றசைந்ததுபோலுமையேறியகுளிர்மான
நின்றசைந்துசெலக்கொடியாடைகணிறைவுற்ற
தென்றல்வந்துதவழ்ந்ததுசேவைகள்செய்வோர்தா
மின்றுநம்பிறவிக்கடனீந்தினமென்பாரால். (உ)

ஆதிநாயகிபின்னுறமேவியவனைமேனை
நீதிசேருபகாரமனைத்தையுநிறைவித்தாள்
பாதிசேர்பிறைபோனுதலாயிவைபாரென்றார்
சோதிசேரும்விமானமருங்குறச்சூழ்கின்றார். (ங)

செய்யவம்புயத்தேவியொடுந்திருமால்வந்தா
னயன்வேதன்வந்தானிசைவாணிமின்னவளோடுந்

தையலாஞ்சசியோடுவந்தானண்டர்தனிநாதன்
ஐம்பல்கூரிமையோரும்வந்தார்தங்கண்மனையோடும். [௪]

சென்னிசேர்த்தியகையினர்கண்மழைசேர்கின்றார்
துன்னுநான்மறைத்தோத்திரம்பற்பலசொல்கின்றார்
பன்னிமாரொடுமாமுனிவோர்கள்வந்தனர்பாராய்
கன்னியேயுனகாறெழும்வானவர்கண்பாராய். [௫]

ஆடுகின்றவரம்பையர்நாடகமதுபாராய்
பாடுகின்றவர்தும்புருநாரதர்பணிபாராய்
கூடுகின்றகணங்கள்பிரம்புகள்கொடுசாட
வோடுகின்றகணங்கணெருங்கியவுவைபாராய். [௬]

மேருமால்வரைச்சாரலினருகுறமின்னேநீ
சாருகின்றவிமானம்வரத்தயைதருவாயென்
றோருமன்னைசொலென்னுடையன்னையுவந்துற்றாள்
கூருமானமும்வந்ததுமேருவின்குளிர்சாரல். [௭]

அங்குறைந்திடுதேவரும்வந்தனரடிதாழ்ந்தார்
பங்கயாசனனேமுதற்றேவர்கள்பலரெல்லாஞ்
சிங்கவாகனமேல்வருதேவிசிறப்பெல்லாந்
தங்கணூர்தரக்கண்டனர்தோத்திரந்தனிசெய்வார். [௮]

வேறு.

மங்கைநாயகியேபோற்றிமாமறைப்பொருளேபோற்றி
சிங்கவாகனத்தின்மேவுந்தேவியேபோற்றிபோற்றி
துங்கமாமிமயமீன்றதோகையேபோற்றிமேலா
நங்கையேகயிலைவாழுநாதர்நாயகியேபோற்றி. [௯]

கும்பிடுமடியார்தங்கள்கொடுவினைதவிர்ப்பாய்போற்றி
யம்பையேமேனையீன்றவன்னையேபோற்றிபோற்றி
வம்பவிழ்நீலவெற்பின்மரகதக்கூந்தல்போன்று
தும்பிசேர்தார்க்குந்தோங்கற்சுரிகுழலுடையாய்போற்றி. [௧௦]

கமலமாமுகத்தாய்போற்றிகளபமாமுலையாய்போற்றி
யமருமாலிலைபோல்வாய்த்தவணிவயிற்றணங்கேபோற்றி
விமலர்கைத்துடிபோல்வாய்த்தமெல்லியவிடையாய்போற்றி
தமருடனடியார்போற்றுந்தாமரையடியாய்போற்றி. [௧௧]

உலகநாயகியேபோற்றியும்பர்தம்பிரானார்தோளி
னிலகுபூமாலைசேர்க்குமிணைகரமுடையாய்போற்றி
குலவியவடியார்செய்யுங்குறைதவிர்த்தாள்வாய்போற்றி
கலவமாமயிலேநித்யகல்யாணவுமையேபோற்றி. [௧௨]

காட்சியேசரணமேலாங்கருணையேபொழிதருங்கா
மாட்சியேசரணமன்பர்மகிழ்வுறக்கடாட்சிக்கும்மீ
னாட்சியேசரணமெங்களன்னையேசருவலோக
சாட்சியேசரணமுன்றன்சரணமேசரணந்தானே. [௧௩]

தேவியேசரணந்தேவதேவனுஞ்சிவனார்தேகத்
தாவியேசரணமெங்களன்னையேசரணநீண்ட
காவியேயனையவுண்கட்கன்னியேசரணநித்தம்
பாவியேனானவாரிபாவியேமெனப்பணிந்தார். [௧௪]

மாமுனிவோருந்தேவகணங்களும்வந்துகூடி
யாமுனமியற்றும்பூசாபலத்தினாலிறைவிதன்னை
யாமுறைபுகழ்ந்துபாடியாடிடப்பெற்றோமென்றார்
தாமுளமகிழமேருச்சாரலின்வந்துசார்ந்தாள். (௧௫)

இனையவாறெம்பிராட்டியிலங்கியமேருச்சாரற்
புனையலங்காரத்தோடும்புகுந்தனளென்னவேதந்
தனையொருநான்கதாகச்சாற்றினோன்புகன்றானென்றே
முனைவர்வாழ்நைமிசத்தின்மொழிந்தனன்சூதன்றானே. (௧௬)

ஐந்தாவது தேவிமேருவரைச்சார்ந்தசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௨௧௭.



ஆறாவது,

# தேவர்முனிவர்காட்சிச்சருக்கம்



வேறு.

ஒருவனையோரிரண்டுருவமுக்கண்ணன்றனைப்புயநான்குடையகோனை
பெருகியவைந்தொழிலானையாறுமுடித்தானையெழுபிறப்புந்தீர்த்தே [ப்
யிருமையெமக்கருளட்டமூர்த்திநவகோணத்தாட்கிறையைப்பத்தா
மருவுபதினொருவருருத்திரர்பணியுநாயகனைவணங்கிவாழ்வாம். (௧)

சிந்தைமகிழ்மேருவரைச்சாரலில்வாழ்முனிவர்களுந்தேவரியாரும்
வந்துதிரண்டனரிமயமலையரசன்றருமரசிவருகின்றாளென்
றுந்தியவன்புடனேடிப்பணிந்தொளிர்விமானத்தையுற்றுநோக்கிப்
புந்திமகிழ்ந்தானந்தக்கண்மழையும்பூமழையும்பொழிகின்றார். (௨)

சென்னகோடிகடோறுஞ்செய்ததவப்பலம்பெற்றோஞ்சிவன்றாட்பூசை
மனமகிழ்ந்துபுரிந்திடுமோவரம்பெற்றோமுரம்பெற்றோம்வாழ்வுபெற்றோங்
கனகமலையரையன்மகள்விமானத்தின்வரும்பெருமைகாணப்பெற்றோ
மனவரதகல்யாணியருள்பெற்றோமென்றுமுன்னின்றறைகின்றார்.

அருமறைகள்சொலற்கரியனினதுபதாம்புயச்சேவையரிதேயன்றோ [மா
மருமலர்கொண்டுனையடியேம்வந்தனைசெய்திடவெதிர்வந்தனையேயம்
திருமதிமாமுகத்தாயேசெகதலத்தையளித்தாயேசெல்வத்தாயே
கருணைபொழிவிழித்தாயேகனியமுதமொழித்தாயேகதிதந்தாயே. (௪)

தஞ்சமெனவடைந்தவெமைப்புரப்பதுநின்கடனன்றோதரணிவா
ழு, மெஞ்சலிலாவுயிரனைத்தும் பெற்றுவளர்த்தவணியேயாங்கள்வே
றோ, வஞ்சகவெவ்வினைவனத்தைப் பொடிப்பதற்குன்கருணைசிகாவன்
னியன்றோ,வஞ்சலென்றேயெமைப் புரப்பாயரனிடத்தின்மேவுமகிலா
ண்டத்தாயே. [௫]

உன்கருணைப்பெருவெள்ளத்தொருதிவலைபெறினளவேயுய்குவோம்யா
மின்குலவுமிடையாய்நின்னருள்வாழ்வேவாழ்வல்லான்வீண்மற்றெல்லா
மன்குலவுமரியினிடஞ்சேர்ந்திடில்யானைக்கொம்புமணியும்வாய்க்கு
நன்குணமின்னரியினிடத்தெலும்புதசைதோலலதுநலம்வேறுண்டோ.

ஏழைபடியேம்புகலுமின்சொலுநின்செவிக்கண்ணேயிசைந்திடா
தோ, மாழையொண்கணருட்பார்வையருந்தவஞ்செய்தோர்க்கன்றிவா
ய்த்திடாதோ, கோழைமனத்தெமக்களித்தாலுனதருள்வாரியிற்சிறிது
குறைந்துபோமோ,வாழியெழுமுகிலெங்கும்பொழிந்திடுமேமலையரசன
ருளும்வாழ்வே. (௭)

இந்திரையுநாமகளுமிரதியுடன்சசிமகளுமின்பமாகச்
சந்ததமும்வந்தனைசெய்சேவடியாயயன்மாயன்றுமமோலி [து
முந்துமணியொளிவிளங்குமிளிர்தளிர்ச்சேவடியாய்முத்தொழிலடாத்
மந்திரிநின்சரணாரவிந்தமேசரணெனவந்தடைந்தோமம்மா. [௮]

சாற்றருநின்முகமதியின்கருணைநிலாவுண்டுமகிழ்சகோரம்போன்றே
[illegible]ற்றல்பெறுமிணைவிழியினருண்மழையாற்றழைத்தமுதிரடவியானே
கூற்றடருங்கொடும்பிறவிக்கடுங்கானத்தீயவியக்குளிர்ந்துபாயு [ங்
மாற்றரியபெருவெள்ளம்வந்தெனவந்தாயெனவேவாழ்த்தினரால்.

இவ்வகையான்முனிவர்களுந்தேவர்களும்பரிந்துபரிந்திறைஞ்சியேத்த
வைவகைநாதமுமுழங்கவரிபிரமனமரர்பதமனைத்துநீங்கித்
தெய்வநாயகன்மருவுமேருகயிலாயத்திற்சேர்ந்தாளென்றே [னனே.
மெய்வகைதேர்வியாதன்முனிவரர்க்குரைத்தானெனச்சூதன்விளம்பி

**ஆறாவது தேவர்முனிவர்காட்சிச்சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-௨௪௭.



# தேவிமேருக்கயிலையுற்றசருக்கம்

வேறு.

சூடகவால்வளைகண்களியாடத்தொடையாட
வாடகமன்றினினாடகமாடியவரனும
நீடகமுற்றுநினைந்துவழுத்தியநியமத்தோர்
பாடகமொத்தபிறப்பொடிறப்பிடைபடாரே. (௧)

ஆழிவனத்துறைசூதனைமாதவரடிபோற்றி
வாழியெமன்னைசெயற்பின்னென்னெனமகிழ்சூத
னேழிசைநாரதனுருபதேசமிதென்றென்றே
சூழிசைவேதவியாதனுரைத்தவைசொல்கின்றான். (௨)

அம்பிகையேறியசோதிவிமானமதுசென்றே
செம்பொனின்மேருவின்வாழ்கயிலாயத்திடைசேர
வும்பருமாதவருஞ்சிவயோகத்துரவோருங்
கம்பிதநெஞ்சொடுகண்டவரிங்கிதுகழறுற்றார். (௩)

அரியதவம்புரிபலனிதுவாமெமையாளம்பை
பெரியவிமானத்தரிசனமுற்றிடுபேறென்பார்
புரிகுழல்கயிலைப்புகுதருமெழிலைப்புடைநின்றே
தெரிகணநாதர்கள்செய்தவம்யாஞ்செய்திலமென்பார். (௪)

இப்பரிசன்னவர்செப்பியிரங்கிடவெம்மையாள்வா
டப்பில்விமானமதொப்பருகயிலைத்தாழ்வரையின்
வைப்புறவங்கணிழிந்தவணுற்றிடுவளமெல்லா
மொப்புடனருகுறுதந்தையுடன்றாய்க்குரைசெய்வாள். (௫)

தண்டளிர்சேர்தருவின்குளிர்சோலைகடழைசாலை
புண்டரிகத்தடமமுதநதித்திரைபொழிமாலை
யண்டருநாடருதெற்றியரங்கமொடணிவேலை
யெண்டருசித்திரமண்டபமாமிதென்றாளால். (௬)

இந்திரர்சந்திரரெய்தியதெற்றிகளிவைதோறும்
வந்தெனைவந்தனைசெய்தனைசெய்ம்முனிமறையோர்போ
லைந்தருநின்றுபொழிந்திடுபூமழையவைபாரீர்
சுந்தரலிங்கமனந்தமிருந்தொளிர்சுடர்பாரீர். (௭)

என்றுமையங்கணிலங்கெழிறாமிவையிவையென்றே
நன்றுமொழிந்திடமனையுடனேமகிழ்நகராசன்
சென்றெமையாளுடைநாயகியோடொருதெற்றியின்மேற்
றன்றுகளிப்பொடுமன்புடனேயிவைசொல்கின்றான். (௮)

அன்னையுனைப்பெறவுற்றதவப்பலனதுவன்றோ
வுன்னதுகயிலையில்வந்திவையெல்லாமுறப்பெற்றே
னென்னவுரைத்துமகிழ்ந்துறுமமைபத்தெழின்மேனை
துன்னுதருக்கனிகனிகாவெந்திவைசொல்கின்றாள். (௯)

நம்பனிமால்வரையின்கணுமில்லைபிங்கலமென்றா
ரும்பரொடிம்பர்விண்மூவுலகத்தினுமுளவாமோ
செம்பொனெனன்னையிதன்சுவைதேர்குவைதேர்குவையென்
றம்பிகையோடுநுகர்ந்துகளித்தனளாமன்றே. (௧௦)

நங்கையுமங்கதுகண்டனளன்னையைநகுகின்றா
ளிங்குளபுதுமைகளென்சிலகண்டனையினியெம்மான்
றங்கியகோவிலினுற்றனைநீயனைசார்வாயே
லங்குளவதிசயமெங்குளவென்றவணகல்வுற்றாள். (௧௧)

தந்தையொடன்னைதொடர்ந்திடவவ்விடைசார்போதிற்
சிந்தைமகிழ்ந்துகணங்கள்வணங்கச்செல்கின்றாள்
சுந்தரமாளிகைசூளிகைதெற்றிகடெற்றுசுடர்
முந்தியகோபுரவாயில்கடந்தனண்முறைபுக்காள். (௧௨)

இரவிதன்மண்டலமதிவளர்மண்டலமிவையென்ன
வரவின்மணிச்சுடர்விரிபலமண்டபமவைகண்டா
ருரகபணிப்பரனுரைதருமியோசனையயுதத்தின்
விரிவுளமண்டபமதனுளவற்புதமிகவுண்டால். (௧௩)

அத்திருமண்டபமத்தியிலத்தனுமம்பிகையு
முத்தமபரியங்கத்தணைமீதினிலுறைபோதிற்
சித்திரப்பாவைகள்சத்திரசாமரைசிவிறிகளும்
பத்தியினின்றுவிசித்திரமாம்வகைநடமாடும். (௧௪)

அன்னதொர்மண்டபமன்னினளுமைமலையரசனெடுந்
துன்னுமரம்பைகளழகாலத்திகள்சூழ்கின்றா
ரென்னுடைநாயகரிவணினுமுறைகுவரென்றோதி
யுன்னுறுசெல்வந்தனையனைதந்தைக்குணர்விப்பாள். [௧௫]

பரிவட்டத்தொகைதிருவாபரணம்பயிலறைகள்
புரியிட்டம்பெறுபரிமளகளபம்புகுசாலை
விரிவுற்றிடுபலபண்டநிலைறந்திடுவியலிடமு
மரிதிற்பெற்றிடுதந்தையுடன்றாய்க்கறிவித்தாள். [௧௬]

இங்கினிநீருமதிகமயத்தேதகுமினிபானிறைவன்
றங்கியதிருமுன்செல்குவனென்றுமைதாய்தந்தைத்

கங்குபசாரவிருந்துடனுடைகளாபரணம்
பொங்குவிமானமளித்துவிடுத்தருள்புரிவேலை. [௧௭]

வேறு.

கயிலைநாயகனருகுறநின்றிடுகெணங்களைமுகநோக்கி
யயிலைநேர்விழியாடனையழைத்திடவமைந்துசென்றிடுநந்தி
செயலிதாற்றனன்றுயதுநீட்டித்ததிறமெவையெனத்தேர்மி
னுயருநாயகனுரிமைசெய்வானிவையுறப்பெறுமோவென்றான். [௧௮]

சென்றுபூதர்கணந்திமுன்னெம்பிரான்றிருவுளமிதுவென்றே
நின்றுகூறினர்சாமிகாரியஞ்செயுநெறியினரவர்நெஞ்சிற்
றுன்றுசிந்தையின்படிபுரிவாரவைசூழ்ந்திலைநீயென்று
ரென்றவாசகங்கேட்டலுங்கணங்களோடிவையிவைபுகல்கின்றான். [ ]

தேவநாயகிசிவன்றனைப்போலவெந்திறங்களும்படைத்துள்ளா
ளாவதாகியவவள்கருத்தின்படியமைவதேயல்லாமன்
மூவராகிலுமுன்னின்றுமொழிந்திடமுற்றுமோவரனேவ
மேவுபூதர்காள்வல்லமையுண்டெனில்விளம்புவீர்சென்றேன்பான். [ ]

ஆதிநாயகிசந்நிதிபுகுந்தயானவளெழுந்தருளுங்காற்
பாதசேவைகடெரிதரவருமரிபதுவாசனன்முன்னோர்
மோதுகின்றதோர்நெருக்கத்தினிடைப்பட்டுமூர்ச்சையுற்றனன்யானே
யோதுகின்றதோர்செயல்பிறிதுண்டுகொலுறுங்கணத்தீரென்றான். ()

அரனனுப்பியபூதரோடின்னணமறைந்துறைந்திடுநந்தி
பரவுமம்பிகையுறுமிடத்தவரொடும்படர்ந்தனனதுபோதி
லுரவுமந்தரவாணிசென்றுமையிடத்துயர்விசும்பிடைநின்றே
பரமருன்னிடத்தருள்சுரந்திடவுநீபாணித்தல்பபனன்றால். [௨௨]

என்றவாசகங்கேட்டலுமச்சமுற்றிவர்ந்தனளரியேற்றி
னின்றதந்தைதாய்தங்களையிமயத்தினீர்செலுமென்றேவிக்
கொன்றைவேணியனிடம்புகநடந்தனள்கொற்றவையென்றேதான்
றுன்றுமைமிசவாணருக்குரைத்தனன்குதமாமுனியன்றே. (௨௩)

**ஏழாவதுதேவிபேநசயிலையுற்றசருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-௨௭௦.



எட்டாவது

# தேவிநாட்டியம்பார்த்தசருக்கம்.

அரனதாலயஞ்சூழ்வரப்பணிசெயவடியிணைகரம்வாய்த்தோ
முரமதாங்கதையுன்னவுங்கேட்கவுமுளமுங்கேள்வியுமுற்றோன்

பிரமதாஞ்சிவன்பதங்கடொழச்சேவிக்கச்சென்னிநேத்திரஞ்சேர்ந்தோம்
பரமனுமஞ்சொனுவும்பெற்றேமியாம்பாக்கியம்படைத்தோமே, (க)

வாதராயணன்சொற்றனனுமைசிங்கவாகனமிசையேறிப்
போதன்மேயினுளத்தனையன்னைபைப்புகன்றுபின்னுறநோக்கி
யாதிபாரிடத்துமக்குறலரிதுநும்மருவரைச்செலுமென்றாள்
காதலாலவர்நின்றுநின்றுருகிக்கண்கலுழ்ந்துசென்றனரன்றே. (உ)

அப்புறந்தூயபர்சிங்கவாகனத்தின்மேலம்பிகைசிறிதேக
வொப்பிலாவொளிவிமானமும்பூதருமுற்றனர்சிவனேவ
மெய்ப்பிறையிலிவர்ந்தனள்பூதர்கண்மிடைந்தரகரவென்றார்
செப்பொணாநதுந்துமியுடனேசெபசத்தஞ்சேர்ந்தனவன்றே. (ங)

கூடிவந்திடுகணங்கள்வீழ்ந்தானந்தக்கூத்துகளினிதாடிப்
பாடினாரரனுமங்களுமையுளம்பரிவுறப்பலகோடி
போடினார்வந்துநெருக்குறுமவர்களையுருக்கிவேத்திரங்கொண்டு
சாடினாருபர்மேருவின்சிகரமுஞ்சலனமுற்றிடவன்றே. (ச)

பூதரேத்தியதோத்திரங்கேட்டுடல்புளகமுற்றிடுநங்கை
நாநராடங்கண்மதுரகீதத்தொடுநாவினுனவில்கின்றாள்
வேதநாயகசங்கரசிவபற்கவீமசந்திரவேணி
பாதிருந்திரமகேசவீசானநின்னருள்புரிவாயென்பாள். (ரு)

காலகாலகிரீசகாலாந்தகண்கண்மூன்றுடையோனே
பாலலோசனவிசுவநாதாபசுபதிபரமானந்தா
சூலபாணிகங்காதரவரசம்போதொண்டர்தந்துயர்தீர்க்கு
நீலகந்தரநித்தியநிர்க்குணநின்மலாவருள்வாயே. [சா]

தக்கன்மாமகமழித்தபூதேசசர்வேசசற்கதிநல்கு
நக்கவாமதேவாவருள்வாயெனுநாத்தழும்புறவேத்தாத்
தொக்கவானவர்யாவரும்புகலருஞ்சோதிநின்னுயர்சோதி
மிக்கநின்பதிபுறப்பெற்றேன்யான்பெற்றமெய்த்தவமெவையென்பாள்.

பாமர்மேருவின்கயிலையின்சோதியைப்பார்த்ததிசயங்கொண்ட
குரவவார்குழலிமயவேந்தனுப்பியகொடியிடைமடநல்லார்
வரவிசைந்திலரிப்பெருமானத்தின்மன்னுமியான்றனியேகி
லான்வியந்திடாளெள்ளுவளெனவுளத்தன்னையுன்னினளன்றே. [அ

அளவிலாப்பெருமையபனிடத்தொருத்தியாயடைந்தியான்றனித்துற்றா
லுளகொலாமவமதிப்பெனநினைத்தனளுருவிலெண்ணிலகோடி
தளவவார்குழலரம்பையர்மருண்டிடத்தழைத்தபேரொளிவாய்த்த
விளகிலாதகைமடந்தையருதித்தனரிந்திரைதொழத்தக்கார். (கூ)

பூணிலங்கியவடிவினரிளமையின்பொலிவினர்நலமிக்கார்
நாணிரம்பியமதிநிகர்சாமரைநவரத்நகாளாஞ்சி

காணவேதகுமடப்பைகைக்கொண்டனர்கானஞ்சேர்தரும்ருத்ர
வீணைதங்கியகரத்தினர்சூழ்ந்தனர்விதம்விதமடநல்லார். [௰]

இலங்குமாதர்களுருத்திரவீணையினைந்தையார்புகழேத்து
நலங்கடன்செவிப்புகவுளமுருகினனனும்வாழ்த்துவனென்றே
ரலங்கல்வீணைகொண்டம்பிகைபாடினளமுதவேழிசைகேட்டே
கலங்கினருளந்தும்புருநாரதர்காந்திருவர்களன்றே. [௧௧]

ஓதுசாமரம்வீசிடக்கொடிகுடையுவரியின்றிரைபோல
மீதுசென்றிடவீணைகண்முழங்கிடமிக்கதுந்துமியார்ப்ப
வாதிநாயகிசெலும்பொழுதெம்பிரானவட்குளங்களிகூர
மாதரார்சிலரனுப்பிடவந்தனர்வாணிபோலிசைவல்லார். (௧௨)

வேறு.

கானவித்தைபரதங்கள்சக்கிணிகானுநாடகவித்தைகள்கற்றுளார்
வானவித்தகமாதர்மயங்குறமரன்மருட்டியபார்வைமயக்குவார்
பானலத்துறுசர்க்கரைப்பந்தரிற்பன்னருத்துளிர்த்தாலெனப்பாடினு
ரானவற்புதமாநடநாடகமாரவாரத்தினேடுவந்தாடினர். (௧௩)

கண்டனள்ளுமையாள்கண்களித்தனள்கருணை யென்னிடத்துற்ற கருத்தெலா, மண்டர்நாயகரென்னுடைநாயகரண்டர்யாருமறியச்செய் தாரென்றுள், கொண்டசங்கரனூர்சுகநல்குமோர்குறிப்புணர்த்தக்கொ டுத்ததிவையன்றே, பண்டுநான்செயருந்தவத்தாலுறும்பாக்கியங்கள்ப லித்துளவாமென்றுள். (௧௪)

அன்னவேலையின்மின்னசைந்தாலென வாடகத்தட்டமேந்தியவந் நலார், தன்னைநேரிலவட்கழகாலத்திதாங்கிச்சூழ்ந்தனர் தானுவனுப்ப வே, பன்னலங்கொள்கனிபலபண்டமும்பஞ்சவாசம்பரிமளகந்தமு, மி ன்னலங்கொள்காளாஞ்சி பொற்பள்ளையமேந்திவந்தாரெதிர்கொண்டுவா ங்கினள். (௧௫)

அனையதெம்பெருமான்பிரசாதமீதமரருக்குங்கிடைத்தற்கரியதா
மினிதருத்தப்பெற்றோர்பரிசுத்தராயின்பவீட்டினிலெய்துவராலிது
தனையிகழ்ந்தவர்நல்குரவோடுற்றுச்சார்வருநரகத்திற்றளர்வராற்
புனிதமாதவர்யாகத்தவியினும்புனிதமாமிதுவென்றுளம்பூரித்தாள். ()

தாங்கிக்கொண்டுகனிபலபண்டமுந்தானுகர்ந்துதாம்பூலமருந்தினள்
பாங்குசேர்தருகந்தசுகந்தமும்பரித்தரன்செய்பரிசுகொண்டாடினு
ளீங்குப்புக்கவர்நாட்டியம்பார்த்திடாமேதகல்குற்றமிறைவரிகழ்வரென்
றுங்கணுற்றவர்நாடகம்பார்க்கவேயாசையுற்றுளிமயத்தரசியே. (௧௭)

நேத்திரமொருமூன்றவற்றுறுநேத்திரமடவார்நடநெஞ்சிற்புல் [டாள்
காத்திருந்துறவேகினைந்தம்பிகைகாத்திரந்தனந்திருக்கண்கொண்

சாத்திரப்பொருளார்தரவந்தவச்சாத்திரப்பரதத்தனிநாடகப்
பாத்திரங்கணின்ருடும்பரிசெலாம்பார்த்திருந்தனள்பாணித்தகாலமே.

இந்தநாடகந்தான் கயிலாயத்திலெந்தநாளினும் யான்கண்டறிந்தி லேன், முந்துமென்பொருட்டாற்புதிதாகவேமுதல்வனுரின்றமைத்தமு றையெனப்பா, ளந்தவானத்தரம்பையுருப்பசியணிதிலோத்தமை மேன கையாதியோர், வந்துபார்த்திவைகற்றறியோமெனமருள் கொள்வாரெ னமங்கைகொண்டாடினுள். (௧௯)

வானநாட்டவர்பார்த்திவைதான்சிவன்வல்லபத்தி லமைத்துளவா றன்ரு, கானவித்தைக்குவாணிகலங்கினுள்கமலத்தாளிவர்கட்டழகை க்கண்டே, மோனமுற்றுமுகங்கவிழ்ந்தாளென்பார்முத்துமுத்திவராடிய நாடக, மானவற்புதமெய்த்தவத்தாலிவராதிதாசியரா யடைந்தாரென் பாள். [௨௦]

பின்னுமம்பிகை பேசுகின்ருளிவர்பெம்மான் பூசைப்பலன்பெற்ற பெற்றியாற், றுன்னுசுந்தரமாமுகத்தோற்றமுந்தொலைவிலாதவிளநலத் தோற்றமு, நன்னயங்கொள்சங்கீதப்ரசங்கமுநவநவம்பெறுநாட்டியப்பு ங்கமு, மன்னுகின்றனரெம்பெருமானருள்வல்லபஞ்சொல வல்லவர்யா வரே. [௨௧]

அழகுமாண்மைகளுநெடுவாழ்க்கையுமளவிலாச்செல்வமும்மருஞ் சுற்றமு, மழவுநோயற்றகாயபெலங்களும்வல்லபங்களுமாட்சியுஞ்சூழ்ச் சியுங், கழகம்போற்றியகல்வியின்காட்சியுங்காவலர்க்கரசாமரசாட்சியுந், தழனிறத்தெம்பிரான்சிவபூசனை தந்திடும்பலன்றந்திடுங்காண்மினே. [ ]

செம்பொனுட்டினும்புண்ணியஞ்செய்துளோர்தேவராகியசுரத்திர ளினுற், கம்பமுற்றுடைந்தோடிக்கலங்குவார்காசினிக்குட்பிறந்திறந்தே ங்குவார், விம்பமாஞ்சிவபுண்ணியஞ்செய்துமேல் வீடுபெற்றவர்மீட்டும் பிறந்திடா, ரெம்பிரான்சிவலோகத்திலின்பமேயின்பமற்றெலாந்துன்ப மாமென்பவே. (௨௩)

ஆதலிற்சிவபூசையின்பேற்றினுலாதிசக்திதித்தாதியராயினுர்
மாதராரிவரென்றுமைநாயகிமாதராடன்மகிழ்ந்திருந்தாளென்றே
சூதமாமுனிவேதவியாதனுர்சொன்னகாதைமுனிவர்க்குச்சொல்லினுன்
காதலாலிவைகேட்கப்பெற்ரோரெலாங்கவுரியீசன்கழல்பெற்றிருப்பரே

எட்டாவது தேவிநாட்டியம்பார்த்தசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௨௯௪.



# நந்திகணங்களாலோசவனைச்சருக்கம்

வேறு.

விரோட்டம்.

ஆணுகியவியாகியாயிமைழயாயல்லதாயனைத்தானுனைச்
சேணுகியணித்தாகிச்சேராதாரிடந்தனிலேசேராதானை
நாணுளாயரியயனுர்நாகங்கீழிடைத்தேடிநலிந்தேகண்ணுற்
காணுதகாரணனையகக்கண்ணுற்காண்கின்றுர்காட்சியாரே. [க]

வேதபாராயணன்வியாதன்விளம்பினவைவெகுவிதங்களாகு
மாதரார்நடனகீதங்கள்கண்டுகேட்டுள்ளமகிழ்ச்சிகூர்ந்தே
யாதிநாயகிசூழ்ந்தபரிசனத்தின்வரிசையுங்கொண்டமர்ந்தாளென்றே[ல்
சூதன்றுனேதினன்பின்னிகழ்ந்தவையுமருந்தவர்க்குச்சொல்கின்றுன

வல்லவள்பார்த்திருந்தபரிசதனையுணர்ந்தேயெவையும்வல்லநாதன்
பல்லவராயருகுநின்றபரிசனராங்கணங்கடமைப்பார்த்துச்சொல்வான்
சொல்லுடலன்கண்டுகேட்டுண்டுயிர்த்தவூறைந்தாஞ்சுகங்களல்கு
மில்லவளிங்கில்லாளேலென்னவின்பமற்றுளநமின்பமென்று. [ங]

காதலியில்லாக்காலமவகாலமம்பிகைதான்கடிதிங்கெய்தப்
போதிரெனச்சொற்றநந்திகணத்தரிதுவரைக்குமிங்ஙன்புகுந்தாரில்லை
யாதலினுனீவிருமப்படியோசுந்தரிவருமாறதுசெய்வீரோ
வோதுமென்றேவிடமுன்போயிருக்குநந்தியிடத்தவர்வந்துற்றுரன்றே.

வந்துளோருமைசமையம்பார்த்திருக்குநந்திகணமற்றோர்தம்மை
யெந்துசெய்தீரென்றிறைவரெமையேவவந்தனமியாமீசன்பாங்க
ரந்தரியங்கில்லாமலையவவர்படுந்துயரமநேகங்கண்டி
ருந்துகணமோருகமாவுற்சாகபங்கமுற்றேயுறைகின்றுரால். (ஔ)

காண்பருநற்பொருளனைவகளிருந்துமவண் முகத்தெழில்போற்கா
ணுமென்பார், மாண்புறுமற்றவளழகுங்குணங்களுந்தம்மகத்திருந்தே
வருத்துமென்பார், நாண்பெறுமங்கவள்வந்தகாலநல்லகாலமென்றுர்நந்
திநந்தீ, வீண்புகன்றதிறையிலிறையிடத்திறைவிசேர்வதுவே வேண்டு
மென்றுர். [சூ]

சொன்னவுரைகேட்டிலுமேநந்திசொல்வான்கணங்களேசோதியார்தா
மன்னையிடத்தெமையேவியாட்டுவிக்கின்றுர்கண்டீரகிலமீதி
லென்னகாரியங்களெம்மாலியலாதகாரியந்தானிதுபோலுண்டோ
பன்னவரியாணடனம்பார்த்திருக்கின்றுணீரும்பாரும்பாரும். (எ)

வேறு.

பாமோகமிகுந்துநினையகிதன்வாமத்துறவேமயல்கொண்டுறைவோர்
தாமோகனமாநடனம்படவார்தமையேவிடவுந்தகுமோதகுமோ
சோமோதயமாம்வதனத்திமயத்துரைராசதுரந்தரிதன்றிருமுன்
யாமோபுகல்வோமவளிச்சையலாலெமதிச்சையுமிங்குநடந்திடுமோ. ()

அண்டத்தினையோரணுவாக்கவலோ மமரர்க்கிபர்க்கதிபர்க்கதிபர்,
றுண்டப்பிறைபோனடியார்க்கடியார்தொண்டர்க் குறுதொண்டர்கடா
மலவோ, விண்டைச்சடையானிகரென்றெமையேயெதிர்கொண்டிமை
யோரயன்மான்முதலோர், தண்டப்படுமோமரமாமெனநங்கால்வீழ்ந்திடு
மாகண்டிலையோ. (௰)

வந்துற்றபெருங்கடல்வெள்ளமெலாம்வாரிச்சிறிதாகமனங்கொளலா
முந்திச்சுடர்வீசுகடுங்கனலாமூழிக்கனலூதியவித்திடலா
மந்தப்பிரமாதியர்தங்களையேயடிமைத்தொழிலேவலமைத்திடலா
மெந்தைக்குயிராமிமயத்தரசிக்கெதிர்சென்றுரையாடலிசைந்திடுமோ.

பெருமைக்கொ ரிருப்பிடமாமிறைவன் பெருமாமலைதந்தருள்பெ
ண்பெருமா, னருமைத்திறமுற்றறிவானிமையோரறியாவிறைவன்செய
லாரறிவா, ருருமைக்கரிமாமுகன்வேலவன்வந்துறுமேல்வரு மோவுண
ரேமெனவே, பொருமுற்றிடுபூதகணங்களொடும்புகலுற்றனனந்திபினு
ம்புகல்வான். (௧௧)

சார்வுற்றிடுமெம்பெருமாட்டியிடஞ்சார்வோமிகு சாரதரிப்பொழு
துஞ், சேர்வுற்றனரென்றுரைசெய்குவமாற் றிருவுள்ளமதெப்படியோவ
றியோ, மார்வுற்றிடுநாடகமாடுமினாரவர்வந்துவளைத்தனரம்பிகையைப்,
பார்வைச்செயலங்குளவாமெமையும்பார்க்குந்திறமும்முளதோபகர்வீர்.

கண்ணுக்கினிதாகியநாடகமோகாதுக்கினிதானகவித்துவமோ
வுண்ணத்தகுமின்சுவையோமணமோவுடலம்புளகந்தருசந்தனமோ
நண்ணுற்றபுலன்கள்களித்திபவேநாதன்றரவந்துநிறைந்தனவாற்
பெண்ணுக்கினியாளிவணுற்றனளாற்பிழையாவரிடத்ததுபேசுதிரே.

நடராசனனுப்பியநாடகியார்நடனத்திறநாடிநகைத்திறைவன்
மடமாதிருந்தனளிங்கிதனைமாற்றுந்திறம்யாவர்வலாரெனவே [ன்
றிடமார்தருநந்தியுடன்கணமுஞ்செயலேதெனவெண்ணியிருந்தனரெ
றிடமார்தருநேமிவனத்தவருக்கிசைத்தானருஞ்சூதனெனுந்தவனே.

ஒன்பதாவது நந்திகணங்களாலோசனைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௩௭௮.



# கணபதிவந்தவணச்சருக்கம்.



கழையாடியதோள்வளையாடியகைகனியாடியசொல்களியாடிடவே
மழையாடுவிழிப்புலியாடரவுமகிழாடவுமாடகமன்றினிடை
யுழையாடவிடத்தின்வலத்தினிலேயொளியார்மழுவாடமணிப்பணியின்
குழையாடநின்றுடியகூத்தனையேகொண்டாடவலார்குறைபாடிலரே.

தவராசன்வியாதன்விளம்பிடுவான்றலைவன்னவனேவியசாரதரு
நவராசதநந்தியுநங்கையிடநாடுற்றவரின்னமுநண்ணிலரா, லெவணேகி
னரோவவடான்வழிவந்திடர்கூரவிளைத்திடையுற்றனளோ, வுவமானமி
லாளுடல்வாகையின்மேலொண்போதினையோவெனவோதுவனால். (உ)

கயிலைக்கிரிமாபெலவானவருங்கருதற்கரிதாம்வழிமற்றலவோ
மயிலொப்பியலாளெகினச்செயலாள்வழிவந்துபரிந்திடவல்லவளோ
வயிலைப்பொருகூர்விழிபாலுறவேயடிவைத்திடவிங்கறியேனவறியே
னுயிரொப்பவளங்குறவிங்குநமக்குறுசத்தியுமுண்டுகொலோதிடிலே.

கொடிதேகயிலைக்கணவாய்வழிமென் கொடிபோலுருவாள்குழை
வுற்றனளோ, துடிபோலிடையாளழலுற்றனளோசூறுவளியாற்சுழலுற்
றனளோ, கடிசேரமுதேயனையாடனையேகதிரோன்சுடுமேகவலுற்றிடு
மே, யடிபோற்றுமடந்தையரங்கிலையோவறியேன்குறியே னவடன்செ
யலே. (சு)

மலையான்மலையாண்மனை மேனையெனுமாதா வுடனேவரவந்தில
ளோ, தொலையாவழியிங்கிதுதானெனவேசோர்வுற்றவடான்மீள்வுற்ற
னளோ, தலையாகியதாயவனுற்றனளேற்றளிர்போலுருவாடளர்வாற்று
வளே, வலிதாடொழுவார்க்கருள்செய்வளெனமறைபோதியதென்னள
வும்மிலையோ. (ரு)

மனமார்தருகற்புடையாளவடான்வழிவந்துவருந்தியிருந்தனளோ
புனமானனையாளையழைத்துவரப்போனாரவர்வந்துபுகன்றனரேற்
கனமார்தவமுற்றவுறைப்புடையாள்கணையுற்றிடுமாறிலையேகருதிற்
றனமார்தவம்விட்டுமணந்திடும்யாந்தனியேயுறவானவமானதுவே. (சு)

பூரித்ததனச்சுமையாற்றுகிலாள்பொறையுற்றுவருந்தியிருந்தனளோ
வேரிக்குளிர்தாமரைவண்டெனவென்விழியங்கவண்மாமுகமேவிடுமோ
வேரிற்றிகழ்பாரியணைந்திடுமோதினிதுற்றநிமித்தமுமெய்திலதா
லாரித்துயரத்திலிடைந்தனரென்றரனேதினனின்னுமறைந்திடுவான்.

புனையோவியமன்னதோர்கற்புடையார்பூப் புற்றிடநற்பொழுதிற்புணர்
வா, ரினிதாகியவேதநைட்டியரென்றெழுதாமறையாவுமியம்பியவாற்,
றனையேமகவாமெனவேவயினிற்றரித்திடுமப்பாரிப்பெயரே, வனையாயி
ழையார்மனமாதரவாமனைமாதவமாம்துமாதவமே. [அ)

மன்னுமுருவர்க்குவஞ்சருக்குவஞ்சராங்கள்வர்மன்னனாருக்
கன்னியர்காரியமறிந்தேயனுக்கிரகநிக்கிரகமமைக்கின்றார்க்கே. [கஎ]

வரையினிடைத்திரிபவருக்கியாவரும்பூசிப்பவர்க்குமனத்திலன்பு
தரையினில்லாரிடத்தினில்லாதகல்பவர்க்குப்பாவிகளைச்சங்கரிக்கும்
விரிதருசெஞ்சடைநீலகண்டருக்குச்சிவிகையின்மேன்மேவுவோர்க்குப்
பரிநமசிவாயருக்குத்தீர்த்தநதிகரைபெருக்காம்பகவனார்க்கே. [கஅ]

அறலுருவாயப்புனலின்வீழ்ந்தவர்க்குந்தோணியாயரும்புல்லாகி
நிறையுமழைக்காலமாயல்லாதகாலமுமாய்நிறைதலோடு
குறைதலாய்க்கந்தரமில்லாதவராயுளராகிக்குளிர்மாணிக்கம்
பெறுஞ்சட்டையுளரிலராய்க்கேள்வியுளராயிலராம்பெம்மானுக்கே.

சேட்டர்கனிட்டருமாகிவனப்பொருளாய்மலைமுழையாய்த் திருந்
தவோடு, மோட்டமுளதேருமம்புமுடையராய்ச்சேனைகளாயொளிர்பூ
ணாகிக், கோட்டுபறைகொட்டுதமியேவுவோன்செய்வோனாங்கொள்கை
யோராய், நாட்டமுறுபரவிந்துரூபவோமப்பொருளாராதனார்க்கே. [உ௦]

இதமாகிவழிநடக்குமவராகிவன்மைபெறுமிடையராகி
யதமுடையபிறப்பியற்றுமவராகிப்பிறப்பறுக்குமமலராகி
முதுகெலும்பாயெலும்பில்லாரூபராய்க்கூட்டமாய்முறைவீடாயார்
சதகுணத்திற்கூடுவாரிரத்நவுருவாய்நின்றதலைவனார்க்கே. (உக)

அரிசனரூபத்தர்பாரதமற்றோரடிபடுவோரம்பிற்சித்தர்
விரிவிசுவரூபர்விசுவம்பரிப்போர்விசுவவரதாவனார்க்குப்
பரியுமலைமகள்கணவனார்க்கிடபவாகனராம்பரமனார்க்குத்
தெரியுமுருவறிவரியசுந்தரத்தின்சுந்தரமாஞ்செய்கையார்க்கே. (உஉ)

சாட்சிக்குஞ்சாட்சியாய்முக்குணாதீதருமாந்தம்பிராற்கே
பாட்சிகொள்வில்வார்ச்சனைகண்மகிழ்ந்தவருக்கிரவுபகலற்றுளார்க்குக்
காட்சிகொளுங்காலகாலர்க்குவிசுவேசருக்குக்காசிவாழு
மாட்சிபெறும்பிறவாதவமுதசாகரியழகிமணவாளர்க்கே. (உ௩)

நிலஞ்சுமக்குங்குலவரையாய்மலையருவியாபுடைவைநிலைவைப்போலுங்
கலஞ்சுமக்குமாரவடவீரராய்வீரருக்குங்கடவுளாகி
நலந்தருபேருணறையுளாய்நின்றவுமக்குநமோநமோவென்றோதிப் [றே
புலந்தருமன்புடன்போற்றிபோற்றியெனத்தோத்திரங்கள்புகன்றானன்

செப்பரியவுருத்திரமந்திரத்தினொடுமரியசகத்திரநாமங்க [சொல்லித்
ளெப்பொருளும்புகுவேதப்பொருள்களாகமப்பொருள்களெல்லாஞ்
தப்பரியவைந்துகரத்தாறுமதப்பிள்ளைநின்றுசாற்றலோடு [னல்.
முப்பொருளாம்பழம்பொருளப்பிள்ளைமுகம்பார்த்தினியமொழிகுவா

இவ்வண்ணந்துண்டிவிநாயகன்பணிந்துபணிந்துபுகழ்ந்தேத்திநின்
றேமைவண்ணக்கந்தரனைவாழ்ந்திறனிந்துநிலைவழுத்தினோர்க, ளாய்

வண்ணம்பெறுவரெனநைமிசவாணருக்குரைத்தானுலகம்போற்றுஞ்,
செவ்வண்ணத்தபோதனனுஞ்சூதமாமுனிவனின்னுஞ்செப்புவானால்.

**பத்தாவது கணபதிவந்தனைச்சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-௩௩௪.



பதினோராவது,

# கணபதிமறுத்துரைத்தசருக்கம்



வேறு.

பாவலர்க்கொடன்றியும்பாணியாதுபாணியாற்
பூவலர்க்கொடன்பினோடுபுந்திவைத்துநாடொறு
மூவருக்குமுதலதானமூர்த்திதாளையேத்துவார்
தேவருக்குமதிகரானதேவராவர்திண்ணமே. (௧)

அருகுகின்றமைந்தனைதுண்டியானைதனையர
னுருகுமன்பினோடுபோர்த்துவந்துநின்றனிளவலா
முருகனெங்குமேவினானும்முறைகொடாயைநுங்களைப்
பெருகுகின்றகாலம்யாம்பிரிந்துளோமெனச்சொல்வான். (௨)

உன்னையுன்றனிளவறன்னையுங்களைப்பயந்திடு
மன்னையாமெம்மின்னையாம்பிரிந்துவாழ்வதழகிதோ
வென்னைசொல்வமிமயம்விட்டெழுந்தவேழைவழியிலே
மன்னினாள்கொலென்னவின்னல்வந்ததென்றறிந்திலேம். (௩)

தாயிடத்தினீமிகுந்ததயவுபத்திசார்ந்துளாய்
போயடுத்தவாறுணர்ந்துபொள்ளெனக்கொணர்கெனா
வாயெடுத்துரைத்ததந்தைவார்த்தைகேட்டுவாழ்த்தியே
சேயெனத்திகழ்ந்தயானைசிந்தைசெய்துசெப்புமால். (௪)

இமயவெற்பினுக்குமேருகயிலைவெற்பிதற்குமே
யமைதலுற்றநெறிவெளிக்குளாயுதகோடியதிகமே
கமையெடுத்தவெமையளித்தகருணையைக்கணருமையா
முமைபவட்கும்வழிவரச்செயுறுதிமெத்தவருமையே. [௫]

எம்பிராட்டியென்னையீன்றவிமயராசகன்னிகை
தம்பிரானனுப்புகின்றதையலார்கள்வஞ்சியின்
கொம்பனார்கள்பாலினிற்கொழும்பழம்விழுந்ததா
நம்புபாடலாடலைநயந்துநண்ணினாள்கொலோ. [௬]

அன்னமன்னமின்னனார்களாடல்பாடல்வையக
மன்னிவிக்கினங்கள்செய்தியான்விலக்கவல்லனோ

பின்னையுற்றபேரிடத்தில்விக்கினஞ்செய்பெற்றிபோ
லென்னையாளுமன்னைமுன்னிழைக்கின்மோசமெய்துமே. [எ]

வேதவிந்துரூபமேவவேணுமென்றுவந்தநீ
ரேதினல்வினைதமாதராரையங்கணேவினீர்
காதன்மாதராடல்கண்டுகண்களிக்குநங்கைபா
லோதுகின்றயான்விலக்கிலூறுகோபமேறுமே. [அ]

அன்னைசீறிலன்னள்கோபமாதரிக்கவல்லரா
ரென்னையாவுயிர்க்குமோர்நீறுவேண்டினேரிழைப்பரீ
துன்னையான்விடுத்தகன்றிவாறுசென்றுஞற்றிலேன்
பொன்னடித்துணைக்கணன்புபூண்டுளேனெனச்சொல்வான். [௯]

உனதுபாதவருளதாகுமூறுதேன்விரும்பியென்
மனதெனுஞ்சுரும்புசென்றுமண்டுகின்றதென்சொல்கே
னனகமெய்த்தவங்கள்செய்தடுத்திடாவரும்பொரு
டனதுகையிலுற்றபோதுதள்ளுவான்கொல்வள்ளலே. [௧௦]

தந்தையானநீயெனக்கோர்தாயுமானதுண்மையே
யெந்தையானோர்வேறிடத்திலெய்துதற்கிசைந்திலேன்
புந்தியாரவுன்பதாம்புயம்பணிந்திருக்கவே
மைந்தனுமெனக்குநீவரம்பணித்தியையனே. (௧௧)

கூறுமாதர்மீதிலெய்துமன்பினூறுகோடியொன்
றூறுகூடியையவுன்பதத்தில்வைத்தவவர்களே
யேறுகின்றவானவர்க்குமிறைவராகுவாரெனத்
தேறுகின்றமறைகணின்றுசெப்புகின்றவப்பனே. (௧௨)

கற்பகோடிகாலமைங்கனற்குணின்றருந்தவம்
வெற்பினுச்சிமீதிருந்திழைத்தமேலவர்க்குமே
நிற்பணிந்துளோர்கள்சேவைநேடினும்பெறுந்ததா
லற்புடனின்பாதசேவையன்றியான்புறத்துறேன். (௧௩)

தருமசிந்தையறிவுளோர்கள்சங்கரன்பதாம்புயத்
துருகுமன்புபுண்ணியமதுறுதிகொண்டவுதவியா
மருகுநின்றமனைவிமைந்தராண்டபண்டமுடலமும்
வருவதொன்றுமில்லையென்றவாய்மைவாய்மையல்லவோ. (௧௪)

சங்கராபராபராதயாகராமனோகரா
பொங்கராவணிந்திடும்புரகராவராகரா
விங்குவந்துனைப்பணிந்திணைப்பதத்திலன்புகொண்
டங்கணைத்துகின்றிலேனெனப்பவொப்பிலப்பனே. (௧௫)

எம்பிரான்புகழ்ச்சிகேட்டவிருசெவிக்குமினிமையா
னம்பிநின்றன்வடிவுகண்டநயனமுற்றநன்மையே

கம்பியாதுபூசைசெய்தல்கைகளுக்கதுறுதியே
தம்பிரான்றன்பரிகலங்கள்சாற்றுநாவிற்கேற்றமே. [கசு]

படைநினுக்குமுறுதியுன்றன்வடிவையுன்னுமாறெனத்
தனையளித்தவரன்முனின்றுதந்திசாற்றினனெனப்
புனைமலர்ப்பொதும்பர்நைமிசத்திருந்தபுனிதரா
முனிவருக்கிபம்புசூதனின்னபின்னுமொழிகுவான். (கஎ)

பதினோராவது கணபதிபூசைத்துரைத்தசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருறுக.



பன்னிரண்டாவது,

# தாருகன்கதையுரைத்தசருக்கம்



வேறு.

கரணமும்புலன்களுங்கலங்கிடவுடல்கலங்கு
மரணவேதனைசனனவேதனையுறமாட்டே
னரனுன்னுமமுஞ்சரணமுமேதுணையரவா
பரணசங்கரவிங்கெனைப்பரிந்தருள்வாயே. (க)

வேதநாவினன்வாதராயணனுரைவிரித்தே
சூதனேதுவானுனதுதாடுணையெனச்சார்ந்தேன்
பேதையேன்றனைக்கைவிடேலென்றரன்பெருஞ்சீ
ரோதுமைந்தனுங்கணபதிக்கிறையுரைத்தனனே. (உ)

அருகழைத்தனன்றழுவினன்றுண்டியையங்கரனைப்
பெருகுமின்றுதிகேட்டுளமகிழ்ந்தனம்பெரிதே
தருவரங்களிங்குனக்கியாந்தராதனவுளவோ
முருகனீயுமைமூவரும்பிரியராநமக்கே. [ந]

மறையின்வித்தகமறைப்பொருளாகுநந்நாம
நிறையுந்தோத்திரம்புகன்றனைநீசிரஞ்சீவி
மறையுமித்துதிபுகன்றுளோர்நினைத்தவையனைத்தும்
பெறுவருன்றனைப்போலென்றான்பேசுவன்பின்னும். [ச]

மைந்தவேகமதாகவேமலைமகடன்பாற்
புந்திவைத்துநீபுகுந்தவட்கொணருதிதாயே
தந்தைதன்னிலுமதிகமென்றருமறைசாற்று
முந்துமோனருந்தாயர்தாண்முடிவைப்பரன்றே. [ரு]

தாயர்கற்பினில்வழுவினராயினுந்தனையர்
மேயதீப்பிணிதீர்த்தவர்ப்புரப்பதுவிதியா

லாயதாலணையணைமனையிருக்கினுமவளை
நேயமாகவேதந்தைபாற்சேர்த்திடனெறியே. (௬)

அன்னதாலையவேகியேயுனதன்னையவளை
மன்னுமென்னிடத்துய்த்திடவேண்டுமேமைந்தா
கன்னிநம்பரிகலத்தமுதுண்ணுங்கற்புடையாட்
குன்னுநம்பிரசாதமீதுதவுதியுரவோய். (௭)

தகைமையாளவளிடத்தினிலேகியேசலியா
தகமகிழ்ந்திடப்புரிந்தெம்பாலவட்கொணர்குவையே
மிகவுமங்கணைநம்மிடத்தன்புமேவுவதே
திகழும்யாமுமன்னவளிடைச்சிந்தைசெய்வதுவே. (௮)

வாகுசேர்தருவடிவினிற்குணத்தினின்மதியி
னுகரீகமாமைந்தரைப்பயந்திடுநலத்திற்
போகம்யாவையுந்தந்திடுஞ்செயலினிற்பொலிந்தா
ளாகையாலவளிடத்தில்யாமன்புவைத்தனமால். (௯)

சிதடராயினுஞ்சிந்திக்கிற்செல்வமுற்றிடுவார்
புதர்களுந்நினையாரெனிற்போகமுற்றிலரே
யிதமியாவர்க்குமளித்திடுமிறைவிகல்யாண
முதல்விதன்னையாம்பிரிந்திருக்கின்றதுமுறையோ. (௧௦)

ஏகுகின்றநீயங்கவடனையிதயத்திற்
றுகமோடுறநினைத்தனைசார்குவையாயிற்
போகுமந்தநற்காரியம்வாய்த்திடும்புகழே
யாகுமாறுநின்றுணைகுகன்புரிந்தனனதுகேள். (௧௧)

வேறு

ஏருறுங்குகனுனும்பியெமதேவனுடனே
சேர்பவானியடிசிந்தனையில்வந்தனைசெய்தே
தாருகன்றறுகணற்கரசனுனதகைமைப்
போருகாதவனைவென்றுபுகழ்பூண்டனனரோ. (௧௨)

அன்னதாருகனதன்மையறைகின்றனமவ
னுன்னருந்தவமுளுற்றிமலருற்றவபனுர்
மன்னுகின்றவரநமதுவரம்வவ்விவலியாற்
பன்னுமூவுலகும்வென்றிசைபடைத்தனனரோ. (௧௩)

விண்டுவோடயனுமெண்டிசையின்மேவுமெவருங்
கண்டகன்கொடுமைகண்டுகடல்காடுமலையுங்
கொண்டவண்டமிசைகூடுமிடநாடிமறுகி
மண்டியோடினர்கரந்துருவமாறினர்களால். (௧௪)

தேவராசன்முன்விருத்திரசெயங்கொடிறல்சேர்
தாவில்வச்சிரமோர்தண்டெறிதுரும்புதரவே

மேவுமாதவர்தம்வேடமுடன்மேதினியின்மேற்
பாவைமைந்தனொடுபன்னகுடிமன்னினனரோ. (௧௫)

அங்கிபங்கவனடிக்களைமடைத்தொழில்செய்வான்
மங்குகின்றவருணன்புனல்வழங்கியுறுவான்
றுங்கவாயுமனையிற்றுகடுடைத்துலைகுவான்
றங்குதேவரவன்சாற்றுதொழிலேற்றனர்களே. (௧௬)

பானுவெங்கதிர்பரப்பிலனெத்திடல்செயா
னானமற்றையவர்போனவழியாரறிகுவார்
தானம்விட்டுயர்தபோவனமும்விட்டுமறைதேர்
மோனர்வெற்புறுமுழைஞ்சினினுழைந்தனர்களே. (௧௭]

ஆனகேளசுரருக்கிகலனானவரியுங்
தானவன்சமரினொந்துதளர்வுற்றுவலிபோய்
மீனமாயுவரிமீதினில்விழுந்ததுமலா
னூனமுற்றொழியுமின்மினியையொத்தனனரோ. [௧௮]

அன்னவூர்திதன்மனோவதியகன்றவனியிற்
றுன்னுநம்பிரமமாபுரமதிற்றுரிசிசேர்
பன்னசாலைபழமைப்படவமைத்ததனிலே
மன்னிவாணியொடுமாதவரின்வேடமலிவான். [௧௯]

இத்திறத்தமரர்யாவருமிடைந்தயரவே
முத்திறத்துலகும்வவ்வியமுரண்கொளசுர
னத்தெடுத்தவனலங்கொள்பதிநண்ணியவன்வாழ்
சித்திரச்சபையிருந்தரசுசெய்தனனரோ. [௨௦]

அன்னவேலையவனுற்றவிரசாதியதிற்
றுன்னுமங்கிவெகுசூலமுனைகொண்டுதொடரா
மன்னுமங்கவனைவாட்டியிடவோட்டமுறுவான்
பின்னரங்கண்மருவான்றனிபெயர்ந்துபடர்வான்.

நமதுநெற்றியுறுகாட்டவனல்கேட்டழிகுவான்
சமரெடுத்துநமிடத்துறுதல்சற்றுநினையான்
குமரதாருகனென்னுங்கொடியகொற்றவசுர
னமரரைத்திறலடக்கியுலகாண்டனனரோ. [௨௨]

ஆனகாலைதனிலண்டர்பலர்கூடியரிசேர்
தானமானபலதேடியெதிர்சார்ந்துதொழுதே
யூனமுற்றொளிமழுங்கியுறலோர்ந்துளம்வெரீஇ
மானமுற்றதிசயத்துடன்மயங்கினர்சொல்வார். [௨௩]

வரிசிலைக்கணையிலசுரர்கிளைவாட்டுதிறல்சே
ரரிபடைக்கலமெமக்கெனவடைந்தனமியாம்

புரியும்வெஞ்சமமும்வாகுபெலமும்பொருவிலா
வுரியவைந்துபடைமைந்துமெவனுற்றவுரவோய். [உச]

வீரியத்திறையொளித்திவண்மெலிந்துறைதியே
லாரினிச்சரணெமக்குவிறலாண்மையுளவோ
தாருகக்கொடியதானவனைவென்றிடுதனிப்
போரிழைக்கிலலதேதுபுகலென்றுபுகலா. (உ?)

தேவர்சிந்தனைகலங்கியிவைசெப்பலுமலர்ப்
பாவைகொண்கனதுணர்ந்துரைபகர்ந்திடுவனு
லியாவர்தாருகனைவெல்லுமவர்யான்முனமவன்
கோவவங்கியினில்வெந்துறல்குறித்திலிர்கொலோ. (உசு)

தேடிவந்தவசுரன்றனெதிர்சென்றுசிலைகால்
கோடிவெங்கணைகள்கோடிசதகோடிபொழியா
வாடியைந்துபடைவெந்துவடிவுங்கருகியா
னோடிவந்தகதையொன்றையுமுணர்ந்திலிர்கொலோ. (உஎ)

இனையதானவனைவென்றிடுவனென்றுணர்தரு
நினைவைவிட்டுவிடுநீவிரிவண்வந்துபுகலும்
புனையுமிவ்வுரையறிந்திடில்வளைந்துபொருமால்
வினையமொன்றுமறியீரெனவிளம்பிடுவனல். (உஅ)

மதுவைவென்றனனியானெனவிம்மன்னுலகுசொல்
வதுவறிந்திலிர்கொலண்டர்மகமாயிபரையாம்
விதுவணிந்தமுடிவிமலைசிவைதந்தவிறல்காண்
புதுமலர்க்கொடவள்சேவடிகள்பூசைபுரிவீர். (உகூ)

வேறு.

அன்னவளுமங்கூறிலம்பிகையுமைசர்வாணி
மன்னுமாகௌரிதூர்க்கைமங்களைவிகடைவாமை
கன்னிகாமாட்சிசித்தைகாளிமாமயிடற்காய்ந்தாள்
பன்னுசாலாட்சிகார்த்தியாயினிபரையாமன்றே. (௩0)

அவண்மகாமாயையானசிற்சத்தியகிலமெல்லாந்
தவறிலாமோகஞ்செய்யுந்தாயவடனைப்பூசித்தா
லுவமைதீர்மாயைநீங்குமுறுதியும்பெறலாமென்று
கவலுறுங்கடவுளோர்க்குக்கண்ணன்கூறினன்பின்சொல்வான்.

முன்னவள்சிவனுக்கங்கமுத்தொழில்புரியவல்லா
ளன்னவளுலகமெல்லாமாட்டுவித்தடக்குவாளாற்
பன்னியபலரயைப்பூசைபண்ணிலுய்ந்திடலாமேலாங்
கன்னிதன்னருளால்வென்றேன்கபிடவன்மதுவைக்கண்டூர்.

அம்பைதன்பதாம்புயத்தையருச்சனைசெய்தோமாகி
னம்பனுங்கருணைசெய்வானமக்குநல்லுறுதிவாய்க்கு
மிம்பரிற்செல்வம்யாவுமெய்திவீற்றிருக்கப்பெற்றே
யும்பர்காள்பிறவாச்செல்வமுறுதலும்பெறலாமன்றே. (௫௩)

பரமனைப்பரையைப்பூசைபண்ணுவோர்தங்கள்வாசற்
பெருகியசதுரங்கம்பிறைநுதன்மடவார்மைந்தர்
திருவுளயாவும்வந்துசேர்ந்திடுமவர்களெய்தா
வருமையாம்பொருளொன்றுண்டோவமரர்காளெனவுஞ்சொன்னான். ( )

தேவியாம்பரையைச்சேர்ந்துசிவனொருகுமரன்றன்னைக்
கோவியலசுரன்மாளக்கொடுப்பனென்றமரர்க்கெல்லா
மாவியன்மார்பன்சொன்னனென்றுமாதேவன்மைந்தன்
றூவியதறுகண்யானைமுகனுடன்சாற்றினனே. [௫௫]

பன்னிரண்டாவதுதாருகன்கதையுரைத்தசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௫௮௬.



பதின்மூன்றாவது

# கணபதியுடன்கடவுளுத்தரச்சருக்கம்.



வேறு.

பந்தனைசேர்பிரபஞ்சப்பற்றினைவிட்டோருளத்திற்பதியானனை
முந்தனையுந்தந்தையுமென்முதல்வனுமாமவனையருண்மூர்த்தியானை
வந்தனைசெய்வார்வினைத்தவரந்தனைத்தந்தருள்வானைவரனைச்சோமாற்
கந்தனைச்சிந்தனைசெய்தாற்கதிபுலகம்புகுநெறியைக்காணலாமே. [௧]

சங்கரன்சொல்வான்றண்டிடைபங்கரனைப்பார்த்துனதுதம்பியான
செங்கைவேலனைவிளித்துத்தாருகனைவதைபுரியச்செல்வாயென்ன
வங்கவன்றானஞ்சலிசெய்தருட்கடலேசங்காரத்ததிபனென்றே
துங்கமறைசொல்லுமுனையன்றிவல்லார்யாவரெனச்சொன்னனன்றே. [௨]

சூழ்வினைசெய்வார்தம்மாலாகாதகருமங்கடுணிவாருண்டோ
வாழ்வுபெறுமசுரன்வந்துகடைநாளிற்கொடுங்கனல்போல்வளைத்தகாலை
தாழ்வுறுதேவர்கள்பாருஞ்சுடரில்விழுபதங்கமெனத்தளர்ந்தார்நாளும்
வெள்ளியுரிமாலயன்மானடுங்கியோடினர்யானேவிறல்செய்வேனல். (௩)

பன்னரியவரங்கொடுத்துப்பரிபாலனங்கள்செய்தாப்படருங்காளின்
மன்னியபுண்மரம்வாரிமேதினிவிபங்களும்வாய்ப்படித்திடாவோ
துன்னரியவிடமெழுத்தகாலபெனவாரோலாஞ்சுழல்கின்றாரா
லென்னுடைநாயகவுன்னையன்றியன்போலிகளொருவரெதிர்க்கலாமே

அடலரக்கன்வாணுளும்வலியுங்கேட்டவனுடனேயரும்போர்செய்யத், தொடருமென்றன்மனம்புகுதாதென்றுகுகன் புகலயாஞ்சொற்றேமன்றே, திடமுடனுன்றாய்பரையையருத்தியுடன்மனத்திருத்திச்சென்றாயாகில், விடலேவிசையம்பெறலாமெனவிசையைநாமங்கள்விளம்பினேமால். [௫]

துதிக்கைபெறுந்துண்டிகேளிந்நாமமியாரேனுந்துதிக்கப்பெற்றே
கதிக்குமமரிடைக்கலந்தால்வெற்றிதருங்கார்த்தியாயினியேகாளி
மதிக்குமுமைசிவைகவுரிசருவாணிசண்டிகையேமனுருத்ராணி
விதிக்கரியமிருடானிமலேமகள்பார்ப்பதிகமலேவிசையைமாயை. [௬]

ஒப்பிலாண்மாமாயைசாம்பவிமயேசுரியேயுயர்கல்யாணி
தப்பில்புரதகனிதுர்க்கைபவானிமுதலாப்புகலுந்தனிநாமங்கள்
செப்பியமர்க்களம்புகுந்தாற்செயம்பெறுவர்வாணுளுந்திருவுமுண்டா
முப்புவனம்பரிக்குமைந்தர்ப்பெற்றுவாழ்ந்திறவாதமுத்திசேர்வார். [௭]

அன்னவடன்பதத்துகளாமம்புவிசேடன்றலேயாயிரங்களாலுந்
தன்னிகரிலாமாயன்கமடவுருவாயுநின்றுதாங்குவாராற்
பின்னருமுந்நாகங்களெண்மூன்றாயும்பரிக்கும்பெருமையன்றே
வுன்னுடையவன்னேபதந்தனேப்பூசித்தவணுமமுன்னுவாயால். [௮]

என்றுகங்கைமைந்தனேயாமேவினேமவனிவ்வாறிதயத்துன்னிச்
சென்றுநாருகனேயடர்த்தெதிப்நினைப்பரிசுதிகழுந்தொந்திக்
குன்றனேயதந்திமுகதுண்டிவிநாயகன்சரணங்குறித்துப்போற்ற
நன்றிகொளுன்றாயிடத்தினடத்தியெனவெடுத்துரைத்தானுதன்றானே.

தனியேகச்சம்மதியின்றேனுதுதம்பிகுகன்றனேயுங்கொண்டே
யினியேகாபவனெல்லாவல்லமையுமுடையவனம்மிதயம்போல்வான்
கனிவாகுமன்னேயிடத்தன்புமிகப்பூண்டுளான்கருணேத்தாயுந் [றே.
துனிதீரமைந்தனேக்கண்டான்மலேயருவியெனமுலேப்பால்சொரியுமன்

நமக்குமவனிடத்தன்புமிகுந்ததன்றேகுமரனெனுநாமம்பெற்றானெமக்குரியதொழில்யாவும்புரிந்ததனலழகாண்மையிறைமைபூண்டானுமைக்குநல்லபிள்ளையைப்பெற்றுளெனவேயொருநாமமுதவிசெய்தான்,நமைக்குரித்தாயனேதந்தைகருத்துவரநடக்குமவன்கண்டாய்துண்டீ

அந்தரங்கத்தம்பிகையுமியாமுமிருந்திடுமமையத்தன்பின்வந்து,ᵞமைந்தனவணடுவிருந்துவிளையாடமகிழ்சோமாற்கந்தரானேக், தந்தியவன்றனேக்கண்டாலுமைமகிழ்ந்தேயோடிவந்துதழுவிக்கொள்வாள், சிந்தையிற்றாமதஞ்செய்பாதவனுடனேகாயெனவேசெப்பினுன்பின். (கஉ)

உருகுமனத்தன்புபொழிவதுபோலஞானமுலேயொழுகுதீம்பால்
பருகுவபோற்கிண்ணத்தில்வார்த்தளிக்கவுண்டுபசிப்பரிவுதீர்வீர்

திரிபுரையிங்குவந்திருந்தானமக்குமுங்கடமக்குநமைச்சேர்ந்தார்யார்க்
கும்,பெருகுமனுகூலமுமுற்சாகமனக்களிப்புமல்லாற்பிறிதுமுண்டோ

அலையெறியுமமுதவின்பவாரியாமவளுருவமவடன்பாத, நிலையையு
டன்பூசித்தோர்வாய்தலிற்பங்கயமாதுநிருத்தஞ்செய்வா, டலைமைபெறு
மவனைநினைப்பவர்களிகபரமுந்தழைப்பரென்றே, மலைமகடன்பெரு
மையெலாந்தொந்திவினையகற்குரைத்தான்மகிழ்ந்துவள்ளல். [கச]

இணையிலின்பசாகரமாந்துணையவளைப்பிரிந்திருப்பதியல்போவென்று
பணைமருப்புமுகத்தானைமுகத்தானுமைந்தனுடன்பகர்ந்தானென்றே
கணைவிழிபார்மயக்கிலுறாவாதராயணன்புகன்றகாதையெல்லா
மணைவுறுஞ்சக்கரவனத்தின்முனிவர்தமக்கருட்சூதனறைந்தானன்றே.

பதின்மூன்றாவது கணபதியுடன்கடவுளுத்தாச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௪௱க.



பதினாலாவது,

# கணபதிகுமரன்
# றேவியைக்கண்டசருக்கம்.



தக்கபத்தரானகவராதசித்தர்தோத்திரங்கொடலைவனெட்டாந் [ன்
திக்குடையானெழிசையாறுறணிந்தானைந்தொழிலான்றிகழ்நால்வேத
முக்கணுடையானிருவர்க்கறிவரியவொருமுதலாமூர்த்தியான்ற
ணக்குவடம்பூதியுங்கொளடியரடிப்பூமுடிப்பூவாக்கொள்வோமே. (க)

வேதவியாசன்புகல்வான்விசுவேசன்றெருந்திவிநாயகனைப்பார்த்து
நீதயவாபுனதன்னையிடத்தேகாய்நீலமயிலேறிச்செல்லுஞ்
சோதிவடிவேலன்வரிலாங்கவன்றூமதஞ்செய்யான்சுதனேநீமுன்
போதுதிதாமதம்புரிந்துகாலநீட்டிப்பதுவும்போதாதென்பான். [உ]

அங்கவடன்முகமாகும்பூரணசந்திரவுதையமதனைக்கண்டாற் (தே
பொங்குறுமென்மனக்களிப்பாம்புணரியெனப்புகன்றிடுமப்போதில்வந்
சங்கரனைப்பணிந்தெழுந்துவீராதிவீரனெனுஞ்சண்முகேசன்
றுங்கமுறுமன்பினொடுநாத்தழும்பத்தோத்திரங்கள்சொல்கின்றானல்.

எண்ணரியவேதங்களறிவரியாய்முடிவில்லாவிறைவாபோற்றி
நண்ணுசச்சிதானந்தசின்மயரூபாபோற்றிநம்பாபோற்றி
மண்ணுலகுபடைத்தளித்துத்துடைத்திடுமுப்பொருட்கதிபவரதாபோ
தண்ணளிசேர்தேவதாசார்வபூமாவுமாசகிதாபோற்றி. (ச) [ற்றி

வேலைகடந்திடுஞானவேலையெனுமுனிவர்களும்விண்ணுளோரு
நாலுமறைகளுமறியாநின்றுளென்னுளத்திருத்துநம்பாபோற்றி

மேலவர்க்குங்காண்பரிதாய்க்கிட்டுதற்குமரிதானவிரைப்பொற்பாதஞ்
சாலவெனக்கின்றுதரிசனந்தந்தாண்டருள்புரியுந்தலைவாபோற்றி. (௫)

சித்தசுத்திபெற்றவருந்தரிசனஞ்செய்திடவரியசெய்யபாதம்
பத்திசற்றுமில்லாதேன்கண்டுதொழவின்றருளும்பரனேபோற்றி
யெத்திறத்தேவரும்வணங்குமுடிமணிப்பேரொளிமழுங்கவிரவிசந்த்ரன்
றந்துகதிர்யாவையுமேசாயமிளிர்தருமுனதுசரணம்போற்றி. (௬)

சந்திரசூரியரங்கிதாக்குகதிரினங்கவரியதான
சிந்தையிலஞ்ஞானவிருடீர்த்தருள்சிற்சூரியனுஞ்சிவனேபோற்றி
முந்துமனவாக்கினுக்குமெட்டாதமுழுப்பொருளாமுதல்வாநாளும்
வந்தனைசெய்படியேன்முன்வந்தனைதந்தையுமானவரதாபோற்றி. (எ)

வையமிசையுன்பாதமகிமைதனையாரறியவல்லார்போற்றி
யுய்யும்வகைதிடபத்தியுண்டாகவெனக்கருளுமொருவாபோற்றி
வெய்யவினைதீர்த்தருளும்விசுவநாதாசிவனேவிமலாபோற்றி [றி.
யையவுன்பாதாம்புயந்தென்மனச்சுரும்புற்றேகளிப்பவளிப்பாய்போற்

மாமோகம்வந்துறினுமெனதுமனமுனதுபதமறவாவாழ்வு
தாமேவத்தந்தருளாயுனதடிமையெனக்குமரன்றமியேனுக்குத்
தூமேவுநின்னிருபாதாம்புயத்தைநாடோறுந்தொழுவதல்லாற்
பூமிதில்வேறொன்றுமில்லையென்றேபடிபூண்டுபோற்றிநின்றான். (௯)

கண்டுகருணைகராங்கடவுண்டியையங்கரனைக்கந்தவேளை
மண்டுகாதலிற்றழுவிவாய்த்ததுரங்கருமமென்மகிழ்ந்துசொலவார்
துண்டியுன்றன்றுணைவனுடன்சோதிவிமானத்திவர்ந்துன்றூயதாயார்
தண்டளிர்ப்பொற்றாளருளினமுநதாரைகளுந்தச்சார்வாயென்பார்.

அன்னமெனுமென்னடைநும்மன்னைதரிசனம்பெறுதற்கடுத்ததான
நன்னயமாங்காலமின்றுவாய்த்ததுங்கட்கென்றுசிலநன்மைகூறப்
பொன்றொளிர்விமானமிசைப்புகுந்தனர்துந்துமிமுழங்கப்புட்பமாரி
துன்னிடத்தென்காலினுடன்கவரிகால்வீசிடவேதுணையிலாதார். (௧௧)

கண்டுதொழுதார்சேணிலம்பிகைவிமானத்திற்கட்டிநீண்ட
வண்டரும்பதாகையிவர்தம்மைவரவழைப்பதுபோலாடுந்தோற்றங் [க்
கொண்டன்முழங்கிடத்தோகைமயில்கணடித்தாலனையகொள்கைபோ
லகன்றைவிழியாராடுநாடகப்பேரிகைமுழக்குங்கேட்டாரன்றே. ()

இப்பரிசாற்றூரத்தேதொழுதுவிமானத்தில்வருமிருவர்சொல்வா,
ரோப்பிலெமதன்னைபதந்தெரிசனஞ்செய்திடவுற்றோமுறுதிபெற்றோ,
முப்பொழுதுந்தொழப்பெற்றோமோனஞானியர் வணங்குமுதல்விதன்
னைக், கைப்பொருள்போலுதவுகருணாநிதியையானந்தக்கனியையென்
பார். (௧௩)

இன்னபகர்ந்தவர்கடிதுவந்துவிமானந்திழிந்தவிபல்லைபெயலலாம், பொன்லிின்விமானத்திருந்தவம்பிகை கண்டாளுடலப்புளகங்கொண், டாள்.மின்னனையாராடுகின்றநாடகத்தைக்கைய மைத்துவிருப்பமுற் றே,பன்னைமுன்னர்வந்துதொழுமைந்தர்தமைப்புகுந்தெடுத்தேயணைத் துக்கொண்டாள். (கச)

பாவையவளணைத்தவுடன்மைந்தரிடத்தன்பின்முலைப்பால்பீர்விட்டே
யாவல்பெறுமைந்தரங்கமெங்குநனைந்திடக்குளிர்ந்தேயகம்பூரித்தார்
தேவியவளிடத்திருந்தகந்திகணநாதர்கண்டார்செப்புகின்று
ரேவிடமைந்தரும்வந்தாரினிச்சிவன்பாலுமைகடிதினேகுமென்பார். ()

அம்மையரனிடஞ்சேரவாய்த்ததனலாதித்தவத்தமின்றுண்
மைம்மருகண்ணியாடல்விலக்கிபபாராதமெய்தாவகைபெற்றேமியாஞ்
செம்மைபெறுதிருமால்கண்மலர்கொடுபூசித்தபதந்தெரிசித்தேத்த
வெம்மையாண்டருள்பரமனிடத்துறப்பெற்றேமென்றேயேமாப்புற்றார்

கணங்களுநந்திபுமிவ்வாறுளமகிழவம்பிகைதன்காலில்விழ்ந்து, வண ங்கியமைந்தரைப்பார்த்துமனமகிழ்ந்துசில சொன்னளென்றேமேலாங், குணங்கொளும்பாராசரனர்குலமைந்தன் கூறியவக்கொள்கையெல்லா, மிணங்கியநைமிசர்க்குரைத்தான்சூதனுஞ்சைவராசேந்ரன்றனே. ()

பதினாலாவது கணபதிகுமாரன்றேவியையங்கண்டசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சுகஅ.



பதினைந்தாவது,

# தேவியுடன்குமாரருத்ரச்சருக்கம்



வேறு.

பெரியதாருகவனமுனிந்தலைவோரனுப்பியபிளிறடற்
கரியுரித்தமராடுமைந்தினர்கந்தனைத்தருபரமர்தா
டெரியுமாமலர்கொண்டுசிந்தையிலன்புகொண்டுதினந்தொறு
மரியபூசனைபுரியுமாதவரடிகள்பூசனைபுரிகுவாம். (க)

பெருகுமாதவமருவும்வேதவியாதமாமுனிபேசிஞ
னருகுநின்றநன்மைந்தர்தங்களையம்மையாதரவோடணைந்
துருகுமன்பொடுகண்களித்துளமுங்களித்தனளோதுவான்
முருகசங்கரரெவணிருந்தனர்மொழிசுகந்தினரோவெனு. (உ)

ஐயவுங்களையின்றனுப்பியவையராமெனதண்ணலா
ருப்பவென்னையுமெனினைத்தனரோவுவந்தனரோசொல்விர்

செய்யவான்கருணைக்குநானெனசெய்குவேனெதிர்செல்லும்யான்
கையிலென்சிலபரிசுகொண்டெதிர்காணுவேனெனநாணுவாள். ()

அன்னைசொல்லியவாசகத்தையுணர்ந்தனன்குகனறைகுவா
னின்மலப்பொருணித்தியச்சுகர்நிர்க்குணப்பரமப்ரியர்
தன்னையொப்பறுசச்சிதானந்தத்தலைவர்தன்மையறிந்தநீ
யின்னராகியவிறைவரைச்சுகமோவெனச்சொலவிசையுமே. (௬)

அண்டம்யாவையுமுண்டுபண்ணியளித்தழித்தூளரளவிலாத்
திண்டிறற்பொருகாலகாலர்சிறந்ததேவரெலாரையும்
வெண்டலப்படவேயொடுக்குவர்மிக்கசாந்தசொரூபர்த
மண்டுசெல்வமனந்தபேதமதாகுமப்படிமகிமையே. (௭)

இமைநொடிப்பொழுதீசனுர்க்கிமையோர்களிந்திரன்மாலய
னமைதல்பெற்றதுநாசமுற்றதுமளவில்கோடிகளல்லவோ
தமையடுத்தவருக்கனந்தசுகங்கொடுத்திடுதலைவனுர்
நமையளித்தவர்சுகமதோவெனநவிலலுற்றதெனன்னையே. (௮)

பிறையணிந்தவரடியர்தாட்டுகள்பெற்றபேர்விசும்பெய்துவார்
சறுவதேவர்செய்பூசைகொண்டவர்சத்யலோகமதாதியா
நிறைதரும்பலலோகபோகமுநேருவார்கரையற்றதோர்
குறைவிலாவமுதக்கடற்சுகமோவெனச்சிலகூறுமோ. (௯)

அண்ணலாரிருபாதபங்கயமுற்றதூளியோரணுவிலே
கண்ணனிந்திரனயனுமன்னர்களத்திரங்களும்வந்தது
மெண்ணிலாதனபின்னருள்ளனயாவும்வந்துபிறந்தது
முண்மையென்றுசிவன்றனுண்மையைநாலுவேதமுமோதுமால். (௧௦)

மோகமுற்றவரறிகிலார்சிவன்மகிமைநன்னெறிமும்மல
பாகமுற்றவரறிவர்வேறுளபண்ணவர்க்குநமண்ணலோ
டேகமுற்றுரைசெய்வதும்மறியாமையேகடையூழியிற்
சோகமுற்றுடன்யாவுமற்றிடுதூளியாக்குவதுண்மையே. (௧௧)

இந்துசேகரரீசர்சங்கரர்நமனைவெல்விசுவேசனு
ரந்திவண்ணர்பராபரப்பொருளாதிநாதர்புராந்தகர்
நந்திவாகனரம்பிகாபதிநயனமூன்றுடையாரென
மைந்துகொண்டிடும்வேதம்யாவும்வழுத்திடும்பொருளல்லவோ. (௧௦)

அண்ணலார்சிவலிங்கபூசைசெய்தண்டமுற்றுமளித்திடுந்
திண்ணறரசுரேசர்வாசல்கள்சென்றுநின்றுதியங்கியே
கண்ணனரணனிந்திரன்சுரர்கண்கலங்குபிரம்படிக்
குண்ணிணகிழ்ந்துவருந்தியோடியொளிப்பதின்றுணராய்கொலோ. [௧௧]

சனகர்போன்மனுவேதமாகமதத்துவங்களுணர்ந்திடு
மனகராயறிவோடொடுங்கிடங்குசிந்தையராயினும்

பனகபூடணர்பூசைசெய்திடுபத்திபெற்றிலராமெனிற்
கனகபூடணசுமையெடுத்திடுகரமெனத்தருவார்களே. [கஉ]

சென்மசாகரமூடழுந்தியதீனராமறிவீனர்தாங்
தன்மமார்தருபூதிகண்டிகைதானுவர்ச்சனைநாமமா
நன்மனுக்களிலொன்றனைந்தவர்ஞானவீனராமென
வென்மனத்தினிலென்னுகின்றனனெம்பிராட்டியிதுண்மையே. [கங]

அன்னைமாரெழிலொழியவர்க்குபிறந்தமாந்தர்களவர்பிறப்
பென்னையம்பிகையீசர்பாதமிறைஞ்சிடாரெனிலெம்பிரான்
பொன்னையன்னவிலிங்கபூசனைபொலிவினோடுபுரிந்துதஞ்
சென்னிகொண்டுவணங்கிடாதவர்சென்மமேயவசென்மமே. [கச]

உரனையின்றியதேவரைத்தமதுள்ளம்வைத்துமைபாகம்வா
ழரனைவந்தனைசெய்திடாதவர்நரகவேதனையாழ்வரால்
வரனையென்மனம்வைத்தபாதனைமட்டிலாதமகாபரா
பரனையேத்தவலார்களேபரலோகமேபதியாவரே. (கரு)

பரமர்பாதம்வழுத்துவோரவர்பாததூளிபரந்திடுந்
தரணியேபரிசுத்தபூமிதலத்தின்முக்கியதலமதா
முரமதாமரனைப்பணிந்திடுமுண்மைஞானியர்சரணமே
சிரமதிற்கொளுவோர்கள்சேவடிதேவர்வந்தனைசெய்வரே. (கசு)

எந்தையாரிணையடிவழுத்தியசிந்தையார்தமையீன்றிடுந்
தந்தைதாயொடுமூவகைப்பிதிர்வர்க்கமுங்கதிசார்வரான்
முந்துமங்கவரேவல்செய்தவரவர்களேவன்முயன்றுளோ
ரந்தமேலவரடிமையோர்களுமடைவரேயமருலகமே. (கஎ)

நவமதாகியபத்தியோடுபசாரமாம்பதினாறுட
னவனியிற்சிவபூசைநாடொறுமாற்றுவானருளாளனே
புவனமேத்திடுசைவர்வந்தணிபூதிசாதனப்பொலிவுடன்
சிவனையேதொழுமவனையேசிவனென்றுசிந்தனைசெய்வரே. [கஅ]

மயலொழிந்தனர்பரமர்நாமம்வழுத்துவோரிடமன்னியே
கயிலையாதியதலம்விடுத்தரனுடகம்பலகாட்டுவா
னுயர்தருஞ்சிவனருளிலாவிடிலொருவருக்குமவன்புகழ்
பயிலவர்ச்சனைசெய்திடப்புரிபாவகத்திறம்வாய்த்திடா. [க௯]

வள்ளைவார்குழையன்னைகேண்மதிசூடிபாதம்வழுத்துவென்
பிள்ளைமாமதியாதலாலதுபேதைமைப்படவும்படு
முள்ளமாதரவுடையநின்பதசேவைபெற்றிடுமுறுதியாற்
றெள்ளுசிந்தைகலங்கிடாவகைசெல்விநின்னருடந்திடும். [உ0]

இமயநாயகியுனையழைத்திடவென்னையென்னுடனைங்கரத்
தமையனாகியதுண்டிநாயகன்றனையனுப்பிடவில்லையா

லமைதனுற்றனைசிவனுளத்தினிலம்மைநீபிரிவாற்றிலா
யுமையைவிட்டரனீங்கிலானனையுனையழைப்பதெவ்வாறரோ. (உக)

உன்னிடத்தினில்வைத்தசிந்தனைபோலவெங்களுமாபதிக்
கென்னிடத்தினுமில்லையைங்கரன்றன்னிடத்தினுமில்லையான்
மன்னுமன்பர்தமக்கனந்தம்வரம்புரிந்திடுமன்னைகேள்
பன்னுமுன்றிருவடிவமேநிறையும்பராபரன்படிவமே. (உஉ)

மைந்தனிவ்வுரைகூறமாமலைமங்கைகேட்டுமகிழ்ந்துள
முந்துமன்புறுமமுததாரையினுணவுபெற்றெனவுருகியே
தந்தமைந்தரையுச்சிமோந்தனடயவுடன்விழிபொழிதரு
முந்துதண்புனலாட்டியன்பமுதூட்டினளருண்முதல்வியே. (உங)

வேறு.

இப்பரிசுபனிமயமாம்வெற்புதவுமங்கையுமையென்னையாள்வா
ளொப்பின்மைந்தருடல்கரத்தாற்றைவந்துசீராட்டியுரைத்தாளென்றே
முப்பொழுதுமேயுணர்ந்தவாதராயணமுனிவன்மொழிந்தவெல்லாந்
தப்பினைமிசாரணியமுனிவரர்க்குச்சூதமுனிசாற்றினனே. (உச)

பதினைந்தாவது தேவியுடன்குமாரநுத்தரச்சநுக்சமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சசஉ.



பதினாறுவது,

# சுகமுனிச்சருக்கம்



வேறு.

அருமறையாய்முதலாகிநடுவாகிமுடிவாகியனைத்துமான
பெருமைபெறுபூதங்களைந்தாகிமுச்சுடராய்ப்பிறக்குமயோனி
யொருமைபெறுமெண்பத்துநான்குநூறுபிரமாமுருவந்தோறு
மருவுமுயிர்க்குயிராகித்தாண்டவஞ்செயாண்டவனைவழுத்துவோமே.()

மறைபுகல்வியாசமுனிவரன்புகன்றானம்பைசெம்பொன்மலர்ப்பொற்றாளின், முறைமுறையாவிறைஞ்சிநின்ற மைந்தர்முகம்பார்த்தினியமொழிவதானு, ளிறைவருமையனுப்பும்போதியம்பியசொற்கேட்கயானிச்சைகொண்டேன், குறைதவிர்ந்தேன்மனங்களிப்பக்கூறுவீரெனக்குமரன்கூறுவானல். [உ]

அம்பிகையும்பர்கண்மாதர்முடியொடுமெந்தாரத்தினலங்கல்சேர்ந்த, செம்பொனடித்தலத்தில்வீழ்ந்தெழுந்து வாய்புதைத்துநின்றுசெப்புகின்றா ,னெம்பிரானுனதன்னையிடத்திற்போவெனவென்னையேவும்போதிற், றம்பிரான்மொழிந்தவுரைதனையென்னை யடியனுன்முன்சாற்றுகேனே. (ங]

அளந்தறிபாவழகுடையாள்சற்குணசிந்தாமணியாமமுதம்போல
விளம்பிடுவணம்மிடத்திலவள்போலுமன்புடையார்வேறுமுண்டோ
களங்கனிநற்குழலாள்விட்டகன்றதனுலுயிர்கருதவுங்கடனெல்லாகம்
முளங்கொடுமுற்றுவதனுலுமைவிரைக்தேபிவண்வருதலுறுதியென்றுர்

என்றுரைக்குமமையத்திலெம்பிரான்விசையைசெயையென்னு மாதர், குன்றிரண்டுதாங்கியபொற்கொடிபோல்வார்தமையனுப்பக்கொண்டுவந்தார், நன்றுதருகனிவர்க்கமாபரணவர்க்கமுடனுகரிகங், துன்றுதுகில்வர்க்கமெல்லாமுமையுடன்வேலனைவணங்கிச்சொரிந்தாரன்றே.

மாதரார்கொவெந்தகனிதுகிலாபரணவகைவகையதாக
வாதியாரனுப்பினவென்றன்னையானந்தங்கொண்டவற்றையெல்லாங்
காதலடங்காதமனத்துடனெடுத்துப்பூண்டுடுத்துக்கனியுங்கொண்டா
ணீதியன்றிங்கிவணிருப்பதென்றுசிவனிடத்தேகநினைவேகொண்டாள்.

அன்னதுகண்டைந்துகரத்தோனுடனேயாறுமுகன்புறத்தேவந்தான், முன்னர்வந்துநந்தீசன்கணநாதரடிவணங்கிமொழிகின்றூரா, லென்னபுகல்வேமெமையாளையர்வரப்பெற்றுய்ந்தோமிறைவிமுன்னர்த், துன்னவேபயந்திருந்தோஞ்சிவனருள்பெற்றோமினியெந் துயர்தீர்ந்தோமே.

எனப்புகன்றூரிமயமயிலெழுந்தருளத்தாமதந்தானினியேதென்றே
மனத்துயரந்தீர்ந்தநந்திபுகன்றிடச்செவ்வேளுரைப்பான்வருகின்றூளா
லினைத்துலகுமீன்றருளுமெமதன்னையிவர்ந்தேகவணிபொற்சோதி
கனத்தவிமானங்கள்கடிதலங்கரிப்பீர்கடிமலராற்கணங்களென்பான். ( )

கட்டிமின்பட்டுமேற்கட்டிபொன்னின்குடைகளிடக்கயங்களெல்லாஞ், சட்டமாகிரைத்திடுமின்கண்ணடிதூக்கங்கள்சந்த்ராதித்தர் விட்டொளிர்வதொருகோடிகோடியெனக்கோடிதொறும் விளங்கச்சேர்த்தே, மட்டவிழ்பூஞ்சரங்களுடன்மணிச்சரமுமணியணிபாவகுப்பீரென்பான். (௯)

கொந்தரியுமலர்மாலைகுளிர்கொழுந்துவேர்மாலைகொன்றைமாலை
சுந்தரவிமானத்திற்சுடர்விடுபொன்னரிமாலைதூக்குமாலை
நந்தலிலாவரியணையினடுவணையவிரித்திடுநற்சலவைமீதிற்
சுந்தமிகுபன்னிமலர்முல்லைமலர்பரப்பிடுமின்கணங்களென்பான். (௧௦)

இருளகிலவும்மெறிப்பவிந்திரநீலத்தின்வடத்திடைகடோறுந்
தரளவடந்தூக்கிடுவீர்சங்கரனுமுமையுமுடன்சார்ந்ததென்ன
மரகதமாலைக்கிடைபோமாணிக்கமாலைகளுமயங்கச்செய்வீர் [illegible]பால.
நிரைபரம்பைகமுகிளநீர்க்குலைபழுக்காய்க்குலைகளுமெனைப்பிறவும்
பொற்றூமத்தூவிவரைச்சிகரமெனவலங்கரிப்பீர்புனைமந்தார
நற்றுமந்தேன்சொரியமலையருவிவீழ்வதுபோனுற்றுவீரால்

வற்றுதவருவிமணிகொழிப்பதெனவிடையிடைமாணிக்கமாலை
விற்றுவநூக்கிமதன்விற்கரும்புகணைகள்கொண்டேவிதானஞ்செய்வீர்.

மாணிக்கவிமானம்போம்வழிமுழுதுமலங்கரிப்பீர்மலர்ப்பூம்பந்தர்
காணிக்கைகளிவர்க்கமதுவர்க்கம்பானகமுங்கலந்துவைப்பீர்
சேனுற்றவரமாதர்திருந்துநடமாதரிருந்திளைப்புத்தீரத்
நாணுற்றவிருபுரத்துந்திருவாசற்றிண்ணைகளுந்துலக்குவீரால். (௧௩)

எம்பிரான்மகிழ்ச்சியினாலெதிர்வரினும்வந்திடுமாலெதிர்கொள்வெள்ளி
செம்பொனாற்பாங்கரெங்குந்திருமதில்விண்ணுலகளப்பச்செய்குவீராற்
கொம்பனாராடலொடுபாடலிசைவீணையிசைகுலவச்செய்வீர்
பைம்பொனார்தோரணங்கடுபதீபங்களெங்கும்பரப்புவீரால். (௧௪)

மண்டபங்கண்மாளிகைகள்சந்திரகாந்தச்சிலையால்வகுத்தல்செய்வீர்
தண்டளிர்ப்பூஞ்சோலைதழைசாலையிளந்தென்றல்வரச்சமைப்பிப்பீரான்
மண்டுகொண்டற்படங்குமழைமலர்விமானம்மகரதோரணங்க [ன்
ளெண்டிசைபோர்கொண்டாடவிந்திரவில்லாகிரைப்பீரெங்குமென்பா

வெண்பட்டுமெத்தைநடைக்காவணப்பந்தர்கடோறும்விரிப்பீர்மீதிற்
றண்பெற்றசுகந்தமலர்தான்விரிப்பீர்மண்டபங்கடம்மின்மேலாந்
திண்பெற்றபெருந்திருப்பாவாடைதிருக்கண்சாத்துத்தீபாலாத்தி
யெண்பெற்றசிறப்பெவையுமெம்பிராட்டிக்கமைப்பீரென்றானன்றே.

இடையிடைநீர்வாவிகளுந்தண்ணீர்ப்பந்தருமமைப்பீரென்றானந்தி
புடையில்வருங்கணாதரவைபலாமமைத்தனரப்போதுதூய [மேவுக்
விடையில்வருமெம்பிரான்விடைகொடுப்பவசைந்தசைந்துவிரைந்து
தடையில்விமானத்துவந்தான்பிருங்கியெனுங்கணநாதர்தம்பிரானே. ()

வேறு.

சதுரனம்பிகைகுமரன்முன்படர்தருபிருங்கிவிமானமே
லதிரவந்திடுசடுதிகண்டுளமயரநந்தியொடறைகுவா
னெதிர்புகுந்தனனியாவனோசிவனேவவந்தனனவனா
லதிர்தருக்கமதிறலினாறிலோரளவுமுள்ளவனோசொலாய். [௧௮]

யாவனாகிலுநங்களுயகண்டிமையயலதில்லையே
தேவதேவன்மெய்யடியர்வந்திடுசெய்திகண்டிடுசீலர்தா
மாவலோடவரேவலாளெனவமைதலேகடனாகையா
னீவலாயெதிர்கொண்டுதாண்டொடுநின்றுநல்லுரைசொல்லுவாய். []

அண்ணலாரடியார்களாகியவன்பர்துன்பமகன்றுளார்
மண்ணெலாம்வழிபாடுறத்தகுமாதவத்தினரல்லவோ
நண்ணுமங்கவர்தமையிகழ்ந்தவர்நரகிலாழ்குவர்நந்திகே
டெண்ணலாரிபதிதனிலோர்கதைசெப்புகின்றனன்மேலைநாள். [௨௦]

இமயவெற்பிடைசுகனெனத்தகுமிருடிவந்தனனவனுறுந்
திமையமுற்றுறைபசுபதிச்சிவலிங்கமங்கதுதெரிசியா
வுமையிடத்திறைபூசையிங்ஙனுஞற்றுவெனெனவுன்னினு
னமைதலுற்றுடனேவல்பெற்றிடுசீடரோடரனன்பனே. [௨௧]

ஆலயஞ்சிவனுக்கமைத்தனனதிகமாகியசிகரமு
மாலையாகியமதிலுடன்பலமண்டபங்களுஞற்றவுஞ்
சீலமேபெறுமாகமப்படிசெய்யுநித்தநைமித்தியங்
காலைமாலையொடுச்சியும்புரிகடவுள்பூசனையாற்றுவான். [௨௨]

அருணனுற்றிடுகாலையிற்கடிதறலின்மூழ்கியணிந்துநீ
றுருகுமன்பொடுகண்டிமாலையுறுப்பெலாமதுறப்புனைந்
திருவர்தேடருமொருவரர்ச்சனையினியபூவொடுமஞ்சன
மருமிகுந்திடுபளிதகுங்குமவாசமுற்றிடுசந்தனம். [௨௩]

மதுரவர்க்கமொடேகனித்தொகைமணமிகுந்தநைவேதன
மதிகமாகியசிவன்விரும்பியவாறுபத்துபசாரமும்
புதிதமைத்தெதிரில்சுகம்பெறுபூசையாற்றியிருந்தனன்
றுதிகொளுஞ்சுகனென்றுரைத்திடுசுமுகமாதவயோகியே. [௨௪]

மாதராடல்கள்பாடல்சந்நிதிவரிசையாவுமமைத்தன
ஞதரித்திடுவில்வவர்ச்சனைபாதபூசையினர்ச்சனை
காதலாற்சிவனடியரர்ச்சனைகருத்தின்மீதிலருத்திசேர்
சோதியர்ச்சனையாற்றியேசுகமுற்றனன்சுகயோகியே. [௨௫]

புரியுமாதவமைந்தழற்கிடைபூம்புனற்கிடைபுரியினு
மரியபூசனைசெய்திலாரெனினந்திகேளவையவமதாந்
தெரிதருஞ்சிவபூசையற்றவர்செனனமுந்தவவிரதமு
முரியபுண்ணியகோடியும்பலமொன்றுமில்லையதுண்மையே. [௨௬]

அம்பிகாபதிபூசைசெய்பவரரியமாவிரதங்களுங்
கம்பமுற்றிடுதவமுமேசெய்துகாயம்வாட்டுறவேண்டுமோ
வெம்பிரான்சிவபூசையற்றவரெங்கணுஞ்சுழறவமெலா
நம்புபாவினிலோடியேதிரி*குழனிகர்த்திடுநந்தியே. [௨௭]

வழிதரும்பலபுண்ணியங்களுமாதவங்களுமாற்றினோர்
சுழிதருஞ்சனனத்தில்வந்துசுகித்திறந்துசுவர்க்கமுற்
றழிதரும்பலபுவனபோகமுமனுபவித்துழல்வார்களான்
மொழிதருஞ்சிவபூசைசெய்தவர்முத்திபெற்றிடுவார்களே. [௨௮]

வேறு.

தேக்குமன்புடனேசிவபூசைசெய்
தாக்குபாக்கியம்பாக்கியமாகுமா

* நாடா.

னாக்கினாற்சொலநன்மையுண்டாநந்தி
பாக்கியக்கடவுள்பகர்காதையே. [௨௯]

எண்ணில்பாக்கியமியாவையுமெய்தியே
மண்ணுமோர்மணிமண்டபத்துற்றவாற்
பண்ணுகின்றபலத்தாலவற்றினுக்
குண்ணிகழ்ந்ததோரூடல்வந்துற்றதே. (௩௦)

தக்கபாக்கியங்கள்சண்டையுற்றிடு
மிக்கவார்த்தைவினவியுற்றோநந்தி
தொக்கவிக்கதைசொற்றிடக்கேட்டுளோர்
நக்கனார்சிவலோகத்தினண்ணுவார். (௩௧)

சங்கரன்றிருச்சந்நிதிமண்டபத்
தங்கண்மேவுமரும்பாக்கியங்களுட்
டெங்கமுற்றிடுமோர்தெய்வஞ்சூழ்ந்துள
பொங்குபாக்கியங்கட்குப்புகலுமால். (௩௨)

யாகமோவிரப்போர்தமக்கீதலோ
தாகமுற்றவிரதந்தவங்கொலோ
வாகமப்படிசெய்யரன்பூசையோ
மோகமற்றதுமுக்கியஞ்சொல்லுவீர். (௩௩)

சொல்லுதல்சத்தியம்பெறச்சொல்லுவீர்
வல்லவாறெனவோர்தெய்வம்வாய்திறந்
தெல்லையில்சிவன்சந்நிதியீதுகாண்
புல்லுபொய்கள்புகலவொண்ணாதரோ. (௩௪)

மேயமாமறைசொல்லும்விமலன்முன்
வாயினாற்பொய்புஞ்சொல்லமதிப்பரோ
தீயசொற்றோர்நரகினிற்சேர்வரீரன்
றேயதோர்சிவதன்மமிசைக்குமால். (௩௫)

ஆணையாகுமரன்சந்நிதானத்திற்
கோணிலாமொழியீதுகுறிக்கொள்வீ
ரேணுளீரியானிருக்குமிடமது
தாணுவன்பர்தனியிடங்காண்மினே. (௩௬)

எய்தியானிங்கிருக்குமிடந்தனிற்
செய்திகேட்குதிர்சேர்ந்தவன்வாய்தலின்
மைதிகழ்ந்திடுமோகரிவாம்பரி
மொய்தரும்பொருண்முன்னருங்கோடியே. (௩௭)

குடச்செருத்தலின்கோக்குலங்கோடியே
மடக்கொடிக்குலமாதர்கள்கோடியே

யடக்கமில்லாவணிப்பணிகோடியே
யிடத்திலுற்றிடும்யாசகர்கோடியே. (௩அ)

மதனமோகனவஞ்சியர்நாடகச்
சதனமங்கையர்தாஞ்சதகோடியே
யதனமாமைந்தராயிரம்பேரவர்
சுதனமாஞ்சிவபத்திதுணிவரே. (௩௯)

அன்னபுண்ணியராளடியார்குழாம்
பன்னுமூவகைப்பந்தவர்க்கத்துளோர்
மன்னுநாட்டிலுறமைந்தர்கள்யாவருங்
கன்னிபாகனுக்கன்பர்கள்காண்மினோ. (௪௦)

ஆங்கவனுற்றசெல்வமனைத்துமே
யோங்குபூசைக்குபகரணங்களாந்
தேங்குநாளொன்றிற்செய்பணிபூசைக்கே
தாங்குகோடிதனஞ்செலவென்பவே. (௪௧)

அன்னவனொருநாளவமாகவே
மன்னிலானங்கண்மாதவர்கூடுவார்
கன்னிபாகன்கதைதலைவல்வினை
தன்னையேயறிசாத்திரங்கேட்பனால். (௪௨)

அன்புறுஞ்சிவனன்பர்க்கருத்தியே
பின்பருந்தப்பெறுவன்விருந்தொடு
நய்பரம்பொருளுதனைச்சிந்திக்கு
மின்பமுற்றுடனேமாப்புறுவனால். (௪௩)

பூதிகண்டிகைபூண்டுமைபாகரா
மாதியார்முன்னரானந்தத்தாழ்குவான்
பேதியாநெஞ்சமென்றும்பிறையணி
சோதிபுண்ணியம்பின்னருஞ்சொல்லுமால். (௪௪)

அன்னவன்றன்னிடத்திலமர்ந்தியான்
சொன்னயாவையுஞ்சூழ்ந்திடச்செய்குவேன்
பின்னையோரிடம்பேர்கிலேனென்றசொற்
றன்னைக்கேட்டுத்தளர்ந்தபிறவெலாம். (௪௫)

வேறு.

இப்பரிசுசிவசரிதைதப்பாக்கியஞ்சொற்றிடக்கேட்டவேனையாவு [டே
மொப்பரியதிதன்பெருமையுணர்வதற்குமரிமரிதென்றுள்ளங்கொண்
தப்பிலிதனொடுதழுவிச்சார்வதுநந்தமக்குறுதியென்னச்சாற்றி
யெப்பொருளுமானபிரான்திருக்கோயில்சார்ந்துகலந்திருந்தவன்றே. ()

நந்திகேளாகையாற்சிவபூசைப்புண்ணியமேநலமாங்கண்டாய், சிந்தைமகிழ்சுகமுனியையிகழ்ந்தொருவனரகினிடைச் சேர்ந்தானன்றே, பெந்தையாரவரடியார்க்கிதம்புரிவார்தமக்கருளேயிசைந்துள்ளாராற், புந்திசெய்வாயெனக்குமரன் புகழ்ந்துரைத்தானெனச்சூதன் புகன்றிட்டானே. [சுஎ]

பதினாறாவது சுகமுனிச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சுஅ௬.



பதினேழாவது,

## சிவதன்மாதன்மச்சருக்கம்



உமைமுழங்கப்பகையின்றியுமையினின்றுபுலிமுழங்கவுயருஞ்சோதி, முழையிலரியினமுழங்கக்கரியினங்களருகினின்றுமுழங்கநீண்ட, கழைமுழங்குதடஞ்சாரற்கண்ணருவிமுழங்க வெதிர்கருஞ்சூற்கொண்டன், மழைமுழங்குகைலமலைவாசனையீசனைநாளும்வழுத்துவோமே.(க)

மறையோதும்வாதராயணன்புகல்வான்சிவபூசைமகிமையெல்லா
முறையோதுங்குமரேசனடிபோற்றிநந்தீசன்மொழிதலுற்று [றான்
னிறையோனேசுகமுனியையிகழ்ந்தொருவனரகிலுற்றானென்றாயன்
குறையேதுநரகிலுற்றவகையேதுன்னடியேற்குக்கூறுவாயே. (௨)

வேறு.

வெற்படர்த்தவேற்குமரன்சொல்வானந்திமிக்கதொருகாதையிதைவிளம்பக்கேளாய், கற்பமதிலம்பரீடப்பேர்பெற்றகல்விமுனிகோத்திரத்திற்பிறந்துளோனு, மற்பவறிவுடையவனோர்முனிவனுளுமம்பிகாபதிபாதத்தன்புபூண்டு, சொற்படிபூசிப்பதுவேசுகமென்றுன்னுஞ்சுகமுனிவரிடத்தில்வந்துசொல்லுகின்றான். (௩)

நெட்டூரனின்பமுறுபாக்கியங்கணிலவரமென்றுன்னுகின்றநெஞ்சன்வஞ்சன், மட்டூர்பூங்குழலுமையாள்பாகன்பூசைமறவாதசுகமுனியைப்பார்த்துச்சொல்வா, னெட்டுருமூர்த்தியார்பூசைபூண்டாயின்பசுகபாக்கியங்களியாவும்வேண்டாய், விட்டேரத்துன்பமுற்றாய்சுகப்பேர்கொண்டாய்விரகறியாயென்னநின்றுவிளம்பினனால். (௪)

அன்னவன்றன்வாய்மொழியையகத்திற்கொள்ளாரறிவிலா னவனுடனேயொன்றும்விள்ளார், மன்னுமிவன்மதியிலானெனவறிந்தார்மதியணிந்தார்பூசையினை மனத்தேவைத்தார், சொன்னதுகொண்டவனைவினைசூழ்ந்ததாலேதுன்பவரவாலிறந்தான்றெனபான்மேவு, மன்னவனார்தூதுவனார்வளைந்து கொண்டார்மணிக்கயிற்றாற் பிணித்திழுத்தார்கொண்டுபோனார். (௫)

கூற்றுவன்றன்முன்கொடுபோய்விட்டாரந்தக்கொடியோனைக்கண்டுசித்ரகுத்தர்தம்மைப், போற்றுகணக்கோடுவரச்சொலென்றான்வந்தார்போற்றினாரந்தகனங்கவரைப்பார்த்தே, சாற்றுமினிங்கிவன்செய்ததன்மாதன்மந்தானென்றானவர்தெரிந்துசாற்றுகின்றார், ரேற்றமுறுஞ்சிவத்துரோகங்கள்செய்தானிவன்பாவிபெயர்சொல்லவிசையோமென்பார்.

சொல்லரியபாவியிவற்கண்டபாவஞ்சுருதி விதிப்பரிகாரம்புரிந்தாற்றீரு, மெல்லையிலாநரகமெழுநான்குகோடியிடையெண்ணில்கோடிகற்பமிவனைவீழ்த்தி, யல்லலுறுத்தினுந்தீராதையவென்றா ரதுகேட்டேயமனடுங்கிபந்தோவென்றே, மல்லலுமைபாகனுர்க்கபராதஞ்செய்மாபாவிமுகத்தில்விழித்தனனேவென்பான். (எ)

சிவத்துரோகங்கள்செய்தபாவியின்னேன்றிட்டிமுன்னே யுறவந்தபாவந்தீரத், தவத்தைநான்புரிவேனோபரிகாரந்தான்சாந்திராயணவிரதந்தான்செய்வேனே, வவத்தினிவன்றனையென்முன்னேன்கொண்டுய்த்தீரார்முகத்தில்விழித்தனனித்தினத்திலேயா, னிவற்றையொழித்திடமூலமகோரநாமமிசைதருமக்கரலக்கமுரைப்பேனென்பான். (அ)

மற்றுளபாவங்களைந்தும்பரிகாரத்தான்மாற்றலாஞ்சிவத்துரோகங்கண்மாற்ற, வுற்றதொருபுண்ணியங்கடவங்கடம்மாலொழிக்கலாமுபாயங்களொன்றுமில்லைக், குற்றமிவன்றனைப்பார்த்தபாவம்போகக் குறிப்பதினியென்னென்றுகூறுகின்றான், பொற்றொடியாள்பாகனுர் பாதபூசைபோற்றுவதேநலமென்பான்புகலுகின்றான். (௯)

பாவரியபாதகங்கடவயோகங்கள் பவித்திரதானஞ்செய்தன்மோனஞானம், விரதமிவைமுதலாம்புண்ணியங்கள்கோடிமேவிடினுஞ் சிவபூசைமேவிலாரே, லூமருவுமகத்தானபலமேயாகாதுறுதிதரும்பேறில்லையுலகோர்க்கெல்லாஞ், சரதமிதுசரதமேயதனுன்மேலாந்தன்மமாஞ்சிவசரணகமலபூசை. (க௦)

மூடராஞேர்விமலர் பூசைசெய்யார்மொழியுமவர் வேதமிகழீனராவர், தேடரியதவஞ்சென்மகோடிதம்மிற்செய்துறவே சிவபூசைசெய்யவாய்க்கு, மாடகப்பொற்சபைநடித்தார்க்கன்பராவா ரவர்களேதத்துவமெய்ஞ்ஞானராவார், நாடிலளித்திடுமணியுந்தருவுங்கோவுநாடாமலளித்துவிடுநாதன்பூசை. (கக)

நிசிவபூசைபுரிபலத்திறலேயயனுலகமாலுலகமதற்குமேலா, மேதனைபசிவலோகமுத்திலோக மேவுற்றோரளவினையும் விளம்பலாமோ, காதலுறுகுலத்தானபவரிடங்கள்கருதுவேதாகமசாத்திரங்கள்கற்ற,வோதரியசற்குருவினுடதெசந்நாலுறும்பூசைகினைத்தவெலாமுதவுந்தானே.

உறுந்தாகமுற்றோர்க்குக்கங்கையாற்றினுறும்புனலல்லாற்கானலோடிப்பதுண்டோ, பெறும்பெறுகதிவிரும்பிலெய்தற்கெம்மான்பிரசமலர்

ப்பதமல்லாற்பிறிதொன்றுண்டோ, தெறும்பாவிதரிசனத்தின்பாவந்தீர ச்சித்திரகுத்திரரேநந்தேவன்றுளி, னறும்பூவுமஞ்சனமுங் கொண்டுபூ சைநான்புரிவேனென்றுபின்னுநமன்சொல்வானல். (௧௩)

மன்னுபவவரையிடறவலாரிகையில் வச்சிராயுதமன்றே பரமன்பூ சை, யன்னதனுக்கையமிலைமண்பெண்பொன்னினுசையுந்தாபத்திரை யமவையுநீக்கு, முன்னரும்பாவிகட்குவிடமாகுமென்றேயோதினுனிரு ந்திடுமெப்போதுதன்னிற், றுன்னருங்கானகத்திலொரு முனிவன்கூவுந் தொனிபதனைவினவியமன்றுளங்கினனே. (௧௪)

மனங்கலங்கிச் சித்திரகுத்திரர்தம்மோடு மறலியுமவ்வனத்தேகிமு னியைக்கண்டான், கனந்தருமெய்ப்பூதியின்முப்புண்டரங்கள் கண்டி கைமாலிகைவிளங்கவிருந்தோன்றுளி, வினந்தருமெய்க்கணக்கருடன் வீழ்ந்திறைஞ்சியேதையாமுனிவரனேயிந்தக்கானி, லனந்தசுகந்தருசி வபூசனையைச்செய்தேயசையாமலிருக்குமுன்பாலுரையாதென்றுன்.

அன்னவுரைகேட்டலுமேசாகமூல மருந்துமருந்தவன் புகல்வான் றென்றிசைக்கோர், மன்னவனேசிவத்துரோகங்கள்செய்தமாபாவியொ ருவனிங்குவரவேகண்டேன், றுன்னுமவன்றனைக்கண்டபாவமென்பாற் றெடராமல்விடமுண்டசோதிநாமந், தன்னைமனக்கலக்கமுடன்கூப்பி ட்டேனுன்சாற்றியவச்சத்தமங்குச்சார்ந்ததேயோ. [௧௫]

ஆபவனைநீவிருமேகண்டீர்போலுமருந்தருமவடிவாகு மவரன்றே நீர், தீயவனைத்தான்கண்டபாவந்தீரச்செய்கருமமிவையென்றுசொல்வீ ரென்றே, நேயமுடனுரைத்தளவேமுனிவனேடுநிலைபெயர்ந்து சித்திர குத்திரரதம்மோடுந், தூயமுனிசுகனிருக்கும்வனத்தில் வந்தான்சுருதி வழியிருவினையுந்துடைத்தல்செய்வான். [௧௭]

சகத்தில்வழிதனிற்கிடந்துமின்னு மிப்பிதன்னையொருதகட்டு வெ ள்ளிதானிதென்றே, யகத்தின்மடவாட்குடைமைக்காகுமென்னவதை ப்பற்றுமதுபோலுமாசாபாசச், சுகத்தைமுற்றுமெண்ணுமன்முத்திவே ண்டித்துளிர்கனிகாய்புனலருந்திச்சோகநீங்கி,மகத்துவஞ்சேர்சிவபூசை யுறுதிபூண்டமாமுனியாஞ்சுகமுனியைவணங்கிச்சொல்வான். [௧௮]

என்னுடையவுலகிலியானிருக்கும்போதிலீனமுறுமொருபாவி சிவ த்துரோகி, தன்னையான்வரக்கண்டேன்கண்டபாவந்தனை நீங்கவுபாய மொன்றுதான்சொல்வீரென், றன்னசமன்சொலச்சுகனு முனிவன்சொ ல்வானவனமதுதபோவனத்திலருகுசார்ந்தான், றுன்னரியதவங்கள்பல செய்தானன்னேன்சூழ்வினையாற்சிவபத்திதொடர்ந்திலானல். [௧௯]

அப்படியாயிருந்ததவனதிட்டங்கோடியருந்தவங்கள்செய்தாலுமா வதென்னே, மைப்படியுங்கண்ணுடன்பாகன்பத்திவந்திலதாலாங்கவற் கமறலிகேளா, பொப்பரியசிவபூசைப்பலத்தினலேயுறுதபொருளொ

ன்றுளமேதாவுலகமூன்றின, முப்பொருளுமப்பொருட்குழுதன்மைப்பா
தழுமூப்பொருளுங்கைப்பொருளாய்முடியுமன்றே. (௨௦)

சாற்றுமகாமேருவரைச்சிகரத்துற்றுச்சந்திரசூரியர்கள்சகவாசமே
ய்து, மாற்றரும்பாதலத்துற்றால்வருமோவன்னவாறு சிவபத்திவந்தால்
வருங்காண்முத்தி, யாற்றுறுபூசைக்கிடுக்கண்பலவுமெய்துமவைவிலக்கி
ப்புரியிலருங்கதியைச்சேர்வார், போற்றுதற்குத்தடைவந்தாலவற்றைநீக்
கிப்புரியாதார்படுநரகிற்புகுவாரன்றே. (௨௧)

மன்னுசிவபத்தியில்லாமாந்தர்தங்கள்வான்முகமபார்த்திடிற் பாவ
மாகுமேலோ, ரன்னவர்தமுகங்காணில்வானிலுற்றவாதித்தன்றனைநோ
க்கிப்பூதிபூசல், பன்னியவப்படிசெய்யிற்பாவநீங்கிப் பரிசுத்தனுவனவை
யெவற்றுமென்னிற், றன்னிகரில்லாதசத்திவடிவாம்பூதிதனைப்பூசும்பல
த்திலுற்றதன்மைத்தானே. [௨௨]

சொல்லரியஞானசத்திவடிவாநீறுதூளனஞ்செய்திடின்மயிர்த்துவா
ரமெல்லா, மல்லறவிராவுடையாளாகவேமூன்றரைக்கோடி சிவலிங்கவு
ருவமாவன், மல்லல்பெறும்பூதியணிவோர்கடாமே மகத்தானசிவலிங்க
வடிவமாவர், புல்லுடுவிப்பிரதிட்டாலிங்கந்தன்னிற்பூதியணி யோகியுரு
ப்புனிதலிங்கம். (௨௩)

காசிமுதலாந்தலஞ்சேரிலிங்கமெல்லாங்கருதிலசையாத தாபரவிலி
ங்கம், வாசியாஞானசத்திவடிவாநீறுவனையோகியுருவுசரலிங்கமாகு, நா
சமிலாவன்பரிடத்திருந்துநித்தனைவேத்ய முதலெலைவபுங்கவர்தலாலே
தேசுபெறுஞ்சிவயோகர்பூசைமேன்மைசிவனறிவனேவிலனே தெரிந்தி
லோமே. (௨௪)

கன்னிபராசத்திகைகள்குவித்தேதபாலிங்கனம்புரியாவுடையாள்சே
ர்திருவிலிங்க, மன்னியதன்கைகுவித்தஞ்சலிசெய்யோகிவாய்த்த வாவு
டையாள்சேர்சரவிலிங்கஞ், சென்னிபெறுமிரண்டிலிங்கந்தன்னிலெங்
குஞ்சென்றுவருஞ்சிவயோகியாருஞ்செல்வ, வன்னசரலிங்கத்திலிருந்
தெந்நாளுமரன்போனகாதிநுகர்ந்தமர்கின்றானே. (௨௫)

அருமறைகளன்பரிடத்திருந்தெந்நாளுமரன்பூசை கொள்வனென
வறைந்தவன்றே, யருமரிருசிவயோகிபூசையொன்றுஞ்சாலுமெனவிய
மபுதிபெற்றநூல்களாம், பெருமைபெறுதிரலிங்கபூசைநாளும் பிரிய
முடன்செய்துமுத்திபெறவேண்டு, மருவுசரலிங்கமாமன்பர்பூசைவாய்
த்திடச்செய்தேமுத்திமருவலாமே. (௨௬)

அன்பரிதயத்திருப்பர்பரமரென்றேமறைகின்றதால் வேதமரனார்நா
மம, தன்பரிவினினைத்தவுடன்கண்ணீர்வாரத்தழுதழுப்பநாவுடலம்புள
கம்போர்ப்ப, வின்பமிகுநாமக்தம்பெருசப்பெற்றோனிறைவாடி பார்க்

குளவன்ஞானதீரன், றுன்பமில்லாநான்குவன்னத்தாரும்பூசைசொன்னமுறைசெயிற்பாவத்துயர்தீர்வாரே. (௨௭)

செல்வமுற்ருேன்பொருளளவின்சிறப்பாற்பூசை செயவேண்டுமுலோபமுற்ருனரகஞ்சேர்வன், சொல்லரியவானந்தக்கனமாய்மேலாஞ்சுயம்பிரகாசமுமான சோதிதன்னைக், கல்வியறிவாம்பொருளைக் காணவேண்டிற்கருத்துடன்பூசிக்கவெதிர்காணலாமே, பல்வரஞ்சேர்சிவபூசைகாட்டுத்தீப்போற்படர்பாவக்கனலழிக்குமழைகண்டாயே. [௨௮]

இப்படியாஞ்சிவபூசைமேன்மையின்னமெத்தனையென்றுரைத்திடுகேன்யமனேகேளாய், மைப்படியுங்கண்டனபராதஞ்செய்த மாபாவிதனைப்பார்த்தபாவந்தீர, வொப்பரியசிவபூசைசெய்திபோ யுன்னுலகிலெனச்சுகமுனிவனுரைத்தலோடுங், கைப்பிடிசூலம்பாசமுடையகாலன்கருணைமுனிவனைப்பார்த்துக்கழறுகின்ருன். [௨௯]

சிவபூசைபுரிவோர்களுமைப்போலெத்தேசத்துங்கண்டிலேன்றேவரீரித், தவமேவுமுருவெடுத்தேயுறைதலிந்தத்தரணியெல்லாங்கண்டுபிழைத்திடத்தான்கண்டீர், நவமானவுபகரணவகையோபத்திநலமோவாசாரமோநாடுங்காலத், துவமானமற்றவுமதிடத்தில் வந்தேயுற்றேன்கண்பெறும்பேறுபெற்றேனென்பான். [௩௦]

சுத்தமுறுசுகமுனிவீர்நுந்தாட்போதிற்சுரும்பெனவென்மனம்விரும்பிச்சுழன்றதென்ருன், பத்திபெறுமுமைத்தொழவேகைகள்பெற்றேன்பாக்கியம்பெற்றேனென்ருன்பரமானந்த, முத்திதருந்தவம்புரியுமுனிவர்நும்போன்மூவுலகந்தனிலுமிலையெனமொழிந்தே, யுத்தமமாமுனிவரடிபணிந்துசித்ரகுத்தருடன்மறலியுந்தன்னுலகுற்ருனே [௩௧]

அரசுபுரிசபையதனிற்போய்ப்புகுந்தாஞணிப்பொன் ஞசனமேல்வீற்றிருந்தான், பரசும்பமபடர்கடம்மைவிளித்தான்பூவைப்பத்திபெறுஞ்சுகமுனியைப்பழித்தபாவத், துரிசுடையோன்றனைப்பாசக்கயிற்ருற்கண்டஞ்சுருக்கிட்டேயிழுத்திட்டுத் துடிக்கமோதி, நரகின்மிக்கசண்டகோலாகலப்பேர்நரகிலிட்டுத்தள்ளுமெனநவின்றிட்டானே. [௩௨]

கொண்டுபோனர்சூலமுனைகளாலேகுத்தினர்தடிகள்கொண்டுமொத்தினர்கள், சண்டகோலாகலமாநரகிலிட்டுத்தள்ளினர்யமதூதர்துள்ளினராற், றெண்டுபுரிசுகமுனிவன்சொன்னவாற்ருற்சோதிபூசனைபுரிந்துசுகத்திருந்தார், மண்டுசண்டனுடன்சித்ரகுத்தர்தாமுமற்றைமுனிவனுமென்றேவழங்கிப்பின்னும். [௩௩]

பாரதனிற்சிவபத்தரானவன்பர்பரமன்பூசைக்குரியபதார்த்தமெல்லாஞ்,சாரமாச்சேகரித்துப்பூசித்தேத்தித்தம்பிரானடியரொடுந்தான்பூசித்தீந, வாரமுடன்சிவதருமகதைபுங்கேட்டுவாழ்வரெனக்குகனந்திக்கி

சைத்தவாறே, நாரதமாமுனியுரைத்தானெனவியாதனவின்றதனைச்சூத
னைமிசத்திற்சென்றான். [௩௯]

பதினேழாவது சிவதன்மாதன்மச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௫௨௩.



பதினெட்டாவது,

# விசையைசெயயுத்தரச்சருக்கம்.



வேறு.

கனகன்குடர்புனையுந்நரவரியாகியகரியோன்
பனகந்துயிலரிதேடியபாதன்குருநாத
னனகன்வடவாலன்னுகராலன்காலகாலன்
சனகன்முதலியர்போற்றியசரணஞ்சரணமக்கே. (க)

வேதம்பயிறருநாவன்வியாதன்விளம்பிடுவா
னுதன்குருநாதன்பணிநந்தீசனைப்பார்த்தே
யீதிவ்வணமுன்னெய்தியதிறைவன்னடியவர்முன்
னோதுங்கருத்தறிந்தோதிடவேண்டும்மெனவுரைத்தான். [உ]

வருகின்றவரெவரோவவர்முன்போயினைமதுரந்
தருகின்றநல்வசனம்புகறருவாயெனச்சாற்று
மொருகுன்றனமணிமானமிவர்ந்தேகெனவுடனே
பெருகுங்கணம்புடைசூழ்தரப்பெயர்ந்தேகினனன்றே. [௩]

அதிர்துந்துமிமுழங்கக்கடன்மலைவந்தெனவாமென்
றெதிர்வந்தநந்தியைத்தூரத்தினிடைகண்டனன்மகிழ்ந்தான்
பிதிரன்புடைமனத்தன்னுயர்பிருங்கிக்கணநாதன்
முதிர்பத்தியோடுருகுற்றடிமுடிவைத்தனன்மொழிவான். [௪]

வந்தாய்சிவன்மாதைக்கொடுவரவேவிடநந்தீ
யந்தோவெகுகற்பங்களடுத்தேகியவன்றே
நந்தாவரன்கருத்தின்படிநடக்கின்றவனீயே
யெந்தாய்வெகுகாலங்களிருந்தாயிதுதகுமோ. (ரு)

நீவந்தபினையாநெடுமால்கோடியரயனோ
டோய்வந்தவர்சதகோடியரொன்றோபிறந்திறந்தார்
தாய்வந்திலளென்றுலெமையாள்சங்கரன்றன்பால்
வாய்வந்தனசெயவேசொலவந்தாயிலையந்தோ. (சு)

உமைபம்மைதன்னிடத்துஞ்சிவனிடத்தும்முறுபூசை
யமையுங்கருத்துடையாயரனதனுலுணதிடத்தே

கமைகொண்டனன்வெகுளுற்றிலன்கருணைக்கடலன்றோ
தமையன்புடன்றொழுவாரிடத்தினிற்சங்கரன்றானே. [௭]

ஒப்பாருமிலாநம்மிறையுக்ரன்னெனவுற்றுந்
தப்பானருளடிபோற்றியதனியன்பர்கடமக்கே
யப்பாலவன்பொறுப்பானெனவபராதங்கள்புரிந்தான்
முப்போதிருபோதன்றியுமுற்றும்பொறுப்பானோ. [௮]

என்றோதியபிருங்கிக்கணத்திறையோனைநந்தீசன்
குன்றோவெனுந்தோளோடுதன்றோள்கூடுறத்தழுவி
நன்றாகுமுன்மொழியென்றனனயந்துற்றிருவோருஞ்
சென்றார்மணிமானத்தினிற்சிவன்மைந்தன்முன்வந்தார். (௯)

வந்துற்றனர்மணிமானம்விட்டிழிந்தேவணங்கினராற்
கந்தப்பெயர்க்கடவுள்ளதுகண்டானருள்கொண்டா
னந்திப்பெயர்த்தலைவாவுயர்பிருங்கிக்கணநாத
வெந்தைக்குரியீர்நீவிர்களிணையில்விர்களன்றோ. [௧௦]

எனவோதினன்பிருங்கிப்பெயர்க்கணநாதனொடிசைப்பான்
மனமாசினரிடத்தேயுறமதியாமதிச்சடையான்
கனகாசலவிமயக்கொடிகணவன்னெமதையன்
னனகன்னெனசெய்தேயெவணமர்ந்தானெனக்கேட்டான். [௧௧]

அயுதஞ்சதமொருகோடியற்புதநிற்புதமனந்த
முயரம்மளவையும்யோசனையுளவாநவமணியின்
செயலொன்றியகதிர்வீசியசிங்காரமண்டபங்க
ணயமொன்றியவெவற்றுற்றனனாதன்னெனநவில்வான். [௧௨]

கோமண்டபத்திடையோவுயர்கொலுமண்டபத்திடையோ
மாமண்டபத்திடையோதனிமணிமண்டபத்திடையோ
பூமண்டபத்திடையோவியம்பொலிமண்டபத்திடையோ
வேமண்டபத்துறைவோனெவனுறைகின்றனனுரைப்பாய். [௧௩]

அமுதந்நதியலைவாய்க்கரையதிலுற்றுலவினனோ
குமுதவ்விதழமதன்னையைநினைத்தேகுலவினனோ
விமுதென்றல்வந்துலவுந்தனிமேல்வீட்டிலுற்றனனோ
வெமதன்புறுமிறையோனெவணியம்பாயெனவிசைத்தான். (௧௪)

கொற்றக்குமரேசன்னிவைகூறப்பிருங்கிப்பேர்
வெற்றிக்கணநாதன்புகல்வான்வீசியதென்றன்
முற்றுத்துறுசுகந்தப்புதுமுகைநாண்மலர்வசந்தத்
தெற்றிக்குளிர்திருமண்டபத்திடனென்றுசெப்பினனே. (௧௫)

அமலன்னெனைவிளித்தேதனதனைபாற்சென்றுவரப்போங்
குமரன்னிடைப்போய்வாவெனக்கூறுற்றனுப்பினனா

லைமையாண்டருளரசேபுனையெய்தித்துபமொழிந்தே
னுமைநாதன்முன்னுறத்தாமதமுளதோபுகலென்றான். (௧௬)

வேறு.

அங்கவன்புகன்றவாய்மையறிந்தவைங்கரத்தோன்றம்பி
சங்கையின்மகிழ்ச்சியோடுஞ்சார்ந்தனனிருந்தானிப்பாற்
றுங்கமாம்விசையையோடுசெயையென்பார்தொழுதார்நின்ற
பங்கயமுகத்தார்தம்மைப்பார்த்துமைபகருகின்றாள். (௧௭)

தோழியர்கேண்மினென்றுஞ்சுகரூபியானபெம்மான்
வாழிதாளினைநினைக்கவல்லனோவென்னலோடும்
யாழிசைமொழியாய்கேளாயிறைவருன்பிரிவினாலே
யூழியேயாகநாளொன்றிப்படியுறப்பெற்றாரால். [௧௮]

மங்குலையளகமென்றுமதியதேவதனமென்றுஞ்
சங்கமேகிரீவமென்றுந்தரளமேநகைகளென்றும்
புங்கமேவிழிகளென்றும்புலவர்கள்புகலுகின்றா
ரங்கவையிமவான்மங்கையணியுறுப்பொவ்வாவென்பார். [௧௯]

மேருவேதனங்களென்றான்மெய்யினிலணைக்கவின்பஞ்
சாருமோவென்பார்செய்யதண்கிடையதரமென்றா
லாரும்போதமுதால்கலாகுமோவதுதானென்பார்
சேருமோமணநாசிக்குச்செப்புமெட்பூவுமென்பார். [௨௦]

உந்தியின்சுழிக்குக்கங்கையூர்சுழியொப்போவென்பார்
தந்தியின்கரமோவாழைத்தடைகளோதுடைகளென்பா
ரந்தியின்பிறையோமாதரரைசிபார்நுதற்கொப்பென்பார்
சுந்தரிகனிவாய்க்காம்பல்சொல்லவும்பெறுமோவென்பார். [௨௧]

மடநடைக்கனங்களொப்போவடிவிற்குமின்றானெப்போ
விடையினுக்கிணைசிங்கத்தினிடையென்பதியல்போவென்பார்
பிடிநடைப்பெண்கட்கெல்லாம்பேரரசுரைக்கொப்புண்டோ
கடைவிழிப்பார்வைகாட்டுங்காலமுமுளதோவென்பார். (௨௨)

தனத்தணிமுத்தமாலைதனையுடுக்கணமோவென்பார்
புனக்குயில்போதாதென்றன்பூவைதன்வார்த்தைக்கென்பார்
கனத்தெழுகாமத்தீயாற்கலைமதிக்குளிர்ச்சிதன்னை
நினைத்தனர்வரவேகண்டார்நெருப்பிதுநெருப்பிதென்பார். (௨௩)

பத்திமண்டபத்திற்போவார்பஞ்சணைமிசையேபோவார்
கத்திகைக்கூந்தன்மாதர்களிடம்பார்க்கில்லார்வே
ளத்திரமதனைவென்றவாண்மையுமிழந்தாரம்மா
பித்தரிற்கலங்கின்றார்பெண்கணுயகியுன்னாலே. (௨௪)

சந்தனக்காவிற்சாரார்சந்திரகாந்தத்தாலே
சுந்தரமாகச்செய்தசோதிமண்டபத்திற்செல்லா

ரந்தரிகினைப்பிரிந்தவர்சைநோய்க்கவுடந்தான்
வந்தருள்வாரைக்காணார்மயங்குவாரியங்குகின்றார். (உ௫)

காணவேயினியரானகடவுளைக்காணவம்மா
நாணினைபோலுமுன்றனகைநிலாவமுதமுண்ண
வேணுறுசகோரம்போன்றவெம்பிரான்விழிகளன்றோ
தாணுவினிடத்திற்சாரத்தாமதம்புரிதனன்றோ (உ௬)

தம்புகழ்கேட்கின்றார்க்குத்தாளிணைபூசிப்பார்க்குச்
செம்பதுமத்தானெஞ்சிற்றியானங்கள்புரிகின்றார்க்கே
யம்பிகையழியாவீட்டின்பங்களளிக்கின்றாரா
னம்பர்மாலிமயநங்கைநயந்திடாதிருத்தியென்னே. (உஎ)

மலைமகள்கேட்டிவெள்ளிமலையவர்க்கின்பால்குந்
தலைமையாம்பெரியவானதனம்பெற்றாய்நீயேயன்றோ
வலகிலாச்சத்ரயாகத்தவபிரதத்தாற்பெற்ற
நலமெய்போற்பரனைச்சேர்ந்துநலங்கொண்மெய்யுடையாயன்றோ.

அன்னபூரணியேயம்மாநித்யகல்யாணராகுந்
தன்னிகரில்லாவின்பசாகரமதியஞ்சேர்ந்த
சென்னியாரிடத்தில்வந்துசடிதியிற்சேரவேண்டி
முன்னையாமிறைஞ்சுகின்றோமுன்பதம்பிடிக்கின்றோமால். [உ௯]

அனகனுமெம்மானுகத்தணைத்திடாதிருக்கிலுன்றன்
கனகபுட்பாதிபோன்றகவினுக்கோர்பயனுமுண்டோ
சனகர்சூழ்பரன்செய்லீலைதனக்கிளங்கொடிபோன்மேனி
யுனகமுற்றிசைந்தாலன்றோபெற்றதற்குறுதியம்மா. [௩0]

இறைவிநீயெம்மான்பாகத்திருந்திடலன்றோவுன்ற
னிறைமதிவதனமூரனிலாக்கதிர்விரிவதம்மா
வறைகழலண்ணன்மூரலளித்திடும்வதனங்கண்டே
பிறைமதிநுதலாயோகைபெறுவதுன்னிதயமன்றோ. (௩க)

வாவியின்மலருநீலவரிவிழிப்பார்வையாலே
தேவிநீசிவனுக்கின்பஞ்செய்வதெக்காலஞ்சொல்லா
யாவியாமுன்னைக்கண்டாலவர்புயம்பூரிக்குங்கா
ணேவியநீயுங்கண்டாலுன்குயம்பூரியாவோ. [௩உ]

அன்னைகேளெம்பிரானாரவர்கவன்றுரைக்குமாற்றஞ்
சென்னியைந்தவற்றிலேந்துதீக்கண்கள்சீறுபாம்பு
துன்னுமாபரணஞ்சூண்சுந்தரமதனைக்கொன்றே
மின்னதால்வந்திலாளென்றினைந்தினைந்தேங்குகின்றார். [௩௩]

இப்படிப்புலம்புகின்றாரிறைவிநம்பால்வந்துற்றா
லப்படிப்பட்டவெல்லாமனுகூலமாகுமென்றார்

கொப்படிபாயுங்கண்ணுய்குறுமூரல்செய்பவேண்டா
முப்படிபாயுமையன்முன்வராயெனமொழிந்தார். [கச]

துன்னருங்கருணைவெள்ளச்சோதிமாநதித்தீரத்தி
லன்னைநீவிளையாட்டிற்றலழகினுக்கழகேயன்றோ
முன்னவன்கருணைமேன்மைமொய்யொளிவடிவமெல்லா
முன்னையல்லாமலுண்டோவுமையம்மையுரையாயென்றார். (கரு)

உருப்பெறுமுன்னேடுற்றுலகெலாந்தழைக்குங்கண்டாய்
கருப்பெறுமுயிர்கள்வாழக்கடிதெழுந்தருள்வாயென்றே
திருப்பொலிவிசையைசொன்னளெனப்பராசரனார்செல்வ
னருட்பெறுசூதனேமிவனத்தவர்க்கருள்செய்வானே. (கசு)

பதினெட்டாவது விசையசேனயயுத்தரச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருருக.



பத்தொன்பதாவது,

# நந்திகணபதிபன்வந்தனச்சருக்கம்



வேறு.

உண்ணிலாவன்பின்வெள்ளமுவட்டெடுத்தோடிற்றென்னக்
கண்ணிலானந்தவாரிபொழியமால்கமலனிந்த்ர
னெண்ணிலாமுனிவர்வானேரேத்தவீற்றிருக்கும்வெள்ளி
வெண்ணிலாச்சிலம்பன்செய்யசிலம்படிவிரும்பிவாழ்வாம். (க)

வேணிசேர்வியாசன்சொல்வான்விரைநீலவேணிமுன்னர்
வாணிபோல்விசையைசொன்னவாணிகேட்டுளமகிழ்ந்தா
ளாணியாந்தோழிசொல்லாரமுதுண்டாண்மான்பிடித்த
பாணிபாரனுப்புந்தூவெண்பட்டெடுத்துடுத்தாளன்றே. (உ)

புரிகுழல்வகிர்ந்துவாசப்பூமுடிச்செருகிக்கொண்டாள்
விரிவெயினிலவெறிப்பமின்னெறித்திடுமெய்யெங்கு
மரியபொன்னாரம்ரத்நாபரணங்களலங்கரித்தாள்
பரியுஞ்சேடியர்கொணர்ந்தபள்ளையத்தமுதுமுண்டாள் (ங)

மைந்தரைப்பந்திவைத்தாள்மாணிக்கப்பள்ளையத்திற்
சுந்தரபோனகங்கடுய்த்திடப்பணித்தாள்பின்னர்
நந்தியேமுதலவாயநற்கணநாதர்க்கெல்லா
மந்திரிபரிகலத்தாரமுதுணவளித்தாளன்றே. (ச)

காதலொடெவருங்கொண்டார்கைகளுப்பூசினார்கள்
சீதளகளபகற்பூரங்கண்மேனியிற்றிமிர்ந்தார்

தாதவிழ்சுகந்தந்தாம்பூலாதியுந்தரித்துநின்று
ரோதுறுகணங்கள்கண்டாருவந்தனரார்க்கின்றுரால். (ரு)

பஞ்சதுந்துமிகள்பேரிமத்தளம்படகந்தாரை
கஞ்சத்தின்கருவியாயகண்டைகமணிசேகண்டி
யெஞ்சலிலொருபத்தெட்டென்றிசைக்கும்வாத்தியங்களெல்லா
மஞ்சுறவூழியாழியார்ப்பெனவார்த்தவன்றே. (சா)

பெருகியமுழக்கங்கேட்டான்பிறையணிவேணிப்பெம்மா
னருகினிலிருந்ததண்டிகணுதிபன்றனையழைத்தான்
வருகின்றடேவிபோலும்வாத்தியங்கடலோரேழும்
பொருகின்றமுகிலோரேழும்போன்மெனமுழங்கிற்றன்றே. [எ]

சென்றுநீபார்ப்பாயென்றுசெப்பினனுடனேதண்டி
நன்றுநன்றெனப்பணிந்துநகையொளிவிமானமேறிக்
குன்றுவிண்பரந்ததென்னவுமையிடங்குறுகலோடு
மன்றதுகண்டநங்கையருகுறுங்குகற்குச்சொல்வாள். [அ]

ஏவனோவருகின்றன்பாரென்றலும்புறத்துவந்து
சேவலங்கொடியோன்பார்த்துத்தேர்ந்துமீண்டுரைக்கலுற்று
ஞவியேசிவனுக்கின்னோனதிபத்தனுகுமன்றே
கோவின்வண்கொடிகளாடுங்குளிர்மணிவிமானந்தானே. (கூ)

எனக்குமரேசனின்றுகூறினனிமயத்தன்னநந்
தனக்கரனேவவந்ததண்டியுமருகுசார்ந்தான்
மனக்கருத்துடனேவீழ்ந்துவணங்கியஞ்சலிக்கையோடுங்
கனக்குழலுமையாண்முன்னேநின்றனன்கழறுகின்றான் (கo)

அம்பிகையின்னமுண்டோதாமதமமலனேவச்
செம்பொனின்விமானமீதோகொடுவந்தேன்சிறப்பதாக
வும்பரோடிம்பர்யாருமுறுதுயரொழிந்துவாழ
வெம்பிரான்மகிழயாங்களுய்யவேபிவர்வாயென்றான். (கக)

பன்னியமாற்றங்கேட்டாள்விமானத்தின்பொலிவுபார்த்தாண்
மின்னையயனையாள்சேடிவிசையையுஞ்செயையும்பாங்கார்த்
துன்னவேயடியார்சென்மத்துயர்க்கடற்கரையிலேற
வென்னையாளுடையாள்செம்பொன்விமானத்திேனறினளே. [கஉ]

ஆடகப்பாவைபோலுமற்புதமடந்தைமார்க
ளாடகமடவார்கூடிநாட்டியநடிக்கலுற்றார்
மாடகமகரயாழ்கள்வானதுந்துமிகளார்ப்ப
வேடகத்தலர்விமானமிசைந்தசைந்தேகிற்றன்றே. (கங)

கணபதிகுமரனந்திகணுதிபன்பிருங்கிதண்டி
குணபதியாகுமம்பைதோழியர்குறித்தேயேறு

மணமிகுவிமானமுன்னும்பின்னருமருங்குமொய்த்த
வினையிலானுறைதற்கைந்தாமயுதயோசனையினெல்லை. (கச)

கையினிற்பிரம்புகொண்டுகணநாதர்கோடிகோடி
யையைதன்விமானஞ்சூழநெருக்குறவடர்க்கின்றாராற்
செய்யதோர்விமானமீதிற்றேவர்கள்பொழிபூமாரி
வையகத்துடனேவானுமறைந்திடநிறைந்தவன்றே. (கரு)

மன்றலார்தென்றல்புட்பமாரியின்பராகத்தோடு
குன்றசைந்தாற்போற்செல்லுங்குளிர்மணிவிமானத்தூடு
சென்றதுவாசம்வீசத்திருவனார்கவரிவீச
நன்றருள்வீசுமன்னைநகைநிலாவீசச்சென்றாள். (கசு)

தண்டளிர்ச்சாலைசோலைதடாகங்கடண்ணீர்ப்பந்தர்
மண்டபமுப்பரிகைமாளிகைதெற்றிமுற்ற
மெண்டருநெறியினோங்கவியற்றியசிறப்பையெல்லாங்
கண்டளிர்த்திடவேகண்டுசென்றனள்கருணைகூர்வாள். (கஎ)

மாங்குயின்மயிலோடன்னம்வரியளிசக்ரவாக
நாங்கணவாய்சுகங்கணலங்கொள்பேட்டுடனேசேவ
லாங்கலந்துறைதல்கண்டாடம்பிரான்றனைநினைந்தா
ளீங்கிவளைக்கண்டகணங்களைத்தெடுக்கின்றால். (கஅ)

வேறு.

வேதமெய்ப்பொருளேவிசையீபவாவீறுசொற்கவுரீவிசையீபவா
நாதனுக்குரியோய்விசையீபவாநாடுதற்கரியாய்விசையீபவா
மாதிரந்தொழுவாய்விசையீபவாமாகிலந்தருவாய்விசையீபவா
சோதிமங்களையேவிசையீபவாசொல்லுசாம்பவியேவிசையீபவா. (க௯)

சறுவமங்களையேவிசையீபவாசங்கரனிடத்தாய்விசையீபவா
வறிவினுக்கறிவேவிசையீபவாவன்பர்க்கின்பருள்வாய்விசையீபவா [வா
வெறிகொடார்விகடைவிசையீபவாவிசையையேசெயையேவிசையீப
நறுமலர்த்திருவேவிசையீபவாநங்கைவாகீசுரிவிசையீபவா. (உ0)

சாம்பவிசறுவாணிசெயசெயசங்கரிமகமாயிசெயசெய
காம்பெனுந்தோளுமையேசெயசெயகாலகாலப்பிரியேசெயசெய
வாம்பல்வாயம்பிகையேசெயசெயவனகையேவரைமாதேசெயசெய
தேம்புசிற்றிடைத்தேவிசெயசெயசெய்யதாமரைத்தேனேசெயசெய.

தேவரம்பையர்பூசைகொளம்பையேசெல்விசித்தகல்யாணிசெயசெய
தூவியன்னநடையுடைத்துற்கையேசுந்தரீசண்டிகையேசெயசெய
மேவுமீசற்கினியபிரமத்தாய்விமலையாம்விசாலாட்சிசெயசெய
பூவில்வானவர்போற்றும்பொன்னேதிரிபுரபயிரவிமாதேசெயசெய. ()

மண்டுறுங்காதலினினிபமொழிப்பூவைகோவையிதழ்மதுரப்பாவை
யொண்டொடியுந்தாமுமுனமிருந்தபரிசத்தனையுமுன்னினுரால். (௩௧)

சந்தனப்பூண்முலைமார்பிலழுந்தவேயணைத்தணைத்துத்தழுவிக்கொள்வோந் சுந்தரவாண்முகத்தெழிலுங்காண்போமஞ்சுகவார்த்தைச்சுகமும்கேட்போம், கொந்தளகமணங்கவர்வோமிதழ்த்தேனுண்போஞ்சப்ரமாளத்தேறி, மந்தமாருதம்விசவிற்றிருப்போமெனவுளத்தின்மகிழ்வுற்றுரால். (௩௨)

இவ்வாறுபுகன்றெருமண்டபத்திரத்நவாசனத்தினின்றிதேவி
மைவாழுமணிமிடற்றன்மகிழ்ந்துவீற்றிருந்தனனம்மாற்றந்தேர்ந்தே
பொய்வாதசதுர்வேதமுரைத்தருளுமுனிபுரைத்தாலுண்மையென்ற
செவ்வாறுசேர்சூதனைமிசவாணருக்கினிதுசெப்பினனே. (௩௩]

பத்தோன்பதாவது தவநிலைசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருஉ.

இருபதாவது

# தேவிசிவனைப்பொருந்தினசருக்கம்



வேறு.

பொங்கரவாடவேயம்புலியாடப்புலித்தோலாடத்
தங்கமாஞ்சபையிலாடுந்தம்பிரானெம்பிரானுர்
மங்களங்கண்ணிநீலமலர்க்கண்ணிவாமஞ்சேர்ந்த
திங்களங்கண்ணிவேணிச்சிவனடிக்கண்ணிவாழ்வாம். (௧)

மாதவன்றனேயானமாதவன்சொல்வான்கண்க
ளாதவன்சோமனங்கியாயவனுமையாள்வந்த
போதவண்விமானம்வந்தபோல்வுந்துந்துமியினார்ப்பு
மோதிபகணங்களார்ப்புங்கண்டுகேட்டுளம்பூரித்தான். (௨)

பருகுதாகத்தார்நீர்க்குப்பரதவிப்பார்போலுற்ற
முருகவிழ்கொன்றைபார்க்குமொய்குழலுற்றபோதிற்
றருமிளநீர்சிற்றுண்டி தருணத்தேபெற்றதாமா
லருகுறக்கண்டானண்ணலாகமும்புளகங்கொண்டான் (௩)

பற்றுறுபசியாளர்க்குப்பாற்சோறுகையுற்றுற்போ
லற்றவர்தமக்குச்செம்பொனருங்குடமகப்பட்டென்ன
வற்றுறுதடத்தில்வாரிவரிலுயிர்மகிழ்ச்சிபோலப்
பொற்றொடிவந்தபோதிலளவிலாமகிழ்ச்சியுற்றான். [௪]

தன்னிகர்விசையையோடுசெயையுமேதளிர்க்கைதாங்கப்
பொன்னடிபணிந்துபூமின்னிருவரும்புகழ்ந்துபோற்று

மன்னியவிந்திராணிமுதலியோர்வரிசைசெய்ய
வன்னமென்னடையாள்வந்தாளண்ணறன்முன்னமன்றே. [ரு]

அம்பிகைகண்வேலண்ணலரும்புயந்தன்னிலாழ்ந்த
சம்புவின்கண்ணுமம்பைதனங்களிற்பாய்ந்தவன்றே
நம்பன்முன்பணிந்துநங்கைநாணொடுமருங்குநின்று
ளெம்பிரான்கண்டணைத்தேயிடத்தினிலிருத்திக்கொண்டான். [சு]

கண்டனர்கணங்கள்கண்கள்களித்தனருமையாளோடு
மண்டர்நாயகன்றானுற்றுனகிலமின்றுய்ந்ததென்பார்
மண்டுபூமாரியோடுமழைக்கண்ணீர்மாரிபெய்தார்
தண்டெனவிழுந்தெழுந்தார்தனித்தனிகளித்தாரன்றே. [எ]

தூரியம்பேரியார்த்ததுந்துமிக்குழாங்களார்த்த
தாரையெக்காளஞ்சின்னஞ்சங்கமெங்கெங்குமார்த்த
வாரியையோடுமெங்கணாயன்வீற்றிருத்தல்கண்டார்
நாரியர்தாமும்வந்தார்நாடகமாடினூரால். [அ]

பண்ணேறுமகதிவீணைபலாண்டிசைபாடுகின்றார்
தண்ணேறுமழகாலத்தித்தட்டங்கள்சுற்றுகின்றார்
கண்ணேறுகழிப்பார்போலக்கடவுளோடுமையைச்சூழ்ந்தார்
விண்ணேறுமரம்பைமாதர்மேனகையாதியோரே. [கூ]

வேறு.

தமரமிகுஞ்சபைதனிலுறைவோர்கள்
விமலமுழுமுதல்விளம்பியெழுந்தா
ரமலனொடம்பையுமன்பர்தமிதயக்
கமலநிகர்த்திடுகடிமனைபுக்கா. [க0]

கதியுலகெனவொளிர்கடிமனையதனின்
மதியுலகெனமிளிர்மலரணைமிசையே
புதியநன்மலரளிபுகுமவையெனவே
யதிகனுமமலையுமவண்மருவினரே. [கக]

பாலுறுசுவையும்பருகுறுபுலனு
மேலுறுமுலகுமேவுநல்வினையுஞ்
சீலர்தம்மன்புந்திருவடியும்போ
லாலனுமமலையுமரியணையுற்றார். [கஉ]

வேறு.

அருத்தியோடுலகெலாமளித்தவம்பையா
மொருத்தியுமுயிர்க்குயிராமொருத்தனும்
பொருத்தமாயுலகெலாம்பொருந்தவைகிப்பின்
றிருத்திடுமானந்தசபையிற்சேர்ந்தனர். (கங

தோகையுமதனைவெல்சுந்தரேசனு
நாகரீகம்பெறுநலங்கொண்மண்டபத்
தோகைசேர்பரியங்கத்துலகமுய்யவே
யேகசிங்காதனத்தெய்திமேவினர் [கச)

இலங்கியமணிப்பணியங்கமெங்கணு
நலம்பெறவணிந்தனர்நாதனோடுமை
துலங்குமண்டபத்துற்றுளென்றுசூதன்றான்
றலம்புகழ்நைமிசத்தவர்க்குச்சாற்றினன். (கரு)

இருபதாவது தேவிசிவனைப்பொருந்தினசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சு௦எ.



இருபத்தொன்றாவது,

## சைவர்பரிகலப்பிரசாத மகிமைச்சருக்கம்.



வேறு.

தங்கப்புரிபோல்விரிதந்தொளிருஞ்சடையானிமையோர் தமையாளுடையான், கொங்கைக்குயிலாண்மயில்போலியலாள்கொடிநேரிடையாளிடையன்புடையான், வெங்கட்புலியின்விரிதோலுடையான்விரையாரிதழித்தொடையான்மிடல்சேர், செங்கட்டனிமால் விடையானடியார்திகழ்சேவடியெம்முடிசேர்த்துதுமே. (க)

வேதம்பகரும்வியாதன்புகல்வான்வெறியார்மலர்மண்டபமேவினரா
ளுதன்னுமையாள்புதல்வர்வரவேகாடுற்றனர்முன்னனுகுற்றனராற்
போதந்தருவிஞ்ஞானநந்தப்பொலிவாயுறைவோரிருவோர்தமையும்
பாதந்தொழுதார்மறையின்முறையாற்பகருந்துதிபற்பலபன்னுவரால்.()

இமையோர்பணிவெற்பிறைவாசரணமிமயத்தரசன்மகளேசரண
மமைவாமிடபத்துசனேசரணமரியின்கொடிசேரனையேசரணங்
கமழ்பூதியின்மேனியனேசரணங்களபம்புனைமெய்யுடையாய்சரண
மெமையாள்கருணைவிழியாய்சரணமிருதாமரையாநயனீசரணம். (ங)

பொருசூலமெடுத்தவனேசரணம்புனைதாமரைசேர்கையாய்சரண
மரிதாகியதிக்குடையாய்சரணமணிதூயவொளிபட்டுடையாய்சரணம்
வரிவேணியிளம்பிறையாய்சரணமலர்க்கொந்தளகப்பிறையாய்சரணந்
தெரியாடரவக்குழையாய்சரணந்திகழ்மாமணித்தோடுடையாய்சரணம்

உடுக்கோளணிமாலிகையாய்சரணமொளிர்முத்தணிகந்தரத்தாய்சரண, மடுக்குந்திகழ்பொன்னிறத்தாய்சரணமணியார்பசும்பொன்னிறத்தாய்சரண, மடுக்கும்புரமூன்றெரித்தாய்சரணமதுகை டவனைசெரித்

தாய்சரணம், படுக்குஞ்சமனையுதைத்தாய்சரணம்பகட்டாசுரனைவதை த்தாய்சரணம். (இ)

வேறு.

ஒருஞானவுருவாகும்பரனேபோற்றியொப்பில்சிதானந்தமன்பர்க்கி ருள்வாய்போற்றி, மருவாகுஞ்சடைமவுலிபரனேபோற்றிமணிநீலவே ணியுடைமயிலேபோற்றி, திருவாருங்கற்பூராகரனேபோற்றிதிகழ்தரு குங்குமந்தரித்தசெல்வீபோற்றி, குருவாருங்கூவிளவர்ச்சனையாய்போ ற்றிகுருக்கத்திமலர்விரும்புங்குயிலேபோற்றி. (சு)

மண்டலசிங்காரனேபோற்றிபோற்றிமாணிக்கவலங்கிரியேபோற்றி போற்றி, யெண்டருவேதாந்தத்தோத்திரத்தாய்போற்றியெழில்விசுவே சன்புகழுமிறைவீபோற்றி, யண்டர்கள்பாவருூம்வணங்குந்தலைவாபோற் றியம்புயமாதடிபரவுமமலேபோற்றி, பண்டருமென்மொழிதழுவக்குழை ந்தாய்போற்றிபரமரருண்மகிழ்ச்சிபெறும்பரையேபோற்றி. (எ)

காசினிக்குத்தந்தையேபோற்றிபோற்றிகடலுலகீன்றருடாயே போற்றிபோற்றி, பேசுமதன்றனைக்காய்ந்தாய்பெரியோய்போற்றிபெரி யமதன்றனையேவல்கொள்வாய்போற்றி,யெசறவேவிடநுகர்ந்தாய்போற் றிபோற்றியின்னமுதநுகர்ந்தாயேபோற்றிபோற்றி, தேசுபெறுமகேசுர னேபோற்றிபோற்றிசீர்திருக்கொந்தளதேவிபோற்றிபோற்றி. [அ]

இன்னவாறனந்தந்தழைக்கநல்குமிறைவனையுமிறைவியையுமிரு வர்மைந்தர், முன்னர்நின்றுபுகழ்ந்தவுடன்றழுவிகொண்டார்மொழிகி ன்றாரானைமுகன்குகனேவாரீ, ரென்னவுமக்கியன்றவரங்கேட்பீரென் றீன்றவரைமைந்தர்பார்த்தியம்புகின்ற, ரன்னையுமத்தனுமானவுங்க ள்பாதத்தன்புமனமறவாமலருள்வீரென்ன. [கூ]

பின்னருநன்னுமங்கண்மந்திரங்கள்பெருகுசிவார்ச்சனையுபயோக த்தைவேண்டல், சொன்னவாகமம்வேதம்புராணமங்கந்துதித்தருளுநு ம்பெருஞ்சீர் தீர்த்தஞ்சேவை, பன்னுவதுசிவவிரதந்தியானம்யோகம் பகர்வரியசிவஞானமுதலவான, மன்னுசிவபுண்ணியமாமிவற்றிலெங்க ண்மனஞ்செல்லவேண்மெவ்வரம்வழங்குமென்றார். [கo]

பொன்னாசைமண்ணாசைமோகமின்னார்போகத்தில்வருமாசையெ னுமழத்தீயின், மன்னுதபடியடியார்க்கருளுமெந்தாய்மாதாவேநாவினிய சுவைகண்டாற்போ,னன்னுறுமலர்கண்டவண்டுபோலநளினநெய்தலிரு சுடரைக்கண்டவாபோ, லெந்நாளுமுமதுரியசரணங்கண்டா லெமது மனங்களித்திடவேவேண்டும்வேண்டும். [கக]

இன்றுமதுசாணதரிசனந்தான்பெற்றோமிதுபோதுமினியெய்தாப் பொருண்மற்றுண்டோ, வென்றிதருநும்பதமேயிதற்குச்சாட்சிவேறிலை யென்றுரைத்துநின்றமைந்தர்தம்மைத், துன்றுமுவகையினுடனேதழு

விராதன்சொன்னபடியேயாகக்கடவதென்றே, பென்றுமென்பாணியுமி
பமுகனுந்தாயுமினிதிருக்கவென்கருத்தப்படிச்செய்வீரே (௧௨)

என்றவரையருகிருத்தித்தழுவிக்கொண்டேயிரத்தினவாபரணமு
டன்விசித்ரவாடை, கன்றளித்துக்குமரனைப்பார்த்துரைப்பானெம்மா
னைங்கையிவடனையழைத்துவநதுளோர்க, டுன்றுநந்திபிருங்கிதண்டிமு
தலோரானதூயகணத்தலைவருக்குமற்றுளோர்க்குஞ், சென்றுநந்தப்பிர
சாதமாடைபூண்கள்செய்யுமுபசாரமெலாஞ்செய்தியென்றான். [௧௫]

சொன்னவுடனிருவோருந்தொழுதுநின்றுதுதித்துவிடைகொண்
டுசுடர்ச்சோதிதுன்னு, மன்னுமணிவாசல்பலகடந்துசென்றுமாணிக்க
மண்டபத்தில்வந்துசேர்ந்தார், பன்னுநந்திமுதற்கணங்களைவருமவந்
தார்பணிந்தவர்பாற் றோத்திரங்கள்பண்ணுகின்றா, ரன்னவரைக்குகன
ழைத்தேபெம்மான்சொல்லியருளியவாறேவரிசையமைக்கின்றானல்.

குமரேசனினைத்தவுடனன்னராசிக்கூறுகறிவர்க்கமதுவர்க்கராசி
கமழ்கூரும்பனிநீரிற்களபராசிகற்பூரகுளிகைதாம்பூலராசி
யமரேசசற்கரியசித்ரவத்ரராசியாபரணராசிமலைமலைகள்போல[ன்றானல்.
வமைவாகவர்துகுவிந்திடவேமுந்து மடற்கணங்களுவகைபெறவளிக்கி

நந்தியுடன்பிருங்கிதண்டிமுதலாயுள்ளநாயகமாங்கணநாதர்தங்கட்
கெல்லாம், புந்திமகிழ்போசனந்தாம்பூலமல்லிப்போதுமெனவாடையாப
ரணமீந்தான், சுந்தரிமுன்னொடிகுடைகடாங்கிவந்தோர்சொல்லரும்ப
ல்லியந்துவைத்தோர்பணிகள்செய்தே, வந்தவர்க்குமன்னமுடன்களப
ம்பஞ்சவாசந்தூசாபரணம்வழங்கினனே. [௧௬]

எங்கள்பிரானுலைபச்சுற்றெங்குந்தங்கமிழைத்தரத்நமாளிகைளுளி
கையுண்டாக்கி, யங்கங்கேகணங்கள்வீற்றிருக்கும்வண்ணமமைத்திடவ
ங்கவரிருந்தார்செவ்வேலண்ண, றிங்கண்முகமங்கைதெய்வயானையின்
பந்தினைத்துமணிமாளிகைபிற்சேர்ந்திருந்தான்,றுங்கதுண்டியைங்கரன்
வல்லவையினோடுசோதிபெறுமாளிகையிற்றுன்னினானல். [௧௭]

மங்கையுமைநாயகிதன்சேடிமாராமாதரார்செயைவிசையைமகிழு
ம்வண்ணந், தங்கமணிப்பூடணங்கள்விசித்ரவாடைதான்கொடுப்பவாங்
கினார்தாங்கிக்கொண்டா, ரங்கதற்பினுடகஞ்செய்மாதர்க்காடையாபர
ணவரிசைகளநேகஞ்செய்தா, ளிங்கிதன்பினங்கையுடனெங்குகனி
யற்றியவுப்பரிகைபுகுந்திருந்தானன்றே. [௧௮]

ஆங்காரும்போதனிலெம்பிராட்டியமைத்தனடன்கையாலன்னுதியெ
ல்லாம், பாங்குடனேபரிமாறவெம்பிரானூர்பரிந்தமுதுகொண்டனரம்பி
கையுங்கொண்டா, ளோங்குமடைக்காயுநுகர்ந்திருந்தபோதி*லோலைப்பூ

* ஓலைப்பூ-தாழம்பூ.

வாசம்வந்துவீசிற்றுங்கே, யிங்குநமக்கிதுவாகாதுமையேநீகொள்ளென
விறைவியிறைவனைப்பார்த்தியம்புகின்றாள். [௧௯]

ஐயநீவிரும்பிநுகர்சேடமல்லாலடியனுகர்ந்திடலாமோவென்று
ணின்று, டையனுயகிகையிலுருத்ரவீணைதாங்கிளுள்சிவனருகிற்சார்ந்தி
ருந்தாள், செய்யமுறுக்காணியுடனரம்பின்கோவைச்சீர்கண்டாள்சுருதி
கொண்டாள்சிவன்றனுமம், [பையவெடுத்தாகவசங்கரவீமேசபற்கபாப
ரவெனவேபாடினுளே. [௨௦]

பாடினுள்சிவன்மகிழ்ச்சியாற்கொண்டாடப்பலகலை வல்லவைபா
மானந்தக்கண்ணீ, ராடினணகங்களாற்றெறியேலென்னுமதிசயருத்திர
வீணைவரலாறெல்லா, நாடிநானறிகிலேன்புகல்வாயென்றுளுயகனும்பு
கல்கின்றுன்முன்னைநாளி, னீடியகந்திருவரினிதிருந்துவாழு நீணகா
மொன்றுளதுநிகழ்த்தக்கேளாய். [௨௧]

வனைபுகழந்நகரிலோரிலிங்கமோங்கிவளர்ந்துளதாங்கதன்பெருஞ்சீ
ர்வகுக்கலாமோ, வனையநகர்மேவியகாந்திருவர்ச்கேந்தலாகு மவனூரு
வென்பானுண்மைமிக்கான், புனைமணிப்புட்பகவிமானத்திலேறிப்புகுந்
தூலகம்பார்க்கவேபுறப்பட்டானல்,வினையமுடனதிசயமெங்குளதாமே
ன்றுவிசாரிப்பானவனொருவெற்பருகுசார்ந்தான். (௨௨)

அந்தவரைச்சாரலில்வீற்றிருந்தசைவவாண்மைபெறும் யோகிவை
க்கண்டங்கணுற்றே, யுந்துபுகழ்க்கந்திருவனூருவென்போனுலகிலிவன்
றனைப்போலவொருவற்காணே, மூந்துசிவனிவனெனவங்கவனைத்தாழ்ந்
துமொழிகின்றுன்சைவநெறிமுதன்மைபெற்று, யிந்துசேகரன்பூசைப்
பலனும்பெற்றுயென்பெறநீயிவ்வரைவந்திருக்கின்றுயே. (௨௩)

என்றுரைத்தோன்றனைப்பார்த்துநகைத்தேசைவத்திருங்கருமத்த
வயோகியியம்புகின்றுன், றுன்றுமிவண்மகத்தானவிலிங்கநாதன் சுத்த
ராஞ்சித்தர்தொழுஞ்சித்தநாத, னன்றிதருமிவ்விலிங்கப்பெருமையெல்
லாநற்செவியாரமுதமெனநவில்வாங்கேட்டி, குன்றிதனில்விரதனெனு
மந்தணளன்குருடனகங்கைசொத்தைகுட்டரோகி. [௨௪]

கூனனுடுத்திடுகூறைநூறுபீறல்கொடும்பாவம்புரிந்ததனுற்படும்பா
டொன்றே, வானதுயராளனல்லவினைமுன்செய்தானுதலாவித்தலம்வ
ந்தடுத்தானன்னு, ளீனமகற்றிடுஞானவிலிங்கமிங்கணிருந்ததறியா னி
ஙைப்போடிருந்தானப்போ, தூனமிலோர்கின்னரனிவ்விலிங்கபூசையுஞ
ற்றுவானன்பினுடனுவண்வந்துற்றுன். (௨௫)

வந்துசைவசீலத்தான்பூசைசெய்வான்மஞ்சனங்களாட்டினன்மல
ர்கள்சூட்டிச், சிந்தைமகிழ்கிருதகுளபாயசந்தான்றீங்கனியபூபமதுவர்
க்கத்தோடு, நந்துகதலியினிலையிற்றளிகைசேர்த்தானலமிகு நைவேத்தி
யங்கணுடிச்செய்தான்,முந்துமுபசாரங்கள்புரிந்தானன்பின்முன்பணிந்
தான்றேத்திரங்கண்மொழிந்தானன்றே. (௨௬)

மன்னினன்சண்டபூசைபின்னைப்பின்னின்மாலியமோரிடத்திருந்து
ண்டுவகைகூர்ந்தா, னன்னபரிகலத்தரம்பைத்தளிரைக்கைக்கொண்ட
பலெறிந்தானங்கிருந்தவந்தணாளன், முன்னர்விழுந்ததுதடவிபெடுத்து
க்கொண்டான்மோந்துகொண்டான் மணங்கண்டான்மூர்ச்சைதீர்ந்தா
ன், றுன்னுபசிபாலதனைவாயில்வைத்துச்சுவைகண்டான்மென்றுமென்
றுதுப்பித்திட்டானே. (உஎ)

அருந்தினன்விண்ணுலகின்மருந்துண்டான்போலகத்திலுறுதீப்பிணி
களனைத்துந்தீர்ந்தான், வருந்திபமூப்பதுவொழிந்தானிளமைசார்ந்தான்
வரிவிழிகடெரிந்திடவேமகிழ்ச்சிகூர்ந்தான், பெருந்தவமென்செய்தே
னென்றகம்பூரித்தான்பிரியமுற்றிவ்விலிங்கத்தினருகேசார்ந்தான், பொ
ருந்தவிரதக்காலம்பூசித்தோன்புகுந்தனனுச்சியினுமெம்மான்பூசை
செய்வான். (உஅ)

முன்போலவருச்சனைநைவேத்தியங்கண்முறைபுரிந்து பரிகலத்தி
னமுதந்தன்னை, யின்போடுமருந்தியிலைதன்னையப்பாலெறிந்தனனங்க
துபார்ப்பானிருந்துபார்த்தான், பொன்போலவோடியெடுத்தருந்தியுள்
ளம்பூரித்தானுடலமுமேபாரித்தானு, லன்போடுமுருகமலன்முன்னம்வ
ந்தானரகரசங்கரவென்றோர்சைவன்றானே. (உகூ)

வந்தவுடனிந்தமகாவிலிங்கந்தன்னைமகிழ்பூசை செய்துபின்னின்
மாலியத்தைச், சிந்தைமகிழ்ந்தருந்தியேகளித்திருந்தமேதகுபெறுசைவ
தேசிகன்முன்வந்தே, யந்தணனும்விரதன்றான்பணிந்துநின்றே யஞ்சலி
செய்துரைக்கின்றானையரேயா, னெந்தவகையென்றறியேன் றேவரீரிங்
கெழுந்தருளவிறும்பூதுகண்டேனென்பான். (௩௦)

வருகின்றபோதிருந்தவுருவம்வேறேவந்துசிவபூசைசெய்து மாலிய
ந்தான், பரிவினுடனருந்தியபோதுருவம்வேறேபார்த்திடிலோ ரயுதமட
ங்கதிகமானீ, ருருகுகின்றேனிதனுண்மையுரைப்பீரென்றானேதுசைவ
தேசிகன்றானுணர்த்துகின்றான், புரிகின்றதவவிரதகேட்டியெம்மான்பூ
சனைநின்மாலியத்தின்புனிதமீதால். (௩க)

ஒந்துமெனக்கிவ்வுருவம்வாய்த்ததிதல்லாமுமைபாகன்பூசனையின்
சேடமுண்ட, வாங்கதனுலிதன்பெருமைபுகலலாமோவழகாண்மைபெ
றுவரிந்திருமாவர், பாங்கினுற்றோர்பரிகலப்பெற்றாலுமேலாம்பதம்பெ
றுவரெனவேதம்பகர்ந்ததாமா, லிங்கதனுனிகழ்ந்ததைதயோன்றுகேட்
டியென்றுசைவதேசிகன்றானியம்புகின்றான். (௩உ)

வேடர்குலந்தனிலுதித்தாள்பதுமையென்பாள் வேட்டோன்றன்
னெடும்விறகுபல்லுவிற்பாள், காடதனின்மிருகவேட்டைகளுஞ் செய்
வாள்தன்னுடனேயுணர்ந்திராவும்போக்கும், பாடுமைபாள்வயமுள்ள

காலமெல்லாம்பாவமேபுரிந்துடலம்பழுத்துமூத்தாள், கூடுபசியால்வரு ந்திவிறகுசும்மைகொண்டுதமொற்றமுடன்குறுகினாளால். (௩௩)

வருகின்றநெறியதனிலொருவர்சைவர்மாதவத்தோர் தீர்த்தயாத்தி ரைபோய்வந்தா, ரொருகின்றநதிக்கரையிலரனைப்பூசையுஞற்றினார்பாத் திரத்திலமைத்ததூய, பரிகின்றவன்னபானியநைவேத்யம்பணித்தாமே நுகர்ந்தபரிகலங்காட்டுவித்தார், பொருகின்றகாலதனைப் பதுமைமேனி பொருந்துறவேசெலுத்தவவடானும்வீழ்ந்தாள். (௩௪)

வீழ்ந்தவுடனிந்தனக்கட்டுடனேவீழமெய்யிலுறுகட்டுவிடவுயிரு ம்விட்டாள், சூழ்ந்தயமபடர்வந்துபிடித்துக்கொண்டார்சொல்லரியயம ன்சபையிற்கொடுபோய்விட்டார், வாழ்ந்தருளுஞ்சித்திரகுத்திரரைநோ க்கிமன்னுமிவனிருவினையின்வகைகளெல்லா, மாழ்ந்துரைமினெனப்ப கர்ந்தானிவள்செய்பாவமடங்கியவெங்கணக்கேட்டி லடங்காவென்றார்.

நண்ணியதிண்ணியரானகணக்கர்பின்னுநவிலுவார்சிவநாமநாதனார் தம், புண்ணியமென்றொருகாலும்புகன்றுமில்லாள்புரிந்ததுதா னில்லை யேயிவடான்முன்னம், பண்ணியநல்வினையேதோசைவருண்டபரிகலங் காற்றெறியவந்துபட்டதேயாற், றண்ணியவிங்கிவளுடல்விட்டுடனேயா விசாம்பினாளிதுவுளதாற்றருமவென்றார். [௩௬]

என்றவுரைகேட்டலுமேயாசனம்விட்டெழுந்தெதிரே போடிவந் தான்மின்னனாண்மேற், றுன்றியபாசக்கயிற்றின்கட்டுவிட்டான்சூழ்வந் தான்பணிந்துபணிந்தெழுந்துநின்றா, னன்றிதருஞ்சைவர்பரிகலஞ்சேர் தூயநல்லவுடலென்றவண் மெய்ந்நைவந்துற்றா, னன்றவன்கைதடவளா வேகமலைதானேயாயினாளவள்பெற்றதார்பெற்றாரே. (௩௭)

ஆசனத்தின்மேல்வைத்தான்பூசைசெய்தானாபரணாதிகள் பூட்டிவி மானத்தேற்றிக், தேசுபெறுந்தேவர்பதந்தோறுமேகி சென்றிருந்துவாழ் தியெனவனுப்பினான், பாசில்சமனென்றுசைவன்விரதன்கேட்பவழ ங்கினானவையோகியூகவுக்கே, பேசினானெனப்பரம னுமைக்குச்சொ ன்னபெருங்கதைசூதன்முனிவர்க்குரைசெய்தானே. [௩௮]

இருபத்தோராவது சைவர்பரிகலப்பிரசாதமகிமைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௪௫.



இருபத்திரண்டாவது

## சிவனடியார்தெரிசனமகிமைச்சருக்கம்



வேறு.

வன்னிசென்னியிற்கையினிற்றரித்திடும்வரதன்
பொன்னின்மாலிமயந்தருபொன்னறம்வளர்க்குந்

கன்னிமேவியகடவுளன்பர்கள்பதம்பணிந்தே
சென்னிபெற்றிடுபலன்பெறச்சிந்தைசெய்திடுவாம். [௧]

தெய்வநாயகன்செப்புகின்றானுமைதனக்கே
சைவன்வார்த்தைகேட்டுவகைசேருறுவினைதவிர்தந்
துய்வருந்தவவிரதன்வேட்டுவர்குலத்துதித்த
மைவருங்குழல்பின்செய்ததென்னெனவகுப்பான். [௨]

போற்றுகூற்றுவன்புகன்றிடப்பொன்னுலகுற்று
ளாற்றுநல்வினைப்போகந்துய்த்தவ்விடையமர்ந்தா
ளேற்றமாம்பதுமாசனனுலகிலெய்திடவே
தோற்றியன்னவடனக்குபசாரங்கொடுத்தான். [௩]

அன்னவாகனனுடன்சனகாதியரவரு
மன்னுபூசனைபுரிந்திடமகிழ்ந்துவீற்றிருந்தாள்
பொன்னினாசனத்திருந்தவள்பொலிவினைநோக்கி
யென்னமாதவஞ்செய்தனளிவளெனக்கேட்பார். [௪]

சனகராதியர்வினவிடச்சாற்றுவான்வேத
னனகனுஞ்சிவனன்பர்தம்பெருமையாரறிவார்
பனகபூடணப்பரனறிந்துரைப்பனேவறியே
னெனகமுற்றிடும்வேதமுமறிந்திசைத்திலவே. [௫]

வான்புகழ்ந்திடும்விண்டுவும்வல்லனேபுகல
நான்புகன்றிடவெளியதன்றாயினுநவில்கேன்
* யான்பிரிந்திடுமன்பர்சந்நிதியெய்தப்பெற்றோர்
தான்பொருந்துறுஞ்சுத்தரேயாகுவர்தவத்தீர். [௬]

அனையதொண்டர்தம்முருவமேசிவனுருவாகும்
வினையொழிந்திடுமெய்யன்பர்கையினாற்றீண்டிற்
பினையுஞ்சென்மசாகரந்தனைப்பின்னிடப்பெறலா
மினையவாலவர்தன்மையையான்சொலவெளிதோ. [௭]

அண்ணலாரவர்பெருமையுமன்பர்மேன்மைகளும்
பண்ணமைந்தவேதங்களும்பகர்ந்திடவரிதே
நண்ணுகல்விசேர்நாவிரண்டாயிரம்படைத்த
திண்ணமிக்கதோர்சேடனுஞ்செப்பவல்லானோ. [௮]

திசையெலாம்புகழ்சிவனடியார்களாந்தேச
ரிசைகொண்மேனியைப்பரிசிக்கவேண்டுமோயாக்கை
விசையில்வந்திடுங்கால்பட்டமெய்யினார்வினைக
ளசனிவீழ்ந்திடமடிந்திடுமரவு × புள்ளாமால். [௯]

* யான்-ஆணவம், × புள்-அசுணம்

வேறு.

இன்னவற்றோர்கதையியம்புகின்றனந்
துன்னருமுனிவிர்காள்வேடர்தொல்குல
மன்னவனொருவனுண்டவன்செய்மாபவந்
தன்னையிவ்வளவெனச்சாற்றலாகுமோ. [௧0]

உலகினிற்பலபொருள்கவர்தலூறுசெய்
தலல்சிலபுரிந்திடலரியகற்பினோர்
நலனுகர்ந்திடனிந்தைநவிற்றறீயவெங்
கொலைபலபுரிந்திடுங்கொடுமைபூண்டுளான். (௧௧)

கோவதைமாதர்தங்கொலைகளந்தணர்
மாவதைமற்றுமன்னுயிரைவாட்டுதல்
காவதையழித்தல்செய்கார்தகன்செய
லாவதையென்னென்வறைகுவாமரோ. (௧௨)

ஆங்கவனொருபகல்டவிவேட்டம்போந்
தேங்கியமிருகங்கள்வதைசெய்தெங்கும்போய்
வாங்கியசிலையினன்வருந்தியுச்சியி
னோங்கியகூவிளநிழல்வந்துற்றனன். (௧௩)

தழைத்திடும்வில்வத்தினீழல்சார்ந்துளா
னழைத்தனன்வேடரையதனுக்கேயர
ணிழைத்துநீர்வார்த்திடுமிவ்விலோர்தடங்
குழித்திடுவீரெனக்கூறிப்போயினன். (௧௪)

அன்னவனேவலாலமைத்தகாவினிற்
றன்னிகரிலாவொருசைவநாயகர்
துன்னியவேனலின்வெப்பஞ்சூழ்தலான்
மன்னியவில்வத்தினீழல்வந்துற்றார். (௧௫)

அத்தினத்தரசனும்வேட்டமாடியே
மத்தியானத்தவண்வந்துசார்ந்தனன்
முத்திசேர்சைவமாமுனியைக்கண்டனன்
றத்தியபரியிழிந்தருகுசார்ந்தனன். (௧௬)

தவமுனிதாளினிற்றாழ்ந்திறைஞ்சின்
னவமெனுமஞ்ஞைபோயறிவுசார்ந்தன
னெவனிவனோவெனவிதயத்தெண்ணியக்
குவலயத்தரசன்றான்கூறன்மேயினன். (௧௭)

அண்ணனீரெங்குளீரடைந்ததேதிவண்
கண்ணினுலும்மையான்கண்டபோதிலே
திண்ணியஞானங்கள்சேர்ந்துளேனரோ
புண்ணியபாவங்கள்பகரொணாதவே. (௧அ)

உம்மைநான்கண்டுமெய்யுறுதிபெற்றிட
வெம்மையிற்செய்தவமென்றறிந்திலேன்
செம்மனீரென்றடிசென்னிசேர்த்தினன்
மும்முறைவணங்கினன்மூரிவேலினன். [கக]

அரியனுஞ்சிவனடிக்கன்பர்மெய்யினிற்
பரிசனத்தரிவந்துபட்டபான்மையா
லுரியதோர்தேகத்தினுற்றபாவங்கள்
கரிகள்போற்புறம்வந்துகருகிவீழ்ந்தவே. [உ0]

அன்னதுகண்டனனரசனையநுஞ்
சன்னிதானத்துறுந்தன்மையாலன்றோ
வென்னுடைப்பாவங்கள்யாவும்யானையாய்த்
துன்னிவீழ்ந்துளவெனவணங்கிச்சொல்லினன். [உக]

அரசனைப்பார்த்தரனன்பர்கூறுவார்
விரைசெறிகூவிளம்விளங்கத்தண்புனல்
கரைசெய்துபெய்தனைவளர்த்தகாட்சியா
லுரைசெயிலுன்னைப்போலொருவரில்லையால். (உஉ)

செயலரும்புண்ணியஞ்செய்ததன்மையாற்
பயிலுறுபாவங்கள்பாறப்பெற்றுளா
யுயர்வில்வத்தோர்துளிபாணியுய்க்கினு
மயலுறுபாதகங்கோடிமாயுமே. (உங)

தண்ணுறுவில்வத்தின்றளிர்கண்மூன்றுமே
யண்ணலார்நேத்திரமூன்றுமாகுமாற்
கண்ணுதலுருவமாய்வில்வங்காண்பதென்
றெண்ணிலாவேதங்களியம்புகின்றவே. (உச)

சாற்றரும்வில்வமங்குற்றதன்மையாற்
போற்றியவிவ்வனம்புனிதமானதான்
மாற்றருமிங்கிழல்வதிந்துளோரெலா
மாற்றல்சேரிலிங்கரூபங்களாவரே. (உஉ)

வில்வமூலத்தினிற்புனலைமேற்கொளி
னல்லதீர்ந்தாறுபத்தாறுகோடியா
மல்லல்சேர்தீர்த்தங்களாடுமாபலன்
புல்லுவர்புவியினிற்புனிதமாவரே. (உசா)

பரனையர்ச்சனைசெயல்செபங்கள்பண்ணுத
லுரமுறுவிரதநல்லோமஞ்செய்திட
லரனடியவர்க்கனமளித்தல்கூவிளத்
திரமுறுகீழலிற்செய்தன்மேன்மையே. (உஎ)

கூவிளத்தருவைநாயகனெனக்கொடே
தீபதூபங்கொடுபூசைசெய்திடிற்
ருவில்சந்ததிகளுந்தழைக்கவாழ்ந்துபின்
மேவருங்கதியுலகத்தின்மேவுவார். (உஅ)

தண்டலில்கூவிளந்தன்னைச்சூழ்வரல்
கண்டபோதிறைஞ்சிடல்கருதுமூலத்தி
லெண்டருநல்விளக்கேற்றிவைத்திடன்
மண்டலத்திபற்றினோன்வரதனுவனே. [உகூ]

ஒருவருக்கனமதன்மூலத்துய்த்துடில்
வருசதகோடிபேர்க்குதவன்மானுமாற்
பொருதிறலரசகேள்புகலுமப்பலன்
றருகதைதயொன்றுளசாற்றுவாமரோ. (௩௦)

விந்தவெற்புறுந்தலத்துறையும்வேதியன்
மைந்தரும்பேருமனையும்வாய்த்துளா
னுந்துநல்குரவினூர்கடோறும்போய்ச்
சந்ததமிரந்திரந்துழலுந்தன்மையான். (௩க)

அண்டரும்விந்தவாரணியந்தன்னிலே
யெண்டருமைந்தருந்தானுமெய்தினன்
கண்டனன்முனிவன்மாற்கண்டயன்றனைத்
தண்டெனவிழுந்தடிதொழுதுசாற்றுவான். [௩உ]

எந்தைகேள்வறுமையாலிடருற்றேனியான்
வந்ததுமூப்புமென்மனையுமூப்புற்று
டந்தருண்மைந்தருஞ்சாம்புகின்றன
ருய்ந்திடவுறுதியொன்றுரைசெய்வாயென்றான். [௩௩]

அடுத்திடுமைந்தருமனையுமாருயிர்
விடுத்டுவோமெனவிளம்புகின்றனர்
கிடைத்திடுமொருபொருள்கெடுவதேயலாற்
கொடுத்திடுவோருமிலென்னகொள்கையோ. (௩௪)

எவ்வகையெம்பிரானிடர்கடீர்ந்தியா
னுய்வகைபுகலெனவுருகும்வேதியன்
கவ்வையையறிந்துமாற்கண்டமாமுனி
செய்வதுகேளெனச்செப்புவானரோ. [௩௫]

கூவிளநீழலிற்கொன்றைவேணியா
னேவல்கூரன்பருக்கன்னமீந்திடாப்
பாவமதாற்கலிப்படர்வந்துற்றதா
லாவதெனினியதையாற்றல்வேண்டுமால். [௩௬]

இவ்வனந்தன்னிற்கூவிளமெங்குற்றதென்
றவ்விடைநாடிச்சென்றரன்றனன்பர்க்குச்
செவ்வியபூசனைசெய்யென்றேவினு
னவ்வகைபுரிந்திடவலன்சென்றனனரோ [௩எ]

இரந்திடுமுபகரணங்கொண்டேகியே
பரந்திடுங்கானகம்படர்ந்துநாடினன்
வரந்தருசிவனன்பர்மன்னுகூவிள்
நிரந்திடுநிழற்புரிநியதிகண்டுற்றான். (௩அ)

வணங்கினனுய்ந்தனனென்றுவாழ்த்தினு
னிணங்கிரீராடிப்புக்கிறையைப்பூசித்தான்
குணங்கொளச்சமைத்தனன்கொணர்ந்தவாலரி
வணங்குறுமமலையோரமலையானதே. (௩௯)

கண்டனராங்குறுகடவுளன்பர்தா
மண்டுபேரன்புடன்மகிழ்ந்துவாழ்த்தினர்
பண்டுறுகலியிலாப்பாக்கியம்பெற்றாய்
தொண்டரிவ்வனத்துளார்க்கணித்துச்சூழ்ந்தென்றார். (சഠ)

ஓடினனிவ்வனத்துற்றசைவரைத்
தேடினன்கொணர்ந்துசேவடிகள்பூசித்தா
னாடினன்பந்திவைத்தமுதுசெய்வித்தான்
கூடினனளகையிற்குபேரன்செல்வமே. (சக)

மைந்தருமனைவியும்வாழவாழ்ந்துளான்
முந்தியகூவிளமூலந்தன்னிலே
பைந்தையாரன்பர்பூசனையியற்றினோர்
சிந்தனையின்றியேயின்பஞ்சேர்குவார். (சஉ)

மன்னவகேளிவ்வில்வமாநிழ
றன்னிலேசிவலிங்கதாபனஞ்செய்தே
யென்னையாள்சோமநாதேசன்பூசனை
யுன்னியேபுரிதியென்றுவந்துகூறினன். (ச௩)

கேட்டனன்கிராதர்தம்வேந்தன்கேடிலா
நாட்டமூன்றுடையவன்பூசைநாடினன்
வீட்டிலகுறுஞ்சைவமேவினனன்றே
சேட்டராமுனிவர்க்குவேதன்செப்பினன். [சச]

இருபத்திரண்டாவது சிவனடியார்தரிசனமகிமைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬அ௬.



# உருத்திரவீணவரலாற்றுச்சருக்கம்.

வேறு.

பணவாளரர்வெட்டலவன்கலந்துபகையின்றிவாழுமுடியார்
ணிணர்சேருமாலைமுடிநங்கைபங்கனிமையோரிறைஞ்சுமிறைவன்
கணநாதர்சேவைபுரிபாதனுதிகயிலாசவாசனடியார்
மணமேவுபாதமலரன்புகொண்டுமலர்கொண்டுபூசைபுரிவாம். [க]

பதுமாசனத்தின்முனிவோரொடுற்றபலதேவருக்குமொழிவான்
முதுகூவிளத்தினிழல்வாசமுற்றமுறையோகிதாள்கள்பணியா
வதிர்வேடருக்குமுதன்மன்னனையவடியன்செய்பாவவினைபோய்க்
கதிசேரும்வண்ணமுதவென்றுசிந்தைகவலுற்றுநின்றுசொலவே. [உ]

சிவயோகிசிந்தைமகிழன்புகொண்டுசிலைவேடர்தங்கள்பதியே
நவமாகவுன்றன்வினைபோயொழிந்துநலமேவுகாலமுளதாற்
றவமேவுநந்தமுடனுற்றபூதிதருகானுன்மெய்யிலுறவே
பவகோடியானையுருவாயெரிந்துபடியுற்றுவீழ்ந்தபடியார். [௩]

திருநீறுகண்டிபுனைதந்துதீக்கைசிவசைவசீலநெறியுங்
குருநாதர்சொல்லுமுபதேசமுங்கொள்குறைவற்றநெஞ்சமுடனே
யுருமேவிலிங்கவுயர்பூசைபெற்றவுரவோர்கடாங்களலரோ
தருமேவுநாடர்முனிவோர்களோடுசமனும்வணங்குதகவோர் [௪]

எனவிண்டுசைவனினியஞ்செழுத்துமியல்பாகவெய்தியுமைகோன்
புனைலிங்கபூசைபுரிகென்றுரைப்பமகிழ்வோடுநின்றபொழுதில்
வனமெங்குமோடியிறையோனைநாடிவருகின்றசேனைமுதலோர்
சினைதுன்றுவில்வநிழலின்கண்யோகிதிருமுன்புகண்டுமகிழ்வார். [௫]

சிவபத்தர்பாதமுடிவைத்துநின்றுசிலைவேடராசனுருகு
நவமத்திகண்டுதளகர்த்தர்சொல்வர்நகரிற்பொருந்தியெமையா
ளவனிக்கிராசனிவனுற்றதென்கொலருளென்னலோடுமறைவா
னுவமிக்கொணாதசிவபூசைசெய்யவுபதேசர்சைவருளரால். (௬)

தழைவுற்றவில்வநிழன்மேவுசைவர்சரணத்தடைந்தென்வினைபோ
யொழிவுற்றதிங்ஙன்வளர்சொற்கமன்னுமுயர்தச்சனிங்ஙன்வருவித்
தெழிலுற்றகோவினகர்கட்டிலிங்கமினிதிற்பதிட்டைபுரிவித்
தழிவற்றபூசைபுரிவித்தியோகியருள்பெற்றுவாழ்வனினிநீர் (௭)

மூதூரிலேகியுபயோகம்யாவுமொழிவுற்றவாறுகொணர்வீர்
போதீர்களென்னவவர்போகவேடர்பதிபுத்திகண்டுபுகுதாத்
தீதூர்தலற்றநகரத்தினேடுசிகரத்துலாவுகதிர்வான்
மீதூர்செய்கோவிலமைவித்தனன்சொல்விணிலுற்றதச்சனவனே. (அ)

வேறு.

மாடமாளிகைகள்சூழ்ந்தமாநகரதனினுப்ப
ஞடகக்கோயில்கண்டேயரசனுமகம்பூரித்தான்
கூடியகலப்பைபாவுங்கொணர்ந்தனன்சேனைநாதன்
றேடியமுனிவன்முன்போய்த்திருவடிவணங்கிச்சொல்வான். (௯)

அத்தனேதீக்கைக்கேய்ந்தவருந்திரவியங்கள்யாவு
மித்தலேவந்தவன்றேநருமறைதயிலிங்கந்தானும்
பத்தியாற்கொடுவந்துற்றேன்பதிட்டைபூசையுமேபண்ண
மத்தியானமுதல்வேளைவாய்த்ததென்றேத்தினின்றான். (௧௦)

கண்டனர்சைவர்யோகர்கனகவாலயத்துட்சென்றே
யண்டர்நாயகனைத்தாபித்தரியபூசனைகளாற்றி
யெண்டருஞ்சந்நிதிக்கண்யாகமண்டபமுண்டாக்கிக்
குண்டமண்டலஞ்செய்தோமக்குறைகளுமுடித்தாரன்றே. (௧௧)

அரசற்குமவன்றன்மைந்தர்மனைவியரனையோருக்கு
முறைசெயுந்திக்கையாற்றியுபதேசமுறையுஞ்செய்தார்
வரைதருமவன்றனுட்டின்மாந்தர்கள்யாருஞ்சேனை
நரபதியவரும்வந்துநல்வினைப்பயம்பெற்றாரே. (௧௨)

அந்நகரத்திலுள்ளவனைவருஞ்சைவரானார்
மன்னவன்சைவயோகர்மலர்ப்பதம்வணங்கியேத்தித்
தன்னிகரிலாவிலிங்கார்ச்சனைவழிபாடுசார்ந்தான்
பன்னுகூவிளத்தின்கீழும்பரமனைத்தாபித்தானே. (௧௩)

ஆலயந்தனிலெம்மானுக்கபிடேகமாதைமேத்யங்
காலந்தப்பாதபூசைகன்னியராடல்பாடல்
சீலமார்திருவிழாநற்சிறப்புடன்றீர்த்தநல்கல்
சாலவேபுரிவித்தன்னதானமுஞ்செய்வித்தானல். (௧௪)

அரியகூவிளமூலத்திலரனடியவர்கள்கோடி
தெரிதருமவர்க்கேயாறுதீஞ்சுவைக்கறிகளோடும்
பொருவருமகேசபூசைபுரிந்தனன்யோகிசொல்லா
லுரியதன்பொருள்களன்பர்க்குதவினனுவகைகூர்ந்தே. (௧௫)

ஒருசிவயோகர்வந்தேயுற்றகானவனுடெங்கும்
பெருகியசைவநீதிப்பிரளயமாகவன்றே
திருமறைமுனிவீரன்னசிறப்பெலாஞ்சென்றுபார்க்க
வருகின்றென்றுரைத்துப்பின்னுமலரயன்வருகின்றானல். [௧௬]

அன்னமேதார்சைவகூட்டமதனைநாங்காணப்பெற்றாந்
பன்னருபாக்கியங்கள்பார்வைபெற்றதற்குண்டாமா
லுன்னுமந்நாட்டிலுள்ளவூர்வனபறப்பபாவும்
பொன்னகர்புகுவதல்லாற்புகனமன்புரத்துச்சாரா. [௧௭]

சாற்றருஞ்சைவநீதிசார்ந்தருள்வேடர்வேந்தன்
போற்றருங்கிளைகளோடும்புத்திராதிகளினோடு
மாற்றவோர்பிரமகற்பமவனியாண்டிருந்தபின்ன
ரேற்றமார்வைகுண்டத்திலெய்தியோர்கற்பம்வாழ்ந்தான். [௧௮]

பின்னர்ப்போய்ச்சிவலோகத்திற்பெருங்கிளையோடும்பெம்மான்
றன்னடிநீழல்சார்ந்தான்சைவயோகீசர்தாஞ்செய்
யுன்னரும்யோகத்துற்றாருறுந்தவமுனிவீரென்னாப்
பன்னரும்வேதஞ்சொன்னான்பின்னரும்பகர்கின்றானே. [௧௯]

தன்னிகரிலாதசைவத்தபோதனர்பெருமையெல்லா
மின்னமெத்தனையென்றென்றேயியம்புகேனன்னோருண்ட
வுன்னரும்பரிகலந்தானுயிர்விடுங்காலத்தூறு
துன்னலாலன்றோவேடர்தோகையும்பவங்கடந்தாள். [௨௦)

தென்றிசையரசன்செய்யுஞ்சிறப்புகள்பலவும்பெற்றாள்
பொன்றிகழுலகில்வந்துபுரந்தரன்பூசையுற்றா
ணன்றிநம்முலகில்வந்துநாஞ்செயுநலமுஞ்சார்ந்தாண்
மன்றல்சேர்வைகுண்டத்தில்வாழ்ந்துபின்கயிலைசேர்வாள் [௨௧]

அம்பிகையருடான்பெற்றேநித்தியகன்னியாவ
ளெம்பிரானிவட்குநாமமிலக்குமியென்றுகூறி
யும்பரிலிவள்கல்யாணத்துரியர்யாரென்றுதேர்வான்
கொம்பனாளிவளைமாயோற்களித்திடமனத்திற்கொள்வான். [௨௨]

இந்திரைகமலைபற்மையிலக்குமியெனப்பேர்மேவிச்
சுந்தரமுகுந்தனார்க்குச்சுருதியின்முறைகல்யாணத்
தந்தமிலாதவெம்மானளித்திடமனைவியாகித்
தங்கையார்கயிலைநீங்காதிருப்பளித்தையறானே (௨௩)

எனப்புகல்வாய்மைகேட்டவிருடிகளிறும்பூதெய்தி
மனத்தினிற்சிவத்தியானம்வல்லராய்மகிழ்ந்திருந்தா
ரனத்திறையிந்தவேடரவ்வையைப்போற்றியிந்தத்
தினத்தினிற்கண்வாய்பெற்றசிறப்பிற்குச்சிறப்பாய்த்தென்றான். ()

இத்திறமடியாருண்டபரிகலமேன்மையென்றே
பத்திசேர்சைவர்சொன்னபரிசெலாம்விரதன்கேட்டே
சித்தனாயகவிலிங்கதெரிசனம்பூசையாற்றி
முத்தியும்பெற்றானென்றுமொழிந்தனன்யோகிதானே. (௨௫)

பத்தியாற்கின்னரேசன்பகர்பூசைச்சிறப்புச்செய்வான்
கத்திகைச்சிறப்புத்தீபக்காட்சியின்சிறப்பினோடு
மத்திருவன்னார்பாடலாடலின்சிறப்பும்வாய்ப்பச்
சித்தனாயகன்றனக்கேதிருவிழாச்சிறப்புஞ்செய்தான். (௨௬)

அன்னவன்மனைவியாராமரிவையர்தாமும்வந்தே
மன்னுநம்முன்னர்வீணைவாசித்தார்வளிதான்றாக்க
வன்னவைமுழங்கல்கண்டேயதிசயித்தவைதாமாக
வுன்னினர்நம்மைநோக்கிப்புறுவரங்கேட்கலுற்றார். [உஎ]

நகங்களாற்றெறிப்பதின்றிநலம்பெறுமோசைநல்குஞ்
சகம்புகழ்வீணையாயாமுறுவரந்தருவாயென்றா
ருகந்தவர்தமக்கேயவ்வாறுதவினமுமையேயன்ன
விகந்திடாவணையர்வீணையாயினரீதுகேளாய். [உஅ]

என்றரனியம்பக்கேட்டாள்வீணையின்வரலாறெல்லா
நன்றுநன்றெனநயந்தாணங்கைமாமகிழ்ச்சிகூர்ந்தா
டென்றியவிசைகள்பாடிச்சோதியார்மகிழச்செய்தா
ளன்றுதான்வசந்தகாலமாகிவந்தடுத்ததன்றே. [உகூ]

நங்கைதன்கொங்கைதன்னைநாயகன்கைகளாலே
குங்குமவருவிபாயுங்குன்றிரண்டாகச்செய்தா
னங்கணன்புயங்கள்பன்னீரருவிக்குன்றாகச்செய்தாண்
மங்கைதன்கையாலின்னவசந்தன்கொண்டாடினாரே. (௩0)

காவிகண்கண்டுகண்ணீர்கலுழவாய்கண்டேயாம்ப
லாவிபோயடங்கத்தூவியன்னங்கண்டைகண்டோடப்
பூவியல்வண்டுங்கையில்வண்டுமேபுலம்பியார்ப்ப
வாவிநீர்தன்னிலம்மைவள்ளலோடாடினாளே. (௩க)

நீராடிச்சந்த்ரகாவிசிறந்தபட்டுடுத்துமுத்துத்
தாராடுமார்பின்முல்லைத்தாமங்குங்குமமுஞ்சாத்தி
வாராடுந்தனத்தாளோடுமணியாடுங்கண்டத்தெம்மா
னோராடுமணிமேல்வீட்டினினிதாடியிருந்தானன்றே. (௩உ)

இக்கதைபடித்தல்கேட்டலினிதெனவிரும்புவோர்க்குத்
துக்கமாமடவிதன்னைச்சுடுங்கொடுந்தீயுமாகிக்
கைக்கொளும்பெண்டிர்மக்கட்கடுஞ்சுறவெறிசஞ்சாரத்
தக்கசாகரங்கடக்கத்தருங்கப்பலுமாமால். (௩௩)

என்வரனடியார்தங்களிரும்பிரசாதமேன்மை
யுன்லருமவர்தமேன்மையுயர்சிவதருமம்யாவு
மனகனும்வியாதன்கூறுமம்முறைப்படியேசூத
முனிவரனேமிபோன்றமுதிர்வனத்தவர்பாற்சொன்னான். (௩௪)

இருபத்துமூன்றாவது உருத்திரவீணைவரலாற்றுச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-எஉ௩.



இருபத்துநான்காவது,

# சத்தியலோகச்சருக்கம்.



மனகந்தனிடமிடுமன்றெருமுதுடைகைகொண்டுசெகடறமோதும்
வனகக்கரகிகரளகந்தருதிருவடிவஞ்சிலைபெறநடைகூறு [மான்
மெனகந்தருவினையொழியும்படியருளிறைவன்பிறைபணிசடையெம்
கனகந்திகழ்சபைநடனந்தருமொருகருணாநிதிசேவடிதானே. (க)

மறையோதியமுனிபகர்வானுயர்தருமணிமாளிகையரியணைமீதே
யுறைபாதியையிருகாலமூர்த்தியினுருவாகியவொருமுதலோனை
யிறையாமமலனையிருகத்தழுவியவின்பந்தருமுமையன்போடு
நறைபாரமுதுபொழிந்தாலெனவுரைநாதன்றிருமுனநவில்கின்றாள்.[உ]

ஆறாகியகுணபரிபூரணனெனுமரனேயுபர்சத்தியலோகம், வேறா
முலகினின்மிகுமேன்மைகள்பெறவியனல்வளமுறவிதிசெய்தாய்,பேறா
முலகினிலெய்துந்நகைமையர்பெரிதாம்புண்ணிய மெவைசெய்தோர்,
மாறாவரசெவன்வாணுளவெவன்வாஞ்சித்தனவைபகரென்றாள். [ ]

கனிவாய்மொழியுமைபகரச்சுடர்தருகண்மூன்றுடையவனுரைசெய்
பணிமால்வரைதருமயிலேயுயரனபதிமேவியசத்தியலோக [வான்
மினிதாகியநமதாட்கிசைதரவெய்தும்படியதுசெய்தோமா
லுனியாவருமவனுறுதற்கரிதரிதுபர்மேருவின்மிசையுறுமன்றே. [ச]

தருவின்செறிவனநீடுங்குளிர்தருதடமெங்கணுமலரளிபாடும்
பெருகுங்கதிர்விடுசதகோடிகடொகைபெறுமாளிகைகொடிமிசையாடு
மருகெங்கணுமுளமந்தாரத்தருவதனின்புடையுளமணிலிங்க
முருகும்பரிவொடுதொழுவார்வினைகடிதோமெம்முயர்கதியதுகூடும். [ரு]

அந்நாட்டுறைபவர்பசிநோய்தாகமுமடையார்யாமோர் விளையாட்
டான், முந்நாண்மணிமண்டபமொன்றதனிடைமுனிவோரமரர்கண்மு
றைபாகப், பன்னாரணமுந்துதிசெய்திறைஞ்சிப் பரிவொடுபணிசெயவ
ரியணைமேன், மன்னுவவணினிதுற்றேமவ்விடைவந்தானந்திறனந்தீசன்

அடியற்றிடுமரமெனவேவீழ்ந்தநம்மடியிற்பணிதருமவனன்பா, மு
டியிற்செங்கைகுவித்தேயாடினன்முன்னின்றின்னன மொழிகின்றான்,
படியிற்றிகழ்தருகயிலைத்திருவரைபாங்குற்றிடுநீயிங்குற்றாய், நொடியிற்
பெருவளமுளதேற்பதிலிசைநூறாயிரத்தொருகூறுண்டோ. [எ]

அமிர்தம்பொழிகனிகனிகொந்தளமலரண்டத்தளவினுமதிவாசங்,
கமழுந்தருநிறையுளவோ குளிர்துளிர்கனகத்தளிரென வொளிர்வான்
மே, னிமிருங்கூவிளநிழலெங்கெங்கணுநிரைதந்திடநீணிரயத்திற், றிமி
ரங்கெடவெயில்விடுசூரியர்நிகர்சிவலிங்கங்களுமுளவோதான். [அ]

குயில்பூவைகளளிகிளிமாமணியொளிகுலவுற்றிடுநிறமவைபெற்றே
மயிலாடிடவெதிரெனையாளுடையவன்மகிழ்நாமக்கிசைபலபாடு

புயர்மாவோவாம்பலவுருவாலழகள்பலவுடையுங்கனிபலவூறுந்தேன்
செயவாரமுதப்பெருநதியொடுபொருசெயலாலலையெறிதிறநீடும். (௯)

வேறு.

அல்லனீக்கிடுங்கயிலையந்தாழ்வரையருகின்
வில்வநீழலின்மேவியவிலிங்கங்கட்கெல்லாஞ்
சொல்லுமம்மலர்த்தேனபிடேகமுஞ்சொரியு
மல்லற்பூந்தளிர்வாளருச்சனையுமேவாய்க்கும். [௧௦]

இனையவாகியகயிலையைநீங்கிடாதிருக்க
நினையுமாலென்றனெஞ்சகமையநின்னிதயத்
தனையமால்வரைதனைவிடுத்திவ்விடையமர
வனையுஞ்செஞ்சடைவள்ளலேமதித்தவாறென்னே. [௧௧]

அண்டர்நாதனின்முன்னரித்திறமெலாமடியேன்
றொண்டனுதலிற்சொற்றனன்சோதிநீயுறையக்
கொண்டதானங்கள்கோடிதான்குவலயத்துறினு
மெண்டருங்கயிலைக்கிணையாகுமோவெந்தாய். [௧௨]

எனப்புகன்றநந்திக்கெதிர்யாஞ்சிலவிசைத்தே
நினைத்தநின்னுரைமெய்ம்மையேநீபேருலகி
லுனக்குநேர்தருதொண்டருநண்பருளரென்
றனக்குநேருமுண்டெனிற்கயிலைக்குநேர்சாரும். (௧௩)

பாலிற்கோவின்பாலனங்களிலேபரமான
மேலுறுந்தருவவற்றினில்வில்வநல்லணியிற்
சாலுமக்கமாமணிமெய்யிற்றரிப்பதிற்பூதி-
மேலும்பெண்களிலிமயமான்மைந்தரிற்குகனே. (௧௪)

சாற்றுதீர்த்தத்திற்சிவகங்கைதலங்களிற்காசி
யேற்றலிங்கத்திலேவிசுவேசன்மண்டபத்திற்
போற்றுமுத்திமண்டபமுனிவரிற்கும்பன்பூசை
யாற்றலிற்சிவபூசைமந்திரத்திலஞ்செழுத்தே. [௧௫]

கலைகளிற்சிவவித்தைகாலாலயஞ்சூழ்கா
றலைகளிலெமைவணங்கியதழும்புறுதலையே
மலைகளிற்றிகழ்மேருவேபதிகநாமகிழு
நிலைகளிற்கயிலாயமாம்வேதமுநிகழ்த்தும். (௧௬)

ஈதுநந்திகேள்கயிலையுங்கவுரிதன்னிடமுந்
தீதிலன்பர்தஞ்சிந்தையுமூன்றிடஞ்சேர்வே
மோதுமூன்றினுமன்பர்தமுளமகிழ்ந்துறைவோங்
காதலாலருச்சனையாம்பெறுங்கருத்தால். [௧௭]

ஏறுமன்பர்தம்பூசைகேளிவ்வளவென்றே
கூறுநற்கடங்காவிடங்கொண்மனக்கோயி
றேறுதற்கருஞ்சிறப்பைபார்செப்புவர்நந்தீ
மாறிலாநமையிரத்நவாசனத்தினில்வைத்தே. [கஅ]

அரியபூசையின்றிரவிபந்தானபிடேகத்
துரியபாறயிர்தேனெய்க்குவிண்புன லூறும்
பெரியமாக்கடல்களுமொவ்வாபெருவரையெழுந்
தெரியுமங்கவர்புரிநைவேத்தியத்திரளாகா [க௯]

ஆரமட்டிடுஞ்சுண்ணங்கற்பூரமோடடைக்காய்
சாரவற்பொடுசோடசமாமுபசாரஞ்
சேருவித்தவரிப்படிசெய்தலானமக்கு
மோரிடத்தினுமவரிடத்தின்பம்போலுறுமோ. (உ0)

அளப்பிலானந்தம்பெருகமானதம்புரியன்ப
ருளப்பெருந்திருக்கோயிலேயுகந்தனநந்தீ
வளத்தினன்மிகும்பிரமன்செய்மானதபூசை
கிளத்தருந்தரமாகையாற்கேண்மைபெற்றுறைந்தேம். (கஉ)

சிறந்தமாநிதிமைந்தருமனைவியுஞ்சேர்ந்தே
நிறைந்தவல்வினைநீங்கிடநினைப்பரோமாந்தர்
மறந்துமோர்பகல்வரிசையன்பர்கண்மனக்கோயி
லுறைந்தயாமவணீங்கிடவல்லமோவுரைப்பாய். (உஉ)

பிரமனூர்செயும்பூசனைவிரும்பிமுன்பெயர்ந்தோ
நருமதாநதிக்கரையிலேநம்பியோர்நம்பி
புரியுமாபெரும்பூசனையுகந்தனம்புகுவோந்
தெரியுமத்தயாமத்தினிலென்றுசெப்புவனுல். (உந)

அத்தயாமத்தினவன்செயும்பூசையாரமைப்பார்
வைத்தசாளரமண்டபஞ்சப்பரகோள
மெத்தைமேல்விதானங்குளிர்மாணிக்கவிளக்கம்
பத்தியாற்புரிதருமுபசாரங்கள்பலவே. [உச]

நல்லபோனகம்பானகநலம்பெறுகனியே
மல்லல்சேர்மதுவர்க்கநைவேத்தியவகைதான்
சொல்லருங்களபங்குளிர்சந்தனஞ்சுகந்த
மெல்லைதீர்ந்தவங்குள்ளனவெங்கணுமில்லை. [உரு]

தேவியோடவன்சிந்தைமானதப்பெருங்கோயின்
மேவிவீற்றிருந்தேவிளையாடிடவேண்டு
நாவிலாரமுதாறநன்னுமங்கள்பாடு
மோவிலாவிசைக்குருகுமெம்முளமுமென்றுரைத்தான். [உ.சா]

நந்திநீகடிதேகியேநம்பெருங்கயிலை
முந்துகோபுரவாசலின்முறைபுரிந்துறைகென்
றெந்தைகூறினனென்றிருடிகட்கிபோசனைசேர்
கந்திதந்தருண்மைந்தனுர்கட்டுரைத்தனரே. (உஎ)

இருபத்துநான்காவது சத்தியலோகச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-எரு௦.



இருபத்தைந்தாவது

## மானதபூசைச்சருக்கம்



வேறு.

வெள்ளத்திரைக்கங்கைவேணிப்பிரான்பாதவிரையார்மலர்
பள்ளத்திலலர்கின்றமலர்கொண்டுவழிபாடுபயில்பத்தியா
லுள்ளத்தில்வைத்துந்தொழுந்தொண்டர்மனநாறுமுபயச்சரண்
வள்ளத்தைநிகர்கஞ்சமிகுவஞ்சநெஞ்சத்தின்மலர்கின்றவே. (க)

உரைபெறுமறைநாலுமுறையாகவேயோதுவானேதுவான்
விரைபெறுதிருநீறுபுனைநந்திதனையெந்தைவிடைநல்கியே
நரைபெறுதனைபெறியுமையோடுமேநண்ணினனர்மறைத்
திரையெறுகரைமேவுசிவயோகிபீடச்செழுங்கோயிலே. (உ)

அதிர்கின்றகணநாதர்புடைசூழமறைபாடவமரேசர்தா
முதிர்கின்றமகிழ்வோடுதனியோடமுனிவோர்கண்முனமாடவெ
ணதிகொண்டகுடைசாமரங்கோடிபுடைசூழவருகின்றபோ
தெதிர்கொண்டுதொழுமன்பனிறைவன்றனையாசனத்தேற்றினன். (௩)

குளிர்சந்தனக்கலவையாட்டினுனொற்றுடைகொடுசாத்தியே
மிளிர்குங்குமத்தோடுகத்தூரிகற்பூரமேற்சாத்தினு
னொளிர்கின்றபொன்னுடைகடகங்கண்மகுடாதிபுளபூண்களுந்
தளிர்கண்டியிடைகொண்டிடுங்கொத்துமுத்தாரமுஞ்சாத்தினன். (ச)

பருப்புப்பொருப்பைப்பிதிர்த்திட்டுநெய்பாறுபாலாறுடன்
சருப்பெற்றிடுஞ்சர்க்கரைப்பொற்கரைக்கேய்ந்ததயிர்வாரியும்
விருப்புற்றநறிவர்க்கமதுவர்க்கமலையன்னவெற்போடுமே
திருப்பெற்றபாவாடைபூவாடைதிகழ்மண்டபஞ்சேர்த்தினன். (ரு)

திருக்கண்சிறப்போடுகாளாஞ்சிதீபச்சிறப்பூட்டினன்
மருக்கொண்டதூபங்கள்கற்பூரவாலத்திவகைகாட்டினு
னுருக்கொண்டமின்னன்னபொன்னன்னநடையார்களுசிதங்களாத்
தருக்கின்றவிசைபாடலாடற்சிறப்புஞ்சமைத்தானரோ. (௬)

விழுகின்றகண்ணீரினெடு தண்டெனச்சென்றுவிழுந்தேபதந்
தொழுகின்றதொண்டன்றனைக்கண்டுமகிழ்கொண்டுசொல்வானெமான்
முழுதொன்றுமிதயங்கொணின்பூசைமிகநன்றுமொழிவாய்வரம்
பொழிதந்துளோமென்றபொழுதன்பினெடுநின்றுபுகழ்பேசுவான். (எ)

வேறு.

அம்பிகாபதியேபோற்றி அழிவிலாப்பொருளேபோற்றி
யெம்பிரானுமையுநீயுமீன்றருள்புரியப்பெற்றே
னம்பினேனுனதுபாதநான்றொழுதுய்ந்தேனந்தோ
சம்புவேகதியுமின்றுசார்ந்துளேன்போற்றிபோற்றி. [அ]

பாவிப்பாருளத்திற்பூசைபரிந்தருள்புரிவாய்போற்றி
யாவிக்கோராவியானவண்ணலேபோற்றிபோற்றி
சேவிப்பார்தமக்குமேலாஞ்செல்வந்தந்தருள்வாய்போற்றி
காவிக்கேசிகரதாயகண்டத்தாய்போற்றிபோற்றி. (கூ)

குழவிவெண்பிறையணிந்தகொன்றைவார்சடையாய்போற்றி
யழகமருமையாள்கொங்கையணிகளபங்கடோய்ந்த
மழவிளங்கதிர்போன்மேனிவானநாயகனேபோற்றி
விழைதருமடியார்க்கின்பவீடருண்முதல்வாபோற்றி. [கo]

உன்னரும்பாதபூசைக்குரியபாத்திரமுமானே
னென்னரும்பவங்கடீர்ந்தேயிகபரம்பெற்றேனெம்மான்
றன்னிகரில்லாநீவிர்தமியனேனிதயந்தன்னின்
மன்னியேபூசைகொண்டவரமன்றிவரம்வேறுண்டே. [கக)

ஆயினுமடியனேனுக்கருள்வரமுளதேளெந்தாய்
தாயெனுமெம்பிராட்டிதனையுநின்றனையுநாயே
னேயெனுமளவுநீங்காதிதயத்திலிருத்திப்பூசை
மேயினவாறுசெய்யவீற்றிருந்தருளவேண்டும். (கஉ)

சந்ததியாகவெற்குவந்தவர்தாமுநும்மை
வந்தனைசெய்துவாழும்வாழ்க்கைபெற்றுய்யவேண்டு
நந்திநாயகவென்றேத்திநருமதாநதிக்கரைக்கண்
முந்திப்போகிசிந்தைப்பூசனைமுடிவிற்சொன்னன். (கரு)

அடைக்கலமடியனேனுன்னம்புயத்தாளுக்கெந்தாய்
கடைக்கணீந்தருள்வாயென்றானென்னவேகருணைநாதன்
மடக்கொடியுமைக்குச்சொன்னனென்றுமாமறைகடேர்ந்த
திடத்தவமுனிவன்சூதன்முனிவர்க்குச்செப்பினனே. (கச)

**இருபத்தைந்தாவதுமானதபூசைச்சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-எ௬௬.

# கத்தரிப்பூவருச்சனைச்சருக்கம்.

வேறு.

அவனியெங்கணுமரசுசெய்தடன்மதகரிமேற்
பவனிவந்திடுபடையுடையரசுமோர்பகலே
யிவனிறந்தனனெனுமிந்த்ரசாலமேயமைக்குஞ்
சிவனவன்புரிசெயலினைத்தெரிபவர்யாரே. (க)

வேதமோதியவியாதனார்விளம்பினர்ஞான
போதமேவியபூசனைமானதயோகி
யோதும்வாய்மைகேட்டுளமகிழ்ந்துமையிடம்பிரியா
நாதனாருள்புரிந்திவைநவின்றனரன்றே. (உ)

மனதினாலெமைவழிபடும்பூசனையுகந்தே
முனதுவாய்த்துதியேத்தினர்பரகதியுறுவார்
நினைவின்வண்ணமேதந்தனம்வரமெனநிகழ்த்தி
யனகனம்பிகையொடுமறைந்தருளினனன்றே. (ஙு)

என்புகன்றவியாசன்சொற்கேட்டிருடிகடா
மனப்படுங்களிப்புற்றனர்மாறொழும்பெம்மான்
பினைப்புரிந்ததென்பேசுதியென்றலும்பேசு
மனத்தொடும்வனத்தாடலையுகந்தனையன். [ச]

கயிலையங்கிரிச்சாரலின்கடைபொழிலிடையே
மயலினந்தருமியலொடுமண்டபமதனிற்
பயிலுமாசனத்திருந்தனன்பரிந்தனன்பார்த்தான்
செயலரும்வனச்சிறப்பெலாஞ்செப்பிடுகின்றான். [ரு]

வேறு.

கூவியமென்குயிலேகுளிர்கூவிளநிழல்பாராய்
மேவுமிலிங்கமெலாமிளிர்கின்றனவிவைபாரா
யாவலுடன்றளிராய்தருகின்றனரதுபாராய்
பாவனையின்பரிபூசைபுரிந்திடுபவர்பாராய். (சு)

மின்னிகழ்நுண்ணிடைமெல்லியலாய்விரிசடைபோலே
கொன்றைகொழுங்கனிகொண்டுகுழைந்திடுமவைபாராய்
மன்றல்செயங்கியின்மாதுபொழிந்திடுபொரிமான
நின்றலர்புன்னைவிரிந்தபொதும்பரினிலைபாராய். [illegible]

அல்லியலுங்குழலாய்நமதர்ச்சனையன்பாலே
வல்லியின்மென்றளிர்கொய்குநர்நன்மலர்வகைகொய்வார்
சொல்லுநறுங்கனிகன்னல்கொணர்ந்தனர்தொகைசெய்வா
ரெல்லையிலன்பர்களெங்குநிலைறந்துளரிவைபாராய். [அ]

அத்திரமொத்தகணம்பிகைசும்பணியதுகொண்டே
பத்திரபுட்பபலங்கட்ருந்தருநிரைபாரா
யித்திரமென்றிசைசொற்றிடுகின்றனவிவைகண்டா
ளுத்தமசன்றெனமெத்தமகிழ்ந்தனளுரைசெய்வாள். [கூ]

ஐயபராபரசங்கரவிங்கதிசயமாகுஞ்
செய்பவனஞ்செறியுந்தருவுங்கொடிசெடியாவு
முய்யவருந்தவரண்டர்களென்றுளமுணர்கின்றேன்
றுய்யவிதன்றியுமையமிலாவகைசொல்கென்றாள். [க0]

மாதுமைகேளிமயாசலசாரலின்வாழ்வோரா
மாதியின்மாதவமேபுரிவேதியராஞோர்க
ளோதிமனுளளவும்புலன்வென்றுறுதவமுற்றோர்
தீதகல்சிந்தையர்சீலமறிந்தெதிர்சென்றேமால். (கக)

அங்கவர்கண்டுகளித்தனர்வந்துநமடிவீழ்ந்தார்
பொங்கியவன்பொடுதோத்திரகின்றெதிர்புகலுற்றார்
தங்கியவத்துதிசாற்றினர்மேற்கதிசார்வாரான்
மங்களையிங்கதுகேளெனவோதினன்மாதேவன். [கஉ]

வேறு.

அண்டர்தொழும்பெருமானைச்சந்திரசேகரனையுமையாகத்தானை
மண்டுபெருகொளியானைமகேசனைமாமேருவில்லாவனைத்தோன்றன்னை
தொண்டர்தமக்கானந்தசுகங்கொடுக்குந்தொலையாதசெல்வனீல [த்
கண்டனைக்காலனையடர்த்தகாலனைக்காமனைக்காய்ந்தகண்ணினானை. ()

உடுமாலைதரித்தானைப்பெருகொளிச்சந்திரகிரணத்தொளிர்தோளானை
தடுமாறிலாயோகர்மனத்தடாகத்தெகினந்தானானானை [த்
நெடுமாயன்முதலமரர்புகழ்வேதம்பணிந்திறைஞ்சுநிமலன்றன்னைத்
தொடுவேலைப்புவியாக்கிப்புரந்தொடுக்கிவிளையாடுஞ்சோதியானை.(கச)

அம்பிகைதன்வதனவம்போருகமலர்த்துஞ்சூரியனையவடன்கொங்கை
பைம்பொனிகர்களபமணிபுளகமார்பனைவிரூபாக்கன்றன்னை
வெம்புமந்தகாசுரசங்காரனைச்சூலம்பிடித்தவீரன்றன்னை
நம்புமெமக்கொருநான்குபொருளருளும்பூதியணிநாதன்றன்னை. [கரு]

வெற்றிவிடைத்துவசனைமானேந்தியகையுடையானை விண்ணின்மீன்கண், முற்றுதிரவிரித்தாடுஞ்சடையானைத்தொழுதுய்வோமுனிவீரென்றே, நற்றுதிசெய்தொருவர்களுங்கேளாதவரங்கேட்டார் நங்காயன்னோர், சொற்றவரங்கேளென்றேயெம்பிரானுடையவட்குச்சொல்வானன்றே. [கசு]

ஆகாரசித்திரைசோம்பாதிசேருடலைவிட்டேயகன்றுசற்றும்
போகாதகுணங்களினுலவமாகவீண்பொழுதுபோக்கினேமால்

வாகானவரங்கொடுக்குஞ்சாந்தருணவள்ளலேவணங்குவோர்கள்
சோகாதிகங்கெடுக்குந்தோன்றலேயென்றுபின்னுஞ்சொல்கின்றாரால்.

இலங்குமுன்றன்கபிலைவரைச்சாரலிடந்தொறுமேயவிலிங்கங்கட்கே
தலங்குலவுகுளிர்நிழலாய்த்தழைந்துகுழைந்தேபூசைதனக்குவேண்டு
நலம்பெறுபத்திரபுட்பங்கனிகளொழியாமைநல்கிநாளு
நிலங்குலவுதருநிரையாய்நிற்கவரந்தருதியெனநிகழ்த்தினாரால். [௧௮]

அப்படியேயவர்க்களித்தோமிவ்வரையின்றாழ்வரையினவர்களெல்லா
மொப்பருநற்றருவாகியுயர்லிங்கபூசையுபகரணமெல்லாந்
தப்பிலாதுதவுகின்றார்சிவபூசையில்லாதான்றரணிமீதிற்
கொப்படிபாயும்விழிபாய்சஞ்சாரபிரேதமெனக்கூறலாமே. (௧௯)

சாற்றரும்பூசைக்குதவுந்தருநிரைகண்முடிவின்முத்திசார்தலின்ன
மேற்றமாந்தருமமிவையெனவுமையாட்கரனுரைத்தானெனவேவேதந்
தேற்றமுறப்புகன்றமுனியுரைகேட்டதவமுனிவோர்செப்புகின்றார்.
ராற்றல்பெறுஞ்சிவன்மேற்றப்பெற்றுமரவுருக்கேட்டாரறிவென்னென்

வேதவியாசன்புகல்வான்பூமியினிலெடுத்தசென்மம்வீண்போகாம
னாதனார்சிவபூசைதனிற்காலங்கழித்தவரேநன்மையாளர்
பூதலத்திலறுகேனுங்கொடுதொழுதோர்தமைத்தேவர்பூசிப்பாரா
லோதரியவிதனிலொருகதையுளதுகேட்டிரெனவுரைக்கின்றானே. []

வல்லமைசேர்தருமுனிவீர்மல்லிகார்ச்சுனவரையின்பாங்கர்மன்னு
மெல்லையினின்மேவுபுல்லனல்லோருக்கிடரிழைக்குமீனன்கானத்
தல்லலுழந்தேமிருகவேட்டைபுரிவேடர்குலத்தவனால்வேதஞ் [வான்.
சொல்லுமறையோர்வேடங்கொண்டவர்க்கும்வஞ்சகஞ்செய்துட்டனா

வெந்திறல்போய்மூப்பெய்திவேட்டைபுரிதிடமில்லான்விலங்கும்புள்ளு,மந்தவனத்தினிலிறந்துகிடந்தவற்றைக்கொடுவருவானவற்றையட்டே, தந்தவிறைச்சிகளுகர்வான்றனதுதரந்தங்கிசற்றுந்தணிந்துமில்லான், மைந்தர்மனைவியுநுகர்ந்தேயாற்றாராய்ப்பசிப்பிணியில் வருந்துவாரால். (௨௫)

மற்றவனங்கொருதினத்திலேயிறந்துகிடக்குமுன்வனத்திற்காணு (ன்
னுற்றதொருவழுதுணைத்தோட்டப்புகுந்தான்பிஞ்சுபூவுடன்கவர்ந்தா
பெற்றதனையாய்த்தனலிற்பெய்தருந்தினான்பெற்றபிள்ளையானு
னிற்பலிற்கிடந்தவதன்மலரொன்றையெடுத்தயலினெறிந்தானன்றே.

அங்கதுமற்றவணிருந்தசிவலிங்கநாதன்முடிக்கணிந்தாலொத்தே
தங்கியதம்மலரெறிந்தோன்பசிநோய்மீக்கொள்ளச்சாம்பினானன்
மங்குமவன்றனைப்பாசத்தார்த்தீர்த்துக்கொண்டுசென்றார்மறலிதூதர்
துங்கமன்றானவனைத்தூரத்தேகண்டலந்துளங்கிச்சொல்வான்.

வேறு.

சிந்தைமிகவேநடுங்கிச்சித்திரகுத்திரர்தமையே
தந்திடுமினென்னவவர்சார்ந்தார்தமைநோக்கி
யெந்தவினையோவிவன்றனையான்கண்டவுடன்
வந்ததுடனடுக்கம்வண்புதுமையாமிதென்பான். (உ௬)

என்கண்ணுந்தோளுமிடமாடுகின்றனவான்
முன்கண்டிலேனென்னேமுறைக்கேடுசூழ்ந்துளதால்
வன்கண்ணதூதர்மதியாமைசெய்தனரோ
புன்கண்புகுந்ததிதுபோமாறுசொல்வீரே. (உ௭)

இங்குவந்தோனியானிவன்செய்தவமேதமையாள்
சங்கரன்றனன்பனிவன்றானெனவேயெண்ணுகின்றேன்
றுங்கனிவன்றனைக்கொணர்ந்ததூதர்தமையேபிடித்து
மங்கவடித்தடர்க்கவல்லேனானல்லேனே. [உ௮]

என்றுபுலம்பும்யமன்றனையேநோக்கியெதிர்
நின்றகரணிக்கர்நெடுமூச்செறிந்துரைப்பார்
தென்றிசைக்கோவேயோவாத்தீங்கடுத்ததீங்கென்று
மொன்றுமிறும்பூதிதுபோலொன்றையுநாங்கண்டிலமே. (உ௯)

கருணைக்கடலாங்கடவுளடியார்க்கருளும்
பெருமைக்களவொருவர்பேசுந்தகைத்தாமோ
வருமைச்சிவலிங்கபூசைபின்பேராரறிவார்
தருமத்ததிகந்தவந்தனிலுமாதவமே. (௩0)

எண்ணில்கொலைவேடனிவன்றன்பிதாவவன்றான்
பண்ணியபாவமெங்கள்பட்டோலைக்குட்படுமோ
தண்ணளியிலாவவன்றன்றாரமருஞ்சுற்றமெலாங்
கண்ணிச்செயும்பாவங்கட்டுரைக்கவல்லோமோ. (௩௧)

குட்டநோய்வாதபித்தசிலேட்டுமத்தின்கொள்கலமாய்
நட்டம்புரிந்துழலுநல்குரவினான்மெலிவான்
கட்டனவன்கொணர்ந்தகத்தரியின்பூவையிவன்
விட்டெறிந்தானேரிலிங்கமீதுசென்றுவீழ்ந்ததுவே (௩௨)

செய்யவிலிங்கத்திருமுடியின்வீழ்ந்தமல
ரையன்மகிழ்ந்தேயருச்சனையாக்கொண்டனனால்
வெய்யபிணிநலியவீழ்ந்திறந்தானன்னவனை
மையலாநந்தூதர்வளைந்துகொடுவந்தனரே. [௩௩]

ஆதிபிரானெம்மையருச்சனைசெய்தானையமன்
றூதர்கொடுபோனார்தொடர்ந்தவனைத்தண்டித்தே

சோதில்விமானத்தவனைக்கொண்டுவருவீரென்றான்
பூதகணநாதர்களிப்போதுபுகுதுவரால். (௩௪)

எந்தவுலகிற்புகுவோம்யாவரெமையாதரிப்பார்
நந்திபிரானேவுகணநாதர்க்கெதிருண்டோ
புந்தியற்றதூதர்தமைப்பொன்றவடித்தேயிவனை
வந்தனைசெய்தேத்தாய்மறலியெனவுரைத்தார். (௩௫)

ஐயாவொருகருமஞ்செய்வோர்களாய்ந்துணர்ந்து
செய்யார்கெடுவரென்றார்சித்திரகுத்திரர்வாய்மை
மெய்யாமெனவேவிசாரமிடும்போததனின்
மையார்கண்டன்கணத்தோர்வந்துதலைப்பட்டனரே. (௩௬)

வேறு.

சூழ்ந்தார்யமனைக்கைப்பிடித்தார்துணைத்தோளிறுகப்பிணைத்தீர்த்தார்
வீழ்ந்தானவனைத்தாள்களினுன்மிதித்தார்கசையால்வீசியுடல்
போழ்ந்தார்புடைநின்றார்களையும்புடைத்தார்பிடித்தார்கட்டினார்
தாழ்ந்தாரோடுந்தூதர்தமைத்தடிந்தார்தலைகடகர்த்தாரே. (௩௭)

இன்னவாற்றாற்சமலோகத்தீசன்கணநாதர்கள்புகுந்து
பன்னவரியதுயர்செய்யும்பரிசுகேட்டார்பதைபதைத்தார்
பொன்னின்கணவன்பிரமனுடன்புரந்தராதிவானோர்க
டுன்னினார்கள்சிவகணங்கடுணைத்தாடொழுதார்துதிக்கின்றார். (௩௮)

சம்புவரியகணநாதர்தண்டாமரைத்தாளேசரண
மிம்பருடனும்பர்கள்போற்றுமிணையிலாதோர்க்கேசரண
நம்புமடியார்க்கருள்சுரக்குநாதனடியார்க்கேசரணங்
கம்பமில்லான்கயிலையில்வாழ்கணதிபதிகட்கேசரணம். (௩௯)

என்றுபுகன்றார்தினைக்குற்றமிழைப்போமெங்கள்பிழைபொறுத்தே
நன்றுபுரப்பதுங்கள்கடனென்றார்நமன்றனபராத
மொன்றுபொறுப்பீரினியிவ்வாறுஞற்றானெனச்சென்றடிவீழ்ந்தார்
கன்றுசிந்தைக்கணநாதர்கண்டார்வெகுண்டார்கதித்திட்டார். (௪0)

ஆங்கிப்பரிசுபுரிந்திறைஞ்சுமரியையயனையிந்திரனைப் [ன்
பாங்குற்றிடும்விண்ணோர்களையும்பணைப்பொற்புயங்கள்புணைத்தனரெ
றோங்கற்கரசன்மகட்கெம்மானுரைத்தானென்றேயுயர்வேதந்
தாங்குற்றிடுசெந்நாப்புலவன்றவத்தோர்தமக்குச்சாற்றினனே. (௪௧)

இருபத்தாறாவது சத்தரிப்பூவருச்சனைச்சருக்கமுற்றிற்று,

ஆகத்திருவிருத்தம்-அ0௫.



இருபத்தேழாவது

# தேவர்முறையிடுசருக்கம்



வேறு.

தில்லைமுல்லைவள்ளிபுன்னைமருதுமாச்செண்பகம்பாதிரிவெண்ணாவல்
வில்லமரசாத்திகரவீரஞ்சாய்வேணுநெல்லிவீழிசேர்ந்த
வெல்லையினிலெல்லையில்லாவிறைவன்வீற்றிருக்கும்பெறுந்தலாகி
சொல்லுமோரறிவினவையறிவுபெற்றும்யாமுற்றிலோமே. (௧)

அருமறைநான்கும்பகர்ந்தோனொருமறைசொல்வானிபமனுதிபாக,
வருமமரர்தமைப்பிணித்துவருங்கணநாதர்கண்முழக்க வார்த்தைகேட்
டே, பெருமைபெறுங்கயிலாயத்திறைவனந்திதனைப்பார்த்துப்பெரிதோ
ரார்த்த, நருமதனைவிமானத்தின்மிசைபெறப்போந்துணரத்தருதியென்
பான். [௨]

நந்திகேணந்தருமஞ்செய்தவனேயெயமனடுங்கச்செய்தா
னந்தயமன்றனைக்கொண்டுவந்திடநந்தூதர்தமையனுப்பினுமான்
முந்துமவர்போய்நமனைப்பிடித்தடித்துக்கொண்டுவரமுயலும்போதில்
வந்தமரகணங்கணங்கணங்களுடனெதிர்மாற்றம்வழங்கினரால். (௩)

வாரம்பிகந்தமாயனைபனிந்திரனையும்பிடித்துவரிந்தேதாம்பாற்
பிரம்புகொடுசாடியவரேங்கவேதண்டங்கள்பிறவுஞ்செய்வாய்
தாம்பெறுமன்னவரையிங்ஙன்கொடுவரவேண்டாகடிதிற்சார்வாயென்
கரம்பெறுமஞ்சலிபுடனெந்திகடவுளைநோக்கிக்கழறுகின்றான். [௪]

எம்பிரானுனதேவல்புரிபடியென்றனக்கெதிர்யாரிமையோர்க்கெல்
லார், தம்பிரானவர்க்கின்றமுறைமையிற்றண்டனைபுரிவேன் சார்வே
னென்றே, செம்பொன்மானத்திவர்ந்துநமனுலகிற்கணங்களெதிர்சென்
றானந்தி, நம்பியைக்கண்டிடுகணங்களணங்குறுதேவரைமிகவுநகைக்கச்
செய்தார். (௫)

தண்டுகொண்டுசாடினர்களையமரங்கொடுதகர்த்தார்தாழ்ந்திலாது
மிண்டுபுரிதேவர்களைச்சூலமுனையிற்சேர்த்தார்மேற்கொண்டாராற்
கண்டுவிழுந்தரம்பையர்கள்கலுழ்கின்றார்பிரளயகாலந்தானென்றார்
மண்டுகின்றார்யமன்பாவிகெடுத்தானென்றரவனைவைகின்றரால். (௬)

அந்தரத்தோர்பூதலத்தோர்பாதலத்தோர்கூடினரந்தோவந்தோ
வந்தடுத்தவநந்துயரந்தேவர்களுக்கோவென்றார்மறுகுகின்றார்
நந்திவந்தானினியுய்ந்தாரெனப்புகன்றார்சிலர்கயிலைநாதனன்பர்க்
கிந்தயமன்சிந்தைமருண்டென்னவபராதமிழைத்திட்டானென்பார். ()

அப்பொழுதுநந்திகணநாதரெதிர்வந்தித்தானதனைக்கண்டா
ரொப்பரிபான்சரணமேசரணமெனவிழுந்திறைஞ்சியோதுகின்றார்
மைப்படியுங்கண்டத்தான்றொண்டர்தமக்கிடரிழைத்தமறலிதன்னைக்
கைப்பிடித்தேபடர்த்தனமிங்கிவர்தேவர்வந்தடுத்தார்கலக்கினோமால்.

தடிகொமொமுடிதகரத்தாக்கினேமேக்கமுற்றுத்தளர்ந்தாரன்றே, டியடுத்திலாத்தேவர்தமைப்புரிந்தநன்டங்கள்பகரொணுதா, ஞெடி முனிப்புரிவதனையெனப்புகன்ருர்கணநாதர்நூக்கவீழ்ந்து, மடிதலுற் ருரெனக்கிடக்தோர்நந்தியைக்கண்டெழுந்தோடிவந்துற்ருரால. [௯]

துன்னருந்துன்பக்கடற்கோரம்பிபெற்ருரெனத்துன்பந்துடைத்தார் மேனி, தன்னில்வரிந்திடும்பாசம்பொடியாகும்படியுடலந்தடித்தாரன் றே, நன்னயந்தந்தருணந்திநந்திகாத்தருளெள்ருர்நாயினேஙின், பொன் னடியேசரண்புகுந்தேம்புரந்தருள்வாயெனப்பணிந்துபுகல்கின்ருரால்.

ஐயவெமக்கருட்பார்வைதந்தருள்வாய்சிவனுணையயர்த்தோமல் லோம், வெய்யதுன்பமெமக்குறுமோவெண்ணீறுங்கண்டிகையும்விரும் பிலோமோ, துய்யசிவலிங்கவருச்சனைசெய்யாதிருந்தனமோ துதித்தி லோமோ, செய்யதிருக்கோயிருழாதிருந்தனமோதீர்த்தஞ்சென்ருடி லோமோ. [கக]

சிவனுமமஞ்செழுத்துமுருவேற்ருதிருந்திலம்யாந்தேவனன்பர்க் கவமானம்புரிந்துமிலோம்பழிமொழிகள்கேட்டுமிலோமறைந்துமில்லோ நவமாகின்மாலியத்தீர்த்தம்புசியாதிருந்துமிலோநாளுநாளும் பவமாற்றுந்திருவிழாப்பரிந்துதொழாதிருந்திலோம்பாவிப்போமே. [கஉ]

திருவீதியலங்கரியாதிருந்துமிலந்திருமாலைதிருவிளக்கு மருமேவுதூபதீபம்பூசையுபகரணவகைகளெல்லா மொருவாமலாலயங்கட்குதவாமலிருந்துமிலோமுறுகணீது வருமாறென்னந்திநாயகவென்ருர்க்கெதிர்மாற்றம்வகுப்பானன்றே. [ ]

எம்பிரான்திருமுன்னர்ச்சென்றுமதுகுறை புகல்வீரென்ருனப் போ,தும்பர்யாவருநந்திதனைத்தொழுதுசிவன்றனையாமுணரோமுன்ரு, ணம்பினேமெமைப்புரப்பாயென்றிரந்துபுகன்றிடலுநகைசெய்தார்க்கு ச், செம்பொன்மானத்திழிந்துவணங்கியதேவரைப்பார்த்துச்செப்புகின் ருன். [கஈ]

புந்தியிலாவிந்தமன்றூதர்சிவபூசைபுரிபுண்யவானை வந்துகொடும்பாசத்தாற்பிணித்தீர்த்துக்கொடுவந்தார்மதித்திலாரா வெந்தையுணர்ந்தேகணங்கடமையேவவந்தமைகண்டிருந்துநீவிர் சிந்தைதனிலுணராமற்சிவகணங்களுடன்வார்த்தைசெப்பலாமோ. [ ]

எய்தவனையுணராமலம்பினைநோந்தவாபோலவின்றுநீவிர், செய்த மதிபாலந்தோவித்துபரம்பெற்றுளீர்தேவரேநீர்,மைதிகழுங்கண்டர்தம க்கிடரிழைத்தோரியாவருந்தார்மறலிக்காவந், துய்தலருங்கவலைபெற் றீரென்றனன்னவைகேட்டோருரைசெய்வாரால். [கரு]

ஈங்கிவன்ருன்சிவலிங்கபூசைபுரிந்திடும்பெரியோனென்றுசற்று,மி யாங்களறிந்திலங்கணங்கள்யமன்றனைக்கைப்பிடித்தடர்த்தேயேகின்ரு ரென். ருந்துவர்தோர்சொலவினவிச்சுடுதியில்வந்தடுத்திவ்வாறடை.

துளோமாற், றீங்குறுவார்தோரா தமதியாளரெனும் பொருளைச்சிறப்பித்தோமே. [கள]

தவஞ்செய்தோர் தருமதானம்புரிந்தோர்சிவலோகஞ்சார்வார்திண்ண
மிவன்செய்தபுண்ணியந் தானின்னதெனவறிந்திலோமெம்பிரானே
யவஞ்செயாதருந் தவங்கள்புரிந்தோர்கடேவர்களாயடுத்துளோராற்
சிவம்போலவருஞ்செல்வாவிவர்புரிநல்வினைகேட்டிசெப்புவோமால். []

சாற்றருந்துலாதானஞ்சோடசமகாதானந்தனத்தின்றான
மாற்றருமக்கினிட்டோமமுதலசுவமேதவரையறியயாக
மேற்றமாமனதானம்வத்திரதானங்களிரத்தினதானங்கள்
போற்றலருங்கோதானம்பூதானமொருகோடிபுரிந்துளோர்கள். [கக]

மேதினியைவலம்வந்தோரைந்தழலினிடைநின்றோர் விரதம்பூண்டோர், பாதையினிற்குளிர்சாலைநளிர்புனற்பந்தர்களமைத்தோர் பரிவினோடுந், தாதையன்னைதமைத்தொழுதோர்சர்வபூடணங்களொடுந்தனங்களோடுங், காதல்பெருகோடிகன்னிகாதானம்புரிந்துளோர்கருணைகூர்வோர். [உ0]

பொருவருமெண்ணுன்கறங்கள்புரிந்துளோரிவைமுதலாம் பொருவில்கோடி, தருமவகைபுரிந்தோர்கடாமன்றேதேவர்களாய்ச்சமைந்துளாரா, லுருவுயிர்க்கெலாம்பரமனமைத்தபடிநாடோறுமொழிவிலாமன், மருவுமவரிருவினையைமறலிபுணர்ந்தனுபவங்கள்வகுக்கின்றனால். [உக]

எந்தைபாரளித்ததன்றேவிக்கருமமிவன்பூதிசாதனங்கள்
சந்ததமுமணிந்துசிவபூசைசெய்வோனியாங்களுமத்தன்மையோமா
னந்திநாயகவென்றேவடிபணிந்தஞ்சலிசெய்துநவிற்றுகின்றா
ரந்தமிலாச்செல்வனருமறைமுனிவர்க்கறிவரியவாதிமூர்த்தி. [உஉ]

அம்பிகைதன்முகத்தெழிலைநயனத்தைத்தனக்குவட்டை யகட்டிலுற்ற, பைம்பொன்வரைமூன்றதனைப்பார்த்துமகிழ்ந்தாடல்புரி பரிவுபூண்டோன், கொம்பனையாள்குழறிருத்தியணிதிருத்தியலங்கரிக்குங்குழகன்பாத, நம்பினம்பாமெனத்தேவர்நடுக்கமுடன்பின்பார்த்துநவின்றாரன்றே. [உங]

இருபத்தேழாவது தேவர்முறையிடுசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அஉஅ.



இருபத்தெட்டாவது,

# நந்திகேசுரர்தேவர்க்கருள்புரிசருக்கம்.



வேறு.

விலங்கதானகரிகுரங்குமிக்கநாரைபறவையுஞ்
சிலம்பியூரெறும்புபத்திசெய்துமுத்திபெற்றவா

நலங்கொண்மானுடக்குலத்திலுற்பவித்தநாங்கதிப்
பலந்தருஞ்சிவன்சரண்பணிந்துபெற்றிலோமரோ. (௧)

அண்டர்சொற்றவாறனைத்துநந்திகேட்டகமகிழ்ந்
திண்டைகொண்டசெஞ்சடைப்பிரானைநெஞ்சிருத்தியே
விண்டுவோடுபிரமன்வானவேந்தனீவிர்கேண்மினென்
றெண்டருஞ்சிவன்றன்மேன்மையிற்றெனக்கிளத்துவான். (௨)

இமயவர்க்குளதிகரேகரீசர்நாசரகிதனு
ருமையிடத்தர்காலகாலருலகளித்தவொருவனார்
கமைபடைத்தசோதியாதிகருணைபெற்றநாமெலாந்
தமமறத்தொழும்புசெய்தல்சம்புபாதநளினமே. (௩)

அருத்தியுற்றுநாளுநாளுமண்ணல்பாதவிணைகுவிர்
விருத்தியுற்றதேவர்காள்விளம்புமாய்மைகேண்மினோ
மருந்திருந்துகொன்றைவேணிவள்ளல்பாதமுள்ளுறக்
கருத்திருந்துவோர்நினைத்தகாமியங்கணல்குமே. (௪)

இறைவர்பொற்பதாம்புயத்தைநயம்வைத்துளோரெலா
மறலியுற்றநகருறார்கள்கயிலைவாசமருவுவார்
கறைமிடற்றினிறையளித்தகருணைபெற்றபேர்க்கலா
னறைமலர்க்கொடவனடிக்கணண்ணுவண்ணமொன்னுமோ. ()

அரியமெய்த்தவங்கடானமியாகமாகமத்தொடே
தெரிவுறச்செய்தாலுமாவதென்னதேவர்தேர்மினோ
கரியகண்டர்மருவிலிங்கபூசையைக்கருத்துடன்
புரியிலட்டசித்திபிட்டபோகமுங்கொடுக்குமே. [௬]

வண்டரித்தவில்வமேனுமலர்களேனுமேமனங்
கொண்டரிக்குமரியலிங்கபூசையைக்குறித்துடன்
றொண்டினிற்செய்தாரும்விந்தைதோன்றுறச்செய்தாருமே
யண்டருக்குமரியதானசிவபதத்திலடைவரே. (௭)

கன்றிபெற்றயாககோடிவிரதகோடிநல்கிடுந்
தன்றனக்குநிகரதானதானதன்மைகோடியுந்
துன்றிநின்றவானுளோர்கடூயபூசைகோடியுங்
குன்றவில்லிபூசைகோடிகூற்றிலொன்றையொக்குமோ (௮)

ஒருகுடங்கையிற்சலங்கொண்டறுகுவில்வமொன்றினாற்
றிருகுறிக்கைதயிற்றிலிங்கபூசைசெய்தசிலர்தாம்
பெருகியுற்றபிறவிப்பரப்பெலாந்துரந்துபின்
னருகிருந்துசிவபதத்திலரசுசெய்யவல்லரே. (௯)

நாதலாமிலிங்கபூசைகடவுளாலயங்களுக்
கோதுகின்றகுறைமுடித்தல்பூசனைக்குகந்திடுங்

தீதிலாதபொருளளித்தல்சேவைசெய்தலிவையெலாம்
வேதமாகமங்கள்சொல்லுமேன்மையானதருமமே. (கo)

மற்றிவ்வாறறிந்துசெய்திலார்கண்மாயைகன்மமாங்
குற்றமேவுமலமதாமுந்நீரினிற்குளிப்பராற்
சொற்றநம்பர்பெருமையாவர்சொல்லவல்லர்திரிபுரஞ்
செற்றவில்லியாரனந்ததிருவுருத்தரிப்பரே. (கக)

ஆடுகின்றவமலர்கொண்டவரியவிம்பசோதியைக்
கூடுகின்றமதுகண்கள்கொண்டுகாணவல்லமோ
நீடுசெங்கைகாலுடன்கண்ணிறமனந்தமல்லவோ
பீடுகொண்டபரமர்மேன்மைபேசுதற்கடங்குமோ. (கஉ)

இரண்டுநான்குசட்டோடெட்டிரட்டியைந்தொடாயிர
முரண்டருங்கையபுதகோடிமூர்த்தமுற்றமூர்த்தியோர்
புரண்டவேணிசந்த்ரசூடர்பூவைபாகராகவே
திரண்டுதொண்டருக்கிசைந்ததிவ்யவிம்பகோடியே. [கங]

சீலமேவுதிருவுருச்சிறந்தமூர்த்திகட்கெலா
மூலமாஞ்சுயம்ப்ரகாசமுதல்வனானசிவனவன்
பாலலோசனத்தன்சூலபாணிகாலகாலனு
மாலகாலமுண்டகண்டனருமையாவரறிவரே. (கச)

இன்னமூர்த்திதம்மில்யானியற்றுபூசையிற்பிர
சன்னமூர்த்தியானவீசானராகுமுபயகை
மன்னர்பன்னிதன்னொடுமகிழ்ந்துவீற்றிருப்பரான்
முன்னிருந்துகாண்பரானைமுகனுமாறுமுகனுமே. [கரு]

தேவனோர்கணத்திலீலைசிந்தைசெய்யுமளவிலே
மூவர்தந்தொழிற்களின்முயற்சியாவுமுற்றிடு
மேவுநாதன்மகிமைசற்றுவேதமேயறிந்திடு
மாவியண்டகோடியண்ணலாணையுள்ளடங்குமே. [கசா]

காலொடங்கிவாரிநீடுகரைகடந்திலாவது
மேலடங்குபானுவிந்துவிண்ணடைந்துலாயது
மாலொடிந்திராதிதேவர்வானநாடளிப்பது
நீலகண்டனெந்தைதந்தநீதியாணையல்லவோ. (கள)

இன்னவீசனைப்பராவுமியல்பினோரிலிங்கமுன்
னுன்னிநின்றியற்றிலன்னதொன்றனந்தமாமனோர்
பொன்னிநாடளித்துமுத்திநாடுபோய்ப்புகுந்தவண்
மன்னுவார்களென்றுநந்திவானுளோர்க்கியம்பினன். (கஅ)

இருபத்தெட்டாவது நந்திகேசுரர்தேவர்க்கருள்புரிசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அசசா.



இருபத்தொன்பதாவது,

# பசாசுமோசனச்சருக்கம்.



வேறு.

கன்றெடுத்துவிளவெறிந்துகாலெடுத்தமழைக்குடைக்கைகாக்கக்,
குன்றெடுத்தமால்விடையின்கொடியெடுத்துவடிவெடுத்துக் கூறொன்று
தரு, மன்றெடுத்தசேவடியின்மலரெடுத்துச்சாத்தியன்பின்வழிபட்டோர்
க, ளின்றெடுத்தவுடற்பிறவியினிப்பெறாவண்ணமென்னமெய்துவாரே.

மாதவவியாதனிவ்வாறுரைத்தனன்பின்னும்புகல்வானந்திவார்த்தை,
யாதவர்கேட்டுரைத்திடுவாரரன்சரிதங்கேட்கவின்னு மாசைகொண்
டோஞ், சிதமதிவெளியன்புண்ணியஞ்சொல்வாயென்னநந்தி சிவனைச்
சிந்தித், தோதரியசிவதருமதவமணிமாலைகள்புனைந்தோனோதுகின்றான்

அண்டர்காள் கேண்மினரும்புண்ணியமாம்பலகனிக்குமரனூர்தன்ம
ங், கொண்டசெழுஞ்சுவையாகுமாங்கதுவேயிகபரமுங்கூட்டுங்கண்டீ,
ரெண்டருள்வேதங்களெலாஞ்சிவபூசைமகிமையெடுத்தியம்பலாலே, த
ண்டலின்மேன்மைகள்படைத்ததுபுரியிற்பவக்கடலைத்தாண்டலாமே.

அருமறைகளிரணியவாகுவையேயுள்ளென்றுரைக்கு மாசையில்
லாய், பெருமையனையுமையுடன்விடம்பிரியாச்சாந்தகுணப் பெருமா
ன்றன்னை, மருமலர்கொண்டடிவணங்கியுளத்தினில வைத்தார்சனனம
ரணநீங்குந். கருமருளுமவனருளன்றேற்றவத்தாற்பலனும்வந்துசார்ந்தி
டாதே. (௪)

ஆகைபாலருமறையாகமப்புகன்மந்திரத்தினாற்பிராணமாற்றி னி
யோகையார்பத்திசெயவேண்டுமெக்கத்திரவியத்தாலெழுங்காலென்
லேகமாம்பரன்பூசைபுரியவருச்சனைத்தானமியற்றிச்சுத்தி
வாகைசேர்தருஞ்சைவாசாரசிலத்தர்புரிவகைமைபூண்டே. (௫)

புனலாடிச்சுத்திபெறும்வத்திரங்கள்புனைந்துடலிற்பூதிபூசித்
தினமேவுமனுட்டானகருமங்கள்புரிந்துகண்டிசிரசுமாலை
கனமேவுகண்டசரமார்பிலணிகையின்மணிக்கட்டிற்காதி
லினமேவவணிந்துசெபவடமிருபத்தேழ்மணியாலெழுத்தஞ்சென்னி.

படித்தவருமறைப்படியேபூசைசெய்யப்படுமவாசனத்தின்மேவி
வடித்திமெஞ்சனத்திலெந்துதிரவியமுங்கலந்திதயமனுவைக்கொண்டே
பிடித்தருளுந்தேனுவின்முத்திரைகாட்டிச்செய்வினைகள்பிழைஞ்செய்து
தொடித்தருளுமருக்கியபூசனைபுரிந்துதானசுத்திநோக்கிச்செய்தே. (௭)

திரவியத்தின்சுத்தியுடன்பூதசுத்தியாவிசுத்திதிகழச்செய்தே
பாவமிதயப்பூசைமுடித்துவெளிப்பூசனைக்குப்பணிமேற்கொண்டே
யுரமுறுமந்திரசுத்திபிலிங்கசுத்திபுரிவதனுக்குளத்திலெண்ணி
பானையமுகாரம்பீடத்தானவேதிகையிலெழுந்தருளச்செய்தே. . . . (௮)

அருக்கியந் தூபந் தீபங்கொடுத்துபின் மாலிபசுத்தியாற்றிப்பின்னர்
மருக்கிளருமட்டபுட்பஞ்சாத்திபெண்ணெய்க்காப்புமாக்காப்புமஞ்ச
டருக்கிளர்நெல்லிக்காப்புச்சர்க்கரைதேன்பாறயிர்நெய்தனக்குவெந்நீர்
பெருக்கியபல்கனிச்சாறுகருப்பஞ்சாறிளநீரும்பிரித்தேயாட்டி. [௯]

இடையிடையிற்சுத்தசலமபிடேகம்பணிமலர்களினிதுசாத்தி
*மடையுடன்பஞ்சாமிருதம்பஞ்சகௌவியமுமாட்டிமகிழ்ந்துபின்னர்த்
தடையறவேகுச்சிப்புற்சாத்திச்சந்தனத்தின்றண்குழம்புசாத்தி
யுடையசததாரைசங்கமருக்கியமுமாட்டிநல்லொற்றுடைசாத்தி. [௧௦]

தேவனைமேற்பீடத்திலெழுந்தருளப்பணிப்பஞ்சாசனமுஞ்சேர்த்தித்
தாவிலாவாகனதாபனசன்னிதானசன்னிரோதனந்தான்
மேவவமைந்துன்னிரோட்டியறுகட்சதைநைவேத்யமாற்றி
யோவில்கருப்பூரங்குங்குமம்புழுகுசந்தனக்காப்புடனேசாத்தி. [௧௧]

ஆணிப்பொற்குவளையுடன்மாணிக்கமாலைகளுமடைவிற்சாத்தி [நிப்
வேணிக்குட்பிறையணிந்தார்க்கப்பொன்வில்வமாலைகளும்விளங்கச்சாத்
பூணூற்றசுகந்தபலபுட்பவகையின்னடைதொடைபொலிவிற்சூட்டிப்
பாணித்தலின்றியேபலவகைநைவேத்தியமும்பரிவினூட்டி. [௧௨]

பஞ்சவாசத்தினுடன்றம்பூலநைவேத்யம்பணியேதூப
மஞ்சடுக்குநாகமிடபம்புருடாமிருகமுடனலத்தித்தட்
டெஞ்சலிலாத்திபநீராஞ்சனத்தட்டியுமேந்தியிருங்கண்ணாடி
விஞ்சுகுடைகவரியுடனாலவட்டம்விசிறியென்விளம்புகின்ற. [௧௩]

× ஆறுபத்தாமுபசாரவகைகளுமேபுரிந்தருகட்சதையுஞ்சாத்தி
யேறுசகத்திரநாமமெட்டுடனேசதகமுமர்ச்சனைசெய்தேத்தி
வீறுடனேவீழ்ந்துபணிந்தெழுந்துகண்ணீர்மேனியெங்குமாடவாடிக்
கூறுபலதோத்திரங்கள்சோத்திரவாரமுதயெனக்குழைந்துபாடி. (௧௪)

ஆண்டருளும்பெருமானேயடியேன்செய்பிழைபொறுத்தேயாள்வா
வேண்டியருடரப்பெற்றுமந்திரபுட்பஞ்சாத்திவிதிதப்பாமற் [யென்று
பூண்டபரிவாரமுடன்சண்டேசன்பூசனையும்புரிந்துபின்னர்க்
காண்டகுபூசையிலன்னமன்பருடனினிதருந்திக்களித்தல்வேண்டும். ( )

செப்பரியகதியுதவுஞ்சிவகதையுஞ்செவியுறவேகேட்டல்வேண்டு
மிப்படிமுப்போதுமுடித்தத்தயாமப்பூசையினிதினாற்றி
யொப்பருமண்டபமான்மிற்சப்பரமஞ்சத்தானுமுமையுந்துஞ்சி [டே.
... ப்பொழுதுவிடிந்தருணர்வைகறையிலெழுந்தனராமனத்திற்கொண்
... ளெமெய்யுள்ளளவும்புரிந்தவனேசிவரூபமெய்தப்பெற்றோன்
... றைபோரசர்வசியர்சுராசுரர்நாகர்யோகர்சித்தர்
... ர்கந்தருவரியர்மறைபுகன்மந்திரபூசைக்கேண்மைபெற்றோர்
... வர்மாதர்களேனோராகமதந்திரபூசைப்பெருமைபெற்றோர். [௧௭]

---

* மடை-அன்னம். × ஆறுபத்து-பதினாறு.

எவரேனுஞ்சிவபூசைபற்றிலாரொன்றைப்பெடுத்தயின்றுரெனி ற், பலகோடியனேத்தினிலும்பசிப்பிணியாலிட்ருழந்துவருத்தைகூர்ந்தே, பவமானத்துடனிறந்தநரகினெடுங்காலம்விழ்ந் தழுந்துவாராற், றவமாகுஞ்சம்புபத்திரமுஞ்சாரவனர்ந்தைதவெட்டுந்தநிகைநாளோ. (கஅ)

சிறந்தசிவலிங்கபூசனைபுரியாதவன்போனிசெனிக்குமபெத
மறைந்திடும்போதெண்ணில்பலகோடிகளாங்கறங்கெனவேயலைவக்கடோ
பிறந்துபிறந்துலைந்தெவெரொள்ளளவுஞ்சுகமின்றிப்பெருந்தநாளு (ஐ
மறந்துநலமென்றும்புலைமலமருந்துஞ்சூகரமாய்வருவன்பின்னும். (கசு)

இன்னவற்றோர்களைநபுகல்கேனியைபோர்கள்கேண்மி னொருபன வன்மேனுண், முன்னர்செய்தபசுதன்மந்தன்னிலெண்ணில்கோடிபொருண்முறையிற்பெற்றான், பன்னுகலைபலவுணர்ந்தான்பவுத்திரர்புத்திரர் கிளைஞர்படைத்துவாழ்ந்தான், மன்னியவிந்நிலைமைபெற்றேன் சிவபூசைசெயும்பேறுவாய்த்திலானே. (உ0)

தேடியவப்பொருளையெல்லாஞ்சிவபத்தரல்லாதநினருக்கு
மாடியகூத்தியர்க்குமவர்க்கநுகூலம்புரிபவர்க்குமாக்கிப்போக்கிக்
கூடியவருடன்கலந்துவர்கனபூடணவத்ரங்கோடிநல்கி
விடிபேசுடலைபுகுங்காலம்வருமளவுமிவைமேற்கொண்டானே. [உக]

மன்னுமவன்மனையில்சிவலிங்கசித்ரமேனுமொன்றுவகுத்ததில்லை
யன்னதனலவ்வாறுசெறிமனைகள்புலைச்சேரிசுடுகாடாகும்
பன்னுசிவபூசையில்லார்மனைபுகுதிற்சலபானம்பண்ணிலன்றே
ரன்னமருந்திடிலவர்கள்புலையராய்நரகமெல்லாமடைவரன்றே. [உஉ]

அறியாமற்புகுந்துசலமருந்திடினுமூத்திரகுண்டத்திலாழ்வர்
குறியாமலனமருந்திற்குழம்பாபேகொதிக்குமலக்குழியில்வீழ்வர்
பிறியாமலவனுடனேசெறிந்திடிற்சண்டாளசன்மம்பிறந்துவிந்தே
பொறியாவுமில்லாதகிருமியாய்நரகினிடைப்புகுவரன்றே. (உங]

அரும்பாவிதனைச்சேர்ந்தநவையொர்பரிகாரத்தாலகற்றலாகுஞ்
சுரும்பாருங்கொன்றையினன்பாலலார்தமையடுத்ததுரகூராத
பெரும்பாவத்தவர்குலத்திற்பிறந்துதவம்புரிந்தாலும்பேறுண்டாமோ
விரும்பாதவினைப்பனவனிறந்தனனில்லாளுமுடன்விந்தாளன்றே.(உச)

அன்னவனுமனையவளுமகோரநரகங்களின்வீழ்ந்தநேகங்கால
மன்னுமிடருழந்தனராங்கவனுநவும்பொருளதனைவாங்கினோருந்
துன்னுகிளைஞருந்தோழர்தாமுமிறந்துடனரகத்துயரஞ்சேர்ந்தார்
பின்னுநாளிகளுருவோராயிரமுற்றார்வனத்திற்பேய்களானார். (உரு)

அவனுடனேயாயினரநேகரந்தவனத்துறுமப்பசாசமானார், கவ ளமுறுந்திபபசித்தாகசோகங்ளுற்றேநதறினர்க, ளிவர்களாற்றியகுரக்

கேட்டேங்கியவிலங்குபுள்ளினங்களெல்லாஞ், செவிகளில்வேல்குடைந்தெனத்திகைத்தடவிவிடுத்தோடிச்சென்றவன்றே. (உசு)

அவ்வனத்தினறும்புனல்களமுதமயக்கனிகளிருந்தாலுமன்ன
வெவ்வினைசேர்ந்திடுமலகைகண்ணினிற்காணுதவகைமேயவன்றே
செவ்வியசிவாலயத்திலொருநாளுந்திருவிளக்குச்சிறப்பித்தில்லாக்
கவ்வையுறுந்தீவினையாங்காரணத்தாலவர்பிறவிக்குருடராஞர். [உஎ]

கந்தமுறுகளபங்கள்சிவன்றிருமேனிக்கணியாக்கசடரெல்லாம்
புந்திதனிலருவருப்பாமுடைநாற்றவுடலமுடன்பொருந்துவாராற்
சிந்தைமகிழ்கலைசாத்தார்தரித்திரராயரைத்துணிக்குத்திகைத்துநிற்பா
ரெந்தைதனக்கிரதவர்க்கமூட்டாதாரனங்கிட்டாதிடைகுவாரால். ()

சங்கரனாலயஞ்சமையார்தாமிருக்கவிடமின்றித்தவித்துநிற்பார்
பொங்குபுனலொருகுடங்கையபிடேகம்புரிந்துளோர்புனலிலாத
மங்கியகானகம்புகினுமமுதநதியெதிர்வரவேமகிழ்ச்சிகூர்வார்
பைங்கனியொன்றூட்டினூர்சிந்தித்தகாமியங்கள்படைப்பாரன்றே.(உகூ)

சுகந்தபானியத்தினைநைவேத்தியஞ்செய்தன்பருக்கேதுய்க்கச்செய்தோர், மிகுந்தவமுதக்கடலிற்றிளைத்துவிளையாடுவரால்விரையார்கின்ற, தகுஞ்சுவையோடன்னமரன்றனக்கருத்தியருத்தியுடன்றவத்தோர்க்கீவோ,ருகந்தவன்னவெற்படைவாரான்பாலன்பர்க்கருளுமுண்மையோர்கள். (௩௦)

பாற்கடலையடைந்துவிளையாடிடுவர்ததியளித்தோர்பகருமந்த
மேற்கடலையடைந்திடுவர்நெய்யளிக்கிலக்கடலைமேவுவாரா
லேற்குதல்சர்க்கரையினியகனிவகைகள்நைவேத்தியத்திற்கிறைவற்கீந்தே
நாற்கடல்சூழுலகிலன்பர்க்களித்துளோரவ்வரையைநண்ணுவாரே. [ ]

சந்தனமாபரண்வகைகுடைகவரிவாகனங்கள்சாற்றுகின்ற
வெந்தவகையுஞ்சிவனுக்கற்பிதஞ்செய்தரனடியார்க்கீயப்பெற்ளூ
ரந்தவகைப்போகங்களனைத்தையும்பெற்றேகயிலையடைவாரென்றே
நந்திபுகன்றூன்பின்னுந்தேவரைப்பார்த்திவ்வாறுநவிற்றுகின்றூன். [ ]

மனத்தினுமேசிவதருமமதியாதார்கைப்பொருளைவாங்கல்சேரா, விளைத்தர்பொருள்கவர்தலன்றிப்பறம்பர்பொருடனையுங்கொண்டேகலொப்பா, மனத்தமேபுரிமறையோன்சம்புபத்தியற்றவர்க்கீந்தலகையானன், கனந்தகானகத்தவன்கையேற்றவருங்கூளிகளாய்க்கலந்தாரன்றே. [ ]

தண்ணீர்தண்ணீரென்றுதாகத்தாற்றடுமாறித்தவித்தேநின்று
கண்ணீர்விட்டேகதறுங்கடிக்கூட்டந்தனைக்கண்டாகாயவாணி
வெண்ணீற்றூன்பத்தியில்லார்தமக்களித்தீர்சிவதருமமேவகில்லீ
ரெண்ணீர்மைக்கழுதானீரமுதநதனிலாவதென்னென்றியம்பிற்றன்றே.

உவர்த்தரைவித்துடன்கடலிற்கவிழ்த்தகலமழுக்குநில்த்துற்றதீம்பா
லவந்தமாமவைபோலச்சிவதருமமில்லவர்க்கேயளித்திரம்மீதா
தவத்தராஞ்சிவனடியார்தமக்கொர்பிடியனஞ்சுத்தோதகமுநல்காப்
பவத்தினுற்கழுதாகிப்பசிப்பிணியாலுடன்மெலிந்தேதபதைக்கின்றால்.

பரமனடியார்க்கின்னமுடைபொருளீந்தினியவுரைபகராதன்னோ
டிரமுறச்சொல்கதைசிந்தைசெய்யாதுதிருமாலேதிருவிளக்கோ
டரனதாலயத்திலுற்றபணிவிடைசெய்யாதன்னலாரிலிங்க
விரவுபூசனையிபற்றுதுற்றதெனக்கேட்டலறிவிழ்ந்தவன்றே. [௩௬]

வாயதனின்மார்பதனில்வயிற்றினுமெய்யறைந்துகொண்டு மயங்கிவீழ்ந்த, பேயதின்கூட்டத்தினையவ்வனத்தில்வில்வமெடுக்க வந்தபெரியோர்கண்டார், சேயவசரிசொன்னதிறமுங்கேட்டதிசயித்தார்செறிந்தவ்வூரிற், போயதனைப்புகன்றிடவவ்வூரிலுள்ளோர் சிவபத்திபூண்டாரன்றே. (௩௭)

அன்னகரிலிருந்தருளுமந்தணனோர்முதியனரனன்பனூர்தாஞ்
சொன்னவுரையத்தனையுமனங்கொண்டானதிசயித்தேசொல்லுகின்றா
னின்னகரார்சிவதருமமெள்ளளவுமிதுவரைக்குமிலைசந்தாரில்லைத்
துன்னுமிவருடன்கூடியானுமறியாக்கேடுசூழ்ந்தேனென்பான். [௩௮]

சிவநாமம்புகல்வோருக்குதவாதபொருளையவர்சேராவில்லைப்
பவமாற்றும்பரமேசன்பூதிகண்டிதரியாதபாழ்ந்தேதகத்தை
யுவமானமில்லாதான்கோயிலில்லாவூரையரனுமையைநாளுந்
தவமாசவணங்காததலைபைச்சூழாக்காலைச்சாற்றுநாவை. [௩௯]

மேவிலிங்கந்தன்னையருச்சனைசெய்யாக்கையையங்கிவிரும்பியுண்டே
தீயுறச்செய்திடவேண்டும்யானென்றுமிம்மேன்மைசெய்திலேனென்
றோவிலாதிரங்கியரனைபுரப்பாயெனவடலையுடலிற்பூசி
யாவியிறந்தானவனைத்தனயர்சுடலையிற்கொடுபோயடக்கினரால். [௪௦]

மற்றவனைச்சுடுமயானப்புகைபோய்ப்பசாங்கண்மருவுகானி
லுற்றதுதான்பட்டவுடனவ்வுருவம்போய்த்தேவவுருவம்பெற்றார்
விற்றருவிமானத்திலேறியேசிவலோகமேவினாரா
லிற்றிடும்போதவன்சொல்சிவதருமங்கேட்டநகராரெவருமுய்ந்தார். []

இமையோர்கள்கேண்மினெம்மான்சரித்திரங்கேட்டோர்கதியினைய்தாரியாரே, யமைபாகுமரணகாலந்தனிற்கேட்டிடுமறையோனறிவுசோர்ந்து, சமையநாற்சிவதருமஞ்செய்திலேனென்றுமனந்தாபங்கூர்ந்தே, யுமைபாகன்கயிலைபுற்றானதன்பெருமையாவரேயுரைக்கற்பாலார்.

அங்கவனைத்தகனஞ்செய்யுமதூமம்படப்பெற்றடவியுற்ற
பேய்ந்தபெறுசிவறிக்கணங்களவினைதீர்ந்தான்கயிலைசேர்ந்தவாமேலா

வீங்கிவனும்வங்கமலர்கொண்டரனையர்ச்சித்தேநயின்பம்பெற்றான்
பாங்கிலிவையுணராமலின்னசெய்திரென்னாநந்திபகர்ந்தானன்றே.[௪௨]

இருபத்தெட்டாவது பசாசுமோசனச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௮௮௭.



முப்பதாவது

# நந்திகேசுரர்நமனுக்குப் புத்திசொன்னசருக்கம்



வேறு

ஞாலமீதுநறுந்தளிர்பூவுண்டே
கோலியேத்தக்குளிர்புனலுண்டே
சூலபாணிதுணைப்பதமுண்டோங்
காலனுன்மெலிவுண்ணக்கணக்கின்றே. (௧)

தேவர்நந்தியைப்பார்த்தனர்செப்புவார்
காவலாளகருணைபுரிந்தெமக்
கேவலானிவையென்றியம்பாயென்றார்
தாவில்சங்கரன்றாணம்பினேமென்பார். (௨)

யாங்களீசன்றனையேயிறைஞ்சுவோம்
பூங்கழற்கன்புபூண்டோம்புகழ்சொல்வோ
மோங்குமாங்கவனுண்மைக்கதையெலாந்
தீங்கிலாதின்னங்கேட்கச்சிந்திக்கின்றேம். (௩)

ஐயகேட்டியோராயிரமியோசனை
வெய்யதோர்சமலோகவெளியெலாந்
தையல்பாகனுக்கன்பிலர்தாநிறைந்
துய்யலார்படும்பாடுகண்டோமென்பார். [௪]

தாக்குபாவியர்தங்களைத்தண்டித்தே
போக்குகின்றதிலேதினம்போக்கியே
யேக்கமுற்றிடுமித்திறத்தாலரற்
காக்குபூசையுமொல்லையிலாற்றுவான். (௫)

இந்தவெந்துயரத்திடைந்தானென்றார்
நந்திகேசநமன்றனைப்பார்த்தனன்
பந்தமுற்றவரைக்கும்பிபாகமா
மந்தமற்றநிரையத்தழுத்தென்பான். (௬)

சம்புபத்தியில்லாதவன்றன்செயு
மம்புண்ணியமியாவையுநாசமா
மம்பணியற்றவன்றுசனுயினும்
வெம்புலையனவன்செயல்வினைரோ. [௭]

அற்புதன்சிவபுண்ணியமற்றிலார்
கற்பகாலங்கடுநிரையத்துற்றே
வெற்படுத்திடும்வெங்கடுங்கானத்தி
லுற்பவித்துறுஞ்சோகாபுலைவரே. [௮]

ஈங்குநீதாணிறைஞ்சத்தகுமவர்
தாங்களியாரெனச்சாற்றிடக்கேட்டியேற்
றேங்கொள்கொன்றைச்சிவன்றிருநாமமே
பாங்கினேதும்பழவடியார்களே. (௯)

வேறு.

சந்திரசேகரவிசுவநாதசங்கராசம்போசயிலநாதா
நந்திவாகனகாசிநாயகபார்ப்பதிநாதவீமநாத
வைந்துகரத்தனையாறுமுகத்தனையுமேதருமாமர்த்தகேச
சுந்தரசித்தேசுரிதன்மணவாளசோமேசசூலபாணி. (௧௦)

மன்னுபழமலைநாதகாலகாலேசகிரிவாசஞான
பொன்னிமயகேதாரநேசசதாசிவபுரத்தல்பூண்டநாத
தன்னிகரில்சித்தேசதருமகணேசுரசடைதன்மணாள
வென்னுமரநாமங்களைத்துவோர்பரவந்திசைந்துளாரே. (௧௧)

வேறு.

கண்ணுதலாரிலிங்காங்கள்கண்டவுடன்பூசைசெயக்காதலிப்போ
ரண்ணல்சாதனம்பார்ப்போர்தேகாந்தத்தினிங்கயிலைபடைகுவாரா
லெண்ணுசைவாசாரசிவபோகியர்நாந்தாரத்தேயநிர்ந்தாரென்றால்
விண்ணுளோர்முனிவர்சித்தர்வீழ்ந்திறைஞ்சுவாரெனவேவேதங்கூறும்.

மங்களஞ்சேர்சிவபுராணம்பகர்வோர்க்குதவிபுரிமாந்தர்க்கெல்லாஞ்
சங்கரன்றனருள்புரிவனிங்கிதுதான்சத்தியஞ்சத்தியமாமன்றே
திங்களணிலிங்கேசன்பூசைசெய்வார்தமைக்கண்டுசிந்தைதீர்வம்
பொங்கிவிழிப்புனல்சோரவுருகுவோர்செல்வமலைப்புகுந்திடாரே.(௧௨)

என்னோரமுப்பகவற்சித்தனைச்செய்வோர்பதத்தைப்பிறைஞ்சுவோராற்
றன்னேரில்லாதசிவன்றனைப்பூசைபுரிந்ததெனத்தயவுகூர்வான்
மின்னோங்கெந்சடையானையுபத்தேதப்பாமல்விசேடத்தேதாடு
கன்னேயமுடன்புரிப்போர்முனிவோர்பூசைபுரிகன்னமேயாரே. (௧௩)

செப்பரிவசேர்நாமங்களைநவிலாடுஞ்செவிக்கடைசெய்தே
யைபனையுமைகணவாவருள்புரிவாயெனப்பரவிநிருநாவார்

மையலுறுமனைவிமைந்தருடல்பொருளெல்லாஞ்சிவன்றன்வசமேயெ
வெய்யதொருசமுசாரவினையொருவிப்பேரின்பவீடுசேர்வார். [ன்பார்

நினைப்பதெல்லாஞ்சிவன்சரிதம்புகல்வதெல்லாமவனுயநித்தமே
மை, தனைக்கொடுசெய்திடலெல்லாமரன்பூசைசூழ்வதெல்லாந்தலைவ
ன்கோயில், மனப்பமென்பொடுமுடலால்வருந்தொழிலெல்லாம்வள்ளல்
வசமேயாக்கித், தினைப்பொழுதுமவப்பொழுதாச்செலுத்தாதாசிவக
ணத்தின்செய்கையோரே. (க௬)

அப்படியேசிவபத்திபுரிவோனையீன்றதந்தையன்னையாவார்
மைப்படிகண்மனைவிமைந்தர்சுற்றத்தாராளடிமைமற்றுமுள்ளோர்
செப்பருமன்னவன்பூசைப்பலத்தினர்சிவபதத்திற்சேர்வார்திண்ண
மெய்ப்பொருளுஞ்சிவமாகப்பாவிப்பார்சிவரூபமெய்துவாரே. (க௭)

சங்கரன்றனடியவர்தம்மகிமையையிவ்வளவென்றுசாற்றலாமோ
மங்களமாமவரிடத்திற்பயபத்திவரவுனக்குவகுக்கின்றேமா
லங்கவர்தாமுறையிடத்திற்செலவுனக்குந்தூதருக்குமடுப்பதன்று
லிங்கதனைச்சங்கையிலாதியமவழியெனப்பின்னுமியம்புகின்றான். [க௮]

மறைநான்குப்புகல்பூதியுருத்திராக்கந்தரிப்போர்மலர்வில்வத்தா
லிறையவனைப்பூசிப்போர்சிவதீர்த்தந்தனிலாடுமியல்பினோர்கள்
கறையார்கண்டன்கயிலைகாளத்திமலையேகாம்பரம்பொன்மன்ற
நறையாருமிடைமருதுகும்பகோணந்தொழவேநாடுவோர்கள். [க௯]

தேசுபெறுமாவடுதண்டுறையாரூர்மறைக்காடுசெங்கோடுள்வோர்
வாசமுறுமல்லிகார்ச்சுனம்பிரமராம்பிகையைவந்திப்போர்கள்
காசியில்வாசம்புரிவோர்விசுவலிங்கபூசைபுரிகருணையாளர்
நேசமுறமுத்திமண்டபத்தையன்னபூரணியைநினைக்கின்றோர்கள். [உ௦]

கணபதியாந்துண்டியைவீரேசுரனைப்பிரணவத்தின்கடவுளானை,
பிணையின்மணிக்கன்னிகைவானைத் தொழுவோரிடத்திலுற விதயத்
தெண்ணல், புணருமுன்றன்தூதருக்குப்புத்திகற்பிப்பாயமனேபுனையும்
வேணிப், பணவரவற்கபாரதம்பண்ணிலுய்ந்தோரில்லையெனப்பகர்ந்தா
னந்தி. [உக]

முப்பதாவது நந்திகேசுரர்நமனுக்குப்புத்திசொன்னசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-[illegible]சு௦.



முப்பத்தொன்றாவது

# அபுத்திபூர்வசிவபுண்ணியச்சருக்கம்



வேறு

தன்பெற்றமலர்கள்பழுதற்றதேடிச்சங்கரனார்முடிசாத்தக்கையிற்
[illegible], தன்பெற்று[illegible]நறுமனிவனிருவர்காதிற்காத்திருந்துதோத்திரந்

மின்காளம்பாடப், பண்பெற்றோர்பரனுடனெந்நாளும்வாழும்பாக்கியமு ம்போக்கியமும்பரிவாற்பெற்ற, பெண்பெற்றான்மலையரசனிவர்கள்பெற் றபெறுலகிலொருவர்களும்பெற்றிலாரே. (க)

ஆரணஞ்சொன்முனிபகர்வானிவைகள்சொன்னவருணந்திதனைத் தொழுதஞ்சலிகள்செய்தே, காரணனுதியமேதவசிவன்றன்செய்தநல்வி னையின்ரகசியத்தைநாங்கள்கேட்ப, வேரணியுஞானவாரிதிநின்வாக்கா லிசைத்தருளவேண்டுமெனவவரைநோக்கிக்,காரணமாமிவையுரைக்கிற் கேட்போர்க்கெல்லாங்காட்டுமதிசயமென்றேகழறுகின்றான். (உ)

புலவிரகாண்மகத்துவமாமணிகொழிக்கும்புண்ணியெனுஞ்சிவன் பெருமைபுகலலாமோ, நலமருவுமிலிங்கபூசனையின்மேன்மைநாதனறிந் துரைப்பதல்லானம்மாலாகா, திலகியமாணிக்கவகைதேடிவைத்தேயிரு ப்பவனங்கதன்விலையுநலமுந்தேர்வா, னுலகதனிலவைபோலச்சிவதன்ம த்தினுண்மையினைச்சிவன்றானேயுணர்வன்றானே. (ங)

சித்தரசகுளிகையிரும்பாதிசேர்ந்தாற்செம்பொனேயாகுநதிப்பொ றிபொன்றூற்றால், வைத்தருள்காற்பாசமலைநீறுமன்னவாறுபோற்சிவத ருமந்தானொன்றுற்றான், மெத்தவுளபாவபருவதங்களெல்லாம்வேரறத் தூளாகிவிடுமுத்திசேர்வ, னுத்தமனுஞ்சிவன்றேவர்க்கிறைவன்போலவு யர்தருமத்திறைபரமன்றருமந்தானே. (ச)

அண்ணல்சிவபுண்ணியத்திற்கதிகதன்மமாகமபுராணவேதத்துமில் லைத், திண்ணமிதுவென்றிருகையெடுத்தேநந்திசெப்பினன்பின்னருமே செப்புகின்று, ளென்னுமிதற்கேமுத்திமற்றோர்தன்மத்தெய்துமோகதி சாதியிரத்நமல்லாற், பண்ணும் * வளைக்காச்சுமணிதரித்தான்மேலாம்ப னுண்டோபெருமையுண்டோபாருளோர்க்கே. [ரு]

அன்னதுதானிற்கவிந்தவேடன்செய்தவரும்பாவகோடிகளு களை வையுண்டோ,வின்னவன்றன்றந்தைதுணையோர்கள்பாவவீட்டதார்கூ ட்டத்தாரெவருமன்னோர், மன்னுமிவன்றதைகொணர்ந்திடும்வங்கத்தி ன்மலரதனையெடுத்திவன்றன்புறத்தெரிந்தான், முன்னிருந்தவிலிங்கத் தின்முடியில்வீழ்ந்தெமுடிவிலரும்பூசையாய்முடிந்ததன்றே. [சா]

என்னசொல்கேஞ்சிவலிங்கமுற்றதிங்கேயென்றறியானெறிந்தமல ரிறைமகிழ்ந்தான், றன்னையறியாதுவந்தபுண்ணியத்தாற் றம்பிரா... லையினிற்சார்கின்றானற், பன்னரியதலைவனையேயறிந்துபத்... ற்பூசனையைப்பண்ணுவோர்கள், மன்னுபலன்றன்னையெம்மா... மோமறைநான்குமின்னதெனவகுக்கலாமோ. (எ)

இப்படிதானறியாமற்செய்துபூசையிரும்பலன் பெற்றதொருவனி மையோர்கேண்மின், விப்பிரமான்கற்பழிந்தாடந்தமைந்தன்வேதியர்த ங்கருமங்கேளான்றஞ்செய்யா, தெப்பரிபவித்தவளதேசந்தன்னிலுற்று

* வளைக்காச்சுமணி-சங்குமணி.

ளான்கலவிநலமொன்றுமில்லான், றப்பிலாதவன்செய்தபாவகோடிதன்னையின்னமெதன்றொருவர்சாற்றலாமோ. (௮)

மைமெழுதிக்கண்ணினெற்றிப்பொட்டுமிட்டேவாரெழுதுந் தனங்காட்டித்தனங்கள்வாங்குந்,தைப்பல் + சாரத்திளம்பெண்ணொருத்திதன்னைத்தனதுமனையாளெனவேதழுவி வாழ்ந்தான், செய்யவவன்வயிற்றிலொரு மருவுண்டானுடிருந்தவளர்த்தவளிளமைசேரக்கண்டே, கையனவனவடனையுங்காதலாலேகலந்தின்பநுகர்ந்துமனங்களித்தானன்றே. ()

பூங்குழலாளவளுமொருபெண்ணைப்பெற்றாள்பொற்புடனே வளர்த்தவளைப்புணர்ந்துகொண்டா, னங்கவடன்மோகதத்தாலவட்குவேண்டு மருப்பொருள்கள்கொணர்ந்தளிப்பானொருநாளன்று, னங்கலவிசெய்யும்போதுசுகந்தப்போதுநலந்தரு பஞ்சணைபரப்பநல்காயென்னி, லீங்குநானுனைப்புணரேனென்றாளன்னளித ழூறற்கிச்சைகொண்டா னீவேனென்றான். (௧௦)

பாதிபிரவினிற்பஞ்சபாணனார்தம்பகைவனார்க்கமைத்த நந்தவனத்திற்புக்கான், போதலருஞ்சுகந்தப்பூஞ்செடியைக்கண்டான் புவனமொருமூன்றினுங்கண்டறியேனென்றான், மாதவடான் மகிழுமனைப்படப்பைதன்னின்வைத்துவளர்த்திடவேண்டுமெனநினைந்தான், சிதமலர்கவர்ந்தோடிச்செலுங்காலந்தச்செழுமணந்தன்காலகொடெங்குஞ்சென்றதன்றே. (௧௧)

அந்தமலர்ச்சுகந்தமொருவன்மீகத்திலடுத்துளதுபடமெடுத்தேயாடும்பாந்தண்,மந்தமாருதந்தவழும்வழியேயோடிவந்துமனைநோக்கிவரும்வன்பாலுற்றே, சந்தமலர்வாடைகண்டேயன்னேன்மெய்யிற் றழுவிடவேமெய்பதறிக்கலங்கியோடிச், சிந்தையுந்தள்ளாடியோர்சிவலிங்கத்தின்றிருமுன்னர்த்தடுமாறிவீழ்ந்தானன்றே. (௧௨)

வீழ்ந்திடக்கைப்பூச்சிதறிபவ்விலிங்கமேல்வீழ்ந்தவவன்புரண்டுநெருக்கநோந்தே, சூழ்ந்திடமெய்வளைந்தகொடும்பாந்தள்சிறிச்சுருக்கெனவேகடிக்கவிடந்தலைமேற்கொண்டே, யாழ்ந்தவருந்துயருழந்தாங் குயிரிழந்தேபவன்கிடந்தான்றனைவிடுத்தவ்வரிபநாகம், வாழ்ந்தருமதையிலிங்கந்தன்னைச்சூழ்ந்துமாணிக்கவிளக்கேற்றிவதிந்ததன்றே. [௧௩]

ஈங்கனமிவ்வாறுநிகழ்தன்மையெல்லா மெம்பிரானுணர்ந்திமயமென்னவேவாங்கு, மொங்கலரசருளரசிகேட்பாயென்றேயுரைக்கின்றானந்தமக்கொருவகைவாய்த்த, தாங்ளதொர்புதுமையதுதன்னைக்கேட்கிலதிசயமாமவனிதனின்மாந்தர்க்கெல்லாந், தீங்கொழிபூசனைபுரியப்பத்திசேருஞ்சித்திரமாமென்றுபின்னுஞ்செப்புவானால். [௧௪]

விந்தவளநாடுளதந்நாட்டிலுந்றமெய்யன்பனொருவனுளனவனுண்டாக்கு, நந்தவனமொன்றுளதவ்வனத்திலுற்றநல்வளமத்தனையு நம்மானவிலலாமோ, கந்தமலர்ச்சுகந்தமெழுகாதம்வீசுங்கனிகனியுந்தேனும்

+ சாரப்பெண்-வேசி

பூத்தேதனுங்கூடி, பக்தவுலகினிற்கலுழிக்கால்களாகுமவ்வனத்தினெழிலைகாண்பாயென்பான். [௧௫]

முல்லைசிறுசண்பகமார்பிச்சிவெட்சிமுருகலர்சண்பகம்வகுளங்குரவங்கோங்கங், குல்லைகரவிரங்கூவிளமந்தாரங்கோட்டுப்பூக்கொடிப்பூநீர்ப்பூநிலப்பூ, வெல்லையிலாவகைநிறைந்தவண்டுதானும்மெய்தாத காவலுளவிதனைக்காணா, வல்லைவருகெனவிமயமங்கையோடு மணிவிமானத்திலெம்மான்றான்வந்தானே. [௧௬]

வந்துவிமானத்தினைவிட்டிழிந்தேநந்தவனத்தின்மலரோடை. யொன்றுமணிச்சோபான, மந்தமுளகரையிலகுமணிப்பூங்கோயிலதனிலுள சிகரகோபுரங்களாதி, சுந்தரமாமண்டபமாளிகைப்ரகாரஞ் சூழ்ந்தவதின்மாணிக்கவிலிங்கமேவு, மெந்தையந்தலிங்கத்தைத்தழுவிக்கொண்டேயினிதினவனொருகணம்வீற்றிருந்தானன்றே. [௧௭]

தீபமாலையின்சிறப்புமவனிலுற்றெழுஞ்சுகந்தமாலையினிற்சிறப்பும்பார்த்தான், கோவைவாயுமையுடனேபுறத்திற்போந்தக்குளிர் சோலைக்கனிநைவேத்தியமுங்கொண்டா, னவனுடனமதுபத்தன்பதிட்டைசெய்தவரிபாருமதையிலிங்கமதனைக்காணப், போவதுநாமென்றதனின்மேன்மையெல்லாம்பூவைமொழிபாலுமைக்குப்புகலுகின்றான். (௧௮)

மங்கைகேணருமதையிலிங்கமாகும்வாணலிங்கந் தனக்கிணையாவண்டமீதி, லெங்குமிலைமாணிக்கவிலிங்கந்தானுமிதிற்கிணையோமனமகிழ்ந்தேயெந்நாளுந், தங்கிபகலாதிருப்போமிதனைப்பூசைதான்புரிவோரிகபரமுந்தழைந்துவாழ்வா, ரங்கதனைக்காணநமக்குளம்பூரிக்கு மம்பிகையேயெனவவண்வந்தடைந்தானன்றே. (௧௯)

படநாகஞ்சூழ்ந்தமையுங்காட்டியந்தப்பரிமளலிங்கத்திற்கண்பதிதல்காட்டி, யுடனுகந்தீண்டினேன்றன்னையண்ணலுள்ளத்தின்படியேயவ்விடலைநீக்கித், திடனாகத்தெய்வவடிவாக்கிமானத்தேற்றியேகணங்களுய்க்குந்திறமுங்காட்டிப், புடைசூழ்ந்தபுயங்கத்தானமக்குநாகபூடணனென்றொருநாமம்புகுந்ததென்பான், [௨௦]

மணத்தமலர்வாணலிங்கமீதுவீழ்த்திவாளரவந்தீண்டிடவே வீழ்ந்துமாண்டு, பிணத்துருவமானவனைக்கயிலைவாசம்பிரியாதபடிகணத்துட்பெருமையாக்கிக், குணத்துருவாங்கொம்பினொடும்வர்புலாவுங் குளிர்சோலைவீற்றிருந்தான்கோமான்கண்டே, றுணர்த்துவதோர்சிவபூசைமேன்மையிவ்வாறவனறியான்கந்தரிப்பூவுய்த்துய்ந்தானே. [௨௧]

இன்னவனையமலோகத்தேற்றலாமோவிவைபோர்கள்கேண்மினின்னமுளதோர்காதை, மன்னுமல்லிகார்ச்சுனமாம்வரையின்பாங்கர்வனவேடச்சேரிதனிலிரந்துண்பானோர், பன்னுமறையோன்புரிந்த பாவந்தன்னைப்பகர்வரிதாற்பலிகொ * ளரிவழுதுணங்காய்,தன்னைநருமதையாற்றின்கரையிலிங்கசன்னிதியிலிட்டுண்டேசார்கின்றானால். [௨௨]

* அரி-அரிசி,

அங்கவன்றுனித்திறஞ்செல்கின்றநாளிலரும்பிரதோடத்தினம் வந்தடுத்ததந்நா, டிங்கடிரயோதசியாதிரையும்வந்துசெறிந்திடுமகாதினமாய்ச்செறிந்தவன்றே, பொங்குமுடல்வேர்வையினற்புனலிலாடிப் புனிதலிங்கத்தெதிர்புகுந்தான்றன்கொணர்ந்த, வங்கவிளங்காய்தனினீர்தெளித்தேயந்தமணியிலிங்கந்தனிலறுகான்மூடிவைத்தான். [உரு]

பரிந்திடுமன்னேன்பலிகொளரிசியையெல்லாம்பாத்திரத்திற்பெய்து பாணியின்மேலேற்றித், தெரிந்திடுமிந்தனங்களிட்டெப்புரங்கள்வேவச்சிரித்திட்டான்முன்னமேயெரித்திட்டானு, லரிந்திடுகத்தரிக்காயுஞ்சமைத்துக்கல்லேயமைத்ததனிற்கொடுவந்தேயவைகளெல்லாஞ், சொரிந்தருந்திவருந்துமிளைப்பதனலாகஞ்சோர்ந்துகிடந்தேவிழியுந்துஞ்சினனல்.

வழுதுணங்காய்நனைபாணியிலிங்கமீதுவார்ந்ததபிடேகமா யதனைமூடும்,பழுதிலறுகர்ச்சனையாயட்டேயிட்டுண் * பாத்துநைவேத்தியமாகக்காட்டத்தீயே,முழுதுமெரித்திடும்விளக்காய்முன்னேதுஞ்சுமுறைமைவணங்குதலாகமுடிந்தவன்றே, பழுதிலிவன்புரிந்தவெலாம்பிரதோடத்திற்பத்திபுரிபூசனையாப்பரமன்கொண்டான். [உ௬]

அனையவன்றன்கனவிலந்தவிலிங்கத்திற்கேயபிடேகமர்ச்சனைநைவேத்யமாதி, புனிதமுறுதிரவியங்கொண்டரியபூசைபுரிந்ததுபோற்றெரிந்தெழுந்தான்பின்னர்க்கண்டான், வனைசிகரகோபுரமண்டபப்ரகாரமாணிக்கமயவொளியாய்வயங்குமாறு, மினியமணிமாளிகைபொன்னிரத்நகோடியானைபரிசேனைமின்னார்யாவுந்தானே. [உ௭]

வந்தவனைச்சூழ்ந்தரம்பைமாதர்வேண்டும் வரிசைசெய்வார்கவரியிரட்டுறுவார்தம்மிற், சுந்தரிதாளுருத்தியவனருகிருந்து துணைத்தோளைத்தழுவுகின்றுளதனைக்கண்டா, னெந்தவகைநீவிர்களியார்புரிசையாதியாவர்பெற்றபாக்கியமீதிந்த்ரசாலந், தந்தவகையோவென்றுவினவினுனத்தாழ்குழையார்தமிலொருத்திசாற்றுகின்றுள். [உ௭]

பூசுரகேள்பிரதோடந்தன்னிலிந்தப்புனிதநருமதைமகாலிங்கந்தன்மே, னீசொரிவங்கக்காய்மேல்வார்த்தநீரானிகரிலபிடேகங்கள் செய்தாய்பின்னர், மூசுமறுகருச்சித்தாயன்னந்தன்னைமுன்னிருந்தேயருந்திநைவேத்தியஞ்செய்வித்தாய், தேசுபெறவிறகின்றீவிளக்கும்வைத்தாய்திருமுன்னாத்துயின்றிறைஞ்சுஞ்செயலுஞ்செய்தாய். [உ௮]

இத்தனையும்பத்தியினற்செய்தபூசைக்கிசைந்ததென்றேயெம்பெருமானிதயந்தன்னில், வைத்தளித்தபாக்கியங்களியாங்கள்கண்டாய்மன்னுமின்னம்பிரதோடமகிமையாலே, யுத்தமமாமுத்திநலமுடிவினீபெற்றுய்ந்திடுவையென்றுரைத்தாளெனவேநந்தி, சித்தமகிழ்தேவரைப்பார்த்திசைத்தானென்றுதிருந்துமறையோதுமுனிசெப்பினனே. (உ௯)

முப்பத்தொராவதபுத்திபூநவசிவபுண்ணியச்சநக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம-௬௩௯.



---

* பாத்து-அன்னம்.

முப்பத்திரண்டாவது,

# பாக்கியதேவதைச்சருக்கம்.



வேறு.

கைவேலையுன்பாதபூசைசெய்யுங்கடன்கோயில் சூழ்வதுவேகாலி
ன்வேலை, மைவேலைவிடமுண்டகண்டத்தெண்டோள்வரதனேயெனப்
புகழ்தல்வாக்கின்வேலை, மெய்வேலைதிருப்பணியின்குறைகள்செய்யும்
வேலையெனையாண்டருளும்விமலனேயா, னுய்வேலைகொண்டருளியெந்
தவேலையுன்னடியேன்முன்னர்வந்தேயுதவுவாயே. (௧)

நந்திமையோர்கடைப்பார்த்துச்சொல்வானல்வினைப் பாக்கிய
தெய்வந்தன்னைநோக்கிச், சிந்தைமகிழ்வேதியன்முன்வணங்கி யிந்தச்
செல்வமெனக்கெதுகாலநிலைக்குமெம்மான், றந்தருளவெத்தவமியான்
செய்தேனீதுசாற்றுதியென்றிடநகைசெய்தவன்றனக்கே, புந்திதனிற்
சிவலிங்கபூசைசெய்யும்புத்திவரமுத்திபெறப்புகலுமன்றே. (௨)

வேதியகேள்பிரதோடகாலந்தன்னின்மிக்கருமதையி லிங்கபூ
சைசெய்யு, நீதியறியாய்கொணர்ந்தவழுதுணங்காய்நிறையநீர்பொழிந்து
சிவக்குறிமேல்வைத்தாய், கோதிலறுகாற்பொதிந்தாயஃதீசற்கேகுளிர
பீடகத்தொடருச்சனையாயிற்றாற், றீதிலாத்தலங்காலமூர்த்தி மேன்
மைசேர்ந்தவற்றாற்பூசனையாய்ச்சிறந்தவன்றே. (௩)

எம்பிரான்கருணைபொழிநிதியமானோனேழையடியாரிடர் கண்டிர
ங்குமீச, னம்பிநீயறிந்திலைசெய்ததனைச்சிந்தைநயந்துபெருவாழ்வளித்
தானாதன்கண்டா,யம்புவியிற்பிரதோடகாலந்தன்னிலண்ணலார்தம்மை
யறிந்தருச்சிப்பார்க, டம்பமனையவர்பெறும்பேறதனையாவர் சாற்றுவார்
சிவரூபந்தானாவாரே. (௪)

பரமனார்சிவலிங்கபூசைதன்னைப்பத்தியுடன்புரியிலிந்தப் பாக்யமெ
ல்லாந், திரமதாமிகழ்ந்தனையேலிழந்துபோதிதிருவுமுயர்செல்வபோகங்
களியாவு, முரமுறுமெய்ப்பத்திபெற்றோரிடத்தைநீங்காதுறைந்திடுமிங்
கிதனிலொருகாதைகேட்டி, புரவலன்மேனாளொருவன்சிவனைப்பூசை
புரிந்ததனாற்பெருவாழ்வுபொருந்தப்பெற்றான். (௫)

இளநலமின்னார்மோகமயக்கஞ்செய்யுமின்பவிளையாட்டினாலீசன்பூ
சை, யுளமதனிலிகழ்ந்ததனாற்கெடுசூழ்ந்ததுடைநாடூர்மனையாசி னுரி
மைசெல்வந், தளவநகைமடவியர்கண்மைந்தர்சுற்றந்தானைகாவலரியா
ருமியானையுண்ட, விளவினுறுகனிபோலுமுனிவன்சொல்லால்விண்ண
வர்கோனாற்றெனவுமடவிசேர்ந்தான். (௬)

உன்னருங்கானகம்புகுந்துபசித்தீவெப்பமுள்ளெரியமேலெரியவெ
யிலின்கோடை, மன்னவன்வெந்துயரமுற்றான்செல்லும்போதின் மன்
னுமன்னவனத்திலொருவில்வநீழ. றன்னிலொருசிவயோக சைவர்புரி

தாங்கிவிழிமணித்தாயக்தரித்தார்பூருக், அவ்விருகண்ணுரிதபத்தரனை
க்கண்டுதொழுதிருந்தார்தமைக்கண்டான்றொழுதான்சொல்வான். (எ)

அம்புவியினம்பர்பதத்தன்பர்க்கெல்லாமதிகராயுறைகின்றீரையாகீ
ரே, யும்பரிவுசேர்சம்புநாதர்தாமெட்டூரர்கண்டீரெனதுசெல்வ முளவெ
லாம்பான், கம்பமுறக்கவர்ந்தனர்வேதங்களெல்லாங்கருணைநிதிபுரந்தளி
க்குங்கடவுளென்றே, நம்பமுறப்புகல்வதென்பாற்காணேனென்றுசாற்
றிடக்கேட்டருள்யோகத்தவர்சொல்வாரால். (அ)

கோபமுற்றார்கெட்டூரரென்றதற்கேகூறுமறையருட்கட லென்றத
ற்கேபச்சாத், தாபமெய்தியன்னவனைநோக்கிவேதந்தயாபரர்சங்கரரென
வேசாற்றல்பொய்யோ, பாபவினைநீபுரிந்தாயதனாற்செல்வம்பற்றறவிட்டு
னையகன்றபடிகாண்கஞ்ச, நாபனுடனயன்றேடற்கரியசோதிநாதனைநீகு
றைபுகறனலமன்றென்பான். (௯)

முந்தியவிச்செல்வமெலாந்தந்ததெந்தைமுதல்வனென வறிந்திலா
ய்சிவனுமங்கள், புந்தியினிற்கொண்டறியாய் பூசைசெய்யும்புத்தியும்பத்
தியுமற்றாய்புணியஞ்செய்யாய், சிந்தைமகிழ்ந்துண்டுடுத்தலணிதல்பூச
ல்சேயிழையாரின்பமுதலியாவுமான, வந்தமிலாப்போகங்களனைத்துநா
தர்க்காக்கியேயின்பநுகர்ந்தறிந்திலாயே. (க0)

இப்போதுசங்கரரைக்கொடுமையோரென்றிகழ்ந்தனையாமதுபொ
ருேங்கண்டாய்நீசெய், தப்போதியுனைவெறுத்திவழிபடாததன்மையாற்
றண்டனையாற்புத்திதந்தார், கைப்போதுகொண்டுபூசனைசெய்தாயேற்க
ருயிணையினுலிழந்தசெல்வமனைத்துஞ்சேர்தி, யொப்போதிலாதசிவன்
வணங்கினோருக்குதவாதபொருளுளவோவுணர்த்துங்காலே. (கக)

செய்யதிருவுறுநாளிலெம்பிராற்குத்திருப்பணிமகாபூசைச் சிறப்பு
ஞ்செய்தே, மெய்யடியார்தமக்கன்னஞ்சொன்னமாடைவிரும்பியளித்
தரனருளைமேவப்பெற்றே, துய்யதொருவாணுளும்பொருளுநாளுஞ்சுரு
ங்காதவகைபெறவேயறிந்திலாயா, லுய்யவருசெல்வத்தையிழந்துதேக
த்துயிரிழந்தோர்தமைப்போலவுறுகின்றாயே. (கஉ)

நல்வினையின்பேறுடையார்தமக்கெந்நாளுநாதன்பூசனை யமிர்தபா
னம்போலு, மல்வினையார்தமக்குவிடமாகுமன்றேயருந்துயரம் வந்திடி
னுமையன்பூசை, சொல்வழுவாதியற்றினரேலவர்கடுன்பஞ்சுடர்கண்ட
விருள்போலத்தொலையுமன்றே, பல்விசையம்பெறவிழந்தசெல்வமேவ
ப்பரமனாராதனையின்பணிசெய்வாயே. (கங)

காமனைக்கண்ணுற்குமரகண்டன்றன்னைக்காலினு லடர்த்தருளுங்
காலகால, நாமனைப்பூசனைபுரியநினைதியாயினருமறைதமகாவிலிங்க நாத
னுருஞ், சோமனைச்சென்னியில்வைத்தான்றனையர்ச்சித்தாற் சொலும்
பூசைபொன்றனந்தகோடியாகு, நீமனத்தினினைத்தவெலாம் பெறுதியி
ன்னுநிகழ்த்துதும்யாநிமலனரும்பூசைதானே. [கச]

ரமனுலபாகமேவுமிந்தப்பருப்பதத்திலுறையிலிங்கமநேகமாகுந்
ரமதாம்பார்ப்பதியார்பூசைசெய்ததிரிபுராந்தகலிங்கமொன்றுமேவு
பரமதாமவ்விலிங்கந்தனைப்பூசித்தாலொன்றுசதகோடியாமன்பினுடிக்
கரமதாலறுகுவில்வமொன்றுசாத்திற்கைவசமாமுத்திநலங்காணலாமே.

தீர்த்தகோடிகளெல்லாமுருவுகொண்டுசேர்ந்ததிருப்பருப் பதத்தி
ன்மேவுகின்ற, மூர்த்திபாமுப்புராந்தகலிங்கமுன்னாளைவேதனைப்புரிந்
தவன்னாந்தன்னை, யார்த்தபரனன்பர்கடுப்பித்திடச்செய்தோர்களிலமே
ல்லாமாசுசெய்துகதியுஞ்சேர்வார், கூர்த்தசெபந்தவந்தானம்விரதம்யா
கங்குறித்தியற்றிலவையனந்தகோடியாமால். [கசு]

அத்தலத்தினிடைக்கண்டாகன்னராமெய்யருளிலிங்கநாயகாதாமு
ளரன்றேறனைப், பத்தியினூற்பூசைசெய்தோர்பாவநீங்கிப்பரகதியிற்புகுவ
ரதற்கையமின்றான், முத்தரவர்சன்னிதியின்முதநுண்ட மூழ்கிலவர்
பெருமைரத்துமூழ்கல்வேண்டு, முத்தமமாமங்கவர்க்கேசாந்துமென்பூ
வொன்றினுக்கோர்கோடிசெல்வமுறுவரன்றே. [கஎ]

ஆங்கேபுண்ணியகோடீச்சரமென்றொருமரியகோடு முடியிலிங்க
மேவுகின்ற, தீங்கெதுமில்லாப்புண்ணியகாலத்திற்றெரிசித்தோர்புண்ணி
யகோடிகளைச்சேர்வார், பாங்கேயோர்பூதிருண்டப தனிறுளுப்பாரினுள்
ளதீர்த்தமெல்லாம்வந்துகூடு, மோங்கேமெய்த்தலந்தீர்த்த மூர்த்திமேன்
மையுடையதிவைபோலுலகிலடைகிலாவே. [கஅ]

உன்னதமாஞ்சிகரேசன்றன்னைக்கண்டோருலகினி லெங்கேனும்
போயுடல்வீந்தாலு, மன்னுசிவலோகத்தின்மேவுவாரவ்வரையினிலாட
கவிசர்மருவுகின்றார், சன்னிதிபாடகதீர்த்தந்தன்னிலாடிச்சங்கராமலவ
ர்தமையர்ச்சனைசெய்தோர்கள், பன்னுபரகதியடைவர்கண்டாயன்னப
ருப்பதத்திற்பிரமராம்பிகைசீர்கேண்மோ (கசு)

சிதேவிபிரமராம்பிகைதன்பாதந்தெரிசித்தோர் பூசித்தோர்சிந்தை
செய்தோர், பூதேசமுழுவதுமேபுரந்துவின்னுளும்புரந்தரன்போற்புரந்து
சிவபுரத்தில்வாழ்வார், மாதேவிபவடனையேவணங்குவோர்கண்மனத்தி
னிட்டங்கொடுப்பனென்றேவிரதம்பூண்டாண், மீதேவர்பணிதேவன்றே
விமேன்மைவேதமொருநான்கினுமேவிளம்பொணுதே. (உ௦)

வேந்தகேளிவைபெலாகிக்கவுக்ரவிமலனாத்திவன்றனைபே பூசிப்
போர்க்குச், சாக்கராயருள்புரிவதுனதுதன்பக்தாளிபகுப்புதிபெனவில்
வழுலம், வாய்ந்தசிவபோகர்சொன்றுநேன்றுசெல்வமன்னுதேப்வாநரும
மதயாநத்திரத்தில், போந்தாமறையவன்கேட்பப்பார்த்தபேதன்றுபுசழுந்
திமிலமையவர்க்குப்பின்னுஞ்சொல்வான். (உக)

முப்பத்திரண்டாவது பாக்கியதேவதைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௬௬௦.



முப்பத்துமூன்றாவது

# பலிபீடவன்னமகிமைச்சருக்கம்



வேறு

வெறியேறியபூஞ்சடையாய்விடையாயுமையோர்புடையாய்
மறியேறியகையிடையாய்வரியார்புலித்தோலுடையாய்
நெறியேதுமிலேன்வறியேனினையேன்வினையேனுனையே
குறியேன்சிறியேனடியேன்கொடியேனெனையாள்குவையே. (க)

அல்லார்கண்டன்பூசையமைப்பாயரசேயென்று
சொல்லாநின்றயோகிதுணைத்தாடொழுதானழுதா
னல்லாய்ச்செல்வமுளநாளடிச்செய்யாதமர்ந்தே
னில்லாமையினான்மெலிவேனென்செய்வேனியானென்றான். [உ]

பரியும்பத்தியில்லேன்பஞ்சாமிர்தமேமுதலா
முரியபொருள்சோடசமாமுபசாரமுமில்லாம
லரியபொருடன்பூசையமைப்பதெவ்வாறையா
தெரியுமெனதுசிந்தைசிறுமைத்தொழில்செய்திடுமோ. (ங)

ஓமப்பொருளொன்றில்லாதுனுற்றும்பாகந்தன்னு
லாமப்பபொன்றுண்டோவவைபோலுமையாள்கணவ
னாமப்பூசைக்குரியநல்லபொருளொன்றிலதேற்
காமற்காய்ந்தகடவுள்கருணைபெறுமாறெவனே. (ச)

என்றுநின்றுபுலம்பாவினையுமரசன்றனையே
நன்றுநோக்கியோகர்நகைசெய்துரைசெய்கின்றா
ரன்றுசெல்வம்பெற்றுப்பரனைநினையாதயர்த்தாய்
குன்றமுன்றன்மதிமைக்கொழுந்தீக்கொளுவாயென்றார். (ரு)

எவ்வாறேனுங்கிடைத்தவியக்கொண்டிறைவன்பூசை
செய்வாயென்றயோகர்திருத்தாளிணையிற்பணிந்தே
யவ்வா[illegible]ன்புரிவானணினீர்வாவிமூழ்கிக்
கைவாறருகுகொய்தான்கமழ்மஞ்சனமுங்கொணர்ந்தான். (சா)

ஆவிக்கநேகயுறையுமமுதத்திரளாமிமயத்
தேவிக்கிறைவன்குறியைச்சிந்தித்தருச்சித்தனனாற்
பாவித்திடும்பூசைபலநாட்புரிந்தங்குறைந்தா
னோவுற்றனமெய்திலதாலுணவுற்றிலன்மன்னவனே. (எ)

உவந்தசெல்வமுறுநாளுரியபூசைபுரியா
வவன்றனகந்தையடங்கவருளுநர்ளிலொருநாட்
சிவன்றனருளின்மதிநாடிரயோதசிவந்தனவாற்
கவன்றநெஞ்சன்கஞ்சக்கமழ்பூக்கொடுவந்தனனே. (அ)

அற்றைத்தினத்திலருகுமடவிப்பொருளுங்கோணர்ந்தான்
கற்றைச்சடையான்பூசைகருதிப்புரிந்துகண்ணீர்
முற்றப்பெருகவிழ்ந்துமுறைபிற்றாழ்ந்தேயெழுந்தான்
சுற்றிச்சூழ்ந்தேயுடலந்துளங்கக்குழைந்தாடினனே. (௯)

கருணாநிதியெம்பெருமான்கண்டேயவன்றன்செல்வம்
வருமாறருள்செய்தன்னான்மன்னன்மகிழ்செய்திடவே
பெருமாநிலமுமரசும்பெருகுங்கிளையும்பொருளு
முருமாவழகுந்திறமுமுற்றேவிறல்பெற்றனனே. (க௦)

வேறு.

இறந்திடுந்தன்பெருஞ்செல்வமுள்ளவெல்லா மிந்திரன்பெ... போலவெய்தவேந்தன், மறந்தனன்முன்பூசனையைச்செய்திடாமன்பாழி ந்தசெல்வமிப்போதுவணங்கலாலே, பறந்தருமம்பிகைபாகனளித்தானி ன்னவவன்றனக்காக்குவனென்றேயகத்திற்கொண்டான், சிறந்ததிருப் பணிபூசைதிருவிழாமெய்ச்சிவதருமவகைபுரியுஞ்செய்கைபூண்டான். (கக)

ஆலயமண்டபசிகரகோபுரங்களாதிபமைத்தாவரணதேவர்க்கெல் லா, மாலைபரிவட்டமாபரணவர்க்கமன்னுமகாபூசையினிற் சிறப்புஞ்செ ய்தான், சோலைநந்தவனந்தடாகந்தீபங்கள்சூழ்வீதிவருவிம்பர்துவசத ம்பஞ், சீலமுறுமாதவிழாமாதராடநீர்த்தநீராடலுமெசெய்வித்தானல். (கஉ)

மன்னுமகாவபிடேகம்புரிவித்தான்பூமாலைரத்நமாலை கற்பூராதிசந் தம், பன்னரும்வெண்பட்டுமுதலாயதூயபரிவட்டவகைசாத்தும்பரிவு செய்தா, னன்னமலைகறிச்சிகரம்பானெய்பாற்றினருவிதிருப்பாவாடை யூட்டுவித்தான், றுன்னியதூபந்தீபமுதலவாயசோடசநல்வரிசைகளுஞ் சூழ்வித்தானல். (கரு)

சாற்றரியபூசனையின்முடிவினெம்மான்சன்னிதியிற்றண்டெனவே வீழ்ந்திறைஞ்சிப், போற்றிமனங்களிகூரப்புரிந்துகண்ணீர்பொழிதரமெ ய்ப்புளகங்கள்பூப்பவாய்ப்ப, வாற்றருமன்பென்புருகவானந்தக்கூத்தாடி னைரன்மகிழவவன்றொண்டர்க்கே, யேற்றியவன்னஞ்சொன்னமாடக ல்கியெப்பொருளுமெய்ப்பொருட்கேயேற்பச்செய்தான். (கச)

அண்ணலவன்றனக்குமன்பர்தமக்குமேநம்மரியசெல்வமாகுமெனை வனைத்துநல்கிக், கண்ணுதல்பூசையின்சேடம்புசிப்பதல்லாற் கருதில னென்றென்றுதிடசித்தங்கொண்டா, னெண்ணிபவச்செயல்புரிவோனி ன்னின்முன்போலிடருறுவேனெனவுற்றானவன்றனட்டி, னண்ணியாா ற்குலம்பெற்றமாந்தரெல்லாநனார்திடபத்திநலம்பெற்றாரே. (கரு)

புரவலனிப்படிபுரிபவவன்றானுநாமபூலோகவிந்திரனேபோன்றானெ ன்றே, யுரமுறுமைந்தர்களொருநூற்றொருவர்ப்பெற்றானவருமேயரன் பத்தியுறுதிபூண்டார், திரமுறுமாலயங்கள்சிவலிங்கபூசைதிருமாலை தீப

வகைச்சிறப்புச்செய்தே, பரவுறுகாலங்கள்பலபுரியப்பெற்றுப்பரமனரு
ள்பத்திசித்திப்பயன்பெற்றாரே. (௧௬)

மன்னுலகெலாம்புரக்கும்விறல்கள்பெற்றார்மாதிரமோரெட்டும்
போய்விசையமுற்றா, ரண்ணல்வையமாப்புரவிதேர்களூர்ந்தேயண்டமெ
லாம்புகுந்துவருமாண்மைமிக்கார், விண்ணவர்தம்பதம்விரிஞ்சனுடுமே
லாம்விண்டுவின்றனுலகமுஞ்சென்மேன்மைபூண்டா, ரெண்ணரும்பல்
புவனமும்போய்த்தடையுறாமலினிதுவிளையாடியேமீள்குவாரால். (௧௭)

இவ்வாறுசெலுநாளிலொருநாளெண்டோளெண்கணன்ற னுலகத்
திலெய்தினரா, லவ்வாறுகண்டெதிர்கொண்டோடிவந்தேயவன்வணங்
கிக்கொடுபோந்தாசனங்களேற்றி, மெய்வாழ்வுவந்தெனவுபசாரங்கள்
வேண்டியவர்புரிந்திடலுமருகுசார்ந்த, செவ்வாறுசேர்முனிவர்யாரின்
னோரிச்சிறப்புநீபுரிவதென்னேசெப்பாயென்றார். (௧௮)

அருமறைதேர்தருமுனிவிர்கேண்மினின்னோர்க்கரிய மூதாதைதங்கி
டமென்றோதுந், தருமநெறிபுரியாதபாவதேசந் தனிலிருந்தான்றைய
லார்மையலாலே,மருவுமவனன்றட்டி லுற்றகோயில்வாயிலிற்றீமிருகம்
வராவண்ணங்காக்க,வொருவனமைத்திடவுற்றான்பலிபீடத்தினுமைபா
கனுண்டிகைக்கொண்டுண்பானன்றே. (௧௯)

அன்னவன்றன்மனைவியுமேநுகர்ந்துபூரித்தமர்ந்தனளத்தருமத்தா
ற்கருப்பம்வாய்த்தா, டன்னிகரிலாதவொருமகவையீன்றாள் சந்ததிசுந்
தரமுற்றான்றனைபங்காட்டின்,மன்னவன்மைந்தனையில்லான்கொடுபோ
கித்தன்வளவரசிற்கிளவரசாவைத்தான்வேந்தன், பின்னிறந்திடப்பெ
ற்றதந்தையோடும்பிள்ளையங்காட்டரசுரிமைபெற்றானன்றே. (௨௦)

அருந்தவத்தீரவன்கருப்பத்திருந்தநாளினரனார்நின்மாலியத்தினன்
னசாரம், பொருந்துமன்னையுதரத்திலிருந்துமந்தப் புண்ணியத்தான்ஞா
னமுற்றான்புத்திகூர்ந்தே, திருந்துபுவியிற்சனித்தால்வேந்தனாவேன்சிவ
ன்றனைப்பூசனைபுரிவேனெனச்சிந்தித்தா, னிருந்தனனவ்வாறடைந்தா
ன்மின்னார்மோகத்திளநலத்தாலரன்பூசையிகழ்ந்தானன்றே. (௨௧)

ஆதலாலரசிழந்தேயடவிசேர்ந்தானரியசிவயோகியுபதேசந்தன்னா
ற், காதலான்மல்லிகார்ச்சுனத்தின்மேவுங்கடவுளைப் பூசனைபுரியக்கரு
ணைகூர்ந்தான், பூதலத்திலிழந்தசெல்வமீண்டும்பெற்றேபொருவரும்ப
த்தியிலரனைப்பூசைசெய்தா, னேதிபெறுமவன்பெற்றபுதல்வரின்னோரு
றுதிபெறுஞ்சிவபூசையுற்றுளாரே. (௨௨)

அண்ணலாராலயங்கண்மிகவுமேயுண்டாக்கினார்சிவலிங்க மமையச்
செய்தார், நண்ணுபன்னந்தனவனங்களமைத்தேயந்நறுமலர் வில்வங்
கொடுபூசனைநயந்தார், திண்ணமிகுசிவபூசைசெய்யப்பெற்றோர்செல்வ
மென்றுமழியாமற்செழிக்குமன்றே, கண்ணுதல்பாலகந்தையின்றிச்சிந்
தனைவைத்தோர்காசினிக்குட்குபேரன்போல்வாழ்வரன்றே. (௨௩)

மைந்தசெறிமனைவியர்களியானைசேனைவாசிதனதானிய வர்க்க
னைசேர்செல்வமுந்துசதகோடிபூசைசெய்வோர்முழுமனையிற்றழை
க்குமன்றேமுனிவர்கேண்மின், னிந்தவுலகிவர்புருதலரிதோமேலாமிருங்க
யிலைபுகுவரெனவேதன்சொன்ன, னந்தவுரைபாக்கியதேவந்தனக்கே
யறைந்தமரர்க்குநந்தியருள்செய்தானால். (உ௪)

முப்பத்துமூன்றாவது பரிபீடவன்னமகிமைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௮௪.



முப்பத்துநான்காவது,

## சிலாதரர்சமகவரங்கேட்டசருக்கம்.



வேறு.

தேசமதின்கயிலைவாசமமேவர்தொழுதேவமநீள்
பாசமறுசமுறவேசெய்திடுபாதமபாவியுமைதன்
னேசமதிர்க்குணநிரஞ்சனநிராமயநிராதரம
வீசமவென்றுதொழுவார்சனனவாரிகரையேறுவர்களே. [௧]

நந்திபகவான்பகர்செய்வானருமறைத்தகரையினன்றுபனவன்
புந்திமகிழ்பாக்கியமெனுங்கடவுணங்கைபுகல்பொருவில்கதைகேட்
டந்தணன்வணங்கிபரனெங்கைதரவந்தெனையடுத்துமொழிகொல்யா
னுய்ந்தனனுனைப்பிரியலாவகைபவன்பணியுஞற்றுவனரோ. (உ)

என்றுறுசிகொண்டுதியமத்தொடிசயத்தனையேத்துதல்செய்வான்
றுன்றிடுசெல்வங்கொடுதொழுந்தகையிலிங்கமுறுசூழலதனிற்
குன்றுருவுகொண்டகுலமாளிகைகொழுஞ்சிகரகோபுரமுடன்
றென்றறவழ்மண்டபமுடன்சினகரப்பணிதிருத்துதல்செய்தான். (௩)

தேசுபெறுவாசனுறுதீபநிரைதோரணமுமெத்திரடனில்
வீசுசுடர்மாலையொடுகோபுரவிளக்கணிவிளக்குதல்செய்தான்
வாசமுறுமாலைகுலைவாழைகமுகாதிபலமண்டபமமைத்
தீசனைமையாணருமநேசன்மகிழ்பூசனையியற்றிடுவனால். [௪]

ஐந்தமுதவாறுகனியூறினியசாறுவாய்க்காலடுகுளந்
தந்தவபிடேகமுடனறுரசமேறுகறிசாரலுடனே
முந்துமனவெற்பமுதுசெய்துதாம்பூலநுகர்முறையுதவியே
யெந்தைமகிழ்சோடசமதானவுபசாரமுமியற்றுதல்செய்வான். [௫]

ஆடலொடுபாடல்பதினெட்டெனுமியற்றொகையமைத்தனனரன்
சேடமடியார்க்கமுதுசெய்திடவளித்துமகிழ்சிந்தையுடனே
தாடொழுதுதோத்திரமுமெத்தியிருகண்களுநீர்சொரவிரவிற்
பீடுகெழுமன்னனவிரசாதமுநுகர்ந்திசைகள்பெற்றனனரோ. [௬]

இன்னவகைசித்தமுமியற்றியரனுக்குரியபாகமுடனே
மன்னுமிடபக்கொடியெடுத்துறும்விழாவணிவகுத்துமுறையாற்
பன்னியசிறப்பிறைவனுக்கிவணியற்றியிடுபான்மையினவாத்
தன்னிகரினாரதருடன்சனராதியர்கள்சார்ந்தனர்களே. [எ]

வேணிமுடிகண்டிகையின்மாலைதிருநீறுமிளிர்மெய்த்தவர்கடாஞ்
சேணில்வருகின்றசெயல்வேதியனுணர்ந்துமகிழ்சிந்தையுடனே
காணுமணிபூதியணிசோதியொடெதிர்ந்தருகுகண்டுதொழுதே
பூணுமனமன்பொடவராசனமுறச்சரணபூசனைசெய்தான். [அ]

மங்களமொடென்பழயமாதவமிதென்னவிவண்வந்தருள்செய்தீர்
சங்கரனருச்சனைதரும்பரிசுமெய்க்கதிகள்சார்பலனுமே
யிங்கெனதுசிந்தைதெளியும்படியியம்பிடுவிரென்றுரைசெய்தான்
பொங்குநகைகொண்டிசைகொணாரதமகாமுனிபுகன்றிடுவனால். [கூ]

வேதமுறைசெய்ததருமங்களொருகோடிமறையோய்விமலனா
நாதனுறுபூசனைசெயுந்தருமமொக்குமெனநாட்டவசமோ
வோதிலெளிதாகுமவையோரறுகுவில்வதளமொன்றதனையே
யாதிசிவலிங்கமுடிமீதணியின்மேவுபலனார்பகர்வரே. (கய)

பூசுரவருந்தருமமானபொருள்குய்யமிதுபுகலுவனரோ
காசினியின்மாந்தர்கதிசேர்வகையிலிங்கவுருகாட்டியதுகா
ணுசிலிதுநன்னிலிதியாசமுளதொன்றதையறைந்திடுவன்யா
னேசமொடுணர்ந்திடுதியென்றிசைகொணாரதனிகழ்த்திடுவனால். [கக]

வேறு.

ஆதிநனிலருங்கபிலைமேவுமெங்களாதியார்கனகசிங்காதனத்திலேறிச், சோதிமணிமண்டபத்திலிருந்தாரன்னசோதியாந் தன்மையெவர் சொல்லற்பாலார், பாதிமதியணிந்தமின்பொற்சடையார்தூவெண்பட்டுடையார்பொன்போலுங்கையார்மெய்யார், நாதர்கிசாபதியொளியாருடவின்மாலைநவமணிமாலிகைகண்டிமாலைபூண்டார். (கஉ)

பரவுதிரிலோசனத்தர்நீலகண்டர்பார்ப்பதிதன்முககமலம் பார்த்துமூரல், புரியுமறைபாகமங்களுணர்தற்கெட்டாப்புனிதனார்சச்சிதானந்தமானர், தெரியுமந்தமாதியில்லார்சுயம்ப்ரகாசர்தீவினைதீர்த் தன்பர்க்காணந்தநல்கு, மரியமங்களத்தரத்தர்சுத்தர்சாந்தரவரொருவர்க் குணர்வரியவண்ணலாரே. (கங)

பவர்வீமர்கரைமரணந்தீர்பினகபாணியார்பாகத்திலிருக்குமம்பை, தவயோகர்பணிபரனைநோக்கி மாற்றஞ்சாற்றுவான்முற்றுணர்ந்த சம்புவேநா, னவமானபொருளொன்றுகேட்கவுள்ளநயந்துளேனுயகனேநானிலத்தோர்க், குவமானமற்றகதியெளிதாகல்கவுள்ளதொரு தருமமியாதுரைப்பாயென்றாள். [கச]

இமையமங்கைகேட்டிமெய்ப்பதிலிங்கபூசையிட்டசித்திநல்கிடு மந்தரங் களாரு, மமையுமதுவேயெவர்க்குமெளிதாகுமரும்பொருளா நமையு ணர்தற்கதுபோலுண்டோ, சமையவாசாரமுடன்பூதிகண்டிதரித்துட லி னுயிர்நீங்குங்காறும்பூசைகமையுடன்செய்பவருமையெயெமையேபோ லக்கயிலைமலைதனனில்வீற்றிருப்பர்கண்டாய். (கரு)

அந்தணர்தஞ்சந்திவந்தனையேவேதமங்கிகாரியநியமமனைத்தினுள் ளுஞ், சிந்தைமகிழிலிங்கபூசனைசெய்யாரேற்செய்ததருமங்க ளெல்லாந் தீதாங்கண்டாய், முந்துமதர்க்கேகாலம்விதியேசந்திமூன்றதனிற் கால மொருமூன்றதாகும், வந்திடும்வைகறையுச்சியந்தியாமான்மற்றிவற்றிற் பூசைமறைவகுத்தவன்றே. (கசா)

காலமொருமூன்றுமங்கிகருமஞ்செய்வோன்கருதும்வகை யோயந் தான்புரியானென்னிற், சாலுமங்கிசீறிமெதும்வேயன்றிச்சாற்றிடுமக்க ருமபலன்றானுமின்றாற், சீலமுறுமதும்பானம்மிலிங்கபூசைசெல்வமுள் ளோன்பாவனையாற்செய்திட்டானே, மேலுமவன்பூசனையைமிதயத்தெ ன்றேணமென்றிருக்குநான்குமெத்திசைக்குமன்றே. (கள)

பாவனையின்பூசனையிற்பிரியர்நீசிப்படிபுகன்றமெதன்னெனவேபகர் திபாகி, லேவனையவிழிகேண்மோவந்தப்பூசையெல்லோரும் புரிந்திட வேயியலுமோதா, ஞவலனியானெனதென்னுஞ்செருக்குநீத்தநற்குரு வினுபதேசநன்மைபெற்றோ, ஞவலொழிந்தருங்கதியின்விருப்பமேவுமவ னேபாவனைக்குரியனவனன்றே. (கஅ)

உனதுகைபால்வைத்துவளர்த்திடுவில்வத்தினுறுதளிர்கொண்டர ளிட்டதிலுறுதிகொண்ட, மனதுங்கொண்டேபாவித்தேபூசைசெய்திமை த்தவெனுஞ்சற்குருவின்வாய்மையின்றித், தனதுபொருளிடமேவல்பெ ற்றுஞ்சாற்றுஞ்சாற்றுபொருள்கொடுபூசைதான்செய்யாம, லனவரதமு லோபத்தாற்பாவிப்போன்றானருங்கதிகள்பெறுவதுவுமரிதுகண்டாய்.()

சிந்தனைசெய்பாவனையர்ச்சனைக்குமூன்றுதிறமாகுஞ் சாதனங்கள வையேதென்னின், முந்தியதுசற்குருவாய்த்திட லிரண்டா முறைவிடய முழுதொழியுஞ்சீடனாதல், பிந்தியதுமனத்துறுதியிந்தமூன்றும்பே ருல கில்யாமுதவப்பெறுவரன்றே, தந்திடு மாகமபூசையிரண்டும்பாரிற்றரும் பொருள்கொண்டியற்றின்முத்திசார்குவாரே. (உ0)

நல்லபாவனையிலுற்றபூசையேனுநலம்பெறுகைப் பொருளினிற்செ ய்பூசையேனுஞ், சொல்லியதான்வைத்துவளர்த்திடு வில்வத்தின்றளிர் கொண்டேயருச்சித்தறாய்மையாமா, லல்லதுமற்றுளபூசைப்பொருள் களெல்லாமனையவில்வத்தளிரில தேற்புனிதமாகா, பல்வகையோமப் பொருள்களிருந்தும்யாகம்பத்தினியில்லான்புரியும்பரிசொப்பாமே. ()

பொருவருமாகமம்வேதம்வில்வமில்லாப்பூசையவமாமெனவே புக லுகின்ற, பெருந்தஞானக்கணுற்றோனெம்மைக்காணப் பின்னைமலப்பா

விக்குப்பெற்றிபோன்றுந், தருமயாகம்புரிவோன்விதிகளெல்லாந்தானறியிற்சங்கையிலாத்தன்மைபோன்று, முறைமையுடன்றன்னாலுண்டாக்கும்வில்வத்தொண்டளிர்கொண்டோன்பூசையுறுதியாமே. (உஉ)

* சிந்துவுடனக்தகனேமுதலசத்தர்சிந்தனுபூசையினைச்சிந்தைசெய்வோ, முந்துகூவிளந்தளிர்பெற்றிலரேலப்பேர்யொழிந்தொருபத்திரஞ்சாத்திலதுவாய்க்கொள்வேஞ், சுந்தரிகேளாவின்பான்முதலவாய தூப்பொருள்கள்வாய்ப்புறினுநமதுவில்வ, நந்தலிலாவிலையிலதேலவைகளெல்லாநலமுறுவென்றுரைக்குநான்குவேதம். (உங)

மங்கைகேணம்பூசைக்கங்கஞ்சொல்கேம்வாய்த்ததிருநீறுருத்திராக்கமாலை, அங்கமாமிலிங்கபாவனைகைசெய்யுந்தொண்டிமைவல்லனுயிருக்கவேண்டு, மங்கிகருமம்புரிவோன்வெண்ணெய்பூசியமைவதுபோலங்கமெங்கும்பூதிபூசிச், சங்கையிலாநம்பூசைபுரியவேண்டுஞ்சாற்றுநித்தானநானமாமே. (உச)

பூதிபூசனைக்குரியதென்பதல்லாற்புண்ணியகன்மங்ளெவற்றினுக்குவேண்டு, நீதிசேர்நான்குவன்னத்தவருநீறுநெற்றியிலாதருங்கருமங்கழ்த்தலாகா, வேதுசைவவைதிகசமார்த்தமென்னவுண்மையாகமவேதபுராணஞ்சொல்லு, மாதியகற்கருமத்தினீறிலாதானுகானல்லாற்பதிதனுவனன்றே. (உரு)

நீறணியான்சிவநாமமந்திரங்கணிகரில்காயத்திரியுநிகழ்த்தலாகா, பேறுதருமக்கினிகாரியத்தினீறுபின்றரிப்போமெனுது முன்னர்த்தரித்தல்வேண்டும், வீறுகாயத்திரியின்செபங்கள்செய்வோர்மேனியெங்கும்பூதியுத்தூளனம்புரிக்தே, பேறுடையநமைச்சிந்தித்தேத்தி லன்னோரெமையறிவாரெமதுருவம்பெறுவரன்றே. [உசா]

சாற்றருங்கண்மணியுமன்னதகைத்தே நந்தந்தண்ணளிசேர்வதற்கிரண்டுங்காரணங்கா, ணேற்றமாம்பூசையிற்பூர்வாங்கமைந்தாலிசைகாலம்விதிசந்திகுரவன்சீடன், போற்றுமுத்தராங்கமைந்தேயிலிங்கங்கண்டிபூதிபாவனைசெய்யும்பணியேயிந்த, வாற்றருமங்கங்களின்னவுற்றாலன்னோருரும்பூசைப்பலனுங்கைவசவாமன்றெ. [உஎ]

எய்திடுங்காமியமுத்திசேர்பலத்திற்கெமதிலிங்கபூசனைசாதனமாங்கண்டாய், மெய்தருமங்கங்களிரண்டுறுபூசைக்கேவில்வமுமோரங்கமெனவிளம்புமன்றே, செய்திடுமங்கங்களுறுபூசைதன்னாற்றிருந்துறுநம்முருவபாவனைதான்சேரு, முய்தருமப்பாவனையாலங்கமெல்லாமொருவிப்பாவனைசித்திபுடைஞவான். [உஅ]

அவன்செயனித்திரையுடன்சோம்பாதியின்மையகிலசிவபாவனையுமுடையனுவன், சிவந்தருமெய்க்குருபத்திபெற்றோன்காலந்தெரிபவன்பாவனைக்குரியசெல்வனுவா, னவந்தருபாவனையுமோரங்கமாகுநன்னியதி

---

* சிந்து-குறளன்.

வேதங்கள்புகன்றவாற்று, றுவந்தமறைதானுமோரங்கமாகுமுயர்பூதி பிரதானவங்கமாமே. [உகூ]

பகர்தருமிவ்வங்கமெலாமிகத்துசெய்யும் பாவனையங்கப்பயனைத்த ருமோவென்னி, னிகழ்தருபோனகம்புரிந்தவுடனேசொல்லுநிறைபோகப் பலனெல்லாங்கொடுக்குமாபோற், றிகழ்தருமிவ்வங்கங்கடமமின்மேலா ஞ்சிவலிங்கத்தாரென்றுசிறந்ததன்றே, யகமகிழ்மூன்றங்கிதனிற்புகலுகி ன்றவாகவனீயஞ்சிறந்ததுபோலன்றே. [ஙo]

சொல்லுமுலகத்திலிங்கம்பலவுண்டந்தச்சுடரிலிங்கங்களைத்தொழி ற்காமாதிநல்கு, நல்லருமறைசலிங்கந்தன்னையந்தநதிப்புனலாலபிடேக ம்பணிபத்தீர்த்தத், தெல்லொளிசேர்குலேயறுகினருச்சித்தேத்தினின்ப விடடைவர்மானிடர்களாங்கே, புல்லுதருச்சிவமாகுமதனைநாளும்போ ற்றுவார்சிவலோகம்புகுவரன்றே. [ஙக]

பெண்ணரசேசூழ்வுலகினிலிங்கமெல்லாம்பிரியமாக்கென்பதுதான விதியன்றே, நண்ணுகின்றவவற்றினுநம்பத்தறைவாறுளிலத்திலெங்கேனு மிருந்துநம்மைத், திண்ணமுறுதனதுளத்திற்றியானஞ்செய்யுஞ்செயலி னன்மிக்கானவிலிங்கமாவ, னெண்ணறுமற்றுளவிலிங்கமதெல்லாஞ்செ ய்கைபெறின்மந்த்ரம்பாவனையாலியற்றவேண்டும். (ஙஉ)

சாற்றருநம்பத்தனென்னுஞ்சைவலிங்கந்தனிற்சிவபூசைக்குரியமனு ப்பதிட்டை, யேற்றவிதியிருப்பிடமாமாதலாலேயேயுமவன்றனுபார்ந்த விலிங்கமாவன், போற்றுசைவனுமிலிங்கத்துடனேவேதப்புகலுநருமறை யிலிங்கஞ்சுயம்புவாகு மாற்றல்பெறுமவ்விலிங்கத்துடனேமுத்தியருட லத்திற்குறியுமேபதிட்டைவேண்டா. (ஙங)

முத்திசித்திதருதலங்கடம்மிற்காசிமுதற்றலைத்தலத்திலிங்கமுள்ள வெல்லா, முத்தமமெய்க்கதிதருமேயுதவுமென்மையுடையநருமறையி லிங்கமகிமைபொன்றே, மெய்த்தவத்தின்பயங்கடருமிக்ககோதாவிரி முதலினாசிகாத்ரியம்பகம்பேர்ச், சுத்தலிங்கங்கங்காசங்கமத்திலிங்கஞ் சோதிலிங்கமல்லிகார்ச்சுனவிலிங்கம். [ஙச]

இனையபெயரிலிங்கங்களெல்லாம்பூசித்தேத்துவோர்க்கிகபரங்கண ல்குமென்றே, யனையமல்லிகார்ச்சுனவெற்பதுவேலிங்கமாகுமொன்பா ணிபோசனையினகலமேவுந், தனைநிகரிற்றிநமயாருமகத்தசயிலத்திற் சிலாதரன்மெய்த்தவங்கள்செய்தான், புனைகுழலாயதனாற்பார்கடுங்கிற்ற ன்னசுரன்முன்யாம்புக்தோம்புகழ்ந்தான்கேண்மோ. (ஙரு)

தருமவடிவாம்பொருளேபோற்றியெங்கள்சங்கரிசகாயனேபோற்றி போற்றி, பருகுமமுதப்பதியேபோற்றியத்வைதபரனேமகேசனேபோற் றியென்றே, யுருகுமன்பினுற்றுதித்தானெனதுநெஞ்சத்துளதுபதந்தாங்கா

மனுறையும்வண்ணம்,பெருகும்வரந்தருதியென்றன்யோகர்நெஞ்சம்பிரியாதவுனைக்காணப்பெற்றேனென்றான். [௩௬]

அறுதொழிலந்தணரியற்றுங்கருமத்திற்கேயரும்பயன்றந்தருள்பொருளேயடியனேனுக், குறுவரந்தந்தருள்மறையின்சமகந்தன்னிலோதுபொருளிபாவையுமேயுதவாயென்பான், மறுவில்சென்மம்வற்சியுன்றன்பூசைதன்னின்மனஞ்செல்லல்கீர்த்திநல்லபுத்தியாக, முறுமிசைந்தகவினையுடன்சுருதிகானமுற்றநல்லகேள்வியுடன்செவிகள்காந்தி. (௩௭)

மிக்கவொளிசேருருவம்பிராணனேடுவியானசமானனையடக்குமேலாஞ்சித்தந், தக்கவொருவாக்குமனங்கண்சமத்துச்சரீரதிடம்பலம்வாணுரைநல்லான்மாத், தொக்கநன்மைபெறுமுடலநற்பேர்மேற்கோள்சுடர்க்கவசநலங்கொளங்கம்பெலன்கொளென்பு, புக்கசென்மம்வரினுமழகானதேகம்புகல்விசையமாதிபத்யநல்லகோபம் (௩௮)

நன்மனைவிநோயில்லாவுடலம்வெற்றிநல்லபுனல்விசிட்டமுடறடித்துற்றுலும், வன்மைபெறுபாரமிலாதுறல்கிளர்ச்சிவாய்மைவிசுவாசமுடனன்னுலோகம், பன்மையுறுதிரவியமேவருதல்போதல்பகரறிவுநன்னடைநல்வழிவிசேடஞ், சொன்மருவுசெல்வம்வளர்ந்திடலேமட்டுச்சொல்லுறுதிபுருடார்த்தஞ்சுகங்கல்யாணம். (௩௯)

நல்லதலம்பாக்கியஞ்சாரதிதாரித்தனன்மைபிரவஞ்சநல்லபுதல்வர்ஞானஞ், சொல்லரியநலப்பையொடுபாவநாசந்தூவமிர்தஞ்சயரோகமிலாதிருந்த, லல்லல்புரிதுட்டசெந்துநலிதறீர்தலாயுமருவார்பயமிலாதிருத்தல், புல்லசுகசயனநல்லதீம்பானெய்தேன்புதியரசமூர்ச்சிதமேடுற்றதயிருடனே. (௪௦)

உத்தமமழையேபயிர்ச்செயன்மித்திரபேதம்புரிதலூறிலாதுறனிறைதல்வெதநாளாண்மை, தருபயற்றினனசாரநற்பசிநெல்லுழுந்துசாற்றெள்ளுந்துளச்செந்நென்முதிரைகோதும்பை, புகுசாமைதினையிர்க்குச்சம்பாக்கன்பண்புகலுமலைமணல்ராசதருவனம்பொன்னயமே, மிகுசீருருநாகம்வெண்காரம்பஞ்சவிதலோகமங்கியுடன்விருத்திநல்லபயிரே.

கொழுமீதிப்பொருள்வனத்திற்பொருளில்லநிறைதல்கோதிலூர்க்காலிவளனிறிரைபாகப்பொருள்கள், தொழின்மேவும்வல்லவனக்கினியிநத்தான்சோமன்சூரியன்பாரதிபொன்னோன்வருணன் விண்ணோர்தச்சனுமின்மேவுமித்திரதேவர்களயன்மான் மருத்தோரிரும்பூமிவான்சுவர்க்கமெட்டிரண்டாந்திருக்கே,வழுவாநற்றலைநல்லகுறி நல்லகிரணம்வாய்த்தநல்லகயிறுநல்லகுடையதிபர்க்கதிபம். (௪௨)

மென்மொழியெங்கணுநிறைவுமயித்ராவாணர்மிக்கவாசுணர்பிரதிப்பிரத்தாதாசுக்ர, னன்மையுடனெனக்குரிமைத்தொழில்புரியவேண்டுநலமுறவும்பாகச்சமித்துத்தருப்பையினைவிரித்த,நன்மைவேதிகைதிண்ணைதிட்டிணியஞ்சுருக்குச்சுருவமொடுசமசபாத்திரக்கலுங்குழவி,

வின்மருமதுரோணகும்பங்குழல்வாயுவிருப்பாமிக்க பொருளாக்கினேத்திரன்விசுவபாத்ரம். (௪௩)

தனிக்கிரகஞ்சபைபுரோட்சம்மவபிரத்ததானநன்மாளிகைவெய்பிறருமசுவமேத, மினித்ததிதியதிசொற்கமிருக்குமறைசாமபெசுரவேதமதீக்கையிருதுற்றதவங்கள், பனித்தபகலிரவுமழைகளில்பாகமெலிவுபடாமைகருப்பந்திரிசவுனந்திரிசவுதந், தொனித்திடுமெர்றுதல்மூன்றுகன்றெருதுவசியஞ்சொன்மேன்மையிடபநல்லபசுவுடன் கண்டேசவியே. (௪௪)

மனவாக்கான்மாவுடனேயெனுமிவைகளெல்லாமகமதனிலெனக்குவரப்பணித்திமாதேவா, வுனதுவசமடைந்துநினதுருவங்களாய்வையன்றேயான்வேண்டற்குதவிடவேவேண்டுங், கனதைபெறுஞ்சருவசுதந்தரனீநெஞ்சிற்கருதிலளித்திடற்கரியபொருளொன்றுண்டோ, வனகமறைச்சமகத்திற்புகன்றபொருளனைத்துமளித்திடுதிகவலையின்றியுனையருச்சித்திடவே. [௪௫]

என்றினையவாம்புருடார்த்தங்கள்கேட்டானெழிற்சிலாதரமுனிவனென்னவெம்மான், குன்றரசன்மகடனக்குப்புகன்றனென்றுகுலவுநருமதைக்கரையினுறைமறையோனுக்கே, நன்றறிநாரதமுனிவன்றனிசைத்தானென்றேநான்முகன்மால்வானவர்கோனே முதலோர்கேட்பத், தென்றறவழ்தடஞ்சாரற் கயிலைகாவற்றிருநந்திதேவனங்கண்செப்பினனே. (௪௬)

முப்பத்தினாலாவதுசிலாதரன்சுவரங்கேட்டசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-க௦ரு௦.



முப்பத்தைந்தாவது,

# வேதபாதச்சருக்கம்.



வேறு.

மதிமந்திரமுடனேயுபர்வரைமந்திரதிடமும்வாணாளழகுஞ்செந்தமிழ்வாக்குந்திருநோக்குங், கதிகொண்டெழுபரிண்டெழுகதிர்வையமோடெழுகடல்சூழ்புவிபரசும்பரகதியும்பெறுவாரே, விதிமுன்புகன்மறைசேர்மனுவிபஞகமபோதும்விதியின்படிபுனைசந்தகில் விரைவாரலர்கொண்டே, நதியுங்குளிர்மதியும்பொதிசடையன்விடையேறுநாதன்றுணைப்பாதந்தனைநாளுந்தொழுவோரே. (௧)

நாதன்கயிலைக்காவல்கொணந்தீசுரனைவில்லாறுடும்பொருள்கதிநல்கியகிந்தாமணிநம்பன், வேதம்புகல்சமகப்பொருள்யாவுந்தருகெனவேவினவுஞ்சிலாதரனுக்கருள்வேனக்கணுவங்கே, சீதந்தருகுளிர்சாரலின்றீர்த்

த்தச்சயிலத்தின் சிவகங்கையினருகேதவசிலன் குறுமுனிவன்,பூதங்க
ணெருங்கக்கணபதி சேயுமையுடனே பொன்மேருவிலுடையானெதிர்
போந்துற்றதுகண்டான். (௨)

காபத்திரிமனுவேவாதியபற்கக்கடவுடன்முன்கடிதோடியணைந்தேயிரு
காலிற்பணிவுற்று, னேயத்துடனெதிர்நின்றிடுதுண்டிக்கணபதியைநேர்
கண்டுவணங்கித்துதிபுகல்வானிறைமதனீர், பாயத்திகழ்சுவடும்பொருபா
பக்கபடனேயேபடியச்செயுமடிகைப்பகு வாயும்மடியவர்தம், மோயத்
தருவினைசாடியவடியும்முபர்முடியுமொருகோடிவண்டி சைபாடியகரட
ங்களுமுடையாய். [௩]

வரையுந்தனிநகருங்குடிவாழும்பதியுடையாய்வானத்தவர்பணிதா
மரைமலர்ச்சேவடிப்பரனே, யுரைகொண்டிடுகவிஞோர்புகழொப்பாரு
மிலாதோயுமைகோனருள்புதல்வாவிடரிருள்சாடியவொளியே, விரைத
ங்கியபதுமாசனர்பரவுங்கணபதியேவினையனுனைமறவேன்மிளிர்சரண
ஞ்சரணெனவே, கலைரகண்டறியாவன்பொடுதொழுதான்குமரேசன்க
மழ்சேவடிபணிந்தேயுளங்கசிவுற்றெதிர்புகழ்வான். (௪)

பயபத்தியினிருதாள்பணிபவர்சித்திகளுடனேபயில்புத்திகள்பெ
றவேயருளுமையொக்கலையுறைவோய், கயிலைக்கிறைவமந்தாதொழும
மரர்க்கருள்கந்தாகடுந்தாருகன்விழவேயயில்கடிந்தேவும்விநோதா, மயி
லிற்புகழுநகாகுறமான்மேவுமணாளா மணமேவுகடம்பாவிரைமலர்மா
லையின்மார்பா, தயைவைத்தெனையாள்வாயிருசரணஞ்சரணென்றுன்ற
னிமாமுதன்முன்போயுமைதலைவாசரணென்பான். (௫)

வேதங்களினோதுஞ்சிவதருமப்புனல்படிந்தேவினைமாசறுமுனிவோ
ர்பணிவிரைத்தாண்மலர்சரணந், தீதினறடியவராகியபயிரானவைதழை
யச்சீதந்தருமழைபோல்வருசெந்தாமரைசரண, நீதம்பெறுமறையோ
னிமையவர்மான்முடிமணிபானீராஞ்சனமெடுத்தேயவர்பணியுஞ்சரண்
சரணம், பூதங்களினுருவாய்வருநாதங்களினருவாய்ப்பொன்னம்பலமி
சையாடியபொற்சேவடிசரணம். (௬)

காலாந்தகமிருத்திஞ்செயகங்காதரகாமற்காய்ந்தோய்பசுபதியேசுட
ர்க்கண்மூன்றுடையோனே, சூலாயுதவிடபக்கொடியுடையாய்திசையு
டையாய்தோளாயிரந்தாளாயிரமுடியாயிரத்தோனே, மாலாரணனறியா
வடிமுடி ரப்மலர்மங்கை வளர்கொங்கையின்களபங்களைமார்பெங்கணு
மடிவேவா, பாலாலமுண்டிருள்கந்தரவுயரந்தரவிமையோராராதனைபுரி
மாதுமைபானேசரண்சரணம். (௭)

கதிமன்னுபர்பெறவேயருள்கடல்சூழ்புவிக்கிறையேகல்வித்தவமு
னிவோர்மனக்கமலத்துறைவோனே, யதிகம்பெறுமொருமூன்றுலகைம்
பூ[illegible] செல்வநிதியே

கொண்டிடுமீசானந்தற்புருடத்தொடுவாமம்பகர்கின்றவகோரஞ் சத்தி யோசாதமெய்ப்பரனே, துதிகொண்டிடுபெற்கேசுரவீமேசுரபகன்கண் குலுந்திரிபுரநீறெழமூளுங்கனனகையாய். (அ)

செனனப்பிணிதீர்க்கின்றசஞ்சீவித்தெய்வமருந்தேதேவாசுரர்பூசித்திடுமோனந்ததிபாகா, கனகக்கிரியுமையைப்பிரியாதோயவடனமேற் கைவைத்துயிர்தழையும்படிகருணைப்பயிர்வளர்ப்போ, யெனையுற்றிடுபவத்துயர்தீர்த்தாண்டருளிறைவாவிரும்பூதங்களசரஞ்சரமெவையுந்தருவோனே, யுனதற்புதசரணஞ்சரணென்றானுமையவடனுபயப்பதம்பணிந்தேதுதியோதுற்றனனன்றே. (கூ)

சிவன்பேரெழில்காணத்திருக்கண்ணூர்வமுமவன்றன்றிருநாமங்கள்கேட்கத்திகழ்செவியுற்றிடுநசையு, நவஞ்சேர்புகழ்பரவத்தனிநாவுற்றநயப்புஞாதன்புனைகளபப்பரிமளநாசியின்விருப்புந், தவஞ்சேர்தருபதபூசையிற்கைபார்வமுமார்பிற்றழுவும் புளகஞ்சேர்தருமெய்யாசையுந் தழைத்தோ,பவஞ்சேர்வினையேன்செய்பிழைமுழுதும்பொறுத்தாள்வாயயே,ன்றன்சரணஞ்சரணுமென்றுபணிந்தான். (கo)

வேறு.

இவ்வண்ணநின்றுதென்றறவழ்பொதியவரைமீதிலிருந்துதென்பா, ருய்வண்ணத்தமிழ்புகன்றகும்பமுனிவரன் புகழ்ந்தானேதுகின்றான், செவ்வண்ணப்பொன்வரையோர்பாதியிர்த்ரநீலவொளிசேர்ந்ததென்ன, மைவண்ணவிழியுமைசேரத்தநாரீசசந்த்ரமவுலியோனே. (கக)

உலகைவளர்த்தாக்கவல்லாயுயர்வரையுஞ்செபங்கொள்ளுமுயர்வினோதா, வலகிறேவரையடிமைகொண்டேவல்கொளுமிறையே யம்புயப்பெண், டலைவன்பாரதிகேள்வனிந்திரன்சந்திரன்பருதிமுதலோர் தங்கள், குலவுபூசனைகள்கொண்டங்கவர்கருமந்தழைக்கவருள் கொழித்துளோனே. (கஉ)

மழுமான்செங்கனற்குலஞ்சர்ப்பநாண்பூண்டசெம்பொன்வரையாஞ்சாதழுவியசெங்கனகமணிகங்கணஞ்சேர்பங்கயக்கைச்சம்புமூர்த்தி [பங் தொழுதாயேன்றனைப்புரக்கநின்னையல்லாலொருவரிலைத்தொண்பூண் பழுதேதுமின்றியானுன்பாதபூசைசெயப்பணித்திடாயே. (கங) [டு

என்றனதுமனவிமைந்தரவர்மைந்தரேல்லோருமெந்நாளு, முன்றனதுபதத்தன்புபெருகப்பூசனைபுரியவுதவவேண்டு,மன்றல்பெறுமுனைக்காணப்பெற்றுமுறுங்கலித்துயரால்வருந்தமாட்டே, னன்றருள்வாய்நான்புகழ்ந்தகுறைமொழிக்குன்னிறைகருணைநல்குவாயே. [கச]

உடலுமெனதுயிருமுறுகிளையுடன்மற்றைப்பொருள்களுள்ளயர்வுங் கடல்விடமுண்டவநீயேகாண்பதுனைக்கற்பதுசிர்கருத்தினானு மடைவுடனின்றுணினைக்கமெய்யன்பருடன்கூடியடைந்தேயுய்யப் புடவியிற்சதாகாலமிருந்துனைப்பூசிக்கவருள்புரிந் டாயே. (கரு)

* ருலிசி குடைதல்.

பரிந்துனதன்பர்களேவற்பணிசெயாக்குற்றநின்பொற்பாதப்போதிற், றெரிந்தநறும்போதுகொடுப்பேபோதும்பூசனையைச்செய்யாக்குற்றம், விரிந்திடுநின்புகழ்பரவாக்குற்றம்வணங்காக்குற்றம்வினவாக்குற்றம், புரிந்திடுமெய்க்குற்றமுற்றும் பொறுத்தியெனக்குறித்துநின்றுபோற்றுகின்ருன். [கரு]

பிரமர்சித்தர்காந்தருவர்முனிவரறிவருஞ்சரண்காண்பெரும்பேறுற்றேன், பரவரியபரைவரைமான்ருருகற்செற்றபயமருள் பவானிசத்தி, யுரைதருமந்தரமிரண்டாந்தனத்திவளைமூன்றுதரத்துடையநங்கை, கரையில்கருணைக்கடலாங்கவுரியிடம்பிரியாதகடவுளானே. (கஎ)

என்றுதென்றறவழ்சாரற்பொதியமலைதன்னில்வீற்றிருந்தயோகி
நின்றுடலத்துடனகமுங்குழைந்துகுழைந்தேத்துகின்றநீர்மைநோக்கிக்
கொன்றைவேணியனுரைப்பான்குறுமுனிவநீகூறும்வேதபாதத் [மே.
துன்றுதோத்திரம்புகன்ருேர்செல்வவெள்ளத்துள்ளமூழ்ந்திச்சுகிப்பர்தா

இத்துதியைபாரேனுங்காலையுச்சிபந்தியினுமேத்துவாரேற்
சத்துருநாசங்கீர்த்திதனதானியங்களெல்லாந்தழைத்தசெல்வ
முத்தமமாம்பரிமுதலவாகனம்பூடணம்வாளுளுடையோராகிப்
புத்திரநற்பவுத்திரர்களுடனிட்டகாமியமும்பொருந்துவாரால். (கஅ)

எனக்கும்பசம்பவனுக்கருள்கொடுத்துக்கணபதியாதியருங்கூடத், தனக்கொன்றுநிகரில்லாமல்லிகார்ச்சுனபுராந்தகலிங்கத்தின்.மனக்கொண்டகாதலுடன்மறைந்தனமென்றுமைக்கிறைவன்வகுத்தானென்றே, கனக்குஞ்சீரியாழ்முனிவனருமதைவேதியன்றனக்கேகழறினுல். ()

முப்பத்தைந்தாவதுவேதபாதச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கoருo.



முப்பத்தாருவது

# பாவனுலிங்கச்சருக்கம்.



வேறு

நாவிற்பொய்களுநாரியராசையு
மேவுற்றெனெஞ்சக்கல்லின்விளங்குமோ
வாவிக்கோர்துணையாமென்றனுதினம்
பாவிப்பார்மனம்பற்றுசெஞ்சோதியே (க)

மல்லிகார்ச்சுனமால்வரைமன்னிய
செல்லநீர்த்திடுந்தீர்த்தலிங்கத்தின்
சொல்லருஞ்சீர்சுரிகுழல்கேட்கவே
யல்லெனுங்களத்தண்ணலறைகுவான். (உ)

சேணுற்றொளிதீர்த்தவிலிங்கத்தைக்
காணக்கேட்கக்கருத்துறவேத்துறப்
பூணுமன்பொடுபூசித்திடப்பெற்றோர்
வேணுமின்பமுமுத்தியுமேவுவார். (௩)

இன்னதீர்த்தவிலிங்கத்தைப்பூசித்தே
மன்னருங்கதியாகுநம்வான்பதந்
தன்னையெய்தனர்தாபதர்கோடியாற்
கன்னியாங்குக்கவுதமன்மேயினான். (௪)

ஆத்தலிங்கத்தினன்புடனேயவ
னேத்துபூசனைசெய்திருந்தானெதிர்
தீர்த்தயாத்திரைசெய்பவராயறங்
கூர்த்தகோடியிருடிகள்கூடினார். (௫)

வந்துகோதமன்றனைவணங்கினார்
முந்தியாஞ்செய்தவமென்முன்னினா
ரெந்தையாங்கதியெய்துந்தருமந்தான்
சிந்தைசெய்தனைசெப்புதியாலென்றார். (௬)

ஈசனன்பன்கவுதமனெய்திய
மூசுமாதவர்ப்பார்த்துமொழிகுவான்
றேசன்பூசைசத்தியானத்தின்வாளினா
லாசைப்பாசமறுத்திடலாமெனா. [௭]

எத்துணைப்பொழுதர்ச்சனையெய்ந்திடா
ரத்துணைப்பொழுதாழ்வர்பவக்கட
னித்தன்றாணினைவேமடக்கூகையை
மொய்த்தசெங்கதிர்போலமுனியுமே. [௮]

எந்தைநாமத்தின்மாதேவனென்றிடு
மந்தநாமவமுதப்பெருக்கினை
முந்துகேள்விவள்ளத்தின்முகந்துண்டால்
வந்தபாதகவல்விடமாயுமே. [௯]

இன்னநாமத்தையேத்தியதொண்டர்தாள்
சென்னிதாழினுந்தீவினைதீருமான்
மன்னுமித்திருமாதேவப்பேரினைப்
பன்னுவீர்நும்பழவினைமாறுமே. [௧௦]

வேறு.

மாதவத்தீர்கேண்மின்மல்லிகார்ச்சுனமால்வரைத்தீர்த்த மாதேவ
ன்போற் [illegible] புகலத்தன்றே [illegible] தானிற்றிவினைபோநீவிர்வந்தபோதும்பார்க்

றி, லாதிரைநாண்மதிவாரம்விதிபாதமிவையோடுமேபரபக்கத், திதிலபதி
ன்மூன்றுடன்சேர்தினத்திரவினிடையிற்சதுர்த்தசிகூடிற்றால். [கக]

ஆகையினாற்பூதசிவராத்திரியாயிற்றருந்தவத்திரவனிமீதி
லேனையுமிந்தினம்போற்கிட்டாதுசிவபூசையுஞற்றிரென்றான்
றுகமுடன்சிவகங்கைதனின்மூழ்கிநியமவகைதான்புரிந்தே
யேகித்தீர்த்தேசனைப்பூசித்துமுத்திமண்டபத்தினிருந்தாரன்றே. [க௨]

முன்னரரன்பூசைபுரிந்திருந்தகவுதமனடியின்முடிகள்சாய்த்தே,யுன்னைபல்லாவித்தலந்தீர்த்தத்துடன்மூர்த்தியின்சிறப்பாருரைக்க வல்லர், மன்னுமிவைகேட்கமிகவாஞ்சித்தேமெனச்சிவன்றாண்மனத்திற்கொண்டே,, சென்னியுறவணங்கித்தீர்த்தேசன்மகிமையைமுனிவன்செப்புகின்றான். [கங]

அருந்தவத்தீர்கேண்மினிந்தத்தீர்த்தேசன்பூசனையையாற்றிமேனாட், பெருந்தகைமாமுனிவரொருகோடிபேர்காமியங்கள் பெற்றுவாழ்ந்தே, திருந்தியவவ்விலிங்கத்தினுட்சோதியுடன்கலந்துசிவமதானார்,பொருந்தியவிம்மூர்த்திநின்மாலியம்புசித்தோர்முத்தியின்பம்புகுவர்தாமே.

மாமுனிவீருமையுடன்றீர்த்தேசனார்செயைவிசையைமானார்தம்மை
நாமுறைதற்கோர்புரமுண்டாக்குவீரெனப்புகலநங்கைநல்லார்
தூமணிமண்டபஞ்சிகரகோபுரநீண்மதில்வீதிசோதிவாய்ந்த [ன்றே.
தாமுயர்பானதிக்கரையிற்செயைவிசையைபுரமெனவொன்றமைத்தார

அன்னகரம்பொன்னகரமளகையெனவளம்பெறவுண்டாக்கி யண்ணல், சன்னிதியிலவர்திறைஞ்சியருட்படியேதிருநகரஞ்சமைத்தேமெந்தாய்,துன்னுதியாமுய்யவென்றாரன்னவர்பின்னெம்பெருமான்றோகையோடு, மன்னுமுயர்கயிலையினில்வீற்றிருக்குஞ்சிறப்பினொடும்வந்துற்றானால். [கசு]

செயைவிசையைசெயும்பூசைகொண்டருளியுலகமெலாஞ் சிறப்பாச்செய்பு,நயமுறுபூசனை விரும்பியவர்க்கருங்காமியபோகநல்கினனற், றையுடனெத்தலத்தேனுமினைந்துதீர்த்தேசனையர்ச்சனைசெய்தோர்க, ளியல்புடனெண்சித்திபெற்று முத்தியின்பம் பெற்றுவாழ்ந் திருப்பர்தாமே. [கஎ]

சிந்தைமகிழருந்தவத்தீர்செப்பிடுவன்கேட்பிரிந்தத்தீர்த்தநாதன்
முந்துமுயர்சன்னிதியில்வந்தொருவன்கதிபெறவேமுயற்சிகூர்வா
னெந்தையார்தமைவணங்கியவர்திருமேனியிற்சாத்தியிருந்தவாசச்
சந்தனத்தாலிலிங்கமொன்றுசமைத்துப்பூசனைபுரியச்சமைகுவானால்.[ ]

அன்னபாவனையிலிங்கமதனிடைத்தீர்த்தேசனமர்ந்துவைகி
மன்னுபூசனைபுரியுமவன்றனக்கிந்திரபோகம்வழங்கல்செய்வார்
பன்னுமவன்புத்திரபவுத்திரருமப்பூசைபரிந்துசெய்வா
ருன்னரியசெல்வமுடன்சிவஞானச்செல்வமும்பெற்றுறுவரன்றே.[க]

அவனிபற்றும்பாவனைச்சந்தனவிலிங்கபூசனைகண்டகமகிழ்ந்தே
சிவனடியாரொருவரந்தப்படிபாவித்தவனில்லஞ்சேர்ந்துலவகிச்
சுவையுறுமின்னடிசிலுமுற்றுடனருந்திநட்பொடுதொழமைகொண்டெ
ணுவமையிலாச்சிவபுராணக்கதையும்புகன்றவனேறெற்றுவாழ்வார். [ம்மா
நண்ணுமவரவ்விலிங்கந்திரிகாலதரிசனத்தினன்மையாலே
யெண்ணரியஞானமும்பெற்றிகபரமும்பெறுவரிருடிகணீர்கேண்மோ
பண்ணுபாவனைச்சநதவிலிங்கபூசனைபுரிவோன்பரமனூர்முன்
புண்ணியதோத்திரம்புகல்வானத்துதிநுந்தமக்கியாம்புகலுவோமால்.

இச்சையற்றோயுனைப்பரவுமிச்சையுற்றேன்றனக்கருஞ்சீரைய, கல்காய், முச்சுடர்க்குஞ்சோதியளித்தருளும்பாவனைத்தேவர் மூதன்மையோனே, துச்சனேனுந்தொழுதாற்பெருஞ்செல்வங்கொடுத்தருளுஞ்சோதியானே, நச்சுமென்றன்குலதேவபாவபயங்கர முழுதுநம்பனேனே. (உஉ)

எவரேனும்பாவனையிலிங்கேசனினைப்பூசித்தேத்துவார்கள்
பவநோயிம்மையிற்றீர்ந்துமறுமையினிற்கணங்களதிபதிகளாவார்
புவிமேனின்போலொருதேவில்லையென்றுகையெடுத்தேபுகலுகின்றே
சிவனேநின்பதமல்லான்மற்றுளதேவர்கள்பதநான்சிந்தியேனே. (ன்

எப்பதமுமழிந்துவிடுங்கற்பகங்காமணியுதவுமெண்ணில்கோடி
யப்பொருளுங்கெடுமன்றோநீயுதவும்பதப்பொருள்களழிந்திடாவான்
மெய்ப்பொருளேயாகையாலுனதுபதபூசனையைவேண்டுகின்றேன்
றுய்ப்புடனேயுனைத்தொழுதாற்சனனபயமரணபயந்தொடர்ந்திடாவே.

ஐயவுனைப்பணிவோனைப்பணிவோனைப்பணிவோனையவன்றன்பாதங்,கையதனாற்றொழுவோனைத்தொழுவோனைத்தொழுவோனைக்கண்ணிற்கண்டாற்,செய்பவவரிருந்ததிக்குஞ்செலவேண்டாவெனக்காலன்றிறற்றூதர்க்கே,யு ய்யவலழத்தவர்செவியிற்பையவொருகோடிபுத்தியுரையவானுல். (உரு)

எனப்பகர்வான்பாவனையிலிங்கபூசனைபுரியவெண்ணுகின்றான், றனக்கெவைநாங்கொடுப்பமெனச்சிவனுமேயோசனைகடான் செய்வானுன், மனத்திலன்புபெறுமவர்க்குமறலிபயம்வருமோமாமற்றவர் தம்மேன்மை, தனைப்புகலநான்மறைகடாமறியாசிவனறிந்துசாற்றுவானுல்.(உசு)

விண்ணவராதியரந்தப்பூசைசெய்வான்பதந்தொழவேவிருப்புவாரா
லண்ணல்பாவனையிலிங்கபூசைசெய்வோனடிபணியுமவன்றன்பாங்கர்
நண்ணவேயிந்திரையும்வாணியும்வானரம்பையருநாடுவார்கள்
புண்ணியனுமவனுசாபாசச்சேற்றழுந்திடினும்புனிதன்றானே. (உஎ)

வன்னவேபாவனுலிங்கபூசையின்மகிமையாவுமெண்ணிந்
தன்னுளத்திற்றேறுவான்பின்பகர்வான்மனவண்டேசாற்றக்கேணீ
பன்னரியபாவனுலிங்கபததாமரையிற்பரிந்தானுத
னுன்னையுறுங்காமாதியொழிந்தெனக்குமேல்விடுமுதவுமன்றே. (உஅ)

இந்திரன்மாலயன்பதமும்விரும்பிடேன்பாவனைமாவிலிங்காத [மேவ
சுந்தராமுன்பதத்தின்மனத்துடனேமுடியும்வைத்துத்தொழுதுவாழ்
முந்துமூவுலகத்தும்யாவரையும்பிடித்தலைக்குமூன்றும்பாச
பந்தநீத்தருள்புரிவதுன்னையல்லால்வேறுண்டோபரமனேயென்றும். ()

சுந்தரனேபோற்றிசர்ப்பபூணனேபோற்றிவிடந்தோய்ந்தநீல
கந்தரனேபோற்றிவெள்ளைமேகமொடுகற்பூரம்பனிபோன்மேனி
யந்தரனேபோற்றிபந்தகாசுரனைமதன்றனையடர்த்தாய்போற்றி
சந்திரசேகரபோற்றியனந்தவச்ரமாலையணிசங்கபோற்றி. [ருo]

காலகாலாபோற்றிவினைச்சுரந்தீர்த்தருளமுதக்கதிரேபோற்றி
கோலமுடன்கூர்மவடலடர்த்தவெண்டோட்பொன்னிறத்தெங்கோவே
நீலவிழிபிடஞ்சேர்ந்தபாலலோசனபோற்றிவிமலாபோற்றி (போற்றி
சூலபாணியபோற்றிபாலநீழலிலமர்ந்தசோதிபோற்றி. (ருக)

எனப்போற்றிபரனன்பர்பெருமையின்னுமெடுத்துரைப்பானெம்மனோர்தம், மனத்தானும்வாக்கானுஞ்சிவனடியார்பெருமைதனை வகுக்கலாமோ, வுனைத்தானுமறியேனென்மற்றவர்திறமெவ்வளவேனு முரைக்குமென்பால், சினத்தாருமெனதுபுன்றொப்புண்ணியத்தின்பெருமையினைச்சேர்ந்ததாமே. (ருஉ)

அண்ணல்சிவன்மகிமைதனைவேதங்க ளொருநான்குமறியாதன்றே, புண்ணியன்றன்றிருநாமத்திரண்டொன்றுகிலு நாவிற்புகலப்பெற்றேன், கண்ணுதலென்னிடத்தில்வைத்ததண்ணளியின் பெருமைவெள்ளங்கலந்ததாலே, பண்ணவன்றன்றிருப்பெயரைக்கலந்துநாப்படைத்தருளும்பலன்பெற்றேனே. [ருங]

அரன்பெருமைசொலப்பெற்றேன்யான் புனிதனெனதுதந்தையனையுமன்னோர், பரந்தவென்றன்கிளைஞருநட்பாளருந்தொண்டாளருமே பாக்யவான்கள், கரந்தைவார்சடையண்ணலுனதுதொண்ட ருடன்கூடிக்கலந்துவாழும், வரந்தனைத்தந்தாண்டருளிப்புந்திவர்ததுன்னருளின்வண்ணமென்னே (ருச)

எம்பெருமானுன்னடியேனினதுதொண்டரல்லாதா ரிடத்திலன்னோ, நம்பிநாயன்கிளைஞரிடத்தினுஞ்சேராதவண்ணந் தடைசெய்தாள்வ, யம்புவிபிலிவைபுரியிலென்னையென்றிலையேலடுங்காற் றுதர், யம்பணிவன்றன்னையாங்கட்டுவங்கட்டுவமென்றேவனைப்பார்தாமே.

செல்வமென்றன்சிந்தைபிறைற்பூசையினுநித்தியநைமித்தியமாகு
மல்லல்புரிகருமமளவில்லையவைபுரிந்திடினுமாவதுண்டோ
வெல்லவமன்றன்போருடனுண்டாகிற்கதியுண்டாமொழிந்தகன்மம்
புல்லுமீனாஞ்சைபாஞ்சாத்திரத்தின்முத்தியுண்டோபுகலுங்காலே. []

ஐயவுன்றனுநந்திரவத்தியாயத்திலுனை நினையவறைந்ததல்லா, துய்யுமொருகருமத்தைப்புகன்றதிலைமறைமீமாஞ்சைதானேது. மையல்

புரிகருமமொன்றேயொன்றுசொன்னதொன்றுசொல்லாவமையாற்றன்
றே,மெய்யவுன்றன்சிவஞானதத்துவந்தேர்ந்துணையறிபின்விடுண்டாமே.

அண்ணலுன்றன்பதத்தன்புவைத்தறியேனபாராதமேகஞ்செய்
வே, னன்னுபிரதோடமுதற்சிவவிரதமாற்றுகிலேனுளுமன்றன், றன்
னளிசேர்தரும்யாகம்புரிந்திலேன்பெருஞ்செல்வந்தன்னைவேண்டி,மண்
ணுலகிற்காமியகன்மங்களையேபுரிந்தலுத்துமயங்கினேனே. (௩அ)

ஏழையேன்செயும்பாவங்கருங்கடலிற்பெருகியதாலிதனையுண்ண றே
மாழையொண்கண்பாகசற்றுன்னருட்பார்வைவடவைபெறின்மாறுமன்
காழுறுமாமாயையெனும்பாசவிருளைவளைந்துகலக்குருமற்
சூழுறுநின்பதத்திலியான்செயும்பூசைசூரியனுத்தூரத்துவாயே. (௩ )

அறிந்தறியாதறிவிலேன்புரிபிழைமற்றும்பொறுத்தேயாண்டுகொ
ள்வாய், செறிந்தவுன்சேவடிக்கமலத்தென்மனமாமளித்தவத்தாற் சேர
ப்பெற்றேன், பிறிந்திடாதிருக்கவுன்றனளிபுரிவாயருள்புரியும்பெரியோ
ருன்போ, லெறிந்துகதிர்சூழ்புவியிலிலைப்பெறும்பாத்திரமுமென்போ
லில்லைத்தானே. (௪௦)

காதவுன்னருட்பார்வைசற்றருள்வாய்நம்பவுன்றன்ஞானமன்றி
வேதமுதற்கலையாவும்விரும்பிலனின்பதபூசைவிருப்பமல்லாற்
போதமுறுமெனதுளத்திற்புந்திகொள்ளேனெனக்குதவிபுரிவதற்கே
திசகலுந்தியாகவினேதப்பெருமானியெனவேசிந்திக்கின்றேன். (௪௧)

உனைப்பூசைபுரியெனக்குச்சனனமிலையென்றெருக்காலுரைசெ
ய்வாயா,லெனைக்காதலுடன்புரப்பதவைஞாயமிரண்டுதரமியம்புகின்றே
ன்,வனத்தாருந்தவத்துச்சைமினியொடுகோதபனுரைத்தவழிநூறன்னி,
னினைத்தான்தத்தாற்மகனித்தியனென்றேயுரைக்குமந்தநீதிபொய்யோ.

வேதவேதாந்தமுனைச்சத்தியனென்றுரைக்கிலையோவேதமாக
மாதியுனைமுற்றுணர்வோனென்றென்றேயுரைக்குமேயளவினூல்க
ளோதியுணர்ந்துனையறியார்பந்தமுடன்வீடுபெறுணர்வதுண்டோ [டோ
சாதனைசேர்தர்க்கசாத்திரங்களினுற்சண்டையன்றித்தான்வேறுண்

இவைகளெல்லாமுன்மாயைவிலாசமன்றேயொருவரியற்றிடுவாருண்
வகையுமினினைக்கிலகிலமுடன்மாயையுமுண்டாகுமன்றே (டோ
புவியில்வேதாகமசாத்திரங்கற்கும்புந்தியிலேனர்பர்பூசை
யவைபுரிபேன்சிவதருமஞ்செய்பேனர்ச்சனையெவ்வாறுற்றுகேனே. [ ]

அநந்புரியுமுன்னைபருச்சனைசெய்பான்பாவமெவ்வாறகற்றுகிற்பான்,
நெந்தள்பெருச்சனைசெய்பானவனிவுங்கள்ளுண்டுலையன்சிறந்தோனன்
ப தறுதண்புனலேனுமரன்றனக்கற்பிதம்புரிந்துபரிகிலானேற் (டோ
பெருகுறுமூத்திரமுடனேமதுவினையுங்குடித்திடுமப்பெற்றித்தாமே. ()

அரன்றனைப்பூசனைபுரியாதனமருந்தினரக மெல்லாமாழ்வனென்றே, பரந்திடுவேதங்களெல்லாம்பகர்வதருச்சனையின்மனம்பற்றிலாதா, னரந்தைகொள்சண்டாளனுக்குஞ்சண்டாளனுமன்பா லரனைப்போற்றில்,வரந்திகழ்வான்றேவருக்குந்தேவனுமவன்பெருமைவகுக்கொணுதே.

அற்புதனுக்கற்பிதஞ்செய்யாதவைகளேனுமெடுத்தருந்ிலன்னேன்
பொற்புறுவானவனேனும்புலையனவனுய்ச்சென்மம்புகுவனன்றே
கற்புறுமாஞர்முயங்குங்காலையினின்மைந்தருடன்களிக்கும்போதிற்
றற்பரனையகத்திலுன்னிலவன்வாழ்வுஞ்சந்ததியுந்தழைக்குமன்றே. ()

ஈசனிடத்தன்பிலார்ப்பெறுதலினுமலடாகவிருத்தனன்ருற், றேசனடியானடிமைத்தாசிதாசர்களெனவேசெனித்தன்மேன்மை, நேசனவன்மனைப் *படப்பைக்கொதுகுடனீயாய்ப் பிறக்கினிகரொன்றுண்டோ பேசுமவருண்டெறிந்தபரிகலத்தீமொய்த்துமுத்திபெறுதலாலே. (சஅ)

அரன்பிரசாதம்புசிக்குமவன்புனிதனவன்றேகத் தளைந்தமென்கால், பரந்திடுதேவர்களுடலிற்படிற்பாவந்திருமெனப்பரிவுகூர்வார், நிரந்தரஞ்சைவர்கணெருங்குமனையகத்திற்பிதிர்க்கடங்கணிலைமைதீர்ந்தே, சூரந்தவருளுடனீங்காதுறைவரெனிலவர்பெருமைசொலற்பாற்றோ. ()

உமைபாகன்சைவருறைமனையகலானுவந்தாடலுறுவனன்றே
நமையாளுமவனல்லாற்சைவரதுபெருமையையார்நவிலற்பாலா
ரிமையோர்மாலயனறியாரன்னவரையீன்றவளேயெழிற்றுயன்னோர்
தமையீனுணுப்பன்றிகரமோரிப்பேடெனவேசாற்றலாமே. (ருO)

என்பெருமானென்னிடத்திற்றயையுண்டேற்சைவரல்லாரிடத்திற் சேரா, வன்பருள்வாய்வினதருளாலுனதுசிவதத்துவத்தையறிந்துநாயேன்,றுன்பமுறுபவக்கடலைநீந்தியுன்றன்றுணைப்பாதப்புணைகொண்டேற, மன்பெருசின்றொண்டருடன்கூடியுனையுணர்வதற்குமதிதந்தாள்வாய்.

கதிபெறுதற்குனையறியவேண்டும்வேதாந்தங்கன்மாதிநீங்கி
மதியுடனின்றத்துவஞானந்தெரியின்முத்தியெனவகுத்தலாலே
யதிகமாம்பாவனுசித்திபெறின்முத்திநலமடைவரன்றே
பதியுனதுபாதபூசனைபுரிந்தாலன்றியொன்றும்பலித்திடாதே. (ருஉ)

வேதமுடிவாலுனதுவடிவறியலாமெனவேவிளம்புகின்ற
தோதிலதுநிச்சயமாந்தத்துவபாவனைநேர்மையுறுதலாலே
போதமாமதுபெறுவதரிதனைப்பெறுங்காலம்பொருந்தப்பெற்று
னீதிவேதாந்தவுண்மைவிருத்தமாகாமனன்றுய்நிசமாய்த்தோன்றும். ()

இனையசாத்திரங்களினுற்கதிபெறுதுமெனவேண்டேமெமக்குமுத்தி, தனையருள்வதுனதருளேயருளுமுளையமிந்தேநத்துந்தன்மையாலே, முனைவபாம்பெறுதுமன்றேகொடுப்பதுநீயொருத்தி நின்றுண்முறையிற்போற்று, மனையதனுல்வருமவ்வாராதனைசெய்வோர்புனிதராவரன்றே.

* படப்பை-கொல்லை,

உபவுன தருளாமலையுணையறியவந்தனையையாற்றுவோரிற் [டேன்
றய்யன்யானெனப்பெற்றேனருளநீயொருத்தனென்றுதுணிந்துகொண்
மெய்யறியப்போதிக்குஞ்சாத்திரத்துள்பூசனையின்விதங்கள்கூறுஞ்
செய்யசாத்திரம்பியுணைத்தொழுவேனெனக்கருணைசெய்குவாயே. ()

இதனைநானுதியினிற்செய்தசிவபுண்ணியத்தாலெய்தப்பெற்றேன்
பதியுனைவந்தித்ததனுற்பயனேதுகொல்லெனவேபகர்கின்றாயே
லதிகமாமானுபிமானவிடயங்களைநீத்தகிலத்தாசைத் [னே
துதியொழியத்தூங்கிநின்பொற்பாதத்தேவிழித்திருக்குஞ்சுகம்பெற்றே

இருவினையாமலையெறியும்பவக்கடலிலழுந்தினுநின்னிருதாள்போ
ற்றும், பரிவுறுமெய்ப்பத்திபெற்றேன்பூசைசெய்வேன் றோத்திரங்கள்ப
ண்ணுகின்றே, னரியயனுக்கரியவனேபினையொருவர்நாமமுநானறிந்தி
லேனே, தெரியுமுன்பேரன்றிமற்றோர்பெயர் நினைந்தோர்பவம்[illegible] லிற்
சேர்குவாரே. (௫௭)

காலனுக்குங்காலனுங்கண்ணுதனிற்சேர்ந்தேதற்குங் காலனின்றே,
யேலுமென்றனிதயநின்றாள்பொருந்தியதால்வருந்திடு மென்னிடர்தீர்ப்
பாயே, யாலமெனுமந்தகாசுரன்றனக்குமந்தகனீயாதலாலே, பாலனஞ்
செயுனையடைந்தேன்காலனெனுந்தொழும்பனாற்பயமொன்றுண்டோ.

உன்னுடையவன்பருடன்கூடியதான்மிருத்துவென்பா லுறுவதில்
லைப், பன்னுமுன்பூசனைக்குரியபொருடேடும் பணியெனக்கேபணித்தி
டாயே, மன்னுமுதலுகத்திலன்றிக்கலியுகத்துஞ்சைவநெறிவருவாருண்
டோ, துன்னுகலிக்காட்டுத்தீச்சுடக்கரிந்தேயுயிர்களெல்லாஞ் சுழல்கி
ன்றாரால். (௫௯)

இக்கலித்தீக்குட்புகும்யானுனதமுதமாரியருளெய்தப்பெற்றே
தக்கவகையுய்ந்திருந்தேன்பாவனாலிங்கமெனுஞ்சம்புவேயென்
றொக்ககுலதெய்வமுமென்னருந்தவமுந்தவப்பயனுஞ்சூழ்ந்தகாதன்
மக்களொடுமனைவிசுற்றமற்றுளகைப்பொருளொடுமெய்ப்பொருளுநீயே.

மங்கைநாயகியுடன்வீற்றிருந்தருளுங்கடவுளுன்றன் மலர்ப்பொற்
பாதஞ், சங்கையறப்பூசித்துநேசித்துத்தோத்திரங்கடாம்புரிந்தே, பொ
ங்கிபகண்ணீர்பொழியக்கூத்தாடுமவரன்றோபுவியையாண்டு, செங்கண்
மான்முதலாகுந்தேவர்கட்குந்தேவர்களாய்ச்சேர்வர்தாமே. [௬௧]

தன்னிகரின்னடியவருக்கடிமைபூண்டுறுகின்றேன்சாட்சிநீயே
யென்னையாள்பாவனாலிங்கேசவுனைக்கிணையாவிகலோகத்திற்
பொன்னுலகிற்பாதலத்திற்கயிலைவரைமேருவரைப்புறத்துமில்லை
யன்னதுசத்தியமேகிட்டாப்பொருளாநின்பாதமடைந்துய்ந்தேனே. []

எனதுயிராம்பாவனையிலிங்கேசகதியருள்வதெந்நாளென்று, மன
துறுவிசாரமுற்றோற்கருள்வதிதுகால மென்றோர்வார்த்தைசொன்னாற்,

களகவலைதீர்த்துநவென்றி நமால் வந்தனைபுரியுங்கடைசேர்செல்வர், த
னைபுரினுடைவைவிரும்பேனின்சரணீங்காதவரந்தனைத்தந்தாள்வாய். [ ]

என்றுபாவனைச்சந்தவிலிங்கத்தின்சன்னிதியிலிறைஞ்சிபெத்தி
நன்றுளதுபூசைகடைப்பிடிக்கவருடருதியென்றுநவின்றுநாளுந்
துன்றுமாராதனையிற்சிலநாள்சென்றரன்பாதந்தொகுவானென்றே
யன்றுகவுதமன்புகன்றனதனைநாரதன்பனவற்கருள்செய்தானே. [கூச]

முப்பத்தாறாவதுபாவனாலிங்கச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-க௦௫௦.



முப்பத்தேழாவது,

## தக்கன்வேள்விச்சருக்கம்.



வேறு.

நீடுகசரதுரகப்பெருஞ்சேனைச்செல்வமெல்லாநெஞ்சேகூடித்த,
ராடுமவைபொழிந்தக்காற்கூடுமவைபோலொழிவதறிந்திலாயே. தோடு
விரிமலர்ச்சடையான்கோடிசூரியருதயச்சோதிபோல்வான், பீடுகெழு
சேவடியைநினைந்தழியாப்பெருஞ்செல்வம்பெற்றுய்வாயே. [க]

இசைகொணாரதன்புகல்வானருமறையோய்கவுதமனதிருதாள்போ
ற்றி, வசையின்மாதவரையாதீர்த்தேசன்வினைந்தரின்மாலியமதாகு, ந
சைகொளுஞ்சந்தனத்திலிங்கங்கொடுபுசித்தருங்கதியைநாடுந்தன்மை,
யசைவிலதெம்முளமதனிலிசைவிலதீங்கிவைதெளியவறைதியென்றார்.

முனிவீரப்பொருளெனுமப்பொருளாய்முனிப்பூசைமுயன்று
ரென்றற், கனிவாருமவர்கருத்திற்பத்தியான் முத்திபின்பங்காணலா
மாற், றனிவேதர்புகன்றதுசந்தனலிங்க பூசைபன்றித்தாமன்றுமப்,
பனிதோயுமலரேனும்பாவித்தாற்பதிமங்கட்பதியுமன்றே [௩]

எப்பொருளுமாவானெம்மிறைவனன்றேவோர்பொருளையெம்மா
னென்று, செப்பிடுமப்பாவனையின்றிடத்திருமேலவையுள்வந்துசித்தியா
மாற், கைப்பொருள்போலுதவுபாவனைப்பூசைதனிற்பெருக்கதியொன்
றுண்டோ, முப்புவியிற்செல்வமுடன்முடிவில்செல்வமும்பெறலாமுய
லுங்காலே. [௪]

ஆதிபார்த்திர்த்தேசர்கமைப்பாவித்தோரெய்தற்கரிதொன்றுண்டோ
வோதுமிவர்சந்நிதியிற்பாவநாசத்தீர்த்தமொன்றுண்டத்தச்
சீதவான்றடத்தாடிற்றெரிசித்திற்பரிசித்திற்றியானஞ்செய்யிற்
சோதியாரவருருவம்பெறுவரித்தத்தலமேன்மைசொல்லற்பாற்றே. [ ]

இவனிவ்வாறியற்றுகின்றவமயத்திலிருங்கயிலாயத்திருந்த பவனிமையோர்தமையாளும்பரமனிடத்திருந்தபார்ப்பதிதான்சொல்வா ணவமாகத்தக்கனொருபெருவேள்வியியற்றுகின்றனலநான்காணச் [ன் சிவனேசெல்கேனெனக்கேட்டிடிபிடித்தாலெனமாற்றஞ்செப்புகின்ற

தனைச்சார்ந்தோருடன்றானுங்கெடுவதற்குத்தீக்கருமஞ் சமைக்கின்றான்றீ, வினைச்சார்ந்ததேவர்களுங்கெடுமெதியாலவன்வேள்விவிரும்பிப்புக்கா, ருனைச்சார்ந்தயாம்பிரியோமவர்படும்பா டவைபார்க்கவுறவும் வேண்டா, நினைச்சார்ந்தவுன்னுருப்போற்காமினியையேவுகெனநிகழ்த்தினுனல். [கசு]

அம்பிகையப்படியேவவும்பொன்விமானத்திற்காமினியம்மன்று
னும்பர்மாதவர்கோடிமிடைகணங்கள்கவரிகுடையுவரிகோடி
கம்பலைசேரியங்களெழுகடல்கோடிசூழ்ந்தெனத்தக்கன்யாகத்தி
லெம்பெருநாயகிசென்றுளவணிகழ்ந்தவுற்பாதமியம்புகின்றும். [கள]

தக்கனுர்மகசாலையிடிமழையினூற்றகர்ந்தகுமோமத்தீ
யுக்காறிந்திரியங்கிருமிமலமூத்ரமழையுற்றதன்றே
குக்கலாரோரியார்கூக்குரலாலண்டமெலாங்குலைந்தவாலோ
புக்காகர்களுடலநடுங்கிநெஞ்சம்பறையறையப்புலந்தார்நாவும். (கஅ)

ஏக்கமுற்றுரிருடிகடாந்துர்ச்சகுனமிவையாலேயிந்தயாகந்
தாக்கழியுந்தக்கனுர்தலையும்போமெனக்குலையுஞ்சமையந்தன்னின்
மேக்குயர்விமானத்திற்காமினியம்மன்புகுந்தவிதங்கண்டேநாம் [றே
பாக்கியஞ்செய்தனநமதுபார்ப்பதிவந்தாளெனப்போய்ப்பணிந்தாரன்

தக்கன்முனம்புகுந்தெவருமன்னைபார்ப்பதிவந்தாள் சார்ந்துளோ..நந், துக்கநோய்தீரும்வண்ணமுபசாரம்புரிதியெனச்சூழ்ந்துசொன்ன, ..கோடிபோன்றலைசாய்த்தேயறியாதுபோ விருந்தானதனைக்கண்டே, மிக்கமுனிவோர்புகுந்து பணிந்துமையாளெனத்துதிகள் விளம்புகின்றார். [உ0]

மங்களநாயகிபோற்றிசங்கரற்குச்சுகங்கொடுக்குமாதேபோற்றி
பங்கயமாதிருவர்பணிபங்கயச்சேவடிபோற்றிபத்தராவார்
தங்களிடர்தீர்த்தருளிச்சகலசெல்வந்தந்தருளுந்தாயேபோற்றி
செங்கண்மான்முதலோரைப்பததூளியுண்டாக்குஞ்செல்விபோற்றி. ()

கவுரியேபோற்றியன்பர்வினைச்சுரந்தீர்த்தருளமுதக்கடலேபோற்றி
சவுரியஞ்சேரசுரகுலசங்காரிபிரமராம்பிகையேபோற்றி
பவுரிகொண்டபரனிடத்திற்பரையேநின்னருட்பார்வைபரிந்துநல்காய்
புவியிலுன்றன்சரணமேசரணமெனப்போற்றிநின்றுபுகன்றானறே. ()

இனையதுதிபுகன்றுநின்றமுனிவரைப்பார்த்திலக்கணமொன்றில்லான்பொல்லான், றனையறியான்வருங்கேடுதனையறியான் றக்கனென்று

ாற்றுகின்றா, னினையுமிக்கப்புனையுரைகணிற்கப்புக்கதுர்ச்சகுனம்நிகழ்
ற்காற்றும், வினையம்விளம்புதிரென்றான்வினைவிளைவதறியான்றீவினை
சய்வோனே. (௨௩)

சான்னவுரைகேட்டதாபதர்சொல்வார்சூழ்கருமப்பயன்கணல்கு
றன்னவற்குமுற்பூசைமுயன்றிலாய்துர்ச்சகுனமுடிவிலாத
ன்னவுளவாயிற்றால்யாவர்சிவன்றனையிகழ்ந்துசுகம்பெற்றுய்ந்தார்
ன்னெறிகற்றாயின்னமென்னவென்னகேடுவந்துபுகுமோவென்பார்.

பொறியற்றாயரன்பூசைநெறியற்றாய்தக்கனீபோகம்வேண்டிப், பிறி
த்தாற்சிவனையின்றிச்செய்கின்றயாகத்தாற்பெறும்பேறின்றாற், குறிய
றாய்நல்வினையாற்பெற்றருளுஞ்செல்வமுமுன்குலமுமெல்லா, மறியத்
நான்புரிகின்றாய்நிச்சயநிச்சயங்கண்டாய்மருள்கொண்டாயே. (௨௫)

வேலைவேலையைக்கடவாதிருத்தல்கதிர்மதியுலகைவிளக்காநிற்றல்
காலனுயிர்கவர்ந்திடுதல்காலனுள்ளடங்கிநிலைகடவாநிற்ற
லாலமுண்டோன்சூலகபாலக்கரத்தோன்செயலன்றோவறிவற்றாயோ
சாலவுன்றன்கெடுமதியாங்காரத்தாற்றுணிந்துற்றாய்சாதற்கன்றே. (௨௬)

மாரியின்றிப்பயிர்செயலும்பேய்த்தேர்நீரெனமறியுமறிவுநெய்தோய்
சேரியமென்றுகிலுடுத்துநெருப்பிடைச்செல்வோர்செயலுநிர்க்குங்கண்
பாரியனைச்சிவனையெங்களையனைமெய்யனையின்றியரியவேள்விக் [டா
காரியநீபுரிதறக்கதன்றுதக்கவெனமுனிவோர்கழறினாரால். (௨௭)

முப்பத்தேழாவது தச்கன்வேள்விச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௧௪௧.



முப்பத்தெட்டாவது,

# கும்பமுனியுத்தரச்சருக்கம்.



வேறு.

சாலவுறுவார்வறுமைசார்தல்செறியாரே
காலன்விடுவோர்க்கனவுகண்டுமறியாரே
பாலவிழியான்மதனன்வேவமுனம்பார்த்தோ
னாலமுறுநீலமிடற்றண்ணலடியாரே. [௧]

இன்னிசைகொணாரதனிசைத்திடுவன்முனிவோர்
சொன்னசொலனற்செவிசுறுக்கொளவெறுத்தே
பன்னருமகந்தைமொழிபாணிகுலையத்தன்
சென்னிகுலையச்சினவுசிறுவிநியுரைப்பான்.

எண்டிசையுமேழுலகுமெவ்வுயிரும்யாவு
முண்டெனவியற்றிடவழித்திடவுமுரியோ
னண்டமுழுதுக்குமுதலாமொருவன்யானே
முண்டகனுமாலுமென்முறைப்பணியினிற்பார். (௩)

காடதிடமோகெலங்கையிலொருசூலங்
தோடுளதுகாதுகழலாக்குகழறாக்கி
யாடகமணிச்சபையிலாடுமவன்றன்னைப்
பீடுகெழுமயான்பணிதல்பெற்றியதுவாமோ. (௪)

என்றுரைசெய்தக்கனைப்பிடித்துரைசெய்கிற்பார்
குன்றவிலுடைக்கடவுளைக்குறைகள்கூறும்
புன்றொழிலுறும்புலையரிற்புலையனைவப்
பின்றுறவரிந்துமலம்பெய்துறுதனன்றே. (௫)

முன்னவனைவேதமுதல்வன்றனையிழித்தே
சொன்னவனைப்பெரியிடைச்சுடக்கடவதன்றோ
மன்னுகொடியோர்கள்வதனத்தில்விழித்தோமே
யின்னவுரைகன்னமுறவென்னபவமுற்றோம். (௬)

செந்தழனிகர்த்தசிவநிந்தைசெயலாலே
வெந்தழலினீகிளைகள்வெந்திடுதறிண்ணம்
வந்துனதுநன்புபெறும்வானவர்களெல்லாஞ்
சிந்தனைகலங்கவருதீவிடமதன்றே. [௭]

ஈசனையிழித்துரைசெய்தேயகந்தைதன்னாற்
பூசனைசெயேனெனவுளத்துறுதிபூண்டாய்
நாசமுறுகாலம்விபரீதகுணநண்ணுங்
கூசவுறுதீயசகுனங்கொடிதுகொடிதே. [௮]

நாகவிடமுற்றவனைநாசமதுபுரியு
மேகனைநிந்திக்கும்விடமானதிதுகொடிதே
போகையொடுரைத்தவர்கள்கேட்டவர்களுற்றோ
ராகுமவர்நாசமுறவாக்குமதுவன்றோ. [௯]

தேவாபன்மாறிசைகொடேவருநின்வேள்விக்
காவல்பெறிலாவதெனகாத்திடவலாரோ
மூவர்புரநீறெழமுனிந்தமுதன்முனியிற்
பாவுசுடரங்கிபட்டர்பஞ்சின்மலையன்றோ. [௧0]

பாவவினைசெய்துநரகிற்படர்தியென்றே
கூவினர்கண்மாமுனிவர்குறுமுனிவனோடுந்
தேவரிவைகேட்டுடனடுங்கினர்திகைத்தா
ராவரகராவெனவறைந்தலறினரால். (௧௧)

இப்பரிசுமாமுனிவர்கூறிடுதலிமையோ
ருட்படுவருத்தமிவைதக்கனுமுணர்ந்தே
யப்புறமொன்றும்பகர்தலற்றவனிருந்தான்
மைப்படுதுயர்க்கடல்வளைந்துறமதிப்பான். [கஉ]

மாமுனிவர்கூறியதும்வானவர்புலப்ப
மார்முனைதசொல்லுமுறைமையாமவளறிந்தா
ளீமுனிசெய்தக்கனியல்செய்கைசிவனிந்தைத்
தோமுனிநடுங்கிலர்கடோய்வர்நரகென்றாள். [கங]

செப்பசிவதீக்ஷைபுரிதீயவரோமற்றோர்
பொய்பரவர்புலையர்நீசர்புன்மையர்களன்றே
யையையவனுற்றனளகத்தியனிருந்தான்
றுய்யரமரர்க்கோர்கதைகேண்மினெனச்சொல்லும். [கச]

முன்னரொருகான்மறலிமுறைபுரியுநரகந்
துன்னுமவரின்மையினிற்சூனியமுற்றன்றே
யன்னதனையமபடரறிந்துபடருற்றார்
மன்னனைவணங்கினர்கண்மாற்றமுரைக்கின்றார். [கரு]

பூமியினின்மாக்கள்சிவபூசைவிதிபூண்டார்
நாமமுரைசெய்வரரன்புண்ணியநயந்தார்
காமர்திருநீற்றினொடுகண்டிகைதரித்தார்
தாமருவுசைவசமயத்தலைமைசார்ந்தார். (கசு)

சிவமனுவுருக்கொள்செபமாலைகையினீங்கார்
தவமுதல்வர்சைவரொடுதாங்கலந்தபாங்கார்
பவவினையகன்றனர்கள்பரமர்பணியல்லா
லவமதெனவோர்கணமதேனுமமர்கல்லார் [கஎ]

மனைகடொறும்வில்வதருவைத்தனர்வளர்த்தா
ரனையநிழறன்னினலிலிங்கமுமமைத்தார்
புனையிழையர்மைந்தரொடுபூசைபுரிகின்றார்
துனைவில்வலம்வந்திடுவர்தொழுதனர்துதிப்பார். (கஅ)

சிறுபருவமைந்தர்திகழ்பாத்தியவிலிங்கத்
தறுகரிசியக்கதமருச்சனையமைப்பா
ருறுதிபெறுபூசனையுஞற்றியபினல்லா
னறிபபுனருகமுறுநாவினனைக்கில்லார். (க௯)

எழுந்திடினுநின்றிடினுமேகிடினுமிடரு
விழுந்திடினுநோவுறினுமெல்லியலாரின்பத்
தழுந்திடினுமேக்கமுடனுக்கமுறினுந்தாந்
தொழுந்தகையரன்பெயர்துதித்தலொழியாரே. [உ௦]

அன்னமனேயார்மனேயிலன்னமமைக்கின்றார்
முன்னியமத்தன்பர்பலிமுன்னியமைக்கின்றார்
மன்னியடுருப்பபுகைகணுசியுதின்மடவா
ருன்னியரனுக்கெனவுரைத்திடுவரன்றே. (உக)

பூதியொடுகண்டிகைபுனேந்திடுதலொழியார்
மாதரொடுமைந்தர்மகதேவனெனுநாமத்
தாதிபெயரோதுதலயர்த்திலர்களவர்பாற்
போதலரிதெங்கடொழில்போயததுவென்றார். (உஉ)

அன்னார்சொல்வினுமகிழுமந்தகனுரைப்பான்
மன்னுசெயல்போயதெனமனமருள்வேண்டா
வின்னல்புரிதக்கனொருயாகமியற்றிடுவான்
பன்னுசிவநிந்தனேபகர்ந்திடுவனன்றே. (உங)

ஆங்கவனொடுஞ்சிலர்களமரர்முனிவோர்கள்
பாங்கினிலிருந்துமிகுபரிவுறுவரன்றே
யீங்கவர்கள்வந்துநரகெங்குநிறைவாரா
லோங்கியிடுநுங்கருமமுறுதிபெறுமென்றான். (உச)

இந்திரனுபேந்திரனிமையவர்களேனு
நிந்தனேசிவன்றனேநிகழ்த்திடுவரென்றால்
வந்தணேவர்நந்தநரகத்திலெனமறலி
சிந்தனேசெய்தூதரொடுசெப்புதல்செய்தனனே. (உரு)

இருங்கயிலேவாணனேயிகழ்ந்தவர்தமக்கே
யருங்கொடியரவுரவமமைத்துளதுகண்டீர்
சுருங்கியதுகாலமவர்தொக்குறுவர்திண்ண
மருங்கிலுமைகேள்வனேவணங்குதும்யாமென்றான். (உரு)

இன்னகதைவிதிமகனியாகமுறுசாலே
தன்னிலுறுவானவர்கடாபதர்கள்கேட்பத்
துன்னுபொதியத்திருடிசொன்னதெனமுனிவோர்க்
குன்னரியகேள்விபெறுகவுதமனுரைத்தான். (உஎ)

முப்பத்தெட்டாவது கும்பழனி யுத்தரச்சநக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ககசுஅ.



# தக்கன்மகமழித்தசருக்கம்.



வேறு

உரங்கொண்டிடுதவங்கொண்டுலகுலவுற்றிடமூன்றும்
வரங்கொண்டவர்புரத்தீயெழமலையேமலைசிலையாக்
கரங்கொண்டரிமூன்றாகிபகணைகொண்டிடமையவர்தா
மிரங்குந்துயரெய்தாவகையெய்தான்பதந்தொழுவாம். (க)

தவன்கோதமன்புகல்வானியற்றமிழ்மாமுனிமாற்றஞ்
சிவன்றேவிதன்னுருக்காமினித்திருக்கேட்டுளந்திகைத்தா
ளிவன்றானயன்மகனண்ணலையிகழ்ந்தானிவைக்கேட்டோர்
பவந்தான்றொலைவுறுமோசெயும்பரிகாரமென்னென்பாள். (உ)

ஐம்பாதகங்கொடும்பாதகமரும்பாதகஞ்செயினும்
வெம்பாதகமவைதீர்தரும்வியன்கன்மமுமுளவாற்
கும்போதயவரனிந்தனைகுறித்தோனெடுந்திரினா
ணம்பாவுறில்வெகுகற்பம்வெந்நரகிற்புகுவரே. (ங)

தீதுற்றவன்மகச்சாலையிற்சேர்ந்தேன்சிவன்றனையே
யோதுற்றநிந்தனையென்செவியுறப்பெற்றனனன்றே
யீதிற்கினிப்பரிகாரமென்செய்வேனெனவினைந்தாள்
சோதிப்பெயர்நினைந்தாளுயிர்துறந்துற்றனளன்றே. [ச]

மாமாயைதன்னுருவிற்புகுமயின்மாண்டதையறிந்தே
கோமானெனுமாருத்திரன்கோபத்தொடுங்குறித்தான்
பூமர்திரமெட்டும்புகவெட்டும்புயத்துடனே
தீமாசிகைபெறும்வீரபத்திரன்வந்தனனன்றே. (ரு)

திரண்டாயிரங்கதிர்போலொளிர்திருமேனிதிண்புயமோ
டிரண்டாயிரமவற்றாயுதமெண்ணாயிரகோடி
சரண்டாங்கியகண்டாமணிதானாயிரகோடி
முரண்டாங்கிடியெனவேசிவன்முன்வந்தடிபணிந்தான். (சு)

பணிவீரபத்திரனைப்பணிப்பணிசேருருத்திரன்பார்த்
தணியார்தருதக்கன்னமையயர்த்தேமகம்புக்கான்
கணியாதவனுறுந்தேவரைக்கலக்கிக்கலங்காதோன்
மணியார்முடிதகர்த்தேயுடன்வருவாயெனவிடுத்தான். (எ)

மாமேருநடந்தாலெனமதியாவிதிமகனூர்
தாமேவியமகச்சாலைமுன்சார்ந்தான்வருகாலைப்
பூமேலவன்பூமேலவர்புணர்மாலவனிமையோ
ராமேலவர்முனிவோரதுகண்டார்மருள்கொண்டார். (அ)

நாவாய்களுமலர்ந்தாருடனடுக்குற்றனர்நவில்வார்
தாவாவருகாலாக்கினிதறுகட்கொடுவிடமு
மோவாவுருக்கொண்டோவரனுளதாமுடுத்திரடான்
பூவார்சடைமுடிதக்குறுப்பூவுற்றனவென்பார். (௯)

உடற்காந்தியிற்கதிர்மின்மினியொத்தேகினனென்பார்
நடக்கும்பொழுதுலகெங்கணுநடுக்குற்றனவென்பா
ரடக்குந்துயரலவீங்கிதோரழிகாலமற்றென்பா
ரிடுக்கண்சிறுவிதியால்வந்தவிதிக்கென்செய்துமென்பார். (௧0)

என்னப்புகன்றிமையோர்களுமுனிவோர்களுமிடைந்தார்
முன்னுற்றவுற்பாதங்களுமுடிவுற்றிலவுறவே
மன்னுற்றவுக்கிரன்கட்பொறிபடுப்பமகச்சாலை
துன்னுற்றவைப்போராமெனத்துகள்வெண்பொடியாய்த்தே. (௧௧)

வருவீரபத்திரன்மூச்சினில்வருதீரவெங்கணத்தோர்
பொருவீரெனவிமையோரெதிர்போந்தாரவர்புகுந்தா
ரிருவேர்களுமெதிர்த்தாரிடிபிடித்தாலெனவதிர்த்தார்
தருவோர்புவிதருவோன்படைதானேவினரன்றே. [௧௨]

வந்துற்றதுமலரோன்படைமாப்பூதர்கள்படைமுன்
சிந்துற்றதுகண்டேதிருமால்வெம்படைவிடத்தீ
முந்துற்றோர்முளிபுல்லெனமுடிந்துற்றதுகண்டா
ரெந்துற்றினிச்செய்வோமெனவிமையோரிடைந்தகன்றார். [௧௩]

தனதத்திரம்போய்மாய்ந்ததுஞ்சமர்செய்திமையவர்தா
மனதிற்றுபரொடுசாய்ந்ததும்வரும்பூதர்களார்ப்புங்
கனதைத்திருமால்கண்டொருகவுமோதகிக்கதையுஞ்
சினமுற்றிடுசார்ங்கப்பெயர்ச்சிலையும்மெடுத்தெதிர்ந்தான். [௧௪]

நினைந்தான்கருடனைவந்தனனெடுமாலவன்பிடர்மேற்
சினந்தாவிடவிவர்ந்தான்சிலைசிலைதான்வளைத்துடனே
முனைந்தானமர்பொரக்கண்டனன்முன்வந்தவுக்கிரன்றான்
வனைந்தார்புயங்குலுங்கநகைத்தனன்வாணிகள்புகல்வான். [௧௫]

அறிவற்றனைபோலும்மடநெறிதப்பினையன்றே
செறிவுற்றிடுசிவனைவிடச்சேர்ந்துற்றனன்யானே
பொறிபற்றனையென்னோடமர்பொரவுற்றனைபோலும்
மறிவுற்றுயிர்மாயத்தனிமாயத்தனீயென்றான். [௧௬]

அடர்வுற்றிடநீயேறியவடல்பெற்றிடுகலுழ
னிடரக்கினிபுகுவிட்டினிறவுற்றதென்னெதிர்தான்
படவுற்றனையென்றானதுபார்ப்போமென்றமாலைப்
புடவிக்குள்விழப்பாசத்திற்புனைத்தீர்த்தனன்வீரன். [௧௭]

பாசத்தையறுத்தேவிணிற்படர்ந்தான்பஞ்சசன்ய
மோசைப்படவாய்வைத்தனனுலகெங்கணுமுலையப்
பூசைப்புரிசார்ங்கத்தனுப்போர்நாணொலித்தானை
விசித்தனகத்தாற்புவிவீழ்வித்தனன்வீரன். [கஅ]

வீழ்ந்தான்றிறல்பெறுசூகரவெற்பாமுருக்கொண்டான்
சூழ்ந்தேயுறுகணநாதரைத்தொடர்ந்தோடிடத்துரந்தா
னாழ்ந்தார்கடலுலகெங்கணுமனந்தம்மெறுழிகளாய்ப்
போழ்ந்தான்வரைகளைவீரன்முன்பொரவுற்றனனன்றே. [கசு]

பார்த்தான்றிறல்பெறுவீரபத்திரன்றன்னொடுபகர்வான்
போர்த்தானையினசுரத்திரள்பொன்றப்பொருகுவனென்
றார்த்தாரெனக்கெதிர்நிற்பருன்னரும்பூதர்களங்கம்
வேர்த்தாருளம்வெருண்டோடினரெனப்பேசினன்வீரம். [உ0]

கண்டப்பொழுதினில்வீரியன்கரியோனுருக்கருமாத்
துண்டப்பருவாய்நீண்முகஞ்சுருக்கொண்டிடப்பார்த்தா
னண்டத்தினையளந்தோனுலகடங்கக்கருமாவாய்
மண்டக்கடுங்கோபத்தவைமாய்த்தான்றிறல்வீரன். (உக)

அரசங்கரவெனப்பூதர்களார்த்தார்களநேக
நரசிங்கவுருக்கொண்டுயர்நாராயணன்வந்தான்
பரசுங்கணத்தவர்பார்த்தனர்பதைத்தார்வீரபத்ரன்
விரசுங்கழற்சரணத்தினில்வீழ்ந்தேவிளம்பிடுவார். (உஉ)

ஒருபன்றியினுருக்கொண்டுறுபயமின்னமுமொழியேம்
வருவெங்கொலைநரசிங்கத்தின்மலைகண்டுளமலைத்தே
மருகின்றதம்விறலென்றனரப்போதினில்வந்தே
பொருவெந்திறல்வீரன்னெதிர்புகுந்தாண்மைகள்புகல்வான். (உ௩)

உலகாளுறுநாராயணனென்றேதுறுநாம
மிலதாகுகவுளதாகுகவின்றேயெனப்புகன்றா
னலதாகுறுநின்சொற்றிறநவில்சத்தியனன்றோ
வலதாகுகவெனவவ்வுருவவிந்துற்றனவன்றே. (உச)

ஒருகோடியின்மழுவாள்கையிலுடைராமர்களாகி
யருகோடியகணநாதரையடர்ந்துற்றதுங்கண்டான்
வருகோடியபரசொன்றினைவாவென்றருகழைத்தா
னிருகோடியதிறல்வீரபத்திரனுஞ்சிவன்சுதனே. [உ௫]

சிவனைப்பரிவொடுபூசனைசெய்தாயதனுலே
தவமெய்ப்பயனுடன்வீரியந்தானுற்றனையன்றே
யவனுற்றிடுசின்னம்விடுத்தடுத்தாலுனையடர்ப்பேன்
புவனிக்குளென்றுரைத்தான்விடுத்துடன்வந்துபொன்றினனே. []

தன்மைந்தனிறந்தானென்ச்சமதக்கினிவந்தான்
மின்மைந்துறுசடைமாமுடிவிறல்வீரபத்திரன்முன்
பொன்மைந்தனையெரித்தோன்பத்திபொருந்தானகந்தையினுற்
றுன்மைந்தனிறந்தானெனச்சொல்லித்தொழுதனனே. [உஎ]

அப்போதினிலரிவாமனனுகிச்சடையவன்முன்
றுப்போதினன்றிரிவிக்ரமவுருவாகிமுன்சூழ்ந்தான்
வெப்போடுறுவீரன்னெர்விஞேதத்தவன்றலையைக்
கைப்போதினிற்றடிந்தான்கண்டுகணநாதர்களார்த்தார். [உஅ]

உடனேதசரதராமன்றுருக்கொண்டெதிருற்முன்
கடனேர்தருமரக்கன்கிளைகளைகட்டனனென்றே
திடனேர்தருதன்வல்லபஞ்செப்புற்றனன்கேட்டே
விடநேர்திறல்வீரன்னெற்றிவிழிப்பார்வையிலடர்த்தான். [உசு]

வேறு.

மதிபாதரியும்வீரனெதிர்வன்போடெதிர்ந்துமாய்ந்ததற்பின்
விதியாமைந்தன்வந்தவன்றன்மேல்வீழ்ந்துடலந்தைவந்தே
பதியாயுலகம்பரிப்போனேபகையாமரக்கர்படைமுழுதுஞ்
சதியாவடர்க்குஞ்சவுரியங்கடாம்போயினவோவென்றழுவான். [௩௦]

இரக்கமுடனேயெமைப்புரக்குமெந்தாய்நாராயணனீயே
கரக்குந்தக்கன்புராந்தகனுங்கடவுடனைநிந்தனைபகர்ந்தான்
பரக்கும்வார்த்தைசெவிமடுத்தபாவம்பலித்ததிதுவன்றே
துரக்கும்வீரனுனையடர்த்ததென்றேபுலம்பித்துயருற்முன். [௩௧]

இனையவாறுபுலம்புமயன்றக்கன்றனைப்பார்த்தியம்புகின்று
னினையுங்கடவுள்சிவன்றனைநிந்தனைபகர்ந்தேநின்வேள்வி
தனையுங்காக்குமாயனையுஞ்சார்ந்ததேவர்தங்களையு
மெனையுங்கெடுத்தாயென்செய்தாயென்றேவெகுண்டோதினனன்றே.

நாராயணனுக்கிறுதிவந்ததென்றுனின்றூர்நானிலத்தி
லாராயினுமுய்வாருண்டோவடங்காதானையடுத்தோர்கள்
சீரார்கிளையிஞெடுங்கெடுவரென்றேபுலவர்செப்பினராற்
பாராவிடத்தினுடன்கலந்தபாலும்பழனும்பழுதன்றே. [௩௩]

பரமன்றனைநிந்தனைபகர்ந்தபாவிதக்கனுடன்கலந்தே
யுரமன்றிருமாறனக்கிறுதியுற்றதெனவேசொற்றிரங்கும்
பிரமன்றனைப்பாசத்திறுகப்பிணித்துத்துணித்தான்றலையெண்ணில்
சிரமன்கணங்கட்கதிபதியாந்தீரன்வீரபத்திரனே. [௩௪]

கண்டார்தேவராகுலித்தார்கண்ணீர்பொழிந்தார்கலுழ்கின்றூர்
சென்டாடினனங்கவர்தலைகள்செறுத்தானறுத்தான்றிறல்வீரன்
றண்டாத்தக்கன்சென்னியுடன்சாலைதனையுந்தகர்செய்தான்
விண்டார்சிவநிந்தனைவிடத்தான்மிகவுமடிந்தார்முனிவோரே. [௩௫]

அகத்திலகந்தைபெறுந்தக்கனறைந்தவரங்தனைத்தீயான்
மகத்திற்றீயுமவியுண்ணவந்தோர்யாருமவியுண்ணச்
சகத்திற்கொருவனெனவெற்றிச்சங்கமுழக்கித்தோளாண்மை
மிருந்தவிசயங்காட்டினன்மீண்டான்வீரபத்திரனே. (௩௬)

கானவேந்தரிசைமுழங்கக்கடவுளோர்துந்துமிமுழங்க
வானுளோர்கள்பூமாரிவழங்கக்கயிலைவந்தடைந்தான்
பானுவனையமேனியொளிபடைத்தபடைக்கைப்பத்திரன்றன்
ஞானநாதனடிவணங்கிநடந்தகருமம்பகர்ந்தனனே. (௩௭)

எம்பிரான்கேட்டருகிருந்தவிமையமயிலாட்கிசைக்கின்று
னம்பொனுமையேதக்கன்மகத்தடைதுமென்றியேவிடுத்த
வம்புண்குழலாள்போய்முடிந்தாள்வந்தார்யாருமேமடிந்தார்
நம்புநமைத்தூடணம்புரிந்தோனடலைவாழ்வுமுடிந்ததென்றான். (௩௮)

இனையமாற்றம்வனைகுழலொடிமயப்பிடியெம்மான்மகிழ்ந்திருந்தான்
முனைவீர்சிவநிந்தனைபுரியுமூடரீனக்குலத்துதித்தே
வினைசேர்பவஞ்செய்தெரிநரகில்வீழ்வார்சிவனைபரமென்ன
நினைவோருலகில்வாழ்ந்தழிபாதிலைசேர்கதியிற்புகுவாரே. (௩௯)

தலைமேசிவனன்பர்களாவார்தலைமேவணங்காய்நெஞ்சமே
நிலைசேர்பரமன்றிருநாமநினைவாய்செவிகாள்கேண்மினரன்
கலைசேர்பொருளைக்கண்களேகாண்பீர்கைகளேதொழுவீர்
மலைமேசிலைமாவனைத்தோனைவாழ்த்தாய்நாவேயன்பரால்.

வள்ளலாகுமன்பர்செயலிவ்வாறுகுமற்றோர்தங்
கள்ளமுனஞ்சொன்னங்காண்பீரென்றேகவுதமன்கூறு
முள்ளவெல்லாம்பாழ்முனிவனெங்குநருமதாநதிவாய்த்
தள்ளற்கரியசிவனருள்சேர்தலைமைமறையோன்றனக்குரைத்தான். ()

முப்பத்தொன்பதாவது தக்கன்மகமழித்தசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஉ0௬.



நாற்பதாவது,

## வசிட்டருத்திரச்சருக்கம்.



வேறு.

கனகமலைபரையன்மகள்கண்களிக்கநின்றெநனகாமைநனிலாடுங்க
ண்ணுதலெம்பெருமான், பனகமுடனன்றிங்கள்கங்கையாடர்சடையோர்

காலத்தோதும்பலன்சத்தசத்தோவெனவுணர்வான், நரமதாத்தெரிபோதினில்விடயங்களினவன் சத்தெனக்கொள்வனல்லவனசத்தெனச்சார்வான். (௩௪)

பேசுகின்றவித்தருமங்கள்யாவுமேசித்தப்பிரமைமேவுதங்களுத்தமமாமெனக்கூறு, மீசன்பூசையேயெக்கருமத்துமுக்கியமாமினையநற்செயற்கங்கடீரண்டுறுமடங்கு, வாசிலாவங்கந்தன்னொடுங்கூடுமர்ச்சனைதானநேகமோடிகன்மங்களின்பலன்களுமளிக்குந், தேசன்பூசனையாதையொன்றினுமிலாதங்கத்திறத்தினிற்செயிலதன்பயன்செப்பவொண்ணுதே.()

ஆதிதன்னைில்பாயங்கத்தோடியற்றுருப்பூசைக்கரும்பலன்களின்றுமெனமொழிந்திடுந்தன்மை, நீதிசேர்தருமர்ச்சனைக்கருத்துறவாமானிகலிங்கங்கொடாயினுமின்றியாயினுமே, சோதியாரிலிங்கத்தினைவழிபடினந்தச்சொல்வரும்பலத்தெல்லைதான்சொற்றிடவற்றே, வேதையாயினுங்குறித்திடாதங்கத்தாற்பூசையியற்றிலாயுமேவ முதற்பலன்றெரிதியிறையோய். (௩௬)

அங்கபூசையிலியாதுவாறுடருஞ்செல்வமதனையாதுதானல்கிடுமேதுவயிராக்கியர், தங்கமேவசெயுமெனிற்புகல்கேனிலிங்கேசன்றனையருச்சனைசெய்திடுமுபகரணங்கள், பங்கமற்றவாறுடருந்தீபதூபங்கள்பகர்னைவேத்தியம்புரிந்திடிற்செல்வம்வர்த்திசையும், பொங்கும்வில்லவார்ச்சனைவயிராக்கியம்பொருந்தும்புகுதருஞ்செல்வமெவற்றினுக்கென்றியேற்புகல்கேம். [௩௭]

பஞ்சவாசம்பஞ்சாமிர்தம்பஞ்சகௌவியமேபானெய்தேன்றயிராதினீர்க்குளம்வாய்க்கா, றஞ்சமாயபீடகத்தின்பொருள்களைவேத்தியஞ்சாலியன்னமபூபஞ்சட்கறிவர்க்கம்பலங்க, ளெஞ்சிடாரசமுறும்பரமானம்பானீயமியாவுமேபுரிந்தியற்றிடமனைவியும்வேண்டு, மஞ்சமாகியகற்புடையாள்சுசிருசியாவமைத்தயாவையுமாஞ்சிவன்றனக்கற்பிதமால்.

தனதியற்கையாற்பூசனைக்குறுமுபகரணந்தனைவிடுப்பவர்நரகினிற்புகுதல்சத்தியமான், மனதுறும்வயிராக்கியமேதெளிற்றனக்கேவாய்த்திடுஞ்செல்வமியாவுமேசிவனுக்கென்றாற்றல், புனகபூடணன்பூசையிற்சிவதன்மத்தன்னிற்பத்திபாவனைபிடிபடிற்பரனருள்பெறுவா, னனகசற்குணசனகமேளதிலொருகாதையற்புதந்தருவனவுளபுகலுவனன்றே. []

உலகனீதியிற்புரந்திடல்சிவபத்தியுறுதியும்பர்நாயகரன்பருக்குதவிசெய்யூக்கங், கலகமேசெயுமருவலர்ச்செகுத்திடுவீரங்கல்விமேன்மைசத்தியத்திடசித்தநல்லாண்மை, யிலகுமேதவபூசனைதருமங்களேதேடலேகதாரநல்விரதம்புத்திரசெல்வமினைய, வலகில்சீர்பெறுசதானந்தனென்னுமோரரசன்னனந்தனோடுந்தன்குரவன்றன்னிடத்தடைந்தனனல். []

கடவுளம்பனுஞ்சேடனோடுற்றகாவலன்றன்காதல்கூர்ந்தருட்குர[illegible]

லாசானரனைப்பூசனைபுரிதருமமையமாயிருந்தும், திடமுறுஞ்சிவபத்த னாமிவனுடன்வார்த்தைசெப்பவேண்டுமென்றெனினுத்தரங் கொடுப் பப், புடவிகாவலன்சதானந்தன்வணங்கியேநின்றுபொருவிலா தநன்கு ருவுடன்புகலுகின்றனனால். [௩௧]

மறைகளோதியதருமத்தின்முதன்மையேதனில்வகுத்ததேவரி ன்முதல்வராமுத்தமரெவர்தா, மிறைவனேயெந்தத்தேவரையேதொழுதி ன்றுயிதனைநான்முற்றுமறிதரவியம்புதியெனவே, யறைதருந்தருமத்தி னிற்சிவதன்மமேமேலாமம்பிகாபதிதேவரிலதிகனுமன்றே, குறைவிலாவவ ன்சேவடிகுறிக்கின்றேன்யானேகூறுமாங்கவன்றருமத்தி னியல்சொல் கேள்கேண்மையோ. [௩௨]

அதிகொளுந்தருமத்தினிற்சிவதன்மந்தானேசொல்லுமுத்தம மத ன்றாக்கதிகமுண்டென்றே, மதியிற்கண்டிடக்கேட்டிடப்புகன்றிடவி ன்றல்வழங் குகாமியமியாவையுமாங்கதுகண்டா, யதிகமாமந்தத்தரு மத்துட்சிவலிங்கபூசைபாற்றிடின்மறையாவுக்கு மதிகமாமன்றே, பதி யைப்பூசிந்திடபத்திமேதுவுமதுவேபாததாமரை வண்டுபோலுறு மென்றன்மனமே. [௩௩]

கமலமன்னவப்பதத்தில்வண்டாமெனவுறுதல்கருதுமியாககோடிக டவர்தானத்திலாமோ, வமலமூர்த்திதன்னருளினாலெய்திடவேண்டுபதி கபாதகம்புரிந்துளோனாயினுமழகா, ரிமையநாயகிபாகனையொருகணமி தயத்திருத்திலப்பொழுதேமுத்திவீடுறுஞ்சைவ, சமையதேசிகன்பாத பூசனைசெயிலதுவேசங்கரன்பதபூசையென்றருமறைசாற்றும். (௩௪)

கொடியபாதகப்பஞ்சமாவரையரனுமங்கூறுதீப்பொறிகளுவிட ப்பொடிப்பொடியாமான், முடிவிலாச்சிவபூசையின்பெருமையையேதமு ழுங்குகின்றதையாவரேமொழிந்திடவல்லார், வடிகொள்வேலினனோ டுறுஞ்சேடன்றன்சகத்திரவாயினோடிரண்டாயிரநாவினாலிதனை, நொடி செய்முற்றுறுமோவிதைமுற்றுறவனந்தனுவலருந்தவம யுகமிகச்செய்து முற்றிலனால். (௩௫)

அந்தமில்லதோரன்னதன்பெருமையைச்சிவனேயறியவேண்டும் பின்னாறிந்துரைத்திடவல்லார், நந்திடாதநற்றருமங்களியாவையுந்தெரி யநவிலும்வேதசிகாமணியெனுஞ்சதாசிவனே, யிந்தநற்பெருந்தன்மை யெலாஞ்சொலவேண்டுமேலவார்குழலம்பிகைகேட்கவேவேண்டு, முக் கைபம்பைதன்னடுவுறைவேளுமென்போன்றமுனிவருநந்தியாதியருஞ் சிலரறிவார். [௩௬]

அறிந்துளாருமேபுகல்வதுகடினமாமன்றேபரன்றன்பூசனைவிதிகள் போதிப்பதும்வெகுவாற், செறிந்தசெஞ்சடையான்சிவதருமங்கள்புகல் வோன்சிந்தைவைத்தந்தரங்கமாச் செப்புதல்வேண்டு, முறுந்தியான

டாயமெனச்சிவபூசையுஞற்றுவோன்மகத்துவமறைசொல்லுமோவ
வனே,பயிர்ந்திடுந்தருமோத்தமன்யாம்வணங்குறுவோமாழியானயன்றே
வர்வந்திப்பவனாவான். [சஎ]

அவனைக்கண்டுளோனுயிர்முத்திசேர்வதுமரிதோவடிவணங்கினோ
ன்சுத்தர்க்கும்பரிசுத்தனாவான், றவமிகுத்துளோனன்னவன்பாததூட
னையேதமதுசென்னியிற்கொண்டுளோர்சனனநீங்கிடுவார், கவலைதீர்ந்த
வன்றன்னையேபூசனைபுரிவோன் காலனார்பயந்தீர்ந்தரன்பதம்பெறுவா
னென்,றுவமைநீங்குசதானந்தனுந்திறல்வேந்தற்குண்மையாவுபதேசஞ்
சொல்குரவனோதினனே. [சஅ]

நாற்பத்தாறாவது சதானந்தச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கசருஉ.



நாற்பத்தேழாவது,

# வீரேசுரச்சருக்கம்



வேறு.

பொறிவிழிதனக்குஞாலப்புறம்பொருளுள்ளவெல்லாஞ்
செறியிருடன்னைநீக்கித்தினகரன்காட்டுமாபோன்
மறிதருமகத்தஞ்ஞானவல்லிருணீக்கித்தன்னை
யறிதரக்காட்டியெம்மானனந்தநடனஞ்செய்வான். [க]

சற்குருவுரைத்தமாற்றஞ்சதானந்தவரசன்கேட்டே
பொற்கிரிகுழைத்தவீசன்புண்ணியவிலிங்கபூசை
நற்கருமங்கள்செய்யும்விதியினைநாயினேற்குச்
சிற்குணவடிகளேயுன்றிருவருளாற்சொல்கென்றான். [உ]

மாதவக்குரவன்சொல்வான்மன்னகேளண்ணல்பூசை
யாதரித்தியற்றுவோர்களருணன்றன்னுதயத்தன்னி
லோதியவிதியிற்செய்யுஞ்சவுசாதியுஞற்றியந்தப்
போதுநீர்படிந்துமூன்றுபுண்டரந்திகழச்சாத்தி. [ங]

கண்டிகைபூண்டுநித்தகருமவந்தனமுமாற்றி
யண்டர்நாயகனுக்கேய்ந்தவுபகரணங்களாய்ந்து
கொண்டுயர்பூசைத்தானங்கோமயசுத்தியாற்றி
மண்டியகாதலோடுமஞ்சனமாதியுய்த்தே. (ச)

[illegible]
நசைபெறுமாசனத்தினலம்பெறவீற்றிருந்தே

யிசைபெறுமிதயந்தன்னிலிமயமாதுடன்கலந்த
வசைவில்கற்பூரவெற்பாமெனவொளியாகத்தானே. (௫)

மாமணிப்பூண்வெண்பட்டுவனைந்தவானந்தக்கட்டி
யாமவன்றன்னைநீலகண்டனையருள்சேர்மூன்று
தாமமார்நயனத்தானைச்சூலஞ்சேர்தடக்கையானைச்
சோமசேகரனைமேருவில்லுடைச்சோதியானை. [௬]

நான்மறைப்பொருளான்றன்னைநாளுமேபத்திபூண்டு
கான்மலர்சாத்துவோர்க்குக்கான்மலர்காட்டுவோனை
மான்மழுவபயமோடுவரதஞ்சேர்கையினானைத்
தேன்மலிகொன்றையானைத்தியானித்துமுன்பூசித்தே. (எ)

மனமகிழிலிங்கந்தன்னின்மானதபூசைபோற்றின்
கனகவாசனத்திலாவாகனமுதற்பூசையாற்றித்
தினமலர்வனசம்வில்வஞ்செழுமலர்பலவுஞ்சாத்தி
யனகனுக்குபசாரங்களாவனபலவுஞ்செய்தே. (அ)

பூசனைமுடிவிற்றண்டுபோல்விழுந்திறைஞ்சிப்போற்றி
யீசனேயடியன்பூசைப்பிழைபொறுத்தாள்வாயென்றே
யாசையாற்றுன்செயாராதனைப்பயனரனுக்காக்கித்
தேசுறுந்தனதான்மாவையற்பணஞ்செய்வானன்றே. (௯)

அடியனேன்மனநின்பாதத்தம்புயவண்டதாக
முடிமலராகவென்றன்மூச்சின்காறூபமாகக்
கடிவிழிதீபமாகநிவேதனங்காதலாக
வடிவுறுமங்கஞ்செல்வம்வந்தனைக்கங்கமாக. [௧௦]

மனையுடன்மைந்தர்தாமென்வழிபாட்டிற்குதவியாக
வனைவரும்பூசையாற்றவண்ணலேசெல்வம்வேண்டி
யுனதுபூசனையிற்காலம்போக்கவேயுதவிசெய்வா
யெனையினஞ்சனனத்தெய்தாவண்ணங்காத்திரட்சிப்பாயே. (௧௧)

ஐயவுன்னுடனெனக்குவழக்கென்னபிறவியாற்றச்
செய்யினுஞ்செய்வாயந்தச்செனனங்கடோறுமென்னெஞ்சு
மெய்யநின்பாதப்போதில்வெறியளியாகவேண்டு
மெய்துவன்சித்தியாவுமிவ்வரமேனுமீவாய். (௧௨)

பத்திதான்பவரிடத்திற்பதிகற்றலத்திற்கேகச்
சத்திதான்வருகசெல்வர்தமதிடஞ்சேருஞ்சத்தி
சித்தியாதொழிகமாதர்கோட்டியிற்சிந்தைசேரா
துத்தமச்சிவலிங்கார்ச்சனையினெஞ்சுவகைகூர. (௧௩)

காதுபுன்கவிகேளாமற்கடவுடன்சரிதங்கேட்க
வோதுநாச்சிவநாமத்தினூறமுதூறன்மாந்த

..நர்முன்குருடாயென்கண்வள்ளன்முன்காந்திசேர
..பாதனேன்கைகளெம்மானடிப்பூசைபுரிகவன்றே. (கச)

..ன்றனக்கியாகயோகதன்மமிந்திரைவிலாச
..ன்றலார்செல்வம்வேண்டாவள்ளல்பூசனையேவேண்டும்
..ன்றுதாய்கருப்பத்துள்ளுந்தோன்றியகுழவிப்போதும்
..வென்றிவேல்விழிபராசைக்காலத்தும்விரும்பிலேனே. (கரு)

..ப்பொழுதுனைநினைந்தேனினியுள்ளகாலமெல்லா
..ப்பநின்பாதப்பூசையடியனேன்புரிகநல்காய்
..செப்பியவிளமைக்கானிற்றெரிவைபராசைப்பேயிற்
..கைப்புருந்துழன்றேவீணிற்காலங்கள்கழித்துளேனே. (கசு)

..செண்பகமுல்லைவில்வந்திகழ்குருக்கத்தியாதி
..தண்பெறுமலர்கொண்டேத்துமவர்தமினந்தனத்தோ
..டெண்பெறுமனுவயன்றன்கற்பத்துமீறில்லாமற்
..பண்புடனிருக்கநல்கும்பரமநிற்பணிந்திலேனே. (கஎ)

இங்குனதன்பர்பாதமேத்தவும்பெற்றிலேனே
சங்கரவுலகுக்கெல்லாந்தந்தைதாயாகிநின்ற
வங்கணவெனக்குநல்கினருட்கடல்குறைவதுண்டோ
வெங்குநின்றுலுமேழைக்கிரங்குமென்றுரைக்கும்வேதம். (கஅ)

அம்பிகாபதியேயுன்னையருச்சித்தேனெனைரட்சிப்பாய்
நம்பினேனெனப்பணிந்துநாத்தழும்பேறப்போற்றிச்
சம்புநின்முன்னர்நைவேதனஞ்செய்நின்மாலியந்தா
னெம்பிரானன்பரோடிருந்தருந்திடவேவேண்டும். (கக)

அருந்திலோர்பிடிக்கொருக்காலரகரசிவமகேச
வருந்திடாதருள்வாயென்றுவாழ்த்தியேபுசித்தல்வேண்டுந்
திருந்தவிப்படிச்செய்வானேற்செய்தபாதகங்கணீக்கிப்
பெருந்திருவாணைநல்கிப்பிறவாதநெறியுய்ப்பானல். (உ0)

..ம்பநின்மாலியத்தின்சொல்லனுவளவுண்டாலுங்
கையினிற்பரிசித்தாலுங்கமழ்முடிதனிற்கொண்டாலுஞ்
செய்யுமாபாவநீங்கிச்சிவபதமடைதறிண்ண
முய்யவங்கதுகையுற்றுலும்பாரமுதென்றோர்ந்தே. (உக)

..ஆனந்தக்கூத்துமாடியரகரவெனமகிழ்ந்தோன்
..னந்தமில்லாவன்பன்றனக்கிணையொருவருண்டோ
ஞானஞ்சேர்வசிட்டராதிமுனிவருநலத்தினெவ்வா
..ரீனமிலிதனிற்பத்திசெய்தன்முற்றவமதாமே. (உஉ)

..புகலுமிங்கிவைபுசித்துப்பூரித்தோன்றன்னைக்கண்டே
..மகமகிழ்ந்தேவணங்கியாதரித்தவனேதேவ

ணிகரிலாவிதனையுண்டோனிறைகவிப்புலவனுவான்
மகபதிதுணையுமன்னோன்மலர்ப்பதம்வணங்குவானே. (உரு)

ஆரேனுஞ்சிவசேடத்தையரனடியாரோடுண்பார்
பாரேறும்பெரியோரென்றுபகருவர்முனிவரெல்லாஞ்
சீரேறுமிலிங்கபூசைசெய்தரன்கதையுஞ்சொல்வோ
ரேரேறும்பதத்தூள்சென்னியேற்றவன்யமனேடெய்தான். (ருச)

கடவுடன்சரிதங்கேட்பிற்கந்தரமேநீவிம்மாய்
படர்சடையவன்பூசைக்குப்பலம்வில்வங்கையேகொய்யாய்
சுடர்விழியேவெற்பீன்றுமணவனைப்பாராய்வாரா
யடர்மனமேயெம்மானையனுதினநினைத்திடாயே. (உரு)

என்றுசொற்றுறைவோர்தங்கட்கிந்திரனுபேந்திரன்று
னென்றியவாசறன்னிலூழியத்தவர்களாவார்
கன்றியமனமேயெம்மானன்பரல்லாரைக்கண்டாற்
றுன்றியபுலையரென்றேதூரத்தேயகறிகண்டாய். (உசு)

கனவினுமேயன்னுரைநினையற்ககனதைவேண்டிற்
பனகபூடணனைத்தானேபரவிடாய்சென்னியேநீ
யனகனைவணங்காய்நாவேசிவனுமமறைதியன்றே
தினமுமென்செவிகளேநீர்சிவகதையமுதுண்பீரால். (உஎ)

நாசியேவள்ளல்சாத்துநன்மலர்மணங்கொள்வாயாற்
றேசுறுமுடம்பேகைகளிரண்டுசென்னியின்மேற்கூப்பிப்
பூசையின்முடிவினின்றேபுரிந்துகூத்தாடல்செய்தி
யாசைநெஞ்சனமேயீசனடிப்பதுமத்தன்பார்வாய். (உஅ)

சித்தமாம்வண்டேமாதர்சிமிழ்ப்புவர்க்காட்டைநீங்கி
யத்தனர்ஞானவோடையரனடிக்கமலஞ்சேர்தி
பத்திசேருனக்கின்பத்தேன்பரவுறுமனவனத்திற்
குத்தமஞானனந்தக்கிழங்கையுமுதவுமன்றே. [உகூ]

சாய்த்திடுதலைமுன்னயவங்கமேசங்கரன்றன்
வாய்த்திடுகோயிலங்கப்பிதக்கணம்வருதிபூழ்தி
தோய்த்திடுமுறுப்பினேடுஞ்சூழ்தொறுங்கறுத்துக்கன்றிக்
காய்த்திடுமுடம்புபெற்றாற்கடுவினைகளையலாமே. [௩௦]

மேதினியாதிசித்தசஞ்சலமிடாவைவிட்டற்
காதியைப்பணியும்பத்திக்குடாரமேயமைதல்வேண்டுஞ்
சோதியைப்பூசைசெய்துதுதிசெய்தாற்றுன்பமாக
மோதுறுங்கடலைநீங்கிமுத்தியைச்சேரலாமே. [௩க]

ஆதலாலீதுகேட்டிசதானந்தவரசரேறே
நீதியாற்பூசையாற்றிநிமலனுரன்பரோடு

நீதிலாவுறவுகொண்டுசேர்ந்தரனிவேதனஞ்செய்
போதனாங்கொடுத்தன்னுரையுகந்துகாத்தருடியன்றே. [௯௨]

அன்னதொண்டர்களுன்பூசைக்கங்கமாயுறைதற்பாலார்
மன்னவவவரேயல்லான்மற்றுளோர்தமைச்சேரற்க
முன்னிருந்தவர்தாமந்த்ரமுறைமுறைபுகன்றுரென்னிற்
சொன்னவன்பூசைதன்னிற்றொலைவிலாப்பலனுண்டாமே. (௯௩)

போனகம்புரிந்தபின்னர்ப்புண்ணியனடியாரோடு
ஞானசாத்திரபுராணநவின்றுவிற்றிருத்தல்வேண்டு
மானபின்னந்திமாலைப்பூசையுமமைவினூற்றித்
தேனலர்கொன்றையார்க்குத்திருவர்த்தயாமந்தன்னில். (௯௪)

பூசனையாற்றிப்பொன்னூற்புரிபரியங்கமீதில்
வாசனைச்சுகந்தமாலைமலர்பலவொலியனுற்றி
யீசனுமுமையுமேவியிருந்தனரதனிலென்று
நேசமொடிதயத்தெண்ணிநித்தமும்புரிகுவாயால். (௯௫)

இப்படிநிசிக்காலத்துமிப்படிப்புரிந்துளோர்க
ளொப்பருமுலகையாண்டேயுயர்பதம்பெறுகுவாராற்
செப்பருமிலிங்கபூசைதனில்வருஞ்சித்திபோலே
தப்பிலாப்புண்ணியங்களொன்றினுஞ்சார்ந்திடாவே. (௯௬)

நீதிநன்னெறிகட்கெல்லாம்விசுவாசநிமித்தமாகுந்
தீதிலாவிசுவாசத்தாற்சிவபதஞ்சேர்தறிண்ணம்
பேதைமாந்தர்களுக்கீதுபெறுவதுமரிதுகண்டாய்
மேதகுகாசிமேவும்வேதியனொருவனுண்டால். [௯௭]

விசுவநாதரையும்வீரேசுரரையும்பூசைசெய்வோன்
றிசைபுகழ்தரும்வீரேசன்றிருக்கோவிறனிலெந்நாளு
மசைவிலாத்திருமெழுக்குந்திருவலகாதியாக
வசைவிலாப்பணிகள்செய்துமன்னுபூசனைகள்செய்வான். [௯௮]

அனையவனொருநாளண்ணற்கர்த்தயாமத்தின்பூசை
தனையுகந்தாற்றியாங்கட்சயனமுஞ்செய்தானன்னோன்
முனமெழுந்தருளிவீரேசுரன்வந்துமுன்னர்நின்றான்
பனவன்றான்கண்டுவீழ்ந்துபணிந்துதோத்திரஞ்செய்தானால். (௯௯)

அன்னவன்றன்னைநோக்கிவீரேசனருளிச்செய்வான்
பன்னருமறையோயுங்கள்பத்தியாசாரமியாதே
யுன்னரும்விசுவாசந்தான்யாதவையுரைத்தியென்றான்
மன்னருமறைவல்லாளன்றொழுதனன்வகுக்கின்றானால். (௪0)

அண்ணலெம்மாசாரம்நின்னடியருக்கடியராக
வண்ணெழில்வுடனேபூதிபுருத்திராக்கந்தரித்துக்கொள்வோம்

பண்ணவனினதுபஞ்சாக்கரசெபம்பண்ணுவோமியாந்
திண்ணமாமிவற்றையன்றிச்செய்யுமாசாரமென்னே (சுக)

இன்னணஞ்சிவதன்மங்களியாவையுமேதெரிந்து
பன்னரும்பாவகோடிபாறவேபரிந்துசெய்வோ
முன்னருமிதயலிங்கபூசனையுறுதியாகத்
துன்னருமலர்கள்கொண்டுதொழுதருச்சனைசெய்வோமே. (சுஉ)

அரம்பையர்வந்துசேவித்தளகத்தான்மறைக்கும்பாத
வரந்தருங்கவுரிசெய்யகமலத்தாள்வந்திப்போமாற்
புரந்தனிற்சிறந்தகாசிப்புரவீதிதனிற்புகுந்து
நிரந்தரஞ்சஞ்சரிப்போம்நின்னுமம்புகலுவோமால். [சுங]

கோடிசூரியப்ரகாசக்குணக்கின்றுயேகனுகி
நாடரும்பொருளதாகிப்பரத்துக்கும்பரமாய்ஞான
வீடுதந்தருளுமேலாமகத்துக்குமகத்தாய்மேவுந்
தேடருநின்னைப்பூசித்தடியிணைசிந்திப்போமே. [சுச]

அம்பிகைசிவனுனந்தவலைகளிலாடல்செய்யு
நம்பியாம்வாலசுப்ரமணியன்றுணயத்தல்செய்வோஞ்
சம்புவீரேசர்முன்புசார்ந்துகங்காசலத்தின்
கும்பங்கள்கொண்டேநாளுங்குளிரவேபாட்டுகிற்போம். [சுரு]

கங்கையிற்சுத்திசெய்தகடிமலர்வில்வந்தன்னுற்
பொங்கியவோமத்துற்றபூதியாலுனைப்பூசிப்போந்
தங்கியவாரணசிச்சம்புவேயிவையேயல்லா
லெங்களுக்காசாரந்தானியாதெனவணங்கிச்சொல்வான். [சுசா]

ஈசனின்னருளாலிவ்வாறியற்றலேயென்பாற்செய்தி
காசியின்மகிமைநின்றன்கதைகளென்விடயமீதே
மூசுவேன்மற்றைக்காதைமுயலுவேனுயிரின்பாவ
நாசனேபொறுத்தாட்கொள்வாய்நாயினேன்பிழைகடானே. [சுஎ]

கூவிளநீழன்மேவுங்குணக்குன்றேதிருமடந்தை
காவலனுதிதேவர்க்கருள்புரிகடவுளாகி
மேவியகங்கையாற்றின்வெள்ளத்தினனந்தவேணித்
தாவிலாநிதியேயாஞ்செய்தரும்பிழைபொறுத்தாள்வாயே. [சுஅ]

திரிவேணிமூழ்கிப்பூதிபுண்டரந்திகழச்சாத்தி
யரிதானகண்டிபூண்டேயனுட்டானநியமமாற்றி
யுறைசெய்தேயுருத்திராத்தியாயமஞ்செழுத்தைக்கங்கைக்
கரைமீதிலிருந்துநின்னைக்கருத்தினிலிருத்திலேனே. [சுகூ]

அருந்துயர்நீக்கியாளுமண்ணனின்னருளார்சென்மப்
பெருந்துயர்நீங்குமாறுபெற்றிலேன்சிவயோகத்திற்

திருந்தியதவத்தோரோடுஞ்சேர்ந்திலேன்சிவனையெய்து
மருந்தன்னகருணைதந்தாண்டருளெனவழுத்தல்செய்தான். [ருo]

இன்னவாறேத்திவீரேசுரனருளெய்தப்பெற்றே
மன்னியகாசிவாசம்பெற்றனன்மறையோன்றானே
யுன்னருஞ்சிவனைப்பூசையுஞற்றினோர்பெறுதொன்றுண்டோ
தன்னிகரிலாதகீர்த்திச்சதானந்தவாசரேறே. [ருக]

ஆதலானீயுமாதர்மைந்தர்மேல்வைத்தவன்பை
மாதொருபாகன்பாலுமன்பர்தம்மிடத்தும்வைத்தே
போதருஞ்சிவதன்மஞ்செய்துயர்கதைகேட்டியேலுன்
றீதெலாந்தீர்ப்பனென்றுசூதவன்றான்செப்பினானே. [ருஉ]

நாற்பத்தேழாவதுவீரேசுரச்சருச்சமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கசஅச.



நாற்பத்தெட்டாவது

## சூரசேனச்சருக்கம்



வேறு

வேதநாயகன்விடுதர்நாயகன்விரைமலர்க்கமலாசன மின்னனிருவோ
ர்களைபகவேறுவேறுருவங்கொடே,சோதிநாயகமாய்வளர்ந்ததன்னடியு
நீள்சுடர்முடியுமே தொடர்ந்துவாணுலகெல்லைமுற்றநடந்துகிழ்நிலைதரு
வியே, வாதினாலவரோடிநாடியுணர்ந்திலாவொருநாயகன் வானநாயகன்
ஞானநாயகன்மன்றிலாடல்செய்நாயகன், பூதநாயகனாதிநாயகன்பூவை
போன்மொழிப்பாவைதன் பொருவினையகன்பாதமேத்தினர்புவனநாய
கராவரே. [க]

ஞானமாமுனிபானவாக்கினவற்கியோகிசொல்வான்சதா னந்தராச
ன்வணங்குதன்சூதவன்பகர்ந்தநலந்தெரிந்,தானனங்களோரைந்துடைக்
கடவுட்கியன்றிடுபூசனை யாற்றுமாறுதன்னேற்றமாமுளத்தன்புபூண்ட
னனுமரோ,வினமாகியமக்கள்பெண்டிரிடத்தில்வைத்திடுமென்பொழிந் தி
றைவர்பாதமிறைஞ்சுவோரவருடபதாண்மலரேத்துவோ, ரேனமாநரை
திரையினோடுறுமூப்புசாவெனவேயிட ருற்றிடுஞ்சனனத்தில்வந்தலைவுற்
றிடார்கதியுறுவரே. [உ]

மடந்தைபாகரைப்பூசைசெய்பவர்செல்வமேசெல்வமாகுமான் மக்
கள்பெண்டிர்மயக்கெனுங்கொடுவாளராக்கவர்வுற்றிட, விடந்தலைக்கொ
டிறக்குமன்னவர்சிவகதாமிர்தவாரியின் விசுகின்றதோர்திவலைகிட்டினு
ம்விடுசேர்வதுதின்னமே. யடங்கலர்ப்பொருளகேள்சிவகதையினா

முதக்கட லஞ்ஞைபெற்றிடுமோந்தருக்கதடுப்பதற்கதிதூரமாந்,திடம்பெருங்கடலதனிலேவருதினகரோதயகோடிபோற் சீவமாமணிகோடிபோற்சிவனேசர்கோடியர்செறிவரே. [௩]

அந்தமாதியிலானையேயுனுமறிஞர்கடம்மகிமையை யாரறிந்துறுவார்கண்மூவுலகத்தினும்மரிதாமவர், சுந்தரத்திருமேனியின்கதிர்கண்டபோதுடனேகடற் சூரியர்க்ககலாவஞானவிருட்குழாந்தொலைவுற்றிடு, மெந்தையார்திருவருளின்மேன்மைவிளக்குஞானவிளக்கென வின்பமேபெறுமன்பராகியவிரதர்கோடியுண்டாக்கினோர்,பந்தமற்றிடுமெவர்கடம்பதபூசைசெய்துவணங்கிடும் பாக்கியஞ்சனனங்கடோறுமியற்றிடுந்தவபலனரோ. [௪]

அனையதொண்டர்களுக்கினுற்றிருவாக்கினற்பரிசத்தினு லானமூன்றினுமேயடுத்துளவவர்கள்பாவமகற்றுவா,ரினையர்தம்பதூளின்மூவுலகெங்குமேபுனிதஞ்செய்வா ரினியதொண்டர்களைதிர்கொளத்தரிசனமுறத்தொழுநன்மொழிப்,புனிதம்விண்டவர்செய்யமேனியின்மருத்துறப்பெறுவோரெலாம் புனிதராகுவரிவற்றினோர்கதைபுகலுவேனதுகேட்டியான்,முனமிலங்குசெழுந்தமிழ்த்திருநாட்டின்முத்தியழித்திடு முத்தமாநதிதீரமேன்முதுகுன்றமொன்றுளததனிலே. (௫)

சிந்தையிற்சிவபத்திபெற்றவன்மிகவுமேதருமஞ்செய்வோன் நீரராசகுலத்தில்வந்திடுஞ்சூரசேனனெனச்சொல்வோன், முந்துமுத்தநதிக்கரைக்குளநேகமாலயமாக்கினன் முதல்வனார்தமிலிங்ககோடிபதிட்டைசெய்துமுடித்துளா,னந்தமேவு மிலிங்கபூசனையாற்றுவித்தனனுடொறுமழகனார்பழமலையர்முன்னமமைத்துளான்மணிமண்டபஞ்,சுந்தரத்தொளிர்தீபதோரணமாலைபூமணமாலையுந் தூக்கினேனுமைபெரியநாயகிதுணைவர்பூசைதொடங்கினன். (சு)

அருணனுருதயாதியேதொடுத்தாற்றுபூசைமுதற்றிரு வத்தயாமவரைக்குமேசெயுமாறுகாலமெய்ப்பூசையி, லுரிமையேகொடுமாதர்சேயரசுரிமைமற்றுமுன்னுமலே யுய்யுமாறுளபத்தியாலவைசெய்யுமாறுசெலுத்துவோ,னிருணலம்பெறுகண்டராகியகருணையங்கடல்பூசனைக் கினிதவன்கொணர்புனிதநன்பொருளிவளவென்றெவர்புகல்வரே,யொருவரும்பெருதற்கருந்திருவுடனளந்திடவரியதோ ருண்மைநற்குணமுடனரன்பெயரோதுநாவையுமுடையனே. (எ)

அவனயந்துறுபரிசனங்களுமனையர்சங்கரநாமமே யறையுநாவினர் தூபதீபமோடலர்கண்மஞ்சனமாதியா, நவமுறும்பலகுடைகள்சாமரைவிசிறிமற்றுளவரிசைக ளுடொறும்புரிபூசனைக்குறுதிரவியங்கள்கொடுத்துளார்,தவமிகுந்திடுமரசனுக்கனபதியெனும்பெயர்சார்ந்ததாற் சங்கரற்குசிவதனம்புரியன்னராசிகடம்மையே, யுவமையற்றிடுமன்பர்தாம்

பறவுதயலத்தடவலாயுமே முறுமாறுசுவைப்பதார்த்தமோடுதவிடுங் கொண்டையாலரோ. [அ]

தனதுடைக்கசரதுரங்கபதாதியோடுபகாரமாந் தவலைசெம்பு றுடையாபரணங்கள் ண்டிகைவாகனமெனதலச்சிவனுமமுற்றிதனை ச்சொல்வான்பின்வேறுபேரிக்தலோகமடக்தநாமமியம்பிலானவன்வை த்திடும்வனமதிற்புறவதனிலுற்றமரங்கள்பைங்கொடிசெடிகளின் மலர் கள்காய்கனியாவுமாமறையனையும்வள்ளறனுமமே, புலைகுவானவனுட் டிலுற்றசனங்கள்யாவருமன்னதேபுந்திவைத்திடுபாவனைச்செயல்புரிகு வார்புவியரசனே. [கூ]

அரசனன்னவன்மருவலார்களநேககோடிவல்லமர்பொர வவரை டைத்திடுபொழுதிலிங்கநவெல்லுவார்பிறிதில்லையாம், பரசிடும்பதியேயெ னக்கொளுமன்னபோதிலெதிர்த்திடும் படையுடைந்திடுமவனுளத்தினி னைத்தகாமியமியாவையும், வரமெனும்படிசிவனதாணையின்வந்திடும்ப டியதுகொள்வான் மன்னனிப்படியிச்சையுற்றதுவாய்த்திடச்சிவபூசை யி, னுரமதாகியவாசையுற்றனனுண்டியாசையுமற்றன னேதுபூசையிற் போதுபோக்குவன்மாலையர்ச்சனையுவகையான். (கo)

பூசைசெய்திடுபோதுபாதமுதற்சிரம்பரியந்தமும் பூதிதூளனமாவ ணிந்துளபுண்டரங்கள்வயங்கவே, யாசையன்பர்களுடனிறைந்திடவர ன்மகிழ்ந்திடுகண்டிகை யணிகிரீடநல்வாகுமாலைகள்கந்தரத்தணிமாலை கடேசுசேர்தருசன்னவீரமோடங்கியின்னதிலக்கமாச் செப்புமாமணி யுப்பொபாரமுடன்கலந்தணிசெய்கையான், பேசுசுத்தநிலத்தினிற்சு கவாசனத்திலிருந்தரன் பிரியமாகுமிலிங்கபூசனைபெருகுமன்புடனாற்று வான். (கக)

சங்கரற்கபிடேகமுற்றிடுதிரவியந்தனின்மிக்கபா றயிர்நெய்தேனு பலகனிக்குறுசாரமாரமுறுங்குழம், பங்கமாகியமந்திரங்கொடநேக வெள்ளமதாகவே யன்பினலபிடேகமுஞ்செய்தருச்சனைக்குளவகை யெலாம், திங்கள்போலொளிர்முல்லைமல்லிகைவில்வநல்லனதேடியே சி ந்தையன்பொடணிந்துதண்புழுகோடுகுங்குமக்கலவையும், பொங்குமேக மழ்தரவணிந்தொளிர்குவளைமாமணியாரமோ டிறைமகிழ்ந்திடுநிறைப ணித்திரளின்னைடமாலிகைசாத்தியே. (கஉ)

அன்னவெற்புறுமகளிடமாம்புறத்தவனை பார்த்தியேற்றமதா னசோடசமாகுநல்லுபசாரமும், சன்னிதிக்கணியற்றியிழ்ந்துவணங்கி யேபிருகண்கணீர்த் தாரைபோடத்தோத்திரம்பலசாற்றிக் கூத்துநின் றுடுவான், மன்னுபல்லியபாதநாதங்கள்பா லலரன்மகிழ்வே வாய்த்தி டும்பக்திநம்பமைந்தருணமன்னவன்பிரதாபனா, னென்னையாளரனு மையுங்களிக்கமாகிய பூசனை விதிதுசெய்திடுமேகர்சித்தர்களெவரும் வந்துவணங்குவார். (கங)

அனையதோர்பிரதோடவேளையிலரியயன்றிசைகாவல ரமரரியாவரு மவனிமீதினில்வந்துகங்கையைமுதலவாம், புனிதமாநதியாடிநீறுடுகண்டிமாலைபுனைந்தரன் பொருவில்கோயில்கடொறுமிலிங்கவருச்சனைப் பணிபூணவே,வனை தருந்திருவாணிமின்னயிராணிவின்னரமாதரார் வந்துசோடசவரிசையோடபிடேகபூசைவகைக்கெலா, மினையகைப்பரிசாரகத்தொழிலதுபுரிந்தியல்வினையி னிசைபயின்றிடுநாடகஞ்செயவினிய பூசனைபுரிவரால். (கச)

அந்தவேளையிலெந்தைபூசனையன்றியொன்றுமியற்றிடா ரரிமுழாவயன்றுளமிந்திரனுபர்தங்குழலூதவே,யித்திரைக்கொடிநாமடந்தையோடிந்திராணியும்வீணையி னிசைகள்பாடிடவானநாடர்களினிதுநின்றுகொண்டாடவே, முந்துமூவுலகத்துளோர்களும்வந்துகூடிடநதிகளின் முதன்மைபெற்றிடுகங்கைமங்கையுமுன்னர் நின்றுநடிக்கவே, நந்திவாகனனிமயமெவிபநங்கைகொங்கைகளசையவே நாடகஞ்செயல்கண்டுவந்தருநடனமுற்றிடுவானரோ. (கரு)

புனிதமாம்பிரதோடபூசைகள்புரிபவர்க்குறுபெருமையும் பூசைகொண்டிடுபரமனாரவர்பொருவிலாதுயர்பெருமையு, மினையதென்றெவர்புகலுவார்களிவ்வேளையிங்கிதின்மறைவலோ ரினியபூசைசெயாதிருந்திடினர்தங்குலமாவரே, மனிதர்தங்களில்யாவராயினுமெந்தையார்திரையோதசி மாலைவேளைசெய்பூசையுந்தரிசனமுநெஞ்சின் மதித்திடார், தனுமயக்கிடுமதுவருந்திடுபுலையர்தந்திடுமைந்தரே சாற்றுமாவதிபாதகஞ்செய்தசாரன்மைந்தருமாவரே. (கசு)

பின்னுமங்கவர்மன்பதைக்குலமல்லர்வெங்கரமாகுவார் பெய்யும்வெய்யநறுநுகர்ந்திடுதையல்குய்யமுகந்ததிற், றுன்னுமாமுகம்வைத்துகந்திடுமுன்முகத்தவனென்பராற் றுய்யவையமடந்தைநையவுறுஞ்சுமைப்பரமாவரே, யன்னபாதகர்தம்மையீன்றிடுதாயர்தந்தையர்நரகுழவாற்றுவோரவர் குலமனைத்தையுமாழ்குழிக்குளழுத்துவோர், மன்னுமங்கவர்கற்பகாலம்வெந்நரகிலுற்றுவருந்தியே மகிதலந்தனில்வந்திறந்துபிறந்துதுன்புறுவார்களே. (கஎ)

சம்புவின்பிரதோடபூசைதனைப்புரிந்திடுமன்புளோன் றன்னையீன்றிடுதந்தையேசிவதருமமாற்றுதவத்துளோ, னம்பியங்கவனைப்பயந்திடுமங்கைகற்புடைநங்கையே நாடுகின்றசகோதரங்களியாருநன்னெறியாளரே,யம்புவிக்குளவன்பயந்திடுசந்ததிக்கிளைமல்குமா லனையனன்மனைதானியந்தனமதிகவர்த்தனையாகுமா, லெம்பிரானடியானவன்பததூளியென்றலைமேலதா மெதிர்புகுந்திடிலவனையேதொழுதேத்துவோர்பெரியோர்களே. (கஅ)

ஆகராசிவசங்கராசினசங்கமத்தினல்லுருவமா யடியன்முன்வரவேணுமென்றருநடனமன்பொடுபுரிகுவேன், பரமனார்பிரதோடபூசனைசாங்கமாகவியற்றுவோர் பாக்கியத்தவாரமேவுறுபாக்கியம்பெறவேண்டு

வே, னுரகலோகமதுற்றவாசுகியாதிசர்ப்பவிராசர்களு ரியமாதர்களோ டுமேபிரதோடவேளையிலாடகப், பெரியவீசர்முனெய்தியே யபிடேக மோடுநைவேதனம் பெருகுசோடசவரிசையோடவர்பிரியபூசனை புரி வரே. (கக)

அப்படிக்கரனன்புசேர்பிரதோடபூசனைசெய்துளோ ரவர்கடம்பெ ருமையைவறிந்தெவர்சாற்றுவாரவையாற்றிடா, இப்படிக்கணின்வந்து மேபிறந்துதீங்குடலெய்தியேயென்றுமேசெறிகும்பிபாகமமூழ்ந்துவார் கரையேயிலார், செப்புறுஞ்சிவனன்பரோடுகலந்துளார்சிவபாவனை சிந் தையன்பொடுபுரியவும்பிரதோடபூசனைபுரியவுந், தப்பிலாதமுயற்சிபெ ற்றிடுவார்கள்சங்கரனருளையே சார்வரங்கவரேநிறைந்திடுதாவில்பாக்கிய வாளரே. (உ0)

கற்பகாலமனந்தகோடிதவங்கள்செய்தவராயினுங் கருதரும்பிர தோடபூசனைகாதலித்திலராமெனி, லற்பமாமவர்செய்தபுண்ணியமியா வுமேயவமாகுமா லிவையர்க்குறுகற்பினல்விரதத்தின்மிக்கதுவாகுமா ல், வெற்புவில்லிதன்விரதமின்னதுசெய்தலார்கெடன்மெய்ம்மையே மி க்கதோர்திரைபோதசித்திதிமாலையுற்றிடும்வேலையி,லற்புடன்புரிபூசையி ற்பரனற்புதந்தரமகிழுவா னகமகிழ்ச்சியவ்வளவுமற்றுளவர்ச்சனைக்க ணுவந்திடான். (உக)

என்றுசொல்லியிவ்வாறுமுன்னுரைசூரசேனனெனச்சொலு மிறை வனைப்பிரதோட பூசனையினியல்லுபசாரத்தாற், றுன்றுதொண்டர்க ளோடிருந்தினிதாற்றினுலெந்தநாளுமே தொலைவிலாச்சுகமெய்துமுத்தி யையெய்தலாமெனநிதமுமே, சென்றியற்றிநல்வாழ்வுபெற்றனனென் றியாக்கினவற்கியாஞ் செம்மைவேதமுணர்ந்திடுஞ்சிவயோகியாகியமாத வ,னன்றில்வந்துறைசோலைசூழ்தருதுன்றுமாளிகைமிதுலைவா ழனகனு கியசனகராசனகந்தெளிந்திடவோதினுன். (உஉ)

நாற்பத்தெட்டாவது சூரசேனச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கரு0ரு.



நாற்பத்தொன்பதாவது

# இராசேந்திரச்சருக்கம்.



வேறு

தோடிங்குழையுஞ்சூழ்ந்தாடச் சுடருங்குழையின்பிறைச்சடையின்
காடும்பவுரிகொண்டாடக்கனகசபையினின்றாடித்
தேடுமறைகள்கொண்டாட வாநேர்ச்சிங்காதனத்திலிருந்
தாடும்பெருமான்புகழ்பாடுமவரே யெனையாளுடையாரே. (க)

இசைப்பான்முனிபாக்கினவற்கிராசன்சூரசேனனென்பான்
றிசைப்பாவுடையான்பிரதோடபூசைநாளுஞ்செய்துவந்தான்
பசைப்பான்மிகுந்தவவாவுடையபவசாகரத்தேவீழாம
னசைப்பான்மையதாங்கதிகொடுக்குநல்லவிரதமிதுவென்று. [௨]

இந்தவிரதமகிமையும்பூசனையின்விதியுமிசைவேத
முந்தவுரைக்குமவ்விதியைமொழிவாஞ்சனககேட்டியாற்
சிந்தைமகிழ்ந்துசந்ததமுந்திரிகாலமும்பூசனைபுரிவோ
னந்திப்பூசைபுரிந்தன்றியன்னமருந்தலாகாதால். [௩]

அரியபிரதோடப்பூசைபுரிவோன்றனக்குமதுவன்றே
பரியும்விரதமதுபுரிவோன்பானுமறைதற்கோரைந்து
தெரியுங்கடிகையெனவெளியிற்சென்றேயுடலந்தனிற்சுத்தி
புரியுங்கருமமுடித்தரன்றன்புனிததீர்த்தந்தனிலாடி. [௪]

பூதியுத்தூளனம்பூசிப்புரியுமனுட்டானஞ்செய்வோன்
வேதிபூதிதரியாமன்மிகுமாசமனஞ்செய்தானேற்
றீதிலியன்றவவனேயிந்திரியநுகர்ந்தானெனலாமா
னீதிநெற்றிதனினீறுதரித்தேநியமஞ்செயல்வேண்டும். [௫]

நானம்புரிவோன்றனக்கியன்றநறுந்தண்புனலைச்சிவதீர்த்த
மானதெனவேபாவனைசெய்தாடிக்கருமஞ்செயல்வேண்டு
மேனிவருத்தமுறிலதனைவெந்நீராக்கிமூழ்கியரன்
றேனின்கொன்றைமுடிதோய்ந்ததிருமஞ்சனமுந்தெளித்திடுவான். [௬]

வெண்ணீறுத்தூளனம்பூதிமிக்கதிரிபுண்டரம்புனைந்து
பண்ணார்விரலிற்பவுத்திரமுந்தரித்துச்சந்திபண்ணினபி
னெண்ணார்சிவமந்திரசெபமுமியன்றமுடித்துப்பூசையிலிற்
றண்ணார்கிழக்குமேற்குவடக்கேனும்பார்த்துச்சார்ந்திருந்தே. [௭]

மானுமழுவுமபயமுடன்வரதந்தாங்குஞ்சதுர்ப்புயமுங்
கூனவிளவெண்பிறையணிந்துகுடிலமுடியுங்குண்டலமோ
டானசருவாபரணமுமேயணிந்தவழகும்பெறுஞ்சிவனை
யீனந்தீர்க்குஞ்சிவலிங்கத்திடையேபாவித்தேத்தியே. [௮]

கருத்துகினைத்தபினனுவாகனந்தாபனமுந்தான்செய்தே
யருத்தியுடனேபாத்தியமாசமனர்க்கியமுமேகொடுந்தே
திருத்துபஞ்சாமிர்தமுதலாமபிடேகத்தின்றிரவியங்கள்
பொருத்தமுடனேவெவ்வேறுபுனிதவபிடேகம்புரிந்தே. [௯]

சுத்தசலத்தாற்சீருத்திரமனுவைச்சொல்லியாட்டியபின்
சத்திபாகன்றனக்கேயொற்றுடைசாத்திச்சந்தனமும்
பத்தியுடனேசாத்தியருச்சனைப்பன்மலரும்பரிந்தணிந்தே
சித்திபெறுதூபந்தீபங்காட்டிநைவேத்தியங்கொடுப்பான். [௧௦]

யுன்னவகையுங்கறிவகைகளபூபவகையுமேபரன்றன்
மன்னநேத்திரிவேதிந்தேபடைக்காயமுதுமுதலேத்திச்
சொன்னதூபந்தீபஞ்சோடசமாமுபசாரந்தொகுத்தே
யென்னையாளுமெம்பெருமான்முன்வீழ்ந்திறைஞ்சிப்போற்றுவான். [கக]

புத்தேளிர்கடமதிப்பதியேபூதபதியேபோற்றிமறை
வித்தேசந்திரமவுலியேவினைநோய்மருந்தேபோற்றியருட்
சத்தேசித்தேயானந்தந்தானானவனேபோற்றிபணி
முத்தேநவருமோர்வடிவானமுதலேபோற்றிபோற்றியே. [கஉ]

என்னைப்புரப்பாயருள்விசுவநாதாபோற்றியேழையே
னுன்னைச்சரணமென்றடைந்தேன்காப்பாயுன்றாமரைத்தாளைச்
சென்னிப்பூவாப்பணிந்துதொழுதிணைந்தேனென்றுசெல்வதிந்
மன்னுற்றிடுமுன்சிவலிங்கபூசையென்றேமதிக்கின்றேன். [கங]

நிலத்தில்யாவருநேப்பணிந்தாரவர்கணிதியின்பதிகளன்றே
குலத்திலெனையுநின்பாதபூசைபுரியக்குறித்தருள்வாய்
சலத்தின்முளைத்தபலபுட்பஞ்சாராதருந்தாமரைசாரு
நலந்தவளிபோலென்னெஞ்சப்பிறரைநாடாதுனைநாடும். [கச]

இதயமுனையேநினைத்திடுகவென்றுமுன்றுநன்றும
மதனையெப்போதுந்துதிக்கக்காதுன்சரிதமதுகேட்கப்
புதியமலராலெனதுகைநின்றுணைத்தாண்மலரிற்பூசைசெய்க
விதிமாலயிபாவிப்பரிசுமேனுட்செய்ததவமன்றே. (கரு)

வள்ளலேயுன்பூசையினல்வருங்கல்யாணநன்மையெலா
முள்ளபொருளேசங்கராவீராவுமையாண்மணவாளா
தெள்ளுமமுதேயருட்கடலேசிறியனேனைப்புரந்தளிப்பாய்
பிள்ளைமதிசேர்முடியானேகாசிப்பதியெம்பெருமானே. (கசு)

காலகாலாவினிமேலென்கருத்தும்பாவந்தனிற்செல்லா
தேலவருள்வாய்பலயோனிதன்னிற்செலுத்துமிருவினையுஞ்
சாலமாதர்துர்க்கந்தயோனிவிரும்புஞ்சஞ்சலமும்
பாலவிழியாய்தீர்த்தேயுன்னருட்டேன்பருகப்பணிப்பாயே. (கஎ)

அடியேனெஞ்சம்பிரமபதமமரர்பதங்கள்விண்டுபதம்
படியேழ்புரக்குமிறைபதமும்பற்றிற்றிலதாலெந்நாளு
நெடிதாம்பிரதோடப்பூசைநிகழ்த்திநின்பானிவேதித்த
வடிபாலனமுன்னடியருடனிருந்தேயருந்தமதித்துளதால். (கஅ)

சென்றநாளெல்லாமவமேசெலுத்திச்சிவனேவீரேசா
வுன்றன்பூசைதனைப்புரியேனுனதாலயமுஞ்சூழ்போதேன்
குன்றமுலையார்மயற்கோட்டிகுறித்துக்காலம்போக்கிவிட்டே
னின்றதறிவாயதுபொறுத்தேயெளியேன்றனைக்காத்தருள்வாயே. (க௯)

சீராருனதுதொண்டருடனெனையுநினைவாய்சிறுபூனை
காரார்மத்தமெருக்குவில்வங்கங்கைப்புனலாலுன்பதத்தே
யாராதனைசெய்திலனொருவில்வந்தாற்பிரதோடத்தினத்தி
லேராருன்பொற்பதத்தணிந்தாலீரேழுலகுந்தருவாயே. (உ0)

வித்தேசிவபூசையிலுள்ளவிசுவாசஞ்சேர்பலன்பூசை
பத்தியுடையனிதயவயற்பதியாதவமாய்ப்போயினதாற்
சித்திதருநின்சிவலிங்கபூசையெனுஞ்சஞ்சீவியென்னைத்
தொத்துபிறவிப்பிணிதீர்க்குமருந்தென்றுளத்திற்றுணிந்திலனே. (உக)

இளமைப்பருவந்தனினைந்தரென்னகுறைகள்செய்தாலும்
வளமைத்தாகத்தாய்தந்தைபொறுப்பருன்றன்மலர்ப்பாத
முளம்வைத்திறைஞ்சினினையாமற்பேதைமதியாலுனைமறந்து
களவிற்றிரிந்தவெனதுபிழைபொறுத்தேகாத்துக்கொள்வாயே. (உஉ)

பிறப்புமிறப்புமில்லாமலருள்வாயலதுபிறக்கிலுன்னை
மறப்பதில்லாவரந்தருவாயென்றுவேண்டிவணங்கியே
சிறக்கும்பிரதோடப்பூசைசெய்யக்கடவன்செய்துடனே
யிறப்பில்லாததிருவத்தயாமப்பூசையும்மியற்றி. (உ௩)

இயன்றசெபமுந்தான்புரிந்தேயியல்சேர்காலைமாலையுட
னயஞ்சேரோமந்தான்செய்காதன்றனக்குரிவேதனஞ்செய்
பயன்சேரன்னமன்பருடனடுக்கப்பகர்வைச்சுவதேவ
முயன்றவிருபோதும்புரிகபிரதோடத்தோர்முறைபுரிக. (உச)

அன்னமருந்திப்பின்னிருகடிகையேனுமரன்காதை
பனனிப்பொழுதுபோக்கிடவேவேண்டுஞ்சில்லோர்பண்ணவர்கண்
மன்னுதிரிகாலம்பூசைபுரிவோர்மத்தியானத்திற்
றுன்னும்பூசைமுடித்தருந்தியந்தப்பூசைதொடங்குங்கால். (உரு)

உடுத்தகலையைவிடுத்துமற்றோர்புனிதகலையையுடுத்துடல
மடுத்தநீறுத்தூளனமாவனைந்துபூசைபுரிவதென்றே
யடுத்துப்புகல்வார்பிரதோடபூசைதனக்கப்படியாகா
வெடுத்தபிரதோடத்திலுண்போனவர்செய்தோடமெனல்வேண்டா. ([illegible])

தெரியுந்திரையோதசிவிரதஞ்சிவபத்தர்களாமறையோர்கள்
புரியும்பொழுதில்விசேடமதாப்புரியவேண்டுமிதற்கிணையாய்
பரியும்விரதம்யாங்காணப்பகரக்கேட்கப்பட்டதின்று
லரியவிவற்றிலோர்காதையரசசனககேட்டியால். (உஎ)

உலகமெல்லாந்தனதுசெங்கோலோச்சிப்புரக்குந்தனியானை
யிலகுந்திகிரிராசேந்திரனெழில்சேர்பிரமாவர்த்தமென
விலவுந்தலமொன்றதிலிருந்தானிகரில்செல்வத்தளகேசன்
புலவர்க்கரசனிந்திரனும்போற்றுஞ்செல்வப்புரவலனே. (உஅ)

னயோன்பரிகுபுல்லணியப்புரிந்தானப்போதவனைக்காண்பதற்கே
னைதிர்தவத்துமறையோரும்வியாசமுனிவன்வந்தனனன்
னைவன்றனக்கெதிர்கொண்டுமுறையால்வணங்கியாசனத்திற்
ரிதோய்பிறையோனெனவிருத்திப்பரிந்தபூசைபுரிந்தனனல். [உகூ]

றைவன்வாதராயணனைப்பார்த்தேயிசைப்பானிசைநான்கு
றையுமறைதத்துவஞானமுறையினுணர்ந்தமாதவத்தோ
றையுமாசாபாசத்தினபாயநீங்குமுபாயமெந்தத்
றையிற்செயலாமெனயோகத்துறையுமுனிவன்சொல்லுவான். [௩0]

லகருமத்தெரிந்தனையாலரசஞாலத்தோரிந்தச்
சொல்லையுணர்ந்துதருமபுத்திசேர்ந்தேயுய்யத்தொடங்கினையா
ல்லல்புரியுங்குடிவாழ்க்கையாசையொழித்தோரரிதறந்தான்
ல்லல்புரியும்பிரபஞ்சவசத்தோர்க்கெங்கேவருமன்றே. [௩க]

க்கதருமவாசனை தான்பெற்றோன்விரத்தியாவனென்றே
க்கவிரத்தனல்லாதான்றருமஞ்சாரிலவைநில்லா
தாக்கவிரைந்தேநீங்கிடுமீதும்பர்தமக்கும்பொதுவன்றே
க்கடருமஞ்சாரில்வினைவாரிநீந்தப்பெறுவாரால். [௩உ]

ந்தத்தருமமேதெனிலெப்போதும்புரிவதநேகமுண்டால்
ந்துற்றிடுமோர்தருமத்தார்றருமம்வாய்ப்பதெனமொழிந்தா
ரிந்தப்புதுமைதனைக்கேட்டவரசன்புகல்வானிருந்தவத்தோய்
றந்துற்றிடுமிங்கிதனைநானறிந்திலேனீமொழிகென்றான். [௩௩]

முனிவன்புகல்வானரசகேளிதனையறிந்துமொழிவிதாற்
னைநேரில்லானவிவனிதுதானேதென்னிற்சிவஞான
மனுநற்சிவபூசனையாகுமிதுவேதருமத்துக்கறமா
மனையதமரர்க்கிறைசிவன்போலறங்கட்கெல்லாமிறையாமால். [௩ச]

இதனின்மனந்தான்புகலரிதுமற்றைத்தருமத்திடைச்செலுமான்
தனைக்காய்ந்தோன்பூசனையாற்றருமமெவையும்வளர்ந்திடுங்காண்
ிதமுற்றிடுமெய்த்தவயோகயாகஞ்செனனகோடியிற்செய்
முதன்மைப்பலத்தினலன்றேசிவன்பாற்பத்திமுயல்வதென்றான். [ ]

பத்தியதுதான்பெறின்முத்தியளிக்குமன்றேதிரிகாலஞ்
சித்திதருமெய்ச்சிவபூசைசெய்யவேண்டுற்றவைதன்னின்
மத்தியானபூசனைதான்விசேடமெக்காலமும்வரையா
தத்தியுரிந்தோன்பூசைதனைச்செய்யவேண்டுமெனவறைந்தான். [௩௬]

அரசன்புகல்வான்றிரிகாலமல்லாவெக்காலமும்பூசை
புரியவேண்டுமென்றுரைத்ததேதென்றிடவுமுனிபுகல்வான்
பெரியவிலிங்கத்தினிற்பூசையிடைவிடாமற்பெரிதியற்றிற்
றெரியுக்தாரவிசேடமாகுமதுசெப்புதுமன்றே. [௩எ]

வடிகொள்சீதச்சுகந்தநறுமஞ்சனத்தாலிலிங்கேசன்
முடியின்மீதிலிடைவிடாதபிடேகஞ்செய்முறையிற்றிற்
கடிகொண்மலர்களறுகுவில்வங்கலந்தேயருச்சித்தேத்துதலாம்
படியிலிவைசெய்தோர்வினைபோய்ப்பரமன்பாதஞ்சேர்குவரால். [௩அ]

பரமானந்தவமுதசாகரமாம்பரமனொருகுடங்கை
வரமாம்புனலோடறுகுவில்வமகிழ்ந்தேயழியாப்பதங்கொடுக்குந்
தரமாரதிவாரதிசயமேயன்றோவனையனருள்பணியா
ருரமாஞ்சனனசாகரத்தின்கரைசேர்நதுய்யமாட்டாரே. (௩௯)

நாற்பத்தொன்பதாவதீராசேந்திரச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௫௪௪.



ஐம்பதாவது,

# வீரசித்துச்சருக்கம்



வேறு.

பூதிகண்டிகைபுனைந்தவரேனுமேசைவ
நீதிகொண்டியமத்தராய்ப்பத்திபூண்டே
சோதிசேர்தருசிவலிங்கபூசைசெய்தூயோ
ராதிசேவடிசேர்குவரல்லலொன்றிலரே. (௧)

முனிவன்யாக்கினவற்கிதான்மொழிகுவான்வியாச
னினிதுரைத்திடுவாய்மைகேட்டரசர்கோனிசைந்தே
யனையபூசனையாற்றுவோர்யார்பலனென்கொல்
புனையுமங்கமேதுரையெனமறைமுனிபுகல்வான். (௨)

ஓதும்வன்னநான்குள்ளவர்சங்கரர்க்கென்றே
வேதமோதியவிதிப்படிபூசைசெய்திடலா
மாதியார்சிவபூசையாற்றுனெவனேனுஞ்
சீதநீருண்டோன்வீரியநுகர்ந்திடுந்தீயோன். (௩)

உண்டிவேண்டினேன்மலநுகர்பன்றியொப்புறுவான்
பண்டுகாதையொன்றுளததுபகருவன்கேட்டி
மண்டலத்தினிற்சாத்தகியென்றோர்மன்னவன்றன்
கண்டகத்தர்துன்மார்க்கர்மந்திரரோடிங்கலந்தான். (௪)

அவன்புரந்திடுநாட்டியலோர்ந்திலானவமாஞ்
சிவந்தவாய்ச்சியர்கோட்டியிலேமனந்திகைத்தா
னிவந்தகொங்கைமின்னுரையெங்கோமுநீங்கா
னுவந்தநித்திரையுறுங்கனவிலும்பிரியாதோன். (௫)

காவலன்புணர்காதன்மின்னார்களிலொருத்தி
பூவைபோன்மொழிப்பூங்குயில்பூவனம்புகுந்தா
ளாவலாலரன்பூசைசெய்யோகியாங்கமர்ந்த
தாவிலாவிளவரசன்முன்சார்ந்துகண்டனளால். [௬]

கண்டிபூண்டுமெய்ப்பூதியுத்தூளனங்கலந்தே
புண்டரந்திகழ்நெற்றியான்பூசைசெய்வானைக்
கொண்டலோதிகண்டேகுறுமூரல்கொண்டனளான்
மண்டுகாதலாளவன்முனஞ்சென்றுரைவகுப்பாள். [௭]

எந்தநாடுநீரெப்பொழுதிங்குவந்தடைந்தீர்
வந்தகாரியமேதுநுங்குலமெனவரஞ்சேர்
தந்தைதாயெவர்மணஞ்செய்துளீர்கொலோசாலப்
புந்தியாசைகொண்டேன்சொலுஞ்சொலுமெனப்புகன்றாள். [௮]

என்றுகேட்டவளழகுநல்லிளமையுமவடன்
குன்றுபோலுயர்கொங்கையின்பொலிவையுங்கண்டா
னன்றிதன்றெனநாணினன்முகங்கவிழ்ந்துரைப்பான்
மன்றலோதிநானரயர்தம்மரபுளேனென்பான். [௯]

வீரசேனனென்றந்தைதாய்வீரசூவென்பாள்
பாரின்மேம்படுகமலலோசனையென்றன்பாரி
சேருமென்செல்வநிகர்க்குமோவளகையர்செல்வஞ்
சாருஞ்சாதுரங்கந்தனக்களவுசாற்றுவதோ. [௧0]

மாமணிப்பொலன்மண்டபஞ்சித்திரமாடங்
கோமுறைத்தனியரசுவீற்றிருந்திடுங்கூடம்
பூமகட்குறையுள்ளெனும்பொருளறையறைகள்
காமரிந்தரன்முதன்மைசேர்சுதன்மைபோற்காணும். [௧௧]

என்றுகூறலுமதிசயமெய்தியேயிரண்டு
குன்றுபோலுயர்கொங்கைபாள்கூறிடுகின்ற
னன்றுநன்றுநீர்தந்தைதாய்தமருறைநன்றெ
டென்றுசெல்வமுமணிவியும்பரிசனத்துடனே. [௧௨]

அனைத்துவிட்டுநீரயலவனுடலங்கார
வனத்திலேயிவன்வந்துறைகாரணமென்னே
தனத்தின்மிக்கநீர்தனியொருவறியர்போற்சார்ந்தீர்
நினைத்ததோர்மனத்துறவியாக்கிடவிழைந்தீர். [௧௩]

இளமைமிக்குளர்திருவுநல்லுருவுமேயமைந்தீர்
தளவவார்குழற்றருணியர்ணலந்தனைவேட்
டுளம்விருப்புறுபோகநீத்திவ்வுறலாமோ
வளமையெளவனத்திவ்வனத்தெவ்வணம்வந்தீர். [௧௪]

காளையம்பருவஞ்சென்றுமூப்புறிற்கண்டபாய்
வாளைவென்றகண்ணார்முபக்கெங்ஙனம்வருமே
யாளுநர்தமதிளமைபோமெய்புறுமழகோ
காளுநாளெங்குங்கண்டிலேனற்புதநலமே. [௧௫]

இந்தநல்லழகெய்தினெரொருவருமில்லை
வெந்தவேளரன்வரங்கொடுமெய்படைந்தனனே
வந்தமன்மதன்றுணைவனேவழகுடனிளமை
முந்துமோகத்துக்குறையுடானல்லவோமொழியில். [௧௬]

இளமையோரிடமழகோரோரிடத்துறுமிரண்டு
மளவியுற்றிடன்மூவுலகத்தினுமரிதாற்
களவன்யாருடன்கலந்திவண்போந்துளிர்கடிதற்
குளமகிழ்ந்திடுதந்தையுந்தாயுமுற்றிலரோ. [௧௭]

அல்லதூடலுற்றீர்கொலோவகத்துறுமனையா
னல்லளல்லளோகோபத்தானனுகினீர்கொல்லோ
வல்லிபாங்கவடனைவிடுத்தென்னுடன்மருவீர்
புல்லுபெண்மணியென்பெயரென்றனள்புகல்வாள். [௧௮]

என்னுடன்கலந்தீரெனிலிப்புவியெல்லா
மன்னுநும்மரசாட்சியாச்செய்திடவல்லேன்
றுன்னுபோகங்கள்யாவுமேநுமக்கெனத்தாகுப்பேன்
மின்னுபூணினீர்நுமைக்கண்டென்புநடனைவெறுத்தேன். [௧௯]

என்னைக்கூடினீரெனிற்கடிதேகியெயிரவிற்
றுன்னியன்னவனுயிர்விடத்தாற்றொலைத்திடுவேன்
பின்னரோர்கவலுற்றிடப்பெறுவதின்றுமான்
மன்னுமிப்புவித்திருவுநும்வசமுறச்செய்வேன். [௨௦]

இளநிலாத்தவழ்செய்குன்றமெழுநிலைமாடந்
தளவமல்லிகைப்பூம்பந்தரஞ்சனைச்சயனங்
குளிருந்தென்றல்வந்துலவுசாளரம்படர்குடிசை
களபந்குங்குமப்புழுகுநெய்பொற்கிண்ணங்கலவை. [௨௧]

தாசிதாசர்களிவையெலாநுமக்கியான்றந்தேன்
பேசவீர்கெஞ்சிற்பிரியமேதவையெலாந்தருவேன்
கூசலேதனையும்முடையனைவியாக்கொண்டா
லேசிலாப்பொருளேதுதான்கிடைத்திடாதுமக்கே. [௨௨]

எனத்தாம்மனைதனிற்புலிப்பாலிருந்தனள்தாள்
மனத்துவந்தென்னைப்புல்லின்மெய்தளர்ச்சிவாராம
லெனையுறும்மடைவீரானிளைத்திடவளிப்பென்
றினையுட்வேண்டியப்பொருளெலாந்தருகுவன்பேசிர். [௨௩]

வேறு.

இந்த்ரநந்தவனத்திலின்பசுகந்தநன்மலருற்றவா லிதுவுநாளினிதுடை
யறல்வணைப்பிடியேவிளையாடவே, சந்திரன்பொருபட்டுமெத்தைதகடமு
யிணைத்திரளுள்ளவாற் றளிபருத்திடுமிரசவர்க்கமமைத்திடும்படமாளி
கை, வந்திருந்ததுபாருநீரெனதாமதித்துமயங்கிநீர் வாரும்வாருமனத்தி
லேபண்ணுவெப்பமதோர்பயம்வைத்திடீர், புத்தியுற்றகலக்கமேனொரு புரு
டரிவ்விடைவந்துறார் பொற்றரம்பையர்போற்செயுந்தொழின்மாதரார்வ
ந்துபுகுவரே. (௨௪)

அன்னமாதர்களுமதுசிந்தைமகிழ்ந்திடும்பணியாற்றுவா ரருள்புரிந்
துநும்முகமெடுத்தெனதானனத்தினைநோக்குவீர், மனதிலுற்றிடும்விரத
ம்விட்டெனைமருவுநாமிருவோருமே மதனபோகவிதந்தருங்கலவிச்சுகந்
தனைமருவுவோம், கனகதாமரைமலினங்கைபோடமரர் மங்கையர்யா
வரும் கடிதுவந்தெனதழகுகண்டுகண்ணேறுபட்டனர்போயினர், தினக
ராதிவினோர்கள்கண்டிடல்விட்டுநீங்கிலரென்னையே செய்யமானிடர்க
ண்டுளோர்கடிகைத்திலாதெவர்போவரே. (௨௫)

அகிலமீதினின்மனிதர்பெண்ணெனுநாமமுற்றோரசேதன மதுவெ
திர்க்கினுமாசையுற்றிடுவார்கணீரெனகாணுநா, னகிலமாதர்கண்மணி
யெனப்பெயர்கொண்டுளேனினிநலமுளேனுடுமென்றனைநாடுவோர்களி
னச்சிலார்களுமுள்ர்கொலோ, புகலுவீரெனதிளமைசுந்தரமிலகுதேகம
தும்மையே போலும்வாலிபர்போகமிங்கிதபுருடருக்கிதமல்லவோ, விக
லுகின்றதென்யானதிட்டவசத்தினாலுமையெய்தினே னென்னைநோக்
குதல்செய்திலீரவையென்னபாவமிதென்பதே. (௨௬)

அல்லகாணுமோர்வாய்மைநானிதுசொல்லக்கேளுமெனைக் கல்
லலிதனக்குமுடம்புபுளகிதவாண்மையுற்றிடுமல்லவோ, நல்லசுந்தர
மதனிலேமிகநல்லசுந்தரமங்கைநா னுகர்கவென்னங்கவிங்கிதயவனபார்
வையிலுணர்குவீ, ரெல்லைதிருநல்லழகர்நீரெனியேனுமப்படியல்லவோ
விளமைபெற்றிடுநலமுமொத்தனவிருவருக்குமியைந்ததால், வல்லமாத
ர்மிதிப்பெருக்கினின்மனதுவைத்திடுவார்களான் மருவுநாணுமதிளமைந
ல்லெழில்வாஞ்சைவைத்துளனமரோ. (௨௭)

ஒருவனுகிபகணவன்பன்னரை யுடையன்சில்பொருளுடையனே
லோதுமற்றவனொடுமகிழ்ந்துறைவார்களோவியமாதரார், பெருகுசெல்
வமோடிளமைசுந்தரமுறுபெறுந்தகைமணமகன் பேறுமாதர்கைவச
மதாய்விடின்விடுவரோபெரிதாசைகூர்ந். துருகுவார்களவ்வெழிற்கள்
யாவையுமுடைபவும்மையும்விடுவனோ வெளிநிறைந்திடுமதியமொத்தி
டுமாதுவந்திரநோக்கியே, பொருமதன்கணையால்வருந்தினனும்மைவி
ட்டயல்போந்திடேன் போகவேண்டியதெவனுமக்கவன்பாணுமேயுட
ன்போகுவேன். (௨௮)

என்றுசொற்றமடந்தைமுன்னிராசவல்லபப்பத்தொடு மெழின்
முகங்கவிழ்வுற்றான்பதமிதபமிதிலிருந்திடவே, நன்றுநன்றிதென்றுநகைத்
துமேலச்சொல்வார்சிலர்மொழி நாறலுற்றன்மலஞ்செறிந்திடுபாண்
டபாத்துமுடம்பைநீ, நின்றுநச்சிப்பித்தனக்குமடந்தைமார்கண்மணந்
துளார் நீணிலத்தினிலில்லையென்றுநினைத்திடேனிகரற்றுளோர், மன்
றலோதியர்தாமநேககரென் மாளிகைக்குளிருந்துளோர் வாளைவென்றக
ண்வேளைவென்றசொன்மதியைவென்றமுகத்தினர். (௨௯)

அவர்கடம்மைவெறுத்துளனிவற்றிடுஞ்செல்வம்யாவையு மாசை
யற்றுவெறுத்துளன்மிகுமாசையுற்றமடந்தையு, மிவர்தலுற்றிடுமோக
மின்றியிதிலமென்றுவெறுத்துள னெவ்வனத்தினிலாவதென்னவதின்
றுநாளையொழிந்திடுஞ், சவமெனப்படுமுடலிராதுசடுதியிற்படிசாருமி
வீண் சாற்றுகின்றனையேற்றமானசவுந்தரியமெனச்சொலி, யுவகையுற்ற
திலொன்றுமில்லையுன்மனதிலுற்றமயக்கமே யுற்றுநோக்குதி யொத்தை
யூன்பொதிதோலெலும்புநரம்புமே. (௩0)

ஆதலாலிதிலாசைவைத்திலர்நாசமுற்றிடுபோதினி லரியதுன்பமெ
டுத்துமென்றறிஞோர்வெறுத்துளரதியால், பேதையாயுதரத்திலேமல
மூத்திரத்தொடுசுக்கிலம் பித்தமாமோடேபுழுத்திரள்பேசொணுமு
டைநாற்றமே, போதுகின்றமுகத்தின்வாயுமிழ்கோழைகண் வழிபீழை
காதுறுகுறும்பியிரண்டுகீணினிவாயிலூறு மழுவுரைப்பதோ, வேதமுற்றது
வாரமொன்பதுமேவுகின்றசரீரமா மிதுநன்மேனிமினுக்குகின்றதோர்
தோலின்மூடியிருந்ததே. (௩௧)

மலத்தில்வந்திடுகிருமிபங்கிதனுக்கொர்சுந்தரமென்னபல் வகைய
தாகிய துக்கமுற்றிடுகர்ப்பசுக்கிலசோணிதங், கலத்தல்பெற்றதோர்மூ
த்திரத்தினிறைந்தயோனியின்வழியிலே காட்டுமிந்திரியத்தின்வித்திடுகோ
லேவந்துமுளைத்ததா, மூலத்தலுற்றிடுசிம்பலித்தினிற்பாரிசாதமுளைக்கு
மே லூழலுற்றவுடற்குமேயழகுண்டெனச்சொலலாகுமா, னலத்தை
மேவியவிளமைசுந்தரமென்றுநீகலுழ்கின்றியா லுடலங்கடேவர்க்குமின்
றதுநாட்டிலற்புதமாகுமே. (௩௨)

சிட்டருக்குமிவ்வுடலிலாசைகடோந்துருவகையாலுறுந் தெரிவை
மார்கள்புணர்ச்சியேபெமிகுசெல்வமென்றுபுகன்றியாற், கெட்டதாகுமம்
மாதராருடலத்திலுற்றதுர்க்கந்தமே கேள்வியுற்றுமறிந்துமேயுணரார்க
டாமதிகேடர்தா, நட்டமாகியநாறலுற்றவுடம்பைநானெனவெண்ணியெ
நரகனுக்குரைநின்சொலென்னிடைநண்ணிடாதகன்றேகுவாய், துட்ட
புத்தியைவிட்டிடாயமலோகமுற்றபயங்காஞ் சொல்லுவோர்சொலக்கே
ட்டிலாய்கொல்சுடர்க்குள்வீழளிபோன்றுளாய். (௩௩)

ஆசையுற்றிறவேனுமேயயன்மாதரைப்புணர்வெண்ணுவோ னரிய
தன்பிதிர்வர்க்கமோடெரிகும்பிபாகமதடைகுவா, னேசமுற்றவர்வதன
ன்றுவிலின்றதென்பெறிர்நோக்குவோ னொதிகளாற்றுருநாம்பகால

வெந்நரகமுற்றுவருந்துவான், சீசிமற்றவர்மலசலக்குழியானபோலவி
யிலச்சையே செய்துளோன்பரலோகசிந்தனையற்றபாமரனுருவா, ஞசி
காதுகண்முலைபருண்டுதிரண்டுள்ளசதைக்கட்டியா நகமுறும்பொழுதை
வைசெந்நீருறுநச்சுவாரழகென்கொலோ. (௩௪)

கலவியுற்றுவிழைத்தமாதர்கள்யோனியன்றியின்யோனிபோற் காண்பதற்குவழங்குமோவிதிலாசைகொள்வதெக்கன்மமோ, வுலகினல்லதிதல்லவென்றுணராதநுண்மதியோர்செய லுன்னுவாரினுமன்றியினுடலுநவுமிவ்வுடலுதவிடா, மலமதாமதிலுற்றவுள்ளுறுமூழனெக்கிலேவெளியிலே மாதர்மேனியைநோக்கியேயழகென்றுசொல்லிமயங்குவா, யிலகுமானிடவடிவிலேசுசியில்லையோவெனவறியே விசைகொள்வேதியர்வழவமேசுசியென்றுசொற்றிடும்வேதமே. (௩௫)

அதனிலுஞ்சிவபத்தர்மேனியதிகமாகியபுனிதமா மண்ணல்பூதித்ரிபுண்டரத்துடனரியகண்மணிமாலைபூண்,மதியுடைப்பெரியோர்கடம்வடிவதிகமேயதுவருதலுன் மதியிலாய்சனனங்கடோறுமியற்றுமாதவமல்லவோ, கதியளித்திடுபரமனன்பர்கள்வேடமேகலியாணமாங் கடவுளாருளாலெனக்கிதுவந்ததாலதுகாண்டியால், விதிவசத்துறுசனனவாசனையாமலத்தையகற்றினேன் மீண்டுமேர்நவழுக்கெடுத்துறுமேனிபூசுதன்மேன்மையோ. (௩௬)

ஈனமாங்குடிவாழ்க்கைசெல்வமிறக்குநாளுடனொள்ளள வெய்துமோசெய்தவினையவர்புண்ணியமொன்றுமேவருமேழைகே, ளானதோர்பசுநிறையுளேகிடுகாலையாங்கதிலுற்றகன் றுதரித்ததையின்றதாயையறிந்துபின்றொடர்வாறுபோற், றனமேவியசெல்வமுற்றிடின்மாமன்மைத்துனனண்ணனந் தம்பியுற்றவர்பெற்றுளோரெனவந்திருந்து தருக்குவார், போனகாலையில்யாவருந்தொடர்வாரகளில்லையிறந்தவப் போதுமாதர்புணர்ச்சிபோயதெனப்புரண்டழுவார்களே. (௩௭)

மகனமக்கெனவந்ததேசெல்வமெனவுளத்துண்மகிழ்ச்சியான் மாநிலத்தவர்காணவேயழுவார்கள்போலலமருவனு, லகமதுற்றிடுதாசிதாசர்களுறவுளோரயலோர்களு மரும்பொருட்கழுவார்களன்றியையோவிவன்றவமாற்றிலா, னிகந்தனிற்சுகமுற்றதன்றியிறந்தகாலையிலுடன்வரற்கேய்ந்தகாரியமொன்றுமேசெய்திலானெனக்கவல்வாரிலே, மிருந்துகாரென்றுள்வெகுண்டுவெருட்சிசெய்திடுபயமலால் வேறுசற்றிலையால்யமாந்தகனற்பதந்தொழுவேண்டுமே. (௩௮)

வேறு

காலகாலர்கருணைவாரியானவள்ளலவர்நமைக் காக்கவல்லகடவுளாமதன்றிவேறுகண்டிலோ, ஞாலமீதின்மனிதர்தங்களினமைமாதாகோட்டியானுதர்பூசைசேவையின்றிகாளயத்துமாக்குவார், சூலபாணிபாதமேதமுற்றபோதுநினைவுறிற் சொல்லொணாதமுத்தியின்பசுகங்கிடைத்தல்

தின்னமே, கோலமர்தரிளமையின்பமதுகினைந்தழுங்குறுங் கோரபாவ மதுகினைந்தகொடுமையாளர்நெஞ்சமே. (௩௯)

அந்தமேவுபோதுமாதர்மூழ்குரற்பெருந்தொனியரன்றனுமவமுதவா ரிசெவிபுகாதடைக்குமே,யுந்துசீவனேகுகின்றபோதிலாதிபூதியே யுருத் திராக்கமாலைபங்கமெங்குமேயுறப்புனைந்,தெந்தைபாரிலிங்கமாட்டுபுனி தமஞ்சனந்தெளித்தினிதுவில்வமாலையுந்தரித்திடச்செய்தார்களே,னர் துமந்தவேளைவந்துகருணைசெய்துநாயகனந்திதன்றன்வடிவலாற்றன்று தருபமருள்வனே. [சு௦]

பூதிகண்டிமாலையும்புனைந்தரன்றனுமமும்புகலுநாவிநேனுமெங்கள் புனிதலிங்கதரிசனத்,தாதிநத்திநடுவினிற்றன்னுவினீங்குவான்றன்முன் னம்மையோடுநாயகனடுத்தெடுத்துமடியினின், மீதில்வைத்துடுத்தவுத்தரீ கம்விசிமேனியின் வேர்வையாற்றித்தாரகத்தைமென்செவிக்கணுதவி யே,கோதிலாதமான்மழுத்தரித்தசெங்கைமூன்றுகண் குலவுகின்றதன் னுருக்கொடுத்தளிப்பன்கயிலையே. [சுக]

ஆனதன்மையாலெனக்குவாழ்வுபெண்டிர்மக்கண்மே லாசையில் லைபண்ணல்பூசைசெய்துசந்நிதிக்கணே, யூனமுற்றவுடல்விடத்துணிந் துளேனவ்வேளையி லும்பர்தம்பிரான்றனுமமம்பைபாகசங்கரா,ஞானநா தநீலகண்டகாலகாலசம்புவே நம்பவென்பதென்றனுவினடனகின்றுபுரி யவே,யீனமற்றவென்கைவில்வமிறையிலிங்கமணிபவே யெனதுசென் னியீசர்சந்நிதானமுற்றிறைஞ்சவே. (சுஉ)

கண்களண்ணல்வடிவுகாணவடிகளென்றனெஞ்சுறக் காதுகாதை கேட்கவிப்படிக்கலமந்தகாலையி, லெண்கொளும்பிராணவாயுவேகவெ ன்றுநான்சிவ விலிங்கபூசைசெய்துளேனென்றுவீரசித்தென்றான், பண் கொள்சொல்விராசதேவியாசையுற்றநெஞ்சகம் பக்குவிட்டுடைந்தரன் பத்திலன்புபாரவே, தண்கொளப்பகர்ந்தவாறுசனகராசனுக்குமுன் னஞ்சவமோனஞானிபாகனவந்கிசாற்றினனரோ. (சுங)

ஐம்பதாவது வீரசித்துச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஉஅசு.



முதற்காண்டம்

முற்றிற்று.

திருச்சிற்றம்பலம்.



உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# சிவரகசியம்

கிரியாங்கிசை

## இரண்டாங்காண்டம்.

முதலாவது,

## பூசாயோக்கியவனச்சருக்கம்.

வடிவெலாந்திருநீறணிந்தேகண்டிமாலை வடிவுறப்புனைந்திலிங்கபூசனைசெயவல்லேன், கடிகொள்கொன்றைசேர்வேணியாய்கருணையங்கடலே கடவுளேயெனுநாமமல்லாற்பிறிதறியேன், படியெலாந்திரிந்தேகவிபான்மெலிவுற்றேன் பாவியேனுனதருவினைப்பாவியேனெஞ்சி, லடியனேனுன்றன்சரணமல்லாற்சரணறியே னுண்டதொண்டரோடுறவுறவருள்புரிவாயே. (க)

அண்ணல்யாக்கினவற்கியமுனிவரன்புகல்வா னரசன்வீரசித்துரைத்திடுமுண்மைகளனைத்தும், வண்ணவார்குழற்பெண்மணிகேட்டவளகத்தின் மையறிர்பத்தியுடன்வயிராக்கியமுற்றே, திண்ணமாங்குடிவாழ்க்கையின்சனனவாசனைதான் சிவனைப்பூசனைசெய்யில் விட்டொழிந்திடுமெனவே, யெண்ணமாம்பொருண்முன்னுங்கேட்டிருந்தனளிறைவ வீசன்பூசனைசெயும்விதியியம்புதியென்பாள். (உ)

மெய்யினுற்றதுர்க்குணமெலாஞ்செய்பனீநன்று விளம்பக்கேட்டனன்மெய்யெனமுற்றுமேதெளிந்தேன், மையல்பாகன்றன்பூசனைக்குதவுமெனிந்தச் சடலந்தான்சவுபாக்கியம்பெற்றதென்றிடலா, மையனேயினியேனுமிவ்வுடலதுகொண்டேயமலன்பூசனையாற்றியேகதிபெறவேண்டும், பொய்யிலாவிந்தப்படிவமுற்றிடினுமெனதாண்மையாய்ப் புனிதன்பூசனைப்பலன்பெறப்புரிந்தருளென்றாள். (௩)

இயமனார்பயந்தயத்தை தவகிர்ந்திடுமென்றே யியம்பினீரதியானு முன்கேட்டிருக்கின்றேன், றயவினுற்சிவபூசனை செயும்படியெல்லாஞ்சாத்திரப்படி தப்பிலாதின்றுசாற்றிடுவீர், மயல்செயுஞ்சன்மபயந்தவிர்த்திடுங்குருநீயேவாய்த்திடுஞ்சைவசீலம்பெற்றோர்நும்போல்யாரே, யுயர்தருங்குருவெனக்குநீரருளுதிரென்றே யோதுபெண்மணிவார்த்தைகேட்டரசனுமுரைப்பான். [சு]

காலகாலரர்ச்சனையினுல்யமபயநீங்குங் கருதிடிற்பின்னரொன்றினுந்தீர்த்திடாகண்டாயேலவார்குழலுனக்குந்துசெல்வங்களுளவா லீசன்பூசனை குறைவின்றியியற்றிடலாமாற், சாலமெய்ப்பொருள்கொண்டலாற்சங்கரன்பூசை தான்செயற்கியலாததோவென்றுசாற்றுவையே, லாலமுண்டவன்பூசையோர்குடங்கையிற்புனல்கொண் டாட்டியர்ச்சனைசெயிற்கதிகாட்டியாள்குவனுல். [எ]

அன்னதேனும்யாம்பெறுஞ்செல்வம்பயன்பெறவேண்டு மடைந்திடுஞ்சடந்திருவுமேநிலையலக்கண்டா,யின்னதன்மையவிவைசிவபூசனைக்குதவிவைகளாற்பெறும்பயன்றனைக்கேட்கவேண்டுவதோ, சொன்னதோர்சிவபூசனைக்குதவிடாப்பொருளைச் சுடுவதேநலன்சித்திகள்கொடுத்திடும்பூசை, தன்னையேசெயான்சனனவீணென்றிடத்தகுமாற் சாற்றுஞ்செல்வங்கள்சிவனருளால்வருந்தானே. [அ]

அவன்றரும்பொருளவன்றனக்கேயெனவாக்கி லனையதன்மைகண்டருங்கதியளித்திடுவானுற், றவமுன்செய்திலான்றனக்கரன் பத்திவராதாற் சங்கரன்பத்தியற்றவனுடன்சகவாசமுவமையற்றதோரவமெனலாகுமப்பாவி யுதவிடும்பொருளாலறஞ்செயினலமின்றே, பவமகற்றிடவேண்டினோர்பவமதுபெற்ற பயன்பெறச்சிவபூசைசெய்பயன்பெறுவாரே.

பரமன்பூசைசெய்வான்றனைப்பூசைசெய்வார்கள்பாபகோடிகணீங்கியேபரகதியடைவா, ரமதாகியபாவவெங்கானகந்தனக்கே யுற்றகண்டகோடாலியேயாகுவரவர்காண், டிரமதாகியமோகநீத்தேதிருவன்னுப்சிவனையேதினம்பூசனைசெய்திடுகண்டாய், கரமுங்கால்களுமுடலமுந்திடமுறுமிளமைக் காலஞ்செய்திடும்பூசனைப்பலன்கணக்கின்றே. [அ]

அன்னதாலுனக்கிதமுறும்பூசனைபுரிவா னதற்குகானெறிசொல்லுகேன்கேட்டியாலணங்கே, சொன்னதோர்சிவதீர்த்தத்திலாடிவெண்ணீறு தூளனஞ்செய்துசிரநெற்றியுரமுடனுபி, பன்னுசானுவோடிருபுயமணிக்கட்டுமுன்கை பகர்தருஞ்சுவல்பின்மருங்கேகளங்கன்ன, மின்னபல்வகையிடத்தினும்புண்டரஞ்சாத்தியெழில்கொள் கண்டிகைமாலிகை தரித்திடல்வேண்டும். [கூ]

களத்திலேபறங்காதினிற்கதிர்த்தொகைதலையிற் கட்டுமெம்பிகை கோணத்திலொன்றெழிதொகையாம். வளர்த்தகொந்தளந்தனிலொன றுமார்பின்முந்நூலின் மன்னுகின்றமுன்னூற்றினன் மூன்றதாமாலை, கி ளர்த்துதோள்களிற்சோடசமணிக்கட்டிலிரண்டு கேதந்தீர்த்திடுமிராசி யின்றொகைகணூற்றெட்டா, யுளத்திலோதுறுமந்திரமாலையாக்கொண் டேயுண்மையஞ்செழுத்தோதுவிற்சிவமடைவாமே. [க0]

புருடர்போலவேயாசமனஞ்செய்தபுனிதன் பூசைத்தானத்திற்கு சப்புல்லுப்புல்லதனேனு, மருவுமாசனத்தினில்வடக்கொடுகுணக்கேனு மதிமுகம்பெறவிருந்துமந்திரம்பதினேன்று, லருமைமேவுறுமஞ்செழு த்தெனுமனுவதனை லண்ணல்பூசனைபுரிதியாற்சிவலிங்கமதற்கே, தருபஞ் சாமிர்தமைந்திரவியங்கமழ்தருமஞ் சனம்பயந்தயிரெண்ணெய்மாக்காப் புடனெல்லி. (கக]

நெய்யதற்குவெந்நீரொடுசந்தனக்குழம்பு நின்மலோதகமிவையபி டேகங்கள்புரிந்தே,துய்யவெண்பட்டுச்சுகந்தசந்தனம்வில்வமாலை சொ ல்லுகின்றதிலட்சதைபலபுட்பஞ்சாத்திச், செய்யதூபதீபங்கள்கற்பூரத் தின்றீபந் திருமுனம்பணிமாநிவேதனவகைகள், வையமெங்குமேம ணக்குநெய்யொழுகுசுத்தான்னம்வாய்த்திடுங்கறிவர்க்கமபூபநற்கனிகள்.

கமழ்தருங்கிர்தகுளபரமானத்தினெடுதேங் காய்கரும்பிளநீரடைக் காம்புபானீய, மமிழ்தமாமன்னமெவ்வகையுளவவையெல்லா மத்தனா முனம்வைத்துநைவேதனமமைத்தே, யுமைமனோகார்க்கிரண்டுநான்கெ ட்டுபசார முவகையாற்செய்துவாய்குழறிடத்துதியெடுத்தே,யிமையவர் க்கிறைமுன்னர்வீழ்ந்திறைஞ்சிக்கண்ணீரோ டினியதேகத்தின்வேர்வை யுமாடநின்றுடி. (கஉ)

நாதனார்திருப்பூசனைமுடித்தன்பர்தமக்கு நயந்துபூசைநைவேதனங் கொடுத்துநீநுகர்ந்தே, போதுறுஞ்சிவகதைவினுய்ப்போதுபோக்குதியா லுபர்தருங்கதிவிரும்பினோர்நாடொறுமிவைசெய், தாதியாரந்திப்பூசை யில்விசேடமதாக வாற்றியேயத்தயாமபூசையுஞ்செயிலணங்கே, சோதி யோடுறுசோதியாய்விடுதனிச்சயமாக் தூயதோர்பிரதோடகாலங்கள்வந் திடிலே. (கஈ)

மாதுபாகனார்சிவலிங்கதரிசனஞ்செய்வான் மன்னுங்கோடிதன்கிளை யொடுஞ்சிவபதமடைவான், பாதகங்களேந்தொழியுமிப்பூசனைபுரியான் பாக்கியங்களற்றவனரகத்தினிற்படர்வா, னேதுமிப்பொருள்குறுமுனியு ரைத்திடவுணர்ந்தே னுவகையாலவையுந்தருமிந்தப்பூசையென்றுரைப்பா ய், பேதைபெண்மணிலணங்கியென்றாவர்நிடியென் பெசனுற்றவப்பி ழைபொறுப்பீரெனப்புகல்வாள். [கச]

குரவர்நீருமதடியனென்பிறவித்தீக்கடலுட் குளித்திடாதுமதருட்கரையேற்றுவீரென்றே, பரவுகின்றதுகண்டருந்துறவுபூண்டரனூர்பத்திசேர்தருவீரசித்தரசனுமவளை,விரவுதங்கையாப்பாவித்துப்பெண்ணரசேநீமேவுமுன்னுடைக்கணவன்றனனுமதிபெற்றே,யரனைப்பூசனைபுரிதியான்முல்லைநல்லாருக் கறங்களாற்றுதல்கணவன்சொல்லன்றியாகாதால்.[ ]

தனிவனத்திலேகாங்கியாயிருக்குமென்னருகே ஐயனீதனிநிற்பதுலோகசம்மதியோ, மனதுதான்பரிசுத்தமாயிருப்பினும்பார்த்த மாந்தருக்கிதுதான்விபரீதமாமன்றே, யெனதுநெஞ்சகமாதரைப் பழுக்கவேகாய்ந்த விருப்புத்தூணெனக்கிட்டிடினடுங்கிடுங்கண்டா, யனல்செறிந்திடும்வாரியிலெவர்புகினைப்பா ரதனையொக்குமாலரிவையர்முயக்கமாரணங்கே. [௧௭]

அந்தமாயையிற்புகுந்தவன்றான்யமலோகத் தடைதறிண்ணமாமொருகணத்தின்பமாதரித்தே,பந்தமுற்றிடுஞ்சுந்தரமாம்பரதாரப் பாவைமாரொடுங்கூடினோன்பலகற்பகாலம், வெந்துயர்க்கோநரகவேதனையுழன்றிடுவான் மேவுமாங்கதிற்பசுவினதிறைச்சிகளுடனே, சிந்தைவைத்தருந்துதலெளிதாம்பிறர்தாரஞ் சேர்தருனதிபாவத்தினதிகபாதகமே.[ ]

தாகத்தோடுதன்மேல்விழுந்தாடனைத்தள்ள றருமயன்றெனப்பிறர்மனைபுல்லினேன்கும்பி, பாகத்தேயெய்துவான்றிண்ணமப்படிவரினும்பயந்துபுல்கிலானேபுருடோத்தமனவான், போகத்தார்பரமாதரைப்புணர்ந்தவன்மேலாம் புண்ணியத்தவனுகிலும்பஞ்சபாதகனுய்ச்,சோகத்தார்தருநிரையச்சூழுவளியதனிற் சுழலும்பஞ்சிபோற் பறந்திடுவானவன்றானே. [௧௮]

காலவேல்விழியன்னியமாதரைக்கலந்தக் காலவேலையிற்கணமொன்றிற்கோர்கற்பகால, மாலந்தீயுமேகூடியதெனுங்கும்பிபாகத் தடைவனுங்கவனன்னியனல்வந்தமகனு; மேலவார்குழலெனக்கந்தப்புந்தியின்றுமா லென்முனின்றுநீபேசுதலும்புத்தியன்றுற், சாலநீட்டித்துநிற்பதுமுறையலக்கடிதேதையலேயுன்றன்கணவன்பாற் சார்குவையென்றான்.

உதரத்திற்பசியுற்றதற்கேபலபேச்சா லுண்டியாகுமோதாமதமேன்புரிகின்றாய், மதனைக்காய்ந்தவன்பூசையைத்தாமதித்தெந்த வார்த்தைபேசினுமங்கைநல்லாயவமன்றோ, விதனமுற்றுவாணுளவம்போக்குதனன்றோ விசுபாசமுந்தடியுங்கொண்டேயமன்பின்னே,பதனமென்றுநின்றானிதுபோதும்விண்பேசும் பாழ்த்தபேச்சினிலாவதென்பாவைபோவென்றான். [உ௧]

அன்னமன்னமென்னடையினாயிரண்டதாங்காலத் தரியபூசனையாற்றிடவேண்டுமாலெனக்கே, யென்னையாண்டருளிறைவன்பூசனைக்குவிக்கினமா விருந்துதாமதஞ்செய்திடாதேகிலங்கதுவே,பன்னுகின்றமாபாக்கியமாங்கதுகண்டாய் பரமன்பூசைசெய்வார்க்குவிக்கினஞ்செய்பா

வியர்க, வின்னிலத்தினிலிடர்க்கடரனிற்கிடந்திறந்தேயியமலோகத்தி னரகினிற்குடியிருப்பாரே. [௨௨]

பரமன்பூசனைக்குறுமுபகரணங்கடமக்கேபார்த்துவிக்கினம்புரிந்தி டுகின்றவப்பாவி, கரஞ்செந்நாய்பன்றிகாகயோனியிற்செனித்திடுவான்க ருதுமங்கவனிருகண்ணுங்கெட்டவந்தகனர், திரமதாம்பத்தியுடனிந்தப் படிசிவபூசை செய்யுநீரிங்குவந்ததேதென்றியேற்சொல்கேன், வரமதா ஞ்சிவலிங்கமாலயஞ்சிவதீர்த்த மன்னுபுட்பநல்வனங்களும்வாய்த்துள விவனே. [௨௩]

எங்குமில்லதோர்பூசையினுபகரணங்க ளிங்குமேவினவிவைகொடு பூசனைபுரிந்தாற்,றுங்கமாமுத்திகைவசமாமென்றுதுணிந்தேன் சொல்லு மிவ்விலிங்கத்தினையருச்சனைபுரிந்தோர், பங்கமாம்பவக்கோடைக்குப்ப ரகதித்தண்ணீர்ப் பந்தராமரன்பதநிழல்சேர்ந்துய்குவாரான்,மங்கையே துதிபூசைவிக்கினஞ்செயேலென்றே மன்னன்பத்திசேர்வீரசித்துரைத் தனன்மாதே. [௨௪]

**முதலாவது பூசாயோக்கியவனச்சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-௨௪.



இரண்டாவது,

# வீரசித்துவிரத்தவயிராக்கியச்சருக்கம்



வேறு.

பிரமனார்படைத்திடுமிந்தமானிடப்பிறப்பி
னுரமதாகவந்துதித்தவருடலமுள்ளளவும்
புரமெரித்தவனிலிங்கபூசனைபுரிந்தாரேற்
பரவுறுந்தனுப்படைத்ததாற்பயன்படைத்தாரே. (௧)

பொருந்தயாக்கினவந்கிமாமுனிவரன்புகல்வா
னிருந்தவீரசித்தெனுமிறைசைவவாய்மையினன்
மருந்துபெண்மணிதன்னுடன்மாற்றஞ்சாற்றுங்கா
லிருந்துமாங்கவள்சேடியர்தேடியாங்கடைந்தார். (௨)

வந்தமங்கையர்மதனுருக்கொண்டுவந்தானென்
றந்தவீரசித்தரசனைக்கண்டருகடைந்தா
ரிந்தவேளனையானுடன்மருவுதுமெனவே
சிந்தைசெய்தனர்வனைந்தனர்தெரிவைநல்லாரே. (௩)

ஒருத்திவந்துதன்கணவனென்றுவகையாலொருகை
பொருந்தமாப்பிடித்திழுத்தனன்மற்றொருத்தியுமை

யருத்தியோடுமற்றெருருகைபைப்பிடித்திழுத்தலைத்தாள்
வருத்தமாயொருமானனுண்மடிபிடித்திழுத்தாள். (ச)

பொறியிழுத்திடுமாறெனப்பூவையர்கூடி
நெறியினைழுத்திடவிழுத்திடும்போதினுநேசஞ்
சிறிதுமுற்றிலன்செறுத்திலன்சிவன்செயலென்றே
யுறுதிபெற்றிடுமனத்தொடும்விரசித்துறைந்தான். (ரு)

அதிலொருத்திதன்முலைபுபத்தழுந்திடவணைத்தே
மதிமுகத்தொடுமுகமவைத்துமுயங்கினள்வாங்காள்
புதியவாயிதழ்பருகினள்புட்குரல்கொண்டாள்
கதிவிரும்பினோனதனிலுங்கலங்கிலன்மனமே. (சு)

ஒருத்தியைத்தள்ளியொருத்திவந்தணைத்தணைத்துவப்பாள்
வருத்தந்தீர்ந்திடீரெனவந்துமடியின்மேலேறிப்
பொருத்தமாங்குறிபொருத்துவள்பூரித்தல்காணு
ளருத்திதீர்ந்தனளகன்றனளொருத்தியாங்கன்றே. (எ)

நமைமயக்கிடவந்தவனிவனெனநாடித்
தமைமறந்தனராயிரமடந்தையர்சார்ந்தா
ரமைவுறச்செய்தசாலங்கள்விரசித்தறிந்தா
னிமயநாயகிபங்கன்செயாடலென்றிருந்தான். (அ)

என்னகன்மமிப்படிவந்துவளைந்ததிங்கெனக்கே
முன்னர்யான்சிவன்றனக்கபராதமென்முயன்றேன்
மன்னுநன்மனைவிடுத்துறுதுறவியாய்வந்தேன்
றன்னையிப்படிமயக்குதல்சிவன்செயலுனே. (கூ)

அரிவைமார்கடம்முயக்கஞ்செந்தீக்கடலன்றோ
பிரியமாதவர்தொழுமண்ணலேபிழையடியேன்
புரியுந்தீவினையென்னையித்தினம்விடுபோதிற்
றெரியுஞ்சைவரல்லார்முகந்தெரிசித்துளேனே. (க0)

காலைபூதியுங்கண்டியுந்தருக்ககிலேனோ
சாலவில்வத்தின்றளிாருச்சனைசெய்தேயிலிங்கத்
தேலவேயபிடேகரைவேத்தியமியற்றிச்
சீலமாம்பத்திசெய்துபூசித்திலேன்கொல்லோ. (கக)

இறைவன்பூசைக்குவிக்கினமாதரென்றிகழ்ந்தே
மறைவனந்தனிலுறையெனைப்பினும்வளைந்தனரா
லறையுமிங்கிவராலெனக்காவதொன்றிலையா
லுறையுமிங்கிவருடனுறனெருப்பையொத்தனவே. (கஉ)

பரமனேசிவனேயெனைப்பரிட்சிக்கும்பொருட்டோ
வரிவைமாரிவர்தம்மையுண்டாக்கிவிட்டீரா

லரிபுமென்னுடற்கட்டைக்கேனிவ்வழகமைத்தீ
நரியவிங்கிதுபிறரிடஞ்செலவுஞற்றீரோ. (௧௩)

ம்மைநம்பினேற்குறுந்துன்பமீங்கிவையொழிப்பீர்
செம்மையற்றவரிவரும்பூசைக்கிடர்செய்வார்
கொம்மைமாதராரிவர்க்குநாண்குலைந்ததுகொல்லோ
வெம்மையாள்சிவனருச்சனைக்கிடருற்றதின்றே. (௧௪)

பரமன்பூசனைப்பலனளவில்லதாலிதற்கே
விரவும்விக்கினமெங்ஙனமிருந்துமேவியதோ
பெருமைப்புண்ணியத்துறுகண்வந்துறுமெனப்பெரியோர்
திருவுளப்புரிசொற்படிசேர்ந்ததாலின்றே. (௧௫)

எங்கணேகுவேனிவ்விடர்தீர்க்குமாறெவனே
சங்கரன்செயல்யாவரேதவிர்த்திடற்பாலா
ரங்கமிற்றிடுநெடுக்கசாதனவிபத்திதுவா
மங்கையர்ப்புணர்ப்பொழித்தன்றோவிவ்வனம்வந்தேன். (௧௬)

இங்குவந்தெனைத்தொடர்ந்ததாலெனக்கவல்வுற்றேன்
சங்கைதீர்தருமுறுதியாற்குற்றிபோற்சார்ந்த
சிங்கமன்னவன்றனைப்பின்னுந்தெரிவையர்தொடர்ந்தே
யங்கம்யாவையுந்தெரிந்திடக்கலைவிடுத்தடைந்தார். (௧௭)

புழுகுபூனைபோற்புகுந்தொற்றியொற்றியேற்கட்டித்
தழுவுகின்றனர்தோளினின்மார்பிற்றுண்டவங்கள்
பழுதிலாதிதம்வரவரப்பாடெட்டனரா
விழுதுநெய்யெனவுருகினரென்செய்வாரவரே. (௧௮)

இன்னவாறவர்செய்யவுமெரிபுகுபதங்க
மன்னவாமெனமதித்திருந்தானிறையவன்றான்
பொன்னனீரிவன்புஞ்சகன்புறம்புகுவோமென்
றுன்னியாலயம்விடுத்துடனெழிந்துபோயினரே. (௧௯)

இந்தவாறுபெண்மணிகண்டேயதிசயமெய்தா
வந்தமாதர்களித்தனைபேர்கலைமாற்றி
முந்தமேல்விழுந்திடவுஞ்சற்றேனுமேமுயங்கான்
யுக்தியாலிவனலியனோவொழிவுபூண்டனனோ. (௨௰)

உலவுநாய்க்குறிகாணினம்புருடர்நெஞ்சுவப்பார்
குலவுமிங்கிவனிளமையுமழகுமேகொண்டோ
னிலகரம்பையர்போன்மின்னாரித்தனைபேர்செய்
கலவியிற்கலங்கிலனிவன்போலுங்காண்பரிதே. [௨௧]

உலகிலுத்தமகுணத்துளானொருவனிங்குற்று
ளிலகுமிங்கிவன்றரிசனந்சேர்ந்துய்ந்தேன்யானே

புலமைபோன்சொலிற்புத்திரேறுமெனக்கொழிந்தேன்மே
லிலவுபோன்றொளிர்முகர்திறணினைந்துகின்றனளே. (உஉ)

அத்தவேளையிற்சுந்தரநிதிதனையளித்த
தந்தைதாயருங்கிளைஞருமனைவியர்தாமும்
பந்தமுற்றுளரதகசதுரகபதாதி
தந்திரத்தருமந்திரத்தரும்வந்துசார்ந்தார். (உங)

சார்ந்தகோடிவெந்தானைபோரங்கர்க்கொருசார்
சேர்ந்தபூவனமாலபந்திகழ்வதைக்கண்டார்
நேர்ந்தவாங்கதிற்சவுந்தரநிதிசிவநெறியே
சூர்ந்தவீரசித்துறைந்திடுவானெனக்கொண்டார். (உச)

அவன்விரத்தனிம்மதன்படையிருந்தகாவடையான்
சிவன்விருப்புறுமாலயமிருந்ததாற்சேர்வா
ணிவணிருந்திடப்பெறினமதிட்டமாமென்றே
கவலுநெஞ்சினர்கடிபொழிலதனில்வந்தடைந்தார். (உரு)

நென்னனம்முடைமாளிகைநீத்தகன்றனனு
லின்னந்தூரஞ்சென்றிருப்பதற்கநேகநாளிலதா
லன்னதேயிவணுலயமுற்றதாலகலான்
மன்னுவானெனவிச்சயித்தருகினில்வந்தார். [உசு]

வந்துளோரவண்மாதர்தங்கூட்டத்தைக்கண்டார்
நந்தங்காதலனிங்கிரானயன்மடநல்லார்
முந்துறக்கண்டானேக்குறுன்முகங்கவிழ்ந்துறுவான்
புந்திகூர்நல்லபுண்ணியவானவனன்றே. (உஎ)

தனயர்தேவியர்தம்மையுமிச்சையாேனக்கான்
கனதைசேர்தருசெல்வமுங்கடிந்தரன்பூசை
யனகனிச்சித்துச்சிவத்தியானஞ்செய்வானயலார்
முனமுறில்விருத்தவத்தைமின்னுரையுமுன்னுன். (உஅ)

மரங்கடோறுமாமயிலிருந்தாடுவபோலச்
சரங்கள்போன்றகண்ணார்வனஞ்சார்ந்தமைகண்டா
ரிரங்குநூபுரத்தார்களிப்போதுவந்தவராந்
திரங்கொளாலயங்காலையிற்சேர்வனுஞ்சேர்வேம். (உகூ)

ஆலயந்தனிலரிவையரிவர்புகார்கனிகள்
சோலையிற்புகுந்திச்சையாற்றுருவுகின்றுரான்
மாலையோதியராயமுகிறைந்தனமைந்தன்
காலையிற்சிவபூசைசெய்கருத்தனுங்குறைவான். (ஙo)

பண்ணைசேர்தருமிடத்தினும்படர்குவதன்றே
பெண்ணினல்லவரிடத்தினிற்பெண்கள்சேர்ந்திடலாங்

கண்ணுதற்பிரானுடையர்தன்னிலிங்கணவ
னண்ணினுளெனநிற்பேர்குதிரென்னனுநடந்தார். (௩௧)

வில்வநீழலும்பார்த்திடுமென்றவர்விடுப்ப
மல்லலோதியர்வீரசித்தின்றிருமனையா
ரெல்லையில்லதோர்சிறுநெறியோடுமேகினாரனையார்
புல்லுகாதலனுறையிடந்துருவினர்புகுந்தார். [௩௨]

பூதிபூசினருருத்திரன்கண்மணிபூண்டா
ரோதுமாலயந்தனிலரன்றிருமுன்னருற்றார்
தீதவில்வங்கள்சாத்தினர்சேவடிபணிந்தார்
காதன்மாதர்களவர்களிற்சிலர்கள்காரிகையார். (௩௩)

நடைகொண்மைந்தர்களுடையர்கள்சிலர்நடவாத
விடைகொண்மைந்தர்களுடையர்கள்சிலர்சிலரேந்தும்
புடைகொள்சேயினர்புகுநிறைகருவுளோர்பாதித்
தடைகொள்சூலினரிளமைசேர்மையனல்லார்கள். (௩௪)

அடிக்கொளுந்தனத்தரிவையரிவர்சிலரெல்லா
நடிக்குநாதனைவேண்டினர்புறத்தினினண்ணி
வடித்தவேல்விழியார்மணவாளனைக்கண்டார்
துடித்தநெஞ்சினரடிக்கடிதொழுதுதுள்ளினரால். (௩௫)

நான்கண்டேன்கண்டேனீகண்டாயிலையெனநயந்தார்
தேன்கண்டாலனசொல்லியர்மெல்லியர்தெளித்தார்
வான்கண்டாலனமருங்குலாள்பெண்மணிகண்டா
டான்கொண்டாடிறுமழகுகண்டாண்மனந்தளர்ந்தாள். (௩௬)

அன்னமாதர்கண்முன்வந்துநீவிராரென்றாண்
மின்னனீருங்கள்கணவன்யாரென்றவள்வினவச்
சென்னிதாழ்த்தனர்நாணினர்வாயினுற்செப்பார்
முன்னிருந்திடுமன்னனென்றேகண்ணுனென்மொழிந்தார். (௩௭)

பின்னும்வாய்திறந்திசைப்பர்மின்னேயிந்தப்பெரியோ
ரன்னைதந்தையைமைந்தரையங்கனையயர்த்தே
யின்னதோர்வனத்தெய்தினர்துறவுபூண்டிவர்தாங்
கன்னிபாகன்பூசனையெந்நேரமுஞ்செயுங்கருத்தார். (௩௮)

மாதராயவலார்தமைமனத்தினும்பாரார்
நீதிலக்கினிசாட்சியாய்ச்சேர்ந்தவெங்களையே
நீதியாலுமைபாகனையிதயத்துணினார்ந்தே
கோதைதபெருமனங்கூடினனாள்களுமுனவால். (௩௯)

பேசுகித்தியவிரதரிங்கிவர்பிரதோடப்
பூசைசெய்தபின்சிவனடியாரொடும்புசிப்பா
ராசையாயருணதயமுதனிசியளவாக்
காசிநாதன்றன்பூசையிற்காலம்போக்குவரால். [சுo]

இந்தமைந்தர்களிடத்தினுமிச்சையின்றிவர்க்கே
தந்தமைந்தர்தாமேகதேசந்தனிற்சார
வந்துளாரெனிற்சைவராகுகவென்றுமதிப்பா
ரந்தமாங்கண்டிபூதியுமணியுமாசையினர். [சுக]

சந்தனங்கலனுதிகளரசியற்றருமம்
புந்திவைத்திடாருட்டிணகாலம்புத்திரர்க்கே
கந்தம்பூசிமுன்விடிலதைப்புனல்கொடுகழுவி
யெந்தையார்திருநீறுமெய்யெங்கும்பூசிடுவார். [சுஉ]

புதல்வியர்க்குமெம்புத்திரர்தமக்கும்பொன்மணிப்பூ
ணதிகமாவலங்கரித்துவிட்டாலவையெல்லா
மிதமிலாவிவற்றுவதொன்றிலையெனக்கழித்தே
கதிகொணீறுகண்டிகைவடத்தாலலங்கரிப்பார். [சுங]

நெருனலிங்கிவர்தீர்த்தயாத்திரைசெயநினைத்தார்
கருணையங்கடல்கணபதிகுமரனந்தீச
னரிவைபாகனங்கவர்தமக்காலயமமைத்தார்
பெரிதுபூவனந்தடாகங்கள்பெருகச்செய்தாரால். [சுச]

குடையிடக்கயமாபரணுதிகள்கொடுத்தார்
சடையவன்றிருப்பெயரலாலொருபெயர்சாற்றார்
கடைகொள்வேல்விழிகட்டின்மெத்தையிற்றுயில்கருதார்
விடையவன்றிருநீற்றின்மெய்ச்சயனமேவிருப்பார். [சுரு]

அரிவையேயெங்கண்மணிப்பணியதனிடையிடையே
பரியுங்கண்மணிசேர்த்தலாற்பரிக்கவொண்ணுதாற்
பிரியமாவிவர்பூசைசெய்பெருகுமண்டபத்தி
லுரியபாடலுமாடலுமுவந்துசெய்வோமால். [சுசு]

இளங்குமாரர்களிவர்களுமிவரருளதனால்
வளங்கொளுஞ்சிவபூசனைமகிழ்ந்துசெய்வாரா
லளந்திடாதவஞ்செழுத்துருவேற்றுமன்பர்களோ
டுளந்தயாவொடுகூடிவீற்றிருப்பரொண்டொடியே. [சுஎ]

யாங்கள்காந்திருவர்க்கரசீன்றமெல்லியலா
ரோங்கும்வேலிந்தவரசர்தாஞ்சுயம்வரத்துற்றே
பாங்கின்வேட்டனர்பரமனைப்பரனடியாரை
யாங்குப்பூசனைபுரிதராபதியிவராமால். [சுஅ]

ிவரைக்காண்பதற்காகவேயிமையவர்சித்தர்
ரவர்கள்காந்திருவத்திஞேரடிக்கடிசார்வார்
றுவரிதழ்க்குயிலேயெனச்சுந்தரப்பதிதன்
றுவலைகந்தேவியர்பெண்மணிக்குரைத்தனரன்றே. [௪௯]

இரண்டாவது விரசித்து விரத்தவயிராக்கியச் சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-எ௩.



மூன்றாவது,

# மறலியுத்தரச்சருக்கம்.



வேறு.

சத்திகூர்விழிகளித்திடமணிப்பணிநிமல சாக்கிரங்கொள்வியாக்கிர
ங்களிக்கநின்றுடும், பத்திகூர்தருநவமணிப்பரிபுரப்பதத்திற்பத்திகூர்த
ரப்பாவியேன்பாவியேற்கருள்வாய், துத்தியேறியபன்னகந்தரித்தவேணி
யனேசோதியேறியவின்னகந்தரித்தபாணியனே யத்தியீருரிபோத்திடு
மணிகொள்காத்திரனேயாடல்வேடனைப்பொடித்தருள்பாலநேத்திரனே.

அண்ணல்யாக்கினவற்கிமாமுனிவரன்புகல்வானரசன்வீரசித்தரு
ந்தவன்சரித்திரமனைத்தும்,வண்ணவார்குழலவன்றிருமனைவியர்பகர்ந்த
வார்த்தைகேட்டனள்பெண்மணியதிசயித்துரைப்பாள், வெண்ணிலாந
கையீருமைச்சுயம்வரந் தன்னில்வேந்தன்வேட்டவாறென்கொல்காந்தி
ருவர்தநகரந், தண்ணுலாமிமயத்தடஞ்சாரலி லன்றேசார்ந்தவாறெந்த
ப்புண்ணியத்தவைசொலுமெனவே. [௨]

அன்னமங்கையர்தங்களிலொருத்திவல்லமைசேரறிவுளாள்பதுமா
வதியாமவளுரைப்பாண், முன்னவன்சிவனன்பராமிவர்மின்னேயிறந்த
முற்பிறப்பினிலிருபிறப்பாளர்நல்குரவா, லுன்னருங்கொடுந்தானங்கள்
வாங்கிபுமுண்ணுவொருவன்வீட்டினிலுண்டிவேட்டருந்தியும்வருந்திப்,
பன்னரும்பலிக்குழன்றுமேயழன்றிடுங்கொடியபாதகஞ்செய்து பற்பக
ல்போக்கினரன்றே. [௩]

இனையவாறுமுன்றேமனைவருமிவர்வழியிலிறைவரம்பலவாணர்தங்கோ
யிலொன்றுளதா, லனையவாலயந்தனிற்சென்றுதரிசனம்புரிவாரந்திவே
ளிவர்சந்நிதிச்சிறப்பெலாம்பார்ப்பார், நனைகொள்கொன்றையார் திருப்பதி
பங்களைநாடிநன்றுநன்றிதுவென்றுநெஞ்சிந்தனைசெய்வார். மனையில்வந்
தமருந்துறும்போதிலுமதனைமனத்திருத்துவரிப்படிநாள் [illegible] செலுத்தினா
ர். [௪]

தருமன்றூதர்கொண்டேகினரவன்றனம்விடுத்தார்சார்ந்தவிங்கி வன்றன்புரிபாவபுண்ணியங்க, ளொருமையாப்புகல்விரெனச்சித்திரகு த்தரோதுவாரியவன்புரிபவமுரைக்கவொண்ணுதா, லருமைசேர்தரும்ப ணவர்தங்குலத்தினிலுதித்தானுற்றுயின்றநற்கருமங்ளொன்றையு மறியா ன், பருவமாராலான்மனைபாணலநுகர்ந்தான்பாபஞ்செய்திடக்கூசிலா ன்பரபொருள்கவர்வான். [௫]

இனையதீவினையெண்ணிலபுரிந்திடுமிவன்றனிறந்திடற்கொருமதியெ னவொருமதிசெய்தா, னனகராநடராசர்தங்கோயிலையடைந்தானந்திக் காப்பினிற்சந்தித்தான்பூதியுமணிந்தான், பனகபூடணர்பூசனையின்சிறப் பினைத்தினமும்பார்த்துவந்தனனிறந்தனனிவனெனப்பகர்ந்தார், மனமு வந்தனர்பூசைகண்டானெனக்கேட்டமறலிதான்பயந்தெழுந்தடிவணங் கினனன்றே. [௬]

தன்றனாசனந்தனக்கிணையாகியசிங்காசனத்தில்வைத்தனன்மனத் திறைற்பூசைசெய்துரைப்பா, னன்றுசெய்தனைநான்மறையோய்சிவபெ ருமானயந்திடுந்திருவந்திக்காப்பினிற்றரிசனந்தான், றுன்றுமோவந்திவே ளையிற்சேவைசெய்திடுவர்தூயரங்கவர்தேவரெல்லாந்தொழுநலத்தோர், வென்றிசேர்பவரரும்பெரும்பாவங்கணீங்கி மெய்வருந்துறார்மெய்க்கதி பெற்றிடுவாரே. [௭]

அந்திவேளையிற்பரமர்சந்நிதியிடைபேசனரியபீசமோர்கையினிலணைத் தொருகையா, லுந்துகோட்டினிற்கோட்டியேயிடைவெளியதனூடு மைமனுளர்தமிலிங்கத்தையுற்றுநோக்கிடுவோர், முந்துநற்பலனனந்த னுன்மொழிந்திடலாமோமுன்னைத்தீவினையொழிந்துபர் முத்திவீடடை வார், வந்தமேதோர்பிரதோடவேளையிலவைசெய்வோன்மகிமைவேதமுஞ் சொலவரிதாற்சிவனவனே, [௮]

மபல்புரிந்திடுமோரைப்பால்வருங்குடிவாழ்க்கைவலைக்குண்மூடர்தா மண்ணலார்மகிழ்பிரதோடப்,பயனுமங்கவர்மகிமையுமுணர்கிலாருணர் ந்தோர்பாரெலாந்தனிபுரந்திடும்பாக்கியம்பெறுவார்,நயமுறுங்குலமானி டப்பிறப்பரிததனினுன்மறைக்குலத்துதித்திடலரிததிலுதித்தோ, ரியை யும்வேதசாத்திரம்பெறலரிதவையிசைந்தோரீசன் பூசனைப்பத்தியும்பெ றின்முத்தரவரே. [௯]

பூதிகண்டிகைபுனைந்தருட்கயிலைநாயகனைப்புத்திபூருவமாவருச்ச னைசெயலரிதா, மாதிபூசனைபுரிந்தவன்சேவடியிதபத்தமுத்துவோனடி க்கனந்தமாம்வணக்கம்யான்புரிவே, னீதிசேர்தருங்காசிவிரேசுரன்றிரு த்தாணினைந்துபோற்றுவர்நின்மலவான்களாமவர்க, ளோதலாற்சிவக தைக்கடலாகுவாரவரையுந்தவுறப் பெற்றதாய்தந்தைபெருமையாருரை ப்பார். [௧௦]

மங்கைபாகனைப்பூசிப்பானிகழ்ந்திம்பம்வேண்டின்வையமியாவையும்புர ந்துநாந்[illegible], நங்கையாராகட்கேள்வனுமாகுவனென்றே

நாட்டுங்கதன்றலைநாட்டரசவையினிருந்தோ, ரங்கவன்றிருத்தாண் மலர்வணங்கிப்புகன்றவமலனார்கதைபழுதமாட்வாரியினனைந்தே, யிங் ஙுபாங்களொலிலார்களுப்புனிதமாயினமா லிந்தவேதியன்றனக்கிலைவ புரிவதேதென்பார். [கக]

மறைக்குலத்தினில்வந்துமேயிவன்சவுசாதிமன்னுகின்றிலன்மிருதி நூல்வழியென்னசெய்வா, னிறைக்குந்தேவர்க்குமுரியவாமக்கினிட் டோமபாகயாதிகளெங்ஙனஞ்செய்திடப்பாலா, னுறைக்குப்புத்திபாபத் திலேமிகுந்துளான்பத்தியொன்றுமின்றியேபோகையில் வழியிடைக்க ண்டே, பிறைக்கொளுஞ்சடையான்சிவாலயத்தினிற்புகுந்துபெருகும் வேடிக்கைபார்த்ததல்லாற்பிறிதிலையால். [கஉ]

சிந்தைவைத்துநாஞ்செய்திடிற்செல்வமுங்கதியுஞ்சேரலாமென்றுது ணிந்திவன்செய்ததுமிலேபா, லந்தணுளனிங்கிவன்சிவன்சேவடிக்கடியா ரடிகள்பூசனைபுரிந்துசேவித்துளானல்ல, னிந்தநீர்மையான்றன்னைநீராச னத்திருத்தியிறைவனேயெனப்பூசனைபுரிந்தவாறென்னே, முந்துமற்புத மற்புதமாகுமாலீதுமுன்னங்கண்டிலோம்யாமெனமொழிந்தனரன்றே. [கங]

என்றுசொற்றலுமந்தகன்கேட்டனனிசைப்பானேழைகாள்சிவதரு மத்தினுன்மைமையுணரீர், புன்றொழிலுடைநாயினுங்கடையர்யாரென் னிற்புகலருஞ்சிவபத்தியில்லாரெவரவரா, மன்றுளாடுவார்புண்ணியத்தி றமொன்றுந்தோராமந்திபோலவேவீகிர்கின்றிவ்வுரைவகுத்தீ, ரொன்று ம்வைதிகமிருதிகண்மங்களாலாவதொன்றுண்டோவுலகியலுணர்வீருண ரீரே. [கச]

எந்தைபார்பிரதோடத்திற்பூசனைகொள்ளுமிலிங்காதன்றன்றரிசன மொருகணமேனும், புந்திவைத்ததன்பாதியேனுங்கண்டுதொழுவோர்பு ண்ணியந்தனக்களவையார்புகலுவரன்றே, யுந்துறும்பரசெறிதல்போன் மொழிதல்செய்வீரென்னுடன்புகன்றிடவெங்குவந்திரடகெடுவீர்,வெந் தழற்செப்பிணுணியைச்செருகினீர்செவியில் வெளியிற்போமெனமிகச் சினந்தேயுரைவிடுத்தான். (கரு)

அரியசாற்பிரதோடபூசையுந்தரிசனமுமாற்றுவோனவன்சன்மசா பல்லியனன்றோ, பெரியதோர்முத்திமாபடர்ந்தையுமவன்றனக்கேயிரிய மாகியேபகைவசமாகுவளன்றோ,யுரியதாகியமிருதிநூற்கன்மங்கள்யாவுமு ற்றதோர்பிரதோடத்தின்பலன்றனக்கிணையோ,புரியுமற்றுளதருமங்கள் பொருட்செலவல்லாற்புனிதன்பூசைபோற்சகிதரற்கயையுமோ புகல் வீர். (கசு)

நரகபேசடத்தராகியபாவிகடமக்கோநாதன்பூசனைதரிசனங்கிடைக் கவாராவாற், பரவிபேசகிபெறுவதற்குயிர்க்குபகாரப்பான்மையாற்சிவ லிங்கமுண்டாக்கினான்பரமன்,கருதிபச்சிவலிங்கபூசனைபுரியாமற்கயரில் வீழ்வதுபோனரகெய்துவாரந்தோ,வரனுதரட்சகன்றிருமாலயன்முத லோரருச்சனைபுரியாதவனென்றுயிரறிந்திலவே. (கஎ)

மலருளோன்முதற்றேவர்க்குந்தந்தையாஞ்சிவனைமனதில்வைத்தில ராலவன்றருமமுமதியார், பலனறிந்தடிபணிகிலராயினுமிந்தைபண்ணும் பாதகரோவருச்சனைப்பயன்றேர்வா, ருலகிலிங்கிவர்பன்றிநாய்கழுதை கீடாதியுற்றசன்மங்கள்பெற்றொழிபாநரகுறுவார், சலமுடன்சிலவறுகு ங்கொண்டேபரன்பூசைதனைச்செய்தேகதிபெற்றிலார்மூடர்கடாமே.

கூவிளந்தளிர்பழுத்துதிர்சருகதன் றாள்கள்குறுகுகின்றதுகொண்ட ரனருச்சனைசெய்யின்,மேவுகின்றநற்கதியெனுந்திருமடந்தையையேமி கவுமேயெளிதாமணம்புணர்ந்திடுவானு, லேவனுகிலும்வழிநடந்தேகு வோனேனுமிடருற்றுயினுங்கோயில்சென்றேசிவலிங்க, தேவநாயகன்ற னைப்பிரதோடவேளையினிற் றெரிசனஞ்செய்வோன்சிவபதம்சேர்தல்ச த்தியமே. (கக)

விருத்தமாத்தவஞ்செய்துழலாமலேகதியைமன்னுதற்குநீருளமலர்ப த்திரமுளவாற்,பொருத்தமாமறுகுளமிருத்திகைலிங்கமாதிபுவியிலுள்ள வாயிருந்துமேயருச்சனைதனிலே, கருத்திலாதுநாள்வீண்பொழுதாநரகு றுவார்கருத்தனற்பிரதோடபூசனைசெய்வோன்பாதத், தருத்திபெற்று ளோனவன்பதஞ்சேர்குவனண்ணலடியரோடுறைவாயினர்க்கரிதலயாவும்.

இறைபிலிங்கபூசனையினலாவதென்னென்றேயிகழ்ச்சியாவொருக ணமுனினுமவன்குலத்தோ, டுறையும்வெந்நரகத்தினிலுற்றிடுவானு லுண்மைசேர்தருதிரிவிதகாணங்களோடும், பிறையணிந்தவன்பூசனைபு ரிபவனடித்தூழ்பேசுநம்முடிச்சேர்த்துதுமெனமனம்வைத்தே, யறைபு ம்வேதியன் மாலிந்திராதிதேவர்களுமாசையுற்றுவீற்றிருப்பாலனுதின மன்றே. (உக)

சுகந்தமாகுங்கத்தூரியின்வாசனைதனையேசுணங்கன்றானறியாததது போலவேபாவத், தகந்தைசேர்தருசிவனடியார்தமதருமையறிவரோவந் தோதுட்டராமாந்தர்கள்கருணை, யுகந்தவாரியாம்பரமனையருச்சனைபுரி ந்தேயுத்தமம்பெறுசித்தியமுத்தராகாம, லிகந்தபாவங்கள்புரிந்தொழிவு ற்றிடாநரகத்தெய்தியேகிடந்தழுவராலிங்கிவர்கண்டீர். (உஉ)

நெற்றியிற்றிருநீறணிந்தேகளந்தன்னினிறையுருத்திரன்கண்மணிமா லிகைபுனைந்தே, யுற்றசென்னியால்வணங்கிக்கையாற்புசும்பொன்னி னுளிகொள்கூவிளந்தளிரினலருச்சனைபுரிந்தே, பெற்றமூர்ந்தவன்ற னைப்பிரதோடமாங்காலம்பெரிதுறுந்தினந்தன்னிலேபூசனைபுரிந்தோ,ரி ற்றுருப்பரமானந்தவீட்டிலின்புறுவா ரென்றுதென்றிசையிறைமகிழ்ந் துரைத்தனனன்றே. (உங)

மூன்றாவது மறலியுத்தரச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கூகூ.



நான்காவது

# விரசித்து உற்பத்திச்சருக்கம்



கள்ளமதுற்றிடுசிந்தையொழிந்தேகாதலுடன்கசிவுற்றிருபோது, முள்ளமதிற்சிவனேபரமென்னுமுண்மையுடன்கடிமாமலர் கொண்டே, பிள்ளைமதிச்சடையான்விடையானம்பிகைமருவும் முடையான்றிசையுடையான், வள்ளல்பதத்தைவழுத்துதல்புரிவோர்வானவருக்கிறையாகுவரன்றே [க]

இயாக்கினவற்கிசொல்வானியமன்றானிறைசிவனின்புறுசரிதமியம்பும், வாக்கியறன்னைமதித்தவனருகேமன்னியிருந்தவர்தாம்பயமுற்றேற, நோக்கிமகிழ்ந்துறுமறலியைமறைதேர்நூலணிமார்பனையும்பணிவுற்றார், பாக்கியம்வந்தெனச்சமன்மறையோன்பாதமலர்பரிபூசைபுரிந்தான். [உ]

பூசைபுரிந்துவிமானமதேற்றிப்புரந்தரலோகமதிற்புகவுய்த்தா [மேட ணைசகொளிந்திரனுங்கதுகண்டேயரிதுறும்வரிசைகள்செய்வதுகொண் தேசுறுபிரமனதுலகிலடைந்தான்திறன்முனிவர்களுடனயனுபசார மாசிலபுரிதரவேவெகுகாலமறையவனவணிடைமன்னியிருந்தான். [ங]

இருந்தபின்பெருந்திருவெய்துறுமரசனிசைபெறுபிரமபூவில்லுறை நல்லாள், கருந்தடங்கணியவளுதரமதிற்றான்கருவெனவந்தனன்ஞானமொடுற்றான், திருந்திடுமருந்தவம்புரிந்திடுவாமதேவநன்முனியெனச்சிவனைநினைந்தே,பொருந்திடும்யோனியினெறியதுவாகப்போகிலனென்றுறுபுந்திபுரிந்தான். [ச]

புரிந்துறுசிந்தையறிந்தனர்வானோர்பூபதிபிரமபூவின்மனைபுக்கார்,வருந்துறுமவன்மனையவளருகுற்றார்வயினுறைமைந்தனை நோக்கியுரைப்பா,ரருந்தவமாமறையோயயனார்தாமாதியிலேயமைவுற்றதுவன்றோ,. திருந்துறும்யோனியின்வழியதுவாகச்சேர்தல்யாரதுசெய்யகிலாதார். [ ]

செய்யதவம்புரிதந்தையர்தாயர்சிந்தைகலங்குதல்செய்யவுமாமோ, மையலகன்றிடுசித்தரியக்கர்மாதவர்வானவரேமுதல்யாருந், தையலர் யோனியின்வழியதுவாகச்சார்ந்தவரேசிவனொருவனுமல்லான், மெய்யுடையுயிர்களெல்லாமனைகருவைவிட்டெவ்விடத்துமுதிப்பதுமுண்டோ.

உள்ளமதுற்றிடும்ஞானியர்யோகருளார்களுமவ்வழியேயுதித்தாராற் றள்ளருமன்பதையாவையுமன்னசகலருக்குமிதுசம்மதிகண்டீ ரெள்ளருநும்துபிறப்பிதுவல்லாலினியொருசன்னமெடுப்பது மின்றாற் றெள்ளியமுற்சனனத்தினிலரனைத்திகழ்பிரதோடத்தெரிசனமுற்றீர்.

தெரிசனமுறுபலனதுதனிலன்றோதிடமுறுஞானச்சிந்தைபடைத்தீ ரரிதொழுபரனதுதிருவருளுற்றீரமரரெமக்கிதடுத்துளதன்றே பரிவுறுபிரதோடத்துறுபூசைபண்ணுறுகின்றவர்கண்ணெதிருறவே கரியுரியுடையவன்மிகமகிழ்வுற்றேகணங்களோடாடல் புரிந்திடுவானால்.

ஆடல்புரிந்திடுவொன்பிரதோடநாட்டத்தரிதுறுதெரிசனதருபயனடைந்தாற்
றேடியபாவுமளித்திடன்மெய்யேசிந்தையிலையமுளோனிதையுணரா
னீடுமதன்பயனீர்பெறல்கண்டேநிச்சயமுற்றனமவ்விரதத்தை
நாடுமருச்சனையின்பயனுணரீர்நாளுமரும்பவமேமுனஞ்செய்தீர். [கூ]

உற்றகொடுந்தானங்கவர்வுற்றீருலகினிலீனர்களனநுகர்வுற்றீர்
சொற்றநருநுகர்தோகைபொடுற்றீர்சுதைநகளையவள்வயினிற்றருகுற்றீர்
முற்றருபாவமனைவக்களவுண்டோமுன்னுறுநல்வினையொன்றதனாலே
புற்றரவாபரணன்பிரதோடப்பூசனைநாடுதல்புந்திசெய்திரால். [க0]

செய்திடுநல்வினையால்வெருகோடிதீநரகத்துறுதீமைதவிர்ந்தீ
ருய்தருசிவபதபூசனைசெய்பானுறுகிளையொடுநரகுழல்வுறுவானுன்
மெய்தருசத்தியஞானமதுற்றீர்மிக்கதோர்சனனமுமேவுதிரன்றே
கைவருமிப்பலனாலரசாளுங்காவலர்செல்வமுறப்பெறுவீரால். [கக]

பெற்றதோர்செல்வமதாலரனார்தம்பெரிதுறுபூசனைதனைமறவீர்நீர்
பற்றுறுபூசனைபலதிரவியமும்பரிவுடனேகொடுபுரிதருகிற்பீர்
மற்றதிலேயவமதிபுரிவார்கண்மன்னியயோனிகடோறுமுழல்வாராற்
சொற்றருசந்திரசூரியரளவுஞ்செல்லருநரகிற்சுழல்வுறுவாரே. [கஉ]

வீதலுறாதரனார்பணிசெயவேமேவுதிர்யோனியின்வழியெனவிமை
யோ; ரோதியவாறதுணர்ந்தனன்மறையோனுண்மையெனக்கொடுவெந்
தனனவர்தாட், போதுபணிந்துவிடுத்திதயத்தாற்பூசைபுரிந்தனனென்ப
தொடொன்று, மாதமுமன்னைதனுதரம்வதிந்தேதவந்தனன்யோனியின்
வழிதனிலன்றே. [கங]

அன்றுநல்லோரைகணுணலமுறவேபன்னைபிதாவுமகத்தின்மகிழ்ந்
தார், நன்றுளமைந்தனிலத்திலுறுங்காணுதசிவாமகதேவவெனுஞ்சொற்,
றுன்றுருமுற்றதெனச்சொலக்கேட்டேதோகையரங்குளர் யாரும்வெரு
ண்டா, ரின்றிதுபுத்திரனன்றொருபூத மென்றனரன்னையுமேங்கினளா
மால். (கச)

ஏங்கினர்பாங்கினராச்சரியத்தாலிறையவனுக்கிதுரைக்குதுமென்றே
நீங்கினர்சோபனமென்றரசன்பானின்றுபுகன்றிடுவார்நிகரில்லா
யோங்குறுமுன்மகனுக்கிணையின்றாலுருவிலியுருவுகொடுற்றனனுமா
லாங்கவன்மெய்யொளியாலறையிருள்போயகன்று விளக்கொளியும்மட
ங்கிற்றே. (கரு)

ஒளிபெருமுன்றிருமைந்தனிலத்திலுற்றவுடன்சிவனேமகதேவா
வளியெனவேயிடிபோலவுரைத்தானையவிதையமிதாயினதாமாற்
களிபெறுதனையர்களிப்படியுண்டோகாதலிதானுமருண்டனளென்றார்
தெளிதருசந்திவந்ததெனுஞ்சொற்செவிபுகவரசுசெழித்துளனன்றே.

உள்ளமுவந்துவகைக்கடலாழ்ந்தானுற்றிடுமப்பொழுதத்திசை கற்
றோன், வள்ளலுவந்திடியாழ்முனிவந்தான்வந்தமுனிக்கெதிர்சென்றடி

நாழ்ந்தே, தள்ளருநல்லுபசாரமியற்றுர் தாரரசன்றனையன்செயல்சொலவே, தெள்ளிஸைநாரதமாமுனிவினவிச்சிந்தைமகிழ்ந்திவைசெப்பிடுமென்றான். (கஎ)

செப்பமிருந்திடுமைந்தன்மைந்தன்செய்திபதிந்திலபானதிவேறு
யிப்புதல்வன்றனையேபெறமேனுளென்னவருந்தவமன்னபுரிந்தா
பொப்பிலரன்பிரதோடமதன்கண்ணுண்மையிலிங்கந்தரிசனமுற்ற
வப்பயனுனின்புதல்வனெனப்பாரதனிலுதித்தானந்தணனன்றே. (கஅ)

அந்தமிலாதோன்மகிழ்பிரதோடமதனிலுறும்பலனும்மிகுசெல்வ ரு, சுந்தரமும்பெறுவாரவையின்றிச்சொல்லரு நற்கதியும்பெறுவாரே, சந்திரமவுலிதனைப்பிரதோடந்தன்னிலருச்சனைதரிசனமுறவே, வந்திடுவோர்கொணரும் பொருள்கண்டே மங்களையோடுமகிழ்ந்துரைசெய்வான். (கசு)

கூவிளநற்றளிர்கொடுவருகின்றார்குளிர்தருதாமரைநெய்தல்கண் முல்லை,மேவுகுருக்கத்தியின்மலர்கொணர்வார்மிக்கதோர்தாம்பூலங்கனிவகைக, ளாவலுடன்றருகின்றனரபிடே கத்துறுதிரவியமதுகொவெருவார்,நாவிலினித்திடுகிர்தருளபாயசகல்லநிவேதனவகைகொணர்வாரால்.

வகைவகையாவவரவர்கொடுவந்தேமங்களையேபிரதோடமதன்கண், புகையொளிர்தூபமோடேயுனைநமையும்பூசனைசெய்பவர்புண்ணியங்கமோர, குகையிலருந்தவநாவறளத்தான்கூறிடும்வேதமியாகபலன்க, டகைபெறுபொருளழிவுற்றிடுதானந்தமதுடல்வாட்டுவதனிவிரதமுமே.

விரதமாம்பிரதோடமதொருநாண்மிக்கதொர்பூசனை தரிசனமுற்றுர்
சரதமகாமிகுயாகமோடரியதவசினிலுற்றபலன்கதிபெறுவார்
பரதநடித்திடுநம்பிரதோடப்பலனடைவுற்றவனேபரிசுத்தன்
வரதனவன்றனையின்றவர்தாமேவாய்த்திடுதாயொடுதந்தையராவார். ()

ஆமவனுறுகிளைபுனிதமதாகுமவன துவேயமுகென்பதுமாதே
காமமுறுந்திருவடையவனவனேகதிபெறுபதியாவதுமவனே
நாமமதுற்றிடுமிமையவர்பணிவார்நமதுருவேயந்நுவலமையகலாவேன்
றேமமுறுஞ்சிவனம்பிகையோடும்ல்வகைமுற்றுமியம்புவனரசே. [உ௫]

இயம்பிடுமிப்பிரதோடமதன்கண்ணெய்தியசிவதரிசனமுறுகின் சேய், நயம்பெறுபெருமையைநான்சொலவெளிதோநரபதியென்றிசை நாரதமுனிவன், வியந்துரைசெய்தவைபிரமபூவென்னும்வேந்தனுணர்ந்துமகிழ்ந்தனனென்றே, யயம்பொருதானைச்சனகனுளங்கொண்டன்புறவேமதினன்யாக்கினவற்கி. [உசு]

நான்காவது விரசித்து உற்பத்திச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஉ0.



ஐந்தாவது,

# நாரதருபதேசச்சருக்கம்.

முத்தனார்க்குறுமூன்றுகாலத்தினிற்பூசைமுறையிற்செய்பிரதோடத்தின்பூசையுநாளும், பத்தியாற்செயுமவர்களேபுனிதரப்பெரியோர்ப்பயந்ததாய்தந்தையும்பரிசுத்தராவர், சித்திசேரவர்தங்களைக்கண்டிடில்யமனுந்தேவர்யாவருநடுங்குவர்சேவடிபணிவா, ருத்தமப்பெரியோரவர்சேவடிப்போதென்னுளத்திற்போதில்வைப்பேன்முடிப்போதெனக்கொள்வேன். (௧)

புனிதன்யாக்கினவற்கிமாமுனிவரன்புகல்வான்புகலும்யாழ்முனிதன்னுடன்பிரமபூவரசன், றினமுந்தான்சிவபூசைசெய்மணிமயக்கோயிற்செய்பநந்தியேமுதற்கணஞ்சேர்ந்தமண்டபத்தி,லினிதுவந்திருந்தென்மகற்கொர்டுவ்வருகென்றானென்றபோதுட னீற்றறைமைந்தனைக்கொணர்ந்தா, ரனையமண்டபந்தனில்வருமைந்தனுங்கமர்ந்தவாதிசோதிசேரணிமணியிலிங்கங்கண்டனனால். (௨)

வாசலுற்றிடுநந்தியைத்துவசகம்பத்தைமன்னவன்றனைநாரதமாமுனிதன்னைத்; தேசுபெற்றிடுபிருங்கியேமுதற்கணந்தன்னைத்திருந்தநோக்கிச்செந்தாமரைமுகமலர்ந்தனனா, லாசையாகியேமெலமெலநடந்துள்ளுக்கோயிலண்ணலார்முனமாவலால்வீழ்ந்தடிபணிந்தே, யீசனேயிவணுறைந்தனையோவென்றுகண்ணீரிறைப்பரோமங்கள் சிலிர்த்திடத்தழுவிக்கொண்டனனே. [௩]

ஆங்குடன்றிருநீறுருத்திரன்விழிமணிகொண் டணைகவென்றனன்வாங்கினன்புனைந்துகொண்டனனா, லோங்குபூசனைபுரிந்திடவேண்டுமாங்கதற்கேயுற்றதோர் திரவியங்கொணர்வீரெனக்கொணர்ந்தார், பாங்கினாற்பஞ்சகௌவியமஞ்செனுமமிர்தம்பரிந்துசந்தனக் குழம்பபிடேகமும்புரிந்தான், றாங்குதூபதீபங்களைவேத்தியம்வில்வார்ச்சனையுஞ்செய்தடிபணிந்துகூத்தாடினனன்றே. [௪]

அதனைக்கண்டனனாரதமாமுனிபகர்வானருமைமைந்தனீ யண்ணலார்தமக்குநாடோறு, முதன்மைப்பூசனையிப்படிபுரிந்துவீற்றிருந்தேமுனியுங்கூற்றெனுமிருத்தினைச்சயங்கொள்வாயென்றான், சிதமுற்றேசிரஞ்சீவியாய்வாழ்குதிமேலாஞ்செல்வ முற்றனைசிவபத்திபெற்றனையாமா, விதமுற்றோங்கியசைவனீயிளம்பருவத்தேயிந்த நற்புத்திவந்ததுமதிசயமென்றான். [௫]

முந்தையுற்றிடும்பிறப்பினிலறப்பயனதனான்முதல்வனைப்பிரதோடத்திற்றரிசனம்புரிந்தாய், வந்ததாலிதுநல்வினைப்பயனினிமைந்தாவள்ளல்பூதிகண்டிகைசிவலிங்கத்தின்பூசை, சிந்தையிற்சிதையேறிடபத்தியாச்செய்யிற்றீயஞானம்போஞ்சிவனருண்ஞானம்வந்திடுங்காண், பிந்திடாச்சனனக்கடலிருவினைமுதலைபிடித்தலைத்திடா துயர்கதிக்கரைபெறலாமே. [௬]

ஆகியஞ்சிவமெனசருவர்க்குமெலாமென்றறிவுவந்துறிலருச்சனை
யானனும்வந்துறுமா, லோதருஞ்சிவபூசையேகற்பகதருவாமுள்ளமுற்ற
வையாவையுமுதவிடுமதனாற், கோதறும்படியருச்சிப்பான்றனக்கியலழ
குங்கூறுகின்றநல்லிளமையுங்குபேரும்பந்தாங்கு, மாதர்கூட்டமுஞ்சாது
ங்கரும்பலமேதவர்வாயில்காப்பதும்பெற்றிடுவானவன்மாதோ. [எ]

பூசைசெய்பவன்றனையெதிர்காண்டூறிலதுவேபுவனநாயகன்றரிசன
ங்கண்டதாமதனாலீசனன்பர்தந்தரிசனத்தாற்கதிபெறலாமிறைவனுகம
ந்திரவித்தைதபாங்கவர்பாற், றேசுபெற்றிருந்தொளிர்தலாலதுபுவிமீதி
ற்செப்புமாமனுவினுக்கெலாமுதன்மையேயாகும், பேசுதற்கரும்பொரு
ளதுசங்கரியிடத்திற்பிள்ளையாகுஞ்செவ்வேள்சிவனருளினாற்பெற்றான்.

அந்தமந்திரந்தாலெம்மையாண்முருகேசனம்பிகாபதிதன்னையேய
ருச்சனைசெய்தான், வந்தவப்பொருள்கந்தவேட்குமையுநாயகனுமகிழ்ந்
தளித்ததாலதன்றிறமாருன்னற்பாலார், முந்துமாங்கதுயாவைக்குமூல
மாமனையமுதன்மையாலதுபாவிகட்கெய்திடவரிதாற், சிந்தையெண்ண
ரிதாமந்தப்பரமமாம்வித்தை சிவனைப்பூசைசெய்திறத்தினாற்சித்தியாம
ன்றே. [கூ]

அரனையர்ச்சனைசெய்திடுந்திறத்தினுமெய்தற்கரியநற்பொருள்யாதொன்
றுமில்லையாந்திடனே, தருமமுற்செயாப்பாவிகடமக்கந்தப்பூசைதன்னி
ன்மந்திரந்தன்னிலுஞ்சிந்தைசாராதா, னிருமலச்சிவபூசைசெய்யாமை
யாலன்றோநிரையநான்கெழுகோடிவீழ்கின்றனவுயிர்கள், பரனைப்பூச
னைசெய்யவேவரியதொன்றில்லைப்பகர்குடங்கையிற் புனலறுகுங்கொ
டுபணலாம். (கo)

அனையதும்பெறலரிதெனிற்பத்தியினுமேயபத்தன்பூசனைநேற்றினாற்றி
றமுத்தியாமா, லினையசெய்துவந்தானெனிலதுவளர்ந்திடுமாலீசன்பூச
னைவிதித்தயற்புண்ணியம்புரிவோன், றனையறிந்திடாமூடனங்கவனுறுந்
தாகந்தனக்குநற்புனலிருந்தும்பங்கத்தறனுகர்வோன்,வினையமற்றிடுமவ
ன்றனைப்பழித்தவமதித்தால்வேதநாயகன்றனக்கதுமகிழ்ச்சியாமன்றே.

அன்னல்பூசனையாற்றிடாதறனுணலாகாதரியபூசனைபுரிந்தானிவேதன
ந்தடிசில், கண்ணுதற்கொண்டரோடிருந்தருந்திடவேண்டுங்கருதியிப்ப
ணிபரிந்திடானகாலதண்டத்தாற், புண்ணுறப்படுவானருட்புண்ணியன்
பூசைப்புண்ணியம்புரியாதவர்தமையமதூதர்,நண்ணிடும்படிநாகத்திலய
த்தம்பம்பிணித்தேதாடுகின்றதிராவுரவந்தனிற்றள்ளுவாரால். (கஉ)

மைந்தகேள்சிவபூசைதான்மிகுந்துளகாலமறலியூர்நடைகாகம்பாழ்
ங்கமேயாகு,மந்தவாய்மைசெய்யாதகாலத்தினிற்காலனைமுழுந்துத்தூத
ஞர்ச்சைவரல்லார்தமைக்கொணர்ந்தே,யிந்தவண்ணமிறைநிறைந்திடுமவ
ந்துயிபுடனெயிரக்கொப்பமை பெண்ணெயின்கொப்பமைகொதிக்கு

முந்நூமூத்திரக்குட்டமிந்திரியத்தின் குண்டமுறுஞ்சிலைதக்கனற்றடாக மென்றினையனவுளவால். [கரு)

அனையவற்றிட்டுச்செக்கினிலிட்டரைத்திடுவீரடுத்தபிண்டிபாலந்தனை யெடுத்தடித்திடுவீர், வினைசெயுங்கொடியோர்தமைத்தண்டனைபுரிவீர் வேதநாயகனளித்தவுத்தரமிதுவென்றே.நினைதிரென்பனுலவைமுற்றும றிதியான்மதலாய்நீசிவார்ச்சனைகுறைவின்றியங்கங்களுடனே, துனைவி னற்சிவமந்திரங்குருவின்பாற்பெற்றேதுணிவுறுந்திடபத்தியாற் புரிதியா லன்றே. (கசு)

தெய்வநாயகன்பூசனையாவனேயெனினுந்திடமுறும்பத்திகொண்டு சிந்தனைபிறிதின்றிச்,சைவநாயகமாகியஞானதேசிகன்றன்சாற்றுநல்லரு ண்மந்திரவுறுதியுங்கொண்டே,கைவருந்திறத்தாலருச்சனைசெய்யிலெம் மான்கருணைபெற்றுயர்காமியமுத்தியுஞ்சேர்ந்தே, யுய்வனுமெனநாரத மாமுனியுரைத்தானுண்மையாமெனமைந்தனுட் கொண்டனனன்றே.

ஐந்தாவது நாரதருபதேசச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கஎரு.



ஆறாவது,

# பாவநாசச்சருக்கம்



வேறு.

வேதநாயகனிலிங்கபூசனைசெயுமேலோன்
போதன்மாயவன்மூவுலகுந்தொழும்புனித
னேதுமாங்கவன்பெருமையாருரைப்பரவ்வுரவோன்
பாததூளியைச்சென்னியிற்பலன்பெறத்தரிப்பேன். (க)

இகலிலாநெறியாக்கினவற்கிசொற்றிடுவான்
மகதியாழ்முனிவார்த்தைகேட்டருளினமைந்தன்
றகுதிசேர்தருகுரவர்நீர்தமியனுக்கெம்மான்
றொகுதிசேர்மனுச்சொல்குவீரென்றடிதொழுதான். (உ)

அந்திவேணியன்சிவவித்தைபகர்குருவரிதால்
வந்தடுத்துளீர்யான்செய்தநல்வினைவசத்தான்
முந்துநீருபதேசஞ்செய்தாலியான்முறையா
லெந்தையாரருட்கதியினையெய்துறப்பெறுவேன். (ங)

அண்டர்நாயகன்மனுவுபதேசநீரருளி
னுண்டெனப்படுமுண்மையேதைவந்ததாமாற்
பண்டுநான்யமன்பணித்தசிங்காதனத்துறுங்காற்
கண்டசெய்தியொன்றுண்டதுகேட்டிராற்கருத்தால். (ச)

மறலிமுன்னர்டான்மன்னும்போதன்னமன்னவன்றன்
விறலுந்தூதர்களொருவனைக்கொடுவெந்துவிடுந்தார்
திறல்கொளாங்கவன்சித்திரகுத்தரைநோக்கி
யிறைவன்மந்திரம்பெற்றனனோவிவனென்றான். (ரு)

இல்லையென்றலுமியமன்றான்கோபங்கொண்டிடிபோற்
பல்லைமென்றனன்பாவியிங்கிவன்றனைக்கொடுபோய்
வல்லையேகும்பிபாகமாநரகத்தினடுத்துக்
கொல்லும்வேலினால்வாளினாற்குறுங்குறுமென்பான். (சா)

சின்னபின்னங்கள்செய்புமின்சைவனல்லாத
பன்னுதுற்புத்திப்பாவியைப்பண்ணுமாக்கினைக
ளின்னதென்றுணராதடித்திடித்திழுமென்றான்
பின்னுமோதினன்சிவவித்தைப்பேறிலன்றனையே. (எ)

நிரையகோடியினீங்கிடாப்படியின்வீழ்த்திடுவீர்
வரைவில்லாநெறிமன்னிடார்தமக்கிந்தமட்டோ
கரையிலாநரகெய்துவர்கயிலையான்மனுவை
யுரைபெற்றோர்பலர்கணத்தரசாயினருண்மை. (அ)

ஓதுமாங்கதுவுற்றரன்பூசையுமுஞற்றி
லேதமாஞ்சனனக்கடனீங்குவரென்றே
வேதவாகமபுராணங்கள்விளம்பியவல்லாற்
போதவான்களுமிதற்கிணையிலையெனப்புகன்றார். (கூ)

அந்தவித்தையைப்பெற்றுறுசைவனுகாத
விந்தப்பாவியைக்கொண்டுபோமென்றுரைத்தனனன்
முந்தையானதுகேட்டிருக்கின்றனன்முனியே
யெந்தையேயுபதேசஞ்செய்தென்னையாளென்றான். (க0)

பேசுமிவ்வுரைக்குளமகிழ்பிரமபூவரச
னேசயாழ்முனியேயிவன்றனெவணிகழா
தூசமில்லையோவென்றலுநாரதன்சொல்வான்
றேசுறுஞ்சிவதெரிசனமிவன்முனஞ்செய்தான். [கக]

அன்னதாற்சிவதத்துவஞானியாயவனி
மன்னினனிவனுதலாற்சூதகமருவான்
பின்னர்பார்க்குச்சூதகமெனில்பாவெனனதெனும்பேச்
சுன்னுகின்றவஞ்ஞானிக்கேசூழ்ந்துவந்துளதால். [க2]

தருமரூபமாமிவன்றனைக்கண்டவர்தமக்கு
மருவுஞ்சூதகமிலையெனிலெவற்குண்டோமன்னு
பரமனர்பத்தியில்லவர்சூதகம்பரிப்பார்
விரதசைவரைவிரவினோர்தமக்குமின்றுமால். (கங)

அண்ணலார்சிவதீக்கைபெற்றருளுபதேச
நண்ணுங்காலமவ்வளவுமேசூதகநண்ணு
மெண்ணுமாங்கதுசெய்திடவேண்டுமென்றிதயங்
கண்ணும்பாவனையொளியிருள்போலதைக்காயும். (கச)

ஆற்றினேனவன்புனிதனுவதுவுமற்புதமோ
நீற்றினேன்றிறமுணர்ந்திலார்நித்தசூதகராய்ச்
சாற்றுங்கன்மத்தின்பிரட்டராய்நரகினிற்சார்வார்
போற்றுமீங்கிதுநிச்சயமெனமுனிபுகன்றான். (கரு)

நாரதன்சொன்னவாய்மைகேட்டரசனுநயந்தான்
வீரமாகுந்தன்மகற்குத்தீக்கையின்விதிவிளைப்பான்
சாரமாஞ்சிவன்சந்நிதிமண்டபந்தனையே
யாருந்தீக்கையின்மண்டபமாவலங்கரிப்பான். (கசா)

சிவபிரான்முன்னர்த்தீர்த்தத்தின்மூழ்கித்தான்செய்யு
முவமைதீரரன்பூசனையுய்த்ததன்பின்னர்
நவமதாமைந்தனுபிமுன்கொய்தபிற்சாதத்
தவமுறுங்கன்மம்புரிவித்துத்தண்புனலாட்டி. (கள)

ஆதிபூதிகண்டிகையினுலலங்கரித்தணிசே
ரோதுமண்டபங்கொடுபுகுந்தோமங்களியற்றி
நீதிசேர்தரும்விதிப்படிநியமங்கண்முற்றிக்
காதன்மைந்தனைக்கடவுள்சந்நிதிக்கொடுபுகுந்தான். (கஅ)

அரசன்றான்புரியருச்சனைப்படிமகன்றனக்கே
விரவுநற்பொருள்கொடுவிதிப்படிசெயவிடுத்தான்
பரவுகின்றதுபார்த்துளமிகவுமேபரிந்தா
னுரவுநாரதன்முன்விடுத்துதவுதியென்றான். (கக)

அதன்பின்யாழ்முனியருந்திறற்பெரும்புதல்வனுக்கே
சிதங்கொள்பூதியினுனமேமுதலியசெய்து
விதங்கொடீக்கையின்விதிப்படிவெண்ணெய்மெய்ப்பூசிப்
பதங்கொடன்னுருப்புனிதமாம்பாவனைபுரிந்தே. (உ0)

அம்பிகாபதியுடன்கணபதியறுமுகவ
னம்பிநந்திபிங்கிருடியேமுதற்கணநாதர்
செம்பொனார்திருவுருவங்கள்சிந்தையிற்கொண்டே
யும்பர்கோன்சிவவித்தையங்கவன்செவிக்குரைத்தான். (உக)

அனையமந்திரந்தன்செவிப்புகுதலுமனையா
னினைவிலுற்றனனப்பொழுதவனுடனின்றும்
வினைகொள்பாவகோடிகளொருபெண்ணுருமேவித்
துனைவினுலவன்புறத்தினில்வந்துதோன்றியதே. (உஉ)

மதிமெய்க்கிறமுதுகுதோள்கொணல்வெவ்வெணெயிட்டல்
பாதிவெந்துநீள்செம்மயிர்குருடுகண்படைத்தே
தீதுபட்டுறுபெண்ணுருக்கண்டிறைதிகைத்தா
ஞேதுவாய்தழுதழுத்திடநாரதர்க்குரைப்பான். (உங)

இனையபாவையாரிவ்வுருக்கண்டிலேனென்று
முனைவவென்றலுஞ்சொல்லுவானனதுகான்முளைதன்
வினையெலாஞ்சிவவித்தைதன்மேன்மையால்வெந்து
புனையுமோர்மடமாதெனப்புறத்துற்றவென்றான். (உச)

அந்தவேளையிற்பாவமோர்மூர்த்தியாயமைந்து
வந்தபெண்ணுருநாரதமாமுனியேநா
னிந்தமைந்தன்றனெடுத்திடுந்தனுத்தொறுங்கலந்தே
முந்தைமேவினேனனதுமந்திரத்தின்றுமுடிந்தேன். (உரு)

கருகினேனிவனுடலினிற்கலந்திடமாட்டே
னுருகினேன்வெளிப்போந்தனனெங்ஙனுற்றிடுகே
னருகினேனென்றுபுகன்றதுகேட்டருகிருந்த
குரிசின்மைந்தன்மற்றுங்குளார்பாவருங்குலைந்தார். (உசா)

புறத்தில்வந்திவைபுகன்றிடும்பாவப்பெண்ணுருவைத்
திறத்துநாரதன்பார்த்திவைசெப்பிடுகின்றா
னிறத்தல்செய்திடும்பாவத்துன்முகப்பெணேயிவனைத்
துறத்தல்செய்து*காறுன்னுலகேகுதிகடிதின். [உஎ]

என்றுசொல்லலும்பாவமாம்பெண்ணுருவிசைப்பா
ளன்றிசேர்சிவஞானியேநாரதமுனியே
கொன்றைவேணியானன்பர்ச்சேர்ந்திடிற்குறைவருமோ
வுன்றனைத்தரிசித்துளேனுறுகண்டீர்த்தருளே. [உஅ]

அனந்தகோடிகற்பங்களுண்டிவனைவிட்டகலா
வினைந்தவெந்நரகத்துமூருட்டிக்கொண்டிருந்தேன்
புனைந்தசென்மங்கடோறுமிவன்புரிந்திடும்பவத்தாற்
கனைந்தயானுநீங்காதுடன்கலந்திருந்தேனே. [உகூ]

பெரியவெந்நரகத்திவன்பீடுகெட்டுழன்று
மரியநாணமோரணுவளவேனும்பற்றிலனாற்
றெரிதருஞ்சிவபூசனைசிவகதைகேட்ட
லுரியவன்பர்களுறவுசற்றுற்றிலானிவனே. [ஙo]

ஆலயத்தொடுகோபுரதரிசனமறியான்
சீலமாகுந்தேர்திருவிழாச்சிறப்புங்கண்டிலனே
கோலும்பாதகர்தம்மொடுங்கூடிச்சஞ்சரித்தே
யேலுந்தீத்தொழில்வியற்றியேகாலம்போக்கினனே. [ஙக]

* கால்-யமன்.

கடுத்தநாய்பன்றிகரமொடுகாகமேமுதலா
வெடுத்தவினையோனிகளவையெத்தனையென்கே
னடுத்தசன்மங்கடோறுமிவனரும்பசிப்பிணியாற்
படுத்ததுன்பங்கள்பட்டதல்லாலின்பமிலனே. [௩௨]

இப்படிக்குற்றசன்மத்தாலுழல்பவனேதோ
விப்பிரக்குலத்துதித்தனனவர்தொழில்விடுத்தான்
செப்புபாவிகள்செய்வினையமனறிவானே
யப்படிப்பட்டவவனுமிங்கிவன்பவமறியான். [௩௩]

கணக்கர்சித்திரகுத்திரரெழுதிக்கைசலித்தா
ரிணக்குந்தூதரிங்கிவனிழுப்பாற்சலித்தார்மெய்
தணக்குந்தண்டங்கடண்டனையாற்றகர்ந்தனவாற்
குணக்குன்றேயிவனெடுத்தசன்மங்கள்கூறுவதோ. [௩௪]

வையமங்கையுஞ்சுமந்திளைத்தாளிந்தமறவோன்
பையப்போய்ப்பிரதோடத்திற்சிவலிங்கம்பார்த்தா
னையவிங்கிவனரும்பவகோடிவிட்டகன்ற
செய்யும்புண்ணியமளவிலையெனச்சிறந்ததுவே. [௩௫]

ஒருவன்மாண்டிடிலுடலினுற்செய்தபாவங்கண்
மருவிடாதெவணேகுமாங்கவனெவண்வதிவான்
பரமலிங்கத்தின்றரிசனங்கிடைத்தபாக்கியத்தால்
வருமிவன்பவமுடிந்ததாலியான்மருவிலனே. (௩௬)

நாயகன்றரிசனத்தினுற்பாவங்கணசித்து
நீயிருந்தவாறென்னெனிலிவன்பக்கனீடுந்
தீயபாவத்தின்வாசனைசிறிதுறச்செறிந்தே
மேயதாலெட்டிக்கிருமிபோல்யானுமேயினதாம். (௩௭)

பெருமநீபுகல்சிவமனுப்பெருநெருப்பதனு
லிருளுமந்தவாசனைமுற்றுங்கெட்டிறந்தனவால்
வெருவியேவெளிப்புறப்பட்டேனினியெங்ஙன்விரவி
மருவுவேன்சிவனன்பரேயிங்குறைவாரால். (௩௮)

ஓடவுந்திடமில்லையாலுமதுகைப்பூதி
கூடப்பெற்றிடிற்கதியெனக்கெளிதினிற்கூடு
நாடும்பூதியாற்றத்துவஞானத்தைநண்ணி
வீடுபெற்றபேர்தமையெண்ணமுற்றுமோவிளம்பில். (௩௯)

பூதியன்றியேபுனிதமாம்பொருள்பிறிதுண்டோ
வாதியார்தமையடைந்திடவுதவுமாங்கதனின்
மேதகைத்திறமாரறிவாரதன்மேன்மை
போதமுற்றவர்சனனமாநரகினிற்புகாரே. (௪௦)

மனுவினல்வருங்கற்பநீறாயினுமற்றைப்
புனையுநீறெனவையெனுமேபுகவிடிற்புனித
மனையதோரணுப்பெற்றிடில்வினையெலாமகலு
மினையுறக்கினிகோத்திரவிபூதிமிக்குளதே. [௪௧]

நீறெனும்பெயர்வந்ததுவினையைநீறாக்கு
மாறுமேவினதாலதையடியர்க்குநீர்தாந்
தேறுசற்குருவாகவந்தீரருள்செய்வீர்
வீறுகொண்டதனாற்கதியடைகுவேன்வினையேன். [௪௨]

புனிதனீறணிந்திடப்பெறிற்பொருவினிற்குணரா
மனகனாரெனக்கருங்கதிநல்குவரன்றே
யெனவுரைத்தபாவத்துருநோக்கியாழ்முனியாங்
கனைதசேர்கருணைக்கடலுங்கழறுவனால். [௪௩]

ஓதுபூதிக்குமுனக்குமேயெத்தனைதூர
மாதவப்புதல்வன்றனைக்கொடுமைச்சொல்வகுத்தாய்
பாதகத்தினையெரித்திடுஞ்சைவபாக்கியத்தின்
சேதனத்துன்மைசேர்ந்தவன்றனையிகழ்ந்தனையே. [௪௪]

உன்றனக்குமாநிரையமேயுறுதியதாமா
னன்றிசேர்சிவஞானிமுன்னுறவணங்கானுங்
குன்றிடாச்சிவவித்தையைக்குறையுரைத்தோனும்
பொன்றியேநரகத்தினிற்புக்குழல்வானே. [௪௫]

ஓதுமன்னதாநரகமேயுன்றனக்குறுதி
போதிபோதியென்றனன்சிவனுமமேபுனித
மாதிநாமம்பெற்றரனடியாரையுந்துதிப்போன்
மாதவத்தினனென்றுநாரதமுனிவகுத்தான். [௪௬]

ஆறாவது பாவநாசச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௩௮௧.



ஏழாவது,

## பாவரூபமோசனச்சருக்கம்.



வேறு.

கவுரியோர்பாகன்பூசைகாதலித்தியற்றிநாளு
மவன்மகிழ்தொண்டர்தாளுமாதரித்தருச்சிப்போர்கள்
சவுரியமழகுகாந்திசந்ததிசெறுநர்வென்றி
புவிநனிவரியாச்செல்வப்புத்திரமுத்தியுஞ்சேர்வாரே. [௧]

இசைக்கும்யாக்கினவற்கியன்றானிசைமுனிவார்த்தைகேட்ட
வசைத்திறமுடையபாவவடிவநின்றுரைக்குமன்றே
நசைத்திறமுடையநீநாரதமுனியேயுன்றாண்
மிசைச்சரணடைந்தேனாயேன்வீடுதந்தருள்செய்வாயால். [௨]

அறிவிலாவொருவன்றானேயபராதஞ்செய்தானேனு
நெறிபெறும்பெரியோர்நெஞ்சிற்பொறுப்பர்நிச்சயமதன்றோ
வுறுமதுவிலதேலன்னோர்க்குபர்தரும்பெருமையின்றே
பொறிவிழியமனுஞ்சில்லோர்க்கருளதுபுரிகின்றானே. [௩]

ஆனதான்ஞானநாதவடியன்செய்யபராதங்க
ணீனலமுடையநெஞ்சினினைத்திடக்கடவதன்றா
னூனமிலுன்னைக்கண்டார்க்குறுவினையொழிவதுண்மை
மானடராசனன்பாராலுறுவரமுமுண்டோ. [௪]

எம்பிரானன்பரோடுமிறைப்பொழுதளவளாவில்
வெம்பியவினைகணீங்கிமெய்க்கதிபெறுவரென்றே
சம்புவினூல்களெல்லாஞ்சாற்றிடுமந்தமேலோர்
செம்பதநூள்பெற்றோர்க்குந்தீவினைநாசமாமே. [௫]

கங்கையைக்கண்டபோதிற்கடுவினையொழிதல்போலச்
சங்கரனன்பர்க்காணிற்சாற்றரும்பவங்கணீங்கு
மங்கதுகிடைத்தறானுமரிதன்றோவையநின்னை
யிங்குநானெய்தப்பெற்றேனிரும்பவநீங்கினேனே. [௬]

இப்புதல்வனையுங்கண்டேனெனக்கபராதமுண்டோ
செப்பரும்பரமனன்பர்தெரிசனமகிமையாலே
முப்புவனத்தநேகர்முத்திபெற்றார்நும்பூசை
யொப்பறுமிலிங்கங்கண்டேனுறுகதிபெறுதல்பொய்யோ. (௭)

கூறிடிலினியான்பாவக்குழியுடல்பரிப்பதன்றாற்
றேறுமிவ்விலிங்கமூர்த்திதெரிசனந்தான்பெற்றேற்கு
மேறுமிப்பாவதேகமிருக்குமோகேடுறாதோ
வாறணிசடையானன்பர்தமைப்படுத்துய்ந்திலார்யார். [௮]

அன்பராஞ்சரலிங்கத்தோடண்ணலார்திரலிங்கத்தை
முன்புறக்கண்டாற்கின்பம்வளர்ந்திடுமெனமொழிந்த
துன்புறுபாவமூர்த்திவார்த்தையைச்சுருதிவல்ல
வின்பநாரதன்றான்கேட்டேதிருவுளத்திரங்கினானால். (௯)

பெண்ணெனும்வெய்யபாவப்பேதுறுமுடலநீற
வண்ணலார்திருவெண்ணீற்றையணுவளவளித்திட்டானால்
வண்ணமாமந்தநீறுவனத்திலங்கியிலுண்டான
தெண்ணருஞ்செல்வநீறேற்றிருநெற்றியிட்டதன்றே. (௰)

நெற்றியினீறுசேர்ந்தவுடன்கருநிறத்துக்கோர
முற்றிடுகின்றபாவமூர்த்தப்பெண்ணுருவநீங்கிச்
சொற்றதிவ்வியரூபஞ்சேர்சூரியப்பிரபைபோல
வெற்றிசேர்புருடதேகமாகவேவிளங்கிற்றன்றே. (கக)

பூதிகண்டிகைகள்பூண்டுபுனிதமாய்த்தண்டம்போல
வாதிதன்முன்னர்வீழ்ந்தேபடிபணிந்தருச்சித்தேத்த
னீதிசேர்பிரமபூவாநீணிலத்தரசன்கண்டா
னீததிசயமேயென்றான்யாழ்முனிதனைக்கேட்கின்றான். (க௨)

இவன்முனமுற்றசென்மபாதிவள்விருத்தியென்னே
யுவமையில்புருடதேகமுற்றதேதுரைத்தியென்னத்
தவமுனிநாரதன்றான்சாற்றுவானிவ்வாறுதல்
சிவனருணாத்துற்றவதிசயஞ்செங்கைவேலோய். (க௩)

அரசகேளுயிர்கள்யாவுமாதியவுயிர்கண்மத்தா
லொருவன்சேர்பலவேடம்போலுருவங்கள்வெவ்வேறுற்றே
விரவுமம்மேனிதூலஞ்சூக்குமமெனவிடாமற்
பரவிடுமிரண்டதாகும்பகுப்பதாய்நிலவுமன்றே. (க௪)

இலங்கியதேகமென்னுமிரண்டினின்மானதேகந்
துலங்குறுந்தூலமுள்ளேசூக்குமவுடலமேவு
நலந்தருமுந்திசேர்காரணமாமுடலமந்தச்
சலந்தருதெய்வந்தானுஞ்சடத்துடனசமாமே. (க௫)

செப்பியமுத்திதானுமிரண்டதாஞ்சீவன்முத்தி
யொப்பிலாப்பரமமுத்தியென்னவேயுரைப்பதாமாற்
றப்பரும்பரமமுத்திதானவனாகித்தாபத்
துப்பருஞ்சீவன்முத்திதுய்த்திடுந்தேகின்றே. (க௬)

வேந்தகேள்சீவன்முத்திவிமலன்மந்திரத்தின்சித்தி
சார்ந்திடிலுண்டாஞ்சித்திசாருதலரிதேகண்டாய்
தோய்ந்திடும்பரமமுத்திசூழ்ந்திடுந்தேகமெல்லா
மாய்ந்திடிலுண்டாந்தேகம்பூதியான்மாயுமன்றே. [க௭]

சீவன்முத்தியதேதென்னிற்சிவவித்தைச்சித்தியாலு
மோவறுதவயோகத்தினுறுதியினாலுஞான
மேவியேயுள்ளதேகம்பெற்றுமேதினிவிண்ணோடுந்
தாவில்சத்தியலோகத்துந்தடையறச்சரிப்பதாமே. [க௮]

சொல்லுமச்சீவன்முத்தன்சுத்தனாயிருப்பனாரு
மல்லுநன்பகலுமன்னுமமாமமிர்தமுண்பன்
புல்லுமற்றுளபோகத்திற்பொருந்தானுதிதபந்தானு
மெல்லொளிசேரத்தேகமிவனுற்றனரசரேறே. [க௯]

எனவிசைமுனிவன்சொன்னகாலையிலிமையோனாகிப்
புனைதருபாபரூபம்போயவன்சாற்றுகின்றா
னனகனல்லருளாற்பாவதேகம்போயமரனானேன்
முனைவநீதந்தநீற்றான்முத்தனுமாயினேனால். [௨௦]

அம்பிகைபாகனெம்மானருடனக்குரியனானேன்
கம்பஞ்செய்காலனார்தம்பயமுறக்கடவேனல்லே
னம்பிரான்புவனமெல்லாநடந்துசஞ்சரிக்கவல்லே
னெம்பிரானவனுக்கென்றனிதயத்திலிச்சையில்லேன். [௨௧]

கொடுப்பதுமில்லையாதுங்கொள்வதுமில்லையான்றா
னடுப்பதுவிடுதறானுமிலையற்றேகருமமெல்லாம்
விடுத்துளேன்காரணாதியிவையெலாமித்தையாமே
மடுத்துறானந்தவாரிமன்னினேன்றுன்னினேனே. [௨௨]

ஒப்பிலாவிலிங்கநாதன்றெரிசனமுன்கைப்பூதி
தப்பிலாதுற்றுச்சீவன்முத்தனாந்தன்மைசார்ந்தேன்
செப்பருஞ்செல்வம்பெற்றேன்றிருமாறன்பதமும்வேண்டே
னெப்பொழுதினுமெம்மான்றனுமமேத்தெடுப்பன்யானே. [௨௩]

எங்கெங்கேசிவலிங்கங்களிருந்துளவாங்கணேகிச்
சங்கரன்சேவைசெய்வேன்சைவர்தம்முறவுங்கொள்வேன்
மங்களைபாகன்பத்திவழுவின்றியமைதல்வேண்டு
மங்கவன்பணியைச்சேர்ந்தேயருங்கதிபெறுவன்யானே. [௨௪]

திகழ்தருசீவன்முத்தர்சிவனருளாகக்கண்டே
யிகபரந்தன்னிற்கற்பகாலம்வீற்றிருக்கப்பெற்றே
பகர்தருமிலிங்கதேகநாசமாய்ப்பரமமுத்திச்
சுகநெடுவாரிசேர்ந்தேதுவிதமற்றிடுவாரன்றே. [௨௫]

இலிங்கதேகப்பற்றண்ணலினிதருணீற்றாற்றீர்ந்தேன்
றுலங்குமவ்வுருத்தான்யோனிதொறுஞ்செலுத்திடுமேயென்று
கலங்குதலொழிந்தேனாதன்கருணையாற்கல்விமாரி
பலந்தருஞானவாசான்பதமலர்க்காட்சிபெற்றேன். [௨௬]

அண்ணலேசைவர்பூதியணிந்ததேகத்திற்சேர்ந்த
தண்ணுறுமென்கால்சேரிற்சனனதுக்கஞ்சாராதென்
றெண்ணிமாலயன்விண்ணோர்களிச்சைகொள்கின்றதன்றோ
நண்ணுறுமதுநான்பெற்றேன்சுத்தனானலமுற்றேனே. [௨௭]

அவ்வுரைபகர்ந்ததெய்வமூர்த்திதன்னமுதவாய்மை
செவ்வியன்மந்தன்வேந்தன்செவியிற்கொண்டதிசயித்தார்
சைவநாரதன்றான்றேவசரீரத்தோன்றன்னைநோக்கி
யிவ்விடையன்றிவேறோரிடஞ்சேரலிருத்தியென்றான். [௨௮]

இருந்துஞ்சிவனையங்கவிளத்தியவிசையினலே
பொருந்துறுபசாசுவாலகிரகங்கள்போகுருதே
வருந்துசாகினியுற்பாதமிடாகினிமனத்தின்பீடை
யருந்துபரெல்லாந்தீர்த்தேயகற்றிடாயென்றானன்றே. (உ௯)

சிவ்வுமந்தாரகத்தாற்செப்பிலங்கவைகிட்டாவாந்
தவமேவும்பூதிபூசிக்கூவிளமாலைதன்னைக்
கவலாமல்வனைந்துமோந்துகடவுடன்பலியன்னத்தை
யுவகையோடென்றுநன்றாவுண்டினிதிருத்தியன்றே. (௩0)

தேவதீர்த்தம்விபூதிகண்மணிசிவன்றன்பூசை
யோவிலாவிலிங்கம்வில்வமுறுநின்மாலியத்தினுண்டி
தாவிலஞ்செழுத்துச்சைவர்பூசைசங்கரன்புராண
மேவியபத்துமுத்திவிளைப்பதற்குறும்வித்தாமே. (௩க)

அதிகநின்மாலியத்தினுண்டிதானவற்றின்மேலா
முதவுமிப்பத்துநெஞ்சத்துறுதியாக்கொள்கலாதான்
வதைநரகத்தேயென்றுமன்னுவனிவற்றைத்தன்கை
முதல்கொடுத்துறினுமுத்தியறந்தன்னன்முற்றுவிட்டால். (௩உ)

சொல்லுமிப்பத்தும்வாக்காற்றுதிக்கினுமுத்திசேர்வன்
வல்லசைவத்தரெல்லாமாறுமற்செய்யவேண்டு
நல்லமற்றிவைபோலில்லையிலையெனநவிலும்வேத
மல்லுநன்பகலுநீயிங்கிவற்றையேயாற்றுவாயால். (௩௩)

இதயத்திலிவைபற்றாரையிந்நகரிராமனீக்காய்
முதன்மையாமிவைகள்செய்யார்முற்றுவர்நரகமன்றே
மதிபெறுமுனக்கேயீதுவாய்த்திடுமுபதேசங்காண்
கதிபெறற்கிவையேயன்றிக்காரணம்வேறின்றென்றான். (௩௪)

**ஏழாவது பாபநபமோசனச்சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-உக௫.



எட்டாவது,

## ஆயுத்தேவச்சருக்கம்.



வேறு.

வள்ளலெம்பெருமானுமைமனோகரன்வேள்வாரணமுகத்தனைச்செய்ய
வாரணமுயர்த்தகுமரனைத்தந்தோன்பால்விடையேறியநம்பன்
றள்ளருமுப்பான்மூன்றுகோடியராம்விபுதர்கள்சாத்துமந்தாரத்
தண்ணறுக்கமழ்பூமாலையினடியர்சாத்துபாமாலையேமகிழ்வோ

னள்ளலங்கடலந்தானோமாநிலத்திலமர்ந்துறைமேகாடிமெய்த்தான
மவற்றினுமேலாம்விருப்புடன்மருவுமணிநிலாக்கொழித்திடுமருவி
வெள்ளிமால்வரையிற்கனகப்பூங்கோயில்விளங்குசிங்காசனந்தனிலு
மிகமகிழ்ந்துறைவதன்பர்நெஞ்சகமாம்விரைமலர்க்கமலவாசனமே.

இசைபயின்மறைதேர்பாக்கியவற்கியிருந்தவனிருந்துரைத்தனனு
மிப்படிபகர்ந்தநாரதமுனிவனின்னுரைதிவ்வியமூர்த்தி
நசையுடன்வினவியப்படிபுரிகேனெனநவின்றிருந்தனைதன்பி
னலம்பெறுமரசன்பிரமபூவென்பானல்கியமைந்தனைநோக்கித்
திசைபுகழிசைதேர்தத்துவஞானச்செல்வனாரதமுனியைச்
சேவடிவணங்கிச்செப்பிடுகின்றான்சேயிவனுயுளெவ்வளவா [வைவரீ
மசைவினுங்கருணைபெறத்தவம்படைத்தோனடைந்திடுநலமெவைவய
யண்ணலேயுரைத்தியென்னலுங்கருணையாழியாம்யாழ்முனியறைவான்

இவன்றனதிதயத்தெத்தனைகாலம்பூதலத்திருப்பதற்கிச்சை
யெய்துகின்றனனக்காலமுமுறைவானிவனதுவீரம்யாருரைப்பார்
கவனமால்யானையுத்தமப்பரிமாக்கணக்கிலின்முடிவுகொண்டிலவாற்
காவல்சோசேனாபதிகண்மந்திரியின்கடலையாரளந்திடவல்லார்
தவளமுத்தொளிருஞ்சக்கரக்கவிகைச்சக்கிரியிவன்றனக்கொருபேர்
சவுந்தரசித்தியமெனப்பெறுகுவனுற்சத்துருவார்த்தையொன்றிலதா
லவனிமுற்றளிக்குமிவன்றனக்கெதிர்பாராதலால்வீரசித்தெனும்பே (ல்.
ரமைந்துளானிதியினைநிறைப்பொருளாலளந்திடாஉகைஉளர்ந்திமொ

மன்னவனிவன்வாழ்நாளினைநலமாமணியினதொளியினுல்வயங்கும்
வளமைசேரிளமையுடையன்சின்னாளின்மாநிரம்விசயஞ்செல்காலைக்
கன்னியர்வாழுங்கந்தர்ப்பலகாங்கண்டறிலாடல்கொண்டுறைவான்
கருதுமந்நகரத்தரசன்றன்மகளிர்கடிமனைபுரிசுயம்வரத்தின்
மின்னனார்சிவன்றனருளினில்வந்தார்மிக்கசுந்தரம்பெறுமானுர்
விதியினன்மாலைசூட்டிடவேகமெல்லியலாரைவேட்டிடுவான்
முன்னவனன்பர்தமக்குமுன்னவனுகுவன்சதாகாலமுஞ்சிவனை
முறையினலருச்சித்திடுமிவன்போலமொழிந்திடிற்சுத்தராருளரே.(சு)

காயமுள்ளளவுஞ்சிவகதைகேட்பானிவன்புரிகருமம்வாய்த்திடுமாற்
கருத்தினிலுண்மையுறுதியேயுடையான்காவலவனதுகான்முளைதான்
றூயபாக்கியத்தைப்பார்த்திபோசெனித்தவுடனியன்றன்னையேபோலச்
சொல்லருஞ்சிவன்றன்மந்திரவித்தைதொடங்கிடப்பெற்றுளார்யாரே
சேயிவன்றனக்குமைந்தர்களநேகர்சிவபத்தசிரோமணியாகத்
திறலழநாண்மையுடன்பிறந்திடுவார்இப்பிணியென்பதொன்றிலையா
லாயினன்மார்க்கவழிபலாற்செல்லானம்புவிக்கிவனுபகாரி
யாசனுத்தமனுமிவன்றனைக்கண்டோரெவருமுத்தமர்களாவாரே. ()

இங்கிவன்றனைப்போல்யான்கண்டதில்லைக்கேட்டதுமில்லையெந்நாளு
மினிநுதான்றேடுமிந்திரியமெல்லாமீசனுக்கேயமைத்திடுவா

னங்கதுதன்னுளிவன்சரக்கறையிலரும்பொருள்வர்த்தனையாமா
லரசவென்றுரைத்தவார்த்தைகேட்டுளத்திலதிசயமுற்றனன்பகர்வான்
றுங்கமாமுனிபவித்திரையுடனேசோம்பலொடயர்ச்சியில்லாமற்
சொல்லருஞ்சிவபூசனைசதாகாலமாநிடர்சூழ்ந்துசெய்குவரோ
றங்கணுயர்நீபுகலுதியென்னநாரதமாமுனிபகர்வா
னன்மணித்தசும்பிற்பரிமளசீதநறும்புனனிறைந்திடப்பெய்தே. (௬)

அந்நற்றசும்பிற்றுரைவிழ்தம்பிரான்றமைத்ததுசிவலிங்காத
னணிமுடிமீதிலொழுகிடப்பணித்தேயருச்சனையொழிவுறாதாற்றிச்
சிந்தனைமகிழ்நைவேதனத்துடனேதீபதூபங்களிரெட்டாஞ்
சேருபசாரவரிசையோடுள்ளசிறப்புறுமலைவத்தனமியற்றி
மூந்துறுசைவவேதியரநேகர்முறைமுறைபாகவேயமைத்து
மொழிதரும்பூசைமுடங்குறுவண்ணமுழுநிதிக்குவைபலகொடுத்தே
சந்ததமியற்றில்வேண்டியபடிசித்துச்சாயுச்சியமுத்தியுமடைவார்
சங்கரனெறியிற்பற்றிலாதவரைச்சமன்றடிகொடிடர்தகர்ப்பான். (௭)

பத்தியுற்றிலனேற்பூசனைபுரிந்தபலனதுபெறுவதொன்றிலதாற்
பகர்மனத்துறுதியுடனரன்பூசைபரிந்துடன்புரிந்திடப்பெற்றோர்
சத்திமெய்பாண்மைதிருவுருவாணுள்சந்ததிதழைத்திடுஞ்செல்வஞ்
சபலமாமிவற்றிலொருபெருங்காதைசாற்றிடக்கேட்டியாலன்றேல்சார்ச்
சித்திசேர்வாணுட்டொகையெலாமேனட்டிருவனொருருவுகொண்டொரு
சேர்ந்துகூடினவாலந்தவேலையினிற்றென்றிசைக்கூற்றுவன்கணத்தோ
டத்திசைபரன்றருமங்கள்பாடிபாடிச்சென்றுலகமெங்கணும்போ
யடைந்தனனயனைக்காண்டலுமாயுட்குழாமிகமங்கினவன்றே. (௮)

அன்னதுகண்டேநமனருகுறைந்தசித்திரகுத்திரர்தமைப்பார்த்
தறைகுவான்பாரிவைகண்டான்பானுவன்னங்கள்சந்திரவொளியாற்
சென்னிறத்தங்கிவன்னஞ்சிற்சிலவாற்சிலவுடுத்திரளெனத்திகழ்வ
சிலதடித்தன்னவொளியொடுசெந்தாமரைவளையத்தினிற்றிகழ்வ
மன்னுறுமுற்கைபோல்வவானந்தம்புன்சிரிப்பொடுஞ்சிலவதிந்த
மறைபயிலரன்றனாமமோதுவனகண்சணீர்வாரநின்றனவாற்
சொன்னவில்வீணைக்கானம்பாடுவனசூழ்ந்துகூத்தாடுவபலவாற்
சொல்லரும்பரமன்றனையுளத்திருத்தித்தூங்கியேவிழிப்பனசிலவால்.
சிற்சிலசிவனாமங்களெண்ணுவனதெண்ணிலாவொளிதருநீற்றாற்
சிற்சிலதிரிபுண்டரங்கள்சாத்துவனதிகழ்தருமுருத்திராக்கத்தின்
விற்செறிவடங்கள்பூண்பனவில்வத்தளிரினாற்சிவார்ச்சனைபுரிவ
மிகுசிவகாதையமிர்தபானங்கள்விரும்பியேநுகர்வனபலவா
னற்சிவலிங்கந்தனைக்கையாலணைத்துப்பரவசமடைந்தனபலவா
னலம்பெறவிவ்வாறிலிங்கபூசனையினாலுறுமிவையெலாங்கண்டே
கற்செறியெனதுநெஞ்சகமுருகிக்கருதருமகிழ்ச்சிபெற்றுடையேன் (கே
கண்டுகொண்டிதனிற்காலம்போக்கிடலேகருத்தொருமித்ததாலெனக்

இதிலதிசயமெதெனவினவுதிரேலிரும்பெரும்பாவக்காட்டெரிசூழ்ந்[லா
...தெரித்திடக்கருகிக்கருத்தொறும்புகுந்தேயிடைந்திடும்பாவிகளெல்
மதிதருஞ்சடிலத்தெம்பிரானடியார்தமைநினைந்திடலந்தவினைபோய்
மாய்ந்திடுந்துக்கபயமும்போமன்னமகிமைசேர்தொண்டரையின்று[ன்
கதிபெறக்கண்டேயித்தினஞ்சுதினங்கண்கள்பெற்றதிற்பயன்படைத்தே
கருதிடும்வாணுள்வளர்ந்திடுஞ்செல்வந்தழைத்திடுமிகவுமேகண்டீர்
சதிரொடெமெதிர்நிற்கின்றனபாரீர்தருமமாமிவற்றெதிர்மறையாய்ச்
சார்ந்திடும்பாவத்துக்கவாயுவின்றன்கூட்டங்கடாமிவையாமே. (கக)

காரருள்வடிவாய்ச்சிவார்ச்சனைபுரியுங்கண்ணுதற்றொண்டரையடிக்கக்
கடும்பயங்கொண்டேயழுதுதூரத்திற்கலங்கிநிற்கின்றனபாரீ
ராரிவைபோல்வாரெவையெனட்புகலும்வார்த்தைகேட்டவற்றையுங்க
யதிசயமுற்றுமனமகிழ்தோன்றவறைகுவார்சித்திரகுத்தர் [ண்டே
பாருளிங்கிதுகேட்டவர்க்கரன்பத்திபலித்திடுமன்னகேண்மேலாம்
பரனடியார்தம்முறவதுதானேபகர்தருமமுதபானமதா
நேர்தருமவரைக்காணிலானந்தநிகரிலாவமுதசோதியதா
நீதிசேர்தருமராசநீபாராயெனப்பின்னுநிகழ்த்துகின்றூரால். [கஉ]

அம்புவியதனில்யாவனேயெனினுமம்பிகாபதிபதபூசை
யருமறைமுறையிற்காலநீட்டித்தற்கஞ்சிவிட்டியற்றிலாயுப்போ
மெம்பிரானிதுநிச்சயம்பணிபுரியில்வளர்ந்திடுமென்பவாகையினு
லிந்தவாயுவின்றன்கூட்டங்கள்யாவுமிடரொழிந்திறைப்பொழுதேனும்
வம்புசெல்லாமற்பூசனைபுரிந்துமகிழ்சிவனுமங்கள்பாடி
வணங்கிபானந்தக்கண்கணீர்பொழியமாநடமாடுகின்றனவாற்
செம்பொனேர்சடையான்பூசைக்குவேண்டுந்திரவியநிறையவேயேற்றிச்
செயுமுபசாரங்குறைவிலாதாற்றுமவர்சிரஞ்சீவியாகுவரே. [கங]

அண்ணலார்காதையமுதமாம்வாரியவைநுகர்வோர்சிரஞ்சீவி
யாகவேகாயபலங்களோடுறைவரையனேசத்தியமாமால்
புண்ணியன்பூசைபுரியுமாயுத்தேவச்செயல்புகன்றனமப்பாற்
புகலரும்பாவவாயுக்கூட்டங்கள்புரிதொழில்புகல்வதுங்கேளா
யொண்ணுருச்சூதுசூளுறல்வேசிமாதர்களொளிமுகப்பார்வை
புற்றகள்ளுண்ணுஞ்சிற்றினமகளிருடன்கலந்தாடனீர்த்துறுதல்
கண்ணுநலன்பரல்லவரோடுங்கலந்துபகாரங்கள்புரிதல்
காட்டுமிக்கருமம்புரிந்துவாணுள்களவம்புகக்காலம்போக்குதலே. ()

சிவகதைகேளாபரசிவனெவர்க்குமதிகனென்றுணர்ந்தவன்பூசை
செய்திடாபத்தியற்றவருடனேசேர்சகவாசங்களுறுவ
நவிலருஞ்சிவபூசனைதனையிகழ்வநல்லடியார்பதம்பணியா
நாதனுலயத்திற்றிருவிளக்கேற்றூநலந்தருதூபதீபங்கள்
பவமகன்றிடவேதரிசனம்புரியாபரனுமைதிருக்கலியாணம்
பார்த்திடாதாணுவிலிங்கங்கள்காணுபாவமேபுரிந்திடத்துணிவ

வழுறுமவைகளிவைகண்டாய்தருமவிவைகடாமரியதாந்தரும
வாயுத்தேவைநகடாிசன்ஞ்சற்றேயகமுறப்பெற்றநன்மையினுல். ()

வேறு.

அம்பிதாவந்தோபரமன்பூசைசெய்யோம்ரனுமம்புகன்றிலோஞ்சி
புராண முந்தோகையுடன்கேளோமரியவாணுளொழிந்தேகவவகாலம்
போக்கினேமா, விந்தோநெதியணிந்தோன்பாதநெஞ்சத்திருத்திலோம்
பில்வமலரருச்சித்தில்லோஞ், சந்தோடமுடன்கங்காசலத்தாலாட்டோ
ஞ்சங்கரன்றனக்ரத்ரிசனஞ்செய்திலோம். [கசு]

எனச்சிலகண்கலுழ்கின்றவிசுவநாதர்க்கிருங்கலவைச் சந்தனக்கா
ப்பணிபகில்லோ, மனத்துடன்வாணுளும்வீணுகப்பாவ வழிசெலுத்தி
னேமினிமேலென்னசெய்கோம், புனத்துளவோன்புணியுமகிலேசன்பூ
சைபூதியறுகெனுங்கொண்டுபுரியகில்லோம், பனத்தருபல்லவமரைப்பூ
மௌவற்ருர்வெண்பட்டுமேசாத்திலமென்பட்டுளோமே. [கஎ]

தெய்வமணிகன்னிகையின்மூழ்ககில்லோந் திருநீறுத்தூளனமுப்பு
ண்டரங்கள், சைவமணிதரித்திலோமவத்தமாகச்சரீரத்தைவளர்த்தோ
ஞ்சங்கரனிராவிற், செய்விரதவுபவாசவிலிங்கபூசைதெரிசனமுஞ்செய்
திலோமெனவேசில்ல,மெய்வருமுன்பயங்கரங்களுடையவாகிமிகநினைத்
துநிணைத்தழுதுவெதும்புகின்ற. [கஅ]

காசியினில்வயிரவன்றன்றினமதானக்ளகாட்டமிவிரதவுபவாசஞ்
செய், தேசில்*சாகரஞ்செய்துவயிரவேசனிணையடிகள்பணிந்திலோமே
ன்செய்தோமே தேசுபெறுகாலேசன்றெரிசனந்தான்செய்திலோமென
வுனதுபயத்தினுலே, கூசியேயுளங்கலங்கிக்கண்ணீர்வாரக்கோவெனவா
ய்திறந்தழுதகோவேயென்ருர். [கசூ]

ஆங்கவைகள்சிவபூசைசெயப்பெற்ருேமென்றடங்காதவானந்தத்
தாடுகின்ற, வீங்கிதுபாரெனச்சித்ரகுத்ரர்கூறவியமன்ருன்கண்டேயா
ச்சரியமெய்தி, யோங்குசிவபத்தியாயுவின்றன்கூட்டத்துண்மையை
க்கண்டடியிறைஞ்சியோதுகின்ருன், பாங்குபெறுமிவைகடமைக்காண
ப்பெற்றேன்பாக்கியஞ்செய்தேன்குலமும்பழுதாகாதால். [உ0]

எனதுவாணுளுநன்றேகண்ணுற்பேறுமெய்தினேன்சிவனுமசெப
ங்கள்செய்யு, மனவரதகலியாணகுணமேசேருமன்பர்தரிசனமுன்செய்
தவத்தாற்பெற்றேன்,சினகரமாச்சிவனுறையுமனத்தோர்மேனிசேர்தரல்
பெற்ருலுமுத்தித்திருவேசேரு, மனகராமரனன்பர்சகவாசந்தானடைந்
திடிற்போகமும்வீடுமெடையலாமே. (உக)

ஈங்கிவற்ருலிவர்களையானகலாதென்றுமிருந்துகாலம்போக்கவேண்டு
மென்றே, யோங்குதிறற்றென்றிசைக்கோன்சித்ரகுத்தர்க்குரைத்தன
னென்றேயந்தவுண்மையெல்லாந், தாங்கியயாழ்முனிபிரமபூவின்முன்

* சாகரம்-விழிப்பு.

னஞ்சாற்றினனெனச்சனகராசன்கேட்பப், பாங்குபெறுசைலதேசிகனு
ம்யோகப்பாக்கியன்பாக்கினவற்கிபகர்ந்தானன்றே. (௨௨)

எட்டாவது ஆயுந்தேவச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௨௩௮.



ஒன்பதாவது,

# கீர்த்திகேதுச்சருக்கம்.



சத்தியலோகத்திருக்கும்பிரமனுதிவானவர்க்குமுணர்வரியதம்பி
ரானே,பத்தியுரிபோர்த்தாடுமானேயுன்றனன்பருடன்சகவாசந்தந்தாள்
வாயே, பத்திசற்றுமில்லாதநாயேன்றீயன்பாவியேன்பாவியேனெனது
நெஞ்சம்,புக்திமுத்திகொடுத்தருளுஞ்செய்யபாதப்புண்டரிகத்தனிபோ
ற்றப்பொருந்தத்தானே. [௧]

அருட்கடலாம்யாக்கினவற்கிபர்தாஞ்சொல்வாரந்தகன்சித்திரகுத்
தர்க்களையும்போதி,லிருக்குமிந்தவதிசயந்தான்பார்க்கவென்றேயிமைய
வர்கள்விமானமிசைக்கொண்டுபோந்தார்,திருக்குலவுசிவனடியராயுக்கூ
ட்டஞ்சேர்ந்தனகண்டேமகிழ்ந்துசெங்கைகூப்பி, யுருக்கமுடன்சிவபூ
சைசெய்தோர்வாணுளுற்றபேருருவிவையென்றுரைசெய்கின்றார். [௨]

இவைகளேயுடலெடுத்தபயனைப்பெற்றவிவைகளேயிகபரமுமெய்தப்
பெற்ற, வவனியின்மேருப்பொருள்கடானமீந்தாதிற்போதுபோக்கினு
மேயவத்தமாமா, லுவமையினுற்சிவபூசைபதனுற்காலமொருகணமாகி
லும்போக்கிலுறுதிபாமாற்,றவமதனுற்றுன்றேடுமாயுப்பூசைதனக்குதவி
லதுசென்மசபலந்தானே. (௩)

மூன்னமிபர்திபதவத்தானிறைந்தவாணுள்பெற்றுளோனுயினுமெ
ன்முதல்வன்பூசை, தன்னிலொருகணமேனுமறுகுவில்வந்தண்புனல்
கொண்டேபோதுபோக்கப்பெற்றே,னன்னவனேயுடலெடுத்தபயன்பெ
ற்றோனுமறநெறிதப்பாதவனுமவனேயன்றே, மன்னுசெல்வம்வாணுள்
பெற்றதற்குப்பேறுவள்ளலார்பூசைபுரிமகிமைதானே. (௪)

கற்புரங்கூவிளமௌவல்செவ்வூமத்தைகரவீரம்வெள்ளெருக்குசெ
ண்பகப்பூ,பொற்புறுசெந்தாமரைவெண்டாமரைப்பூப்பொருந்துமிவை
கொடுசிவனைப்பூசைசெய்தே,நற்பொழுதுபோக்கினனவனேசெல்வநய
ம்பெறுவாணுள்படைத்தபயன்பெற்றோனு, மற்பமுளபொழுதேனுமி
வைசெய்யாதானுயுள்செல்வம்படைத்தவெலாமவமதாமே. (௫)

இப்படிவேதங்கள்புராணங்கள்சொல்லுமீசன்பூசையிற்போதுபோ
க்கிடாதான், றப்பிதனுமெப்பொழுதுமதனகாலசங்கராசங்கராவென

நாய்க்கே, பொய்ப்பறியவபித்தியனையுமையாள்கேள்வாவுயர்விசுவநா
தனைநாதாவென்னைச், செப்பருமின்கருணையினுற்புரப்பாயென்றுசிந்தி
போனழியாதசெல்வன்றானே. (௬)

அன்னைபிதாயர்தந்தைதபுபயங்காலகட்டுறுகர்ப்பக்குழியிற்கட்டுப்
பட்டே, யெண்ணரியதுக்கங்களுறப்பட்டேன்யானென்னையுன்றனடிய
னெனவிதயந்தன்னிற், றண்ணளிசெய்வாய்சனனமரணமாகுந்தாவில்
கோடிநோயகற்றிச்சுகந்தான்றந்து, கண்ணருளாலொருவார்த்தைசொ
லாயென்போன்கடவுளருக்கெதாழுதகத்துங்கவின்பெற்றானே. (௭)

எப்போதுங்கைப்போதுகொண்டேமேலாமிலிங்கபூசனைசெய்கெமென்
றுஞ்செவ்வியப்போதுங்கர்மனமேபிறவிநோய்க்கோரமுதசஞ்சீவினித
னதாவியாதிமல்கு, மொப்போவிலாதசெல்வங்கல்விஞானமுதவுவதுஞ்
சிவபூசையென்றேநினைத்த, முப்போதுமிருந்தானையேத்தல்செய்வோன்மு
க்திவீட்டினிலிருக்குமுதல்வன்றானே. (௮)

என்றுமனமகிழ்ந்துரைத்ததேவரெல்லாமீசன்பூசனையாயுக்கூட்ட
ந்தன்னை, நன்றுடனஞ்சலிசெய்தேதங்கடங்கணற்பதம்புக்கனர்பாவவா
யுக்கூட்டந், துன்றிடுமவற்றையெல்லாம்பாசத்தார்த்துச்சொல்லரியய
மதூதர்கல்லென்றார்த்துச், சென்றுரவுரவமுதலாநரகத்தீர்த்துத்தீப்பவ
த்தினனுபவத்தாற்றண்டித்தாரால். (௯)

ஈங்கிவற்றானராரேனோர்களெப்போதேனுமிகழாமற்சிவபூசையியற்ற
ல்வேண்டும், பாங்கதுசெய்பார்வாணாள்வீணாள்பூசைபண்ணுமைதனை
க்கொல்லும்பாவந்தீதாமே, யேங்கவிதிகவர்நல்வேதியர்க்கோறல்பசுவி
னிறைச்சிதனைநுகர்ந்திடுதல்குருதாரங்கூட, றீங்குதருமதுநுகருமாதர்
ச்சேர்தல்செய்திடும்பாதகத்தினிலுந்தீமைதானே. (௧௦)

பிரமபுத்ரேகேளெனப்பாழ்முனிவன்சொல்வான்பெருகுமதிசயமிது
வேகலிகாலந்தும், வரம்வேண்டும்வாழ்வுநல்குஞ்சிவனைநாடிவழுத்தாயர்
பாவிகளாய்நரகில்வீழ்வா, ருரமுறுபத்திபிற்சோம்பலின்றிப்பூசையுஞற்
றிடுறன்சிவபதத்திலுறுதலின்னம், பரவுறுமிங்கிவற்றிலொருகாதை
கேட்டிபகாமகததேசவதிபதியோர்வேந்தன். [௧௧]

புண்ணியத்தில்விருப்புடையோன்குலையாச்செல்வன்பூசைபெ
ரெமுப்புரிவோனவேதனந்தான், மண்ணுமன்னநுகர்தருமாறியமப்பு
ண்டோன்பத்தியினிப்படிபுரிந்தபான்மையாலே, யெண்ணரியசிவகணங்
கட்கதிபனானெனப்படிபூசனைசெய்துபெற்றானென்று, வண்ணாலவன்ம
னையின்மாணிக்கச்சோதிபரிபலிங்கமொன்றுகொடியமைத்திட்டானால். [ ]

ஆலயங்களமைந்தவற்றிற்பூசைசெய்யுமாறையாவத்தான்பிரபஞ்சமா
சாரித்தான், சாலவேநான்தேடும்பொருள்களெல்லாஞ்சங்கரன்பூசை

க்கெனவேதான்கொண்டித்தா, னேஒருகாலங்களொருகணமேனு மவம்போகாதிந்நம்பூசையியற்றிவிட்டான், சிலமிகுசைவசற்பாத்திரங்கள்பூசைதினஞ்செய்வான்வேண்டுவனதனமுமீவான். [௧௩]

வேறு.

மொழிந்தவிப்படியநாதிமுத்தன்பாலியற்றும்பூசை
யழிந்திடாநியமத்தாற்றுமரசனைக்காணவேண்டிக்
கழிந்திடாத்தவத்துஞானக்காசிபமுனிவன்வந்தான்
வழிந்திடுகண்ணீரோடுமன்னவனெதிர்கொண்டானே. [௧௪]

தெய்வமாமுனிவன்பின்னைவந்திடுஞ்சிவன்றன்னேசச்
சைவமாமுனிவரோடுமாசனந்தன்னிலேற்றி
மெய்வருமன்பினோடும்பூசனைவிதங்களாற்றி
வைவருவேலோனென்னமாதவன்மகிழச்செய்தான். [௧௫]

கண்ணுதற்கன்பனானகாசிபன்றன்னைநோக்கித்
தண்ணளிக்கவிகைச்செங்கோற்றராபதிசாற்றுகின்றான்
புண்ணியந்தனக்குமேலாம்புண்ணியமதனைநாடிப்
பண்ணுநற்கருளினாலேபகருதியடியேற்கென்றான். [௧௬]

காசிபன்சொல்வான்மன்னாகறைமிடற்றிறைவற்காற்றுந்
தேசுறும்பூசைதானேயெவற்றினுஞ்சிறந்ததாமா
லீசனார்தருமந்தன்னையாற்றினோரெண்ணிலோர்கள்
வாசமார்சிவபதத்தின்மன்னிவீற்றிருக்கின்றாரால். (௧௭)

யாவரேயெனினுமெம்மானிணையடிக்கமலந்தன்னிற்
றாவிலாப்பத்திபோடுஞ்சந்ததம்வந்திப்போர்க
ளோவிலாச்சனனத்துன்பவுவரியைநீந்தியப்பாற்
றேவர்க்குஞ்சேரொணாதகதிக்கரைசேர்குவாரால். (௧௮)

ஒப்பருந்தருமஞ்செய்தபேர்களையுமையாள்கேள்வன்
செப்பரும்பூசைதன்னிலாயுளைச்செலுத்துவோர்க
ளிப்புவிப்பாவிவாணாள்வீணதாயேகுமன்றே
யப்பனைப்பூசிப்போரையாயுள்வணங்குவோமே. (௧௯)

அனையவர்தமைவணங்கக்கிடைப்பதுமரிதேயன்றோ
தினமுநம்வாணாளெல்லாம்பூசையிற்செலுத்துவோமா
லினையதேயன்றிவேதகருமத்தொன்றில்லையென்றன்
மனமுமங்கதனிற்செல்லுகின்றதான்மன்னரேறே. (௨௦)

செனனமாம்விரணந்தீர்க்குமருந்திதுவன்றியில்லை
யனமுடையவன்முன்னோர்க்குமபீட்டங்களளிப்பதீதே
யெனுமிதுநன்றால்யாமுமிதுபுரிந்திடவேவேண்டுங்
கனைகசேர்காசிவாசத்துண்டியைங்கரனைப்போற்றல். (௨௧)

பொருள்விசுவேசனன்னபூரணித்தாளைப்போற்ற
லருள்செய்விரேசன்பூசைபாற்றிபேகாலம்போக்கல்
புரிதாக்கொடுத்நாற்சென்மகோடிசெய்பாவம்போக்கித்
தெரிதரும்புனிதவீட்டிற்சேர்ந்தினிதிருக்கலாமே. [உஉ]

மந்திரத்ததிகாதன்மனுவந்தமனுவுக்குள்ளே
முந்துமைந்தெழுத்தேமேலாமதுமுன்னின்முத்திபாமா
லிந்தமந்திரத்தின்மேன்மைபாந்தொலவெளிதோவேதத்
தந்தணன்முதலோர்சென்மப்பிணிக்கருமருந்தென்பாரால். [உந]

ஒதுமிங்கிதுவேமுத்திபுலவதற்குபாயமாகு
மாதுபாகனைப்பூசித்துமந்திரமிதுவேயெண்ணிற்
றீதுறுகாலன்றன்னைச்செயிப்பதற்கையமின்று
லாதிமேபமேகசமருத்திஞ்செபவெனும்பெயர்களாய்ந்தே. [உச]

எனக்குநின்பூசைபுன்றனெழுத்தைந்துமென்னுமாசை
கனக்கவுற்றுளதேயென்றுகருதுதல்காயசித்தி
மனத்துறுமபீட்டமெல்லாம்வந்தவாமந்தவாய்மை
யினைத்திடப்பெறுதன்முன்னர்கிழ்ந்தவத்திபைந்ததாமே. [உரு]

சங்கரன்பூசையாகுந்தருவுதிற்கிடையாதுண்டோ
விங்கிதுவிடயஞ்சிற்கின்னமுதெனலாமா
லங்கதுபுரிதற்குற்றசாதனமதுதான்பூதி
யுங்கமாமுருத்திராக்கந்துளிர்வில்வத்துடனியைந்தே. [உசா]

அருச்சனைபுரியிற்சீவன்முத்தியந்தணர்களாவார்
மரித்திடுகாறும்பூசைமாற்றிடாதாற்றல்வேண்டுஞ்
சரித்திரமிதனைச்செய்யானரககோடிகளிற்சார்ந்தே
தரித்திரம்பொருந்தித்தியசன்மமுற்றுழல்வன்றுனே. [உஎ]

அன்னையருந்தரவங்கிரகுறற்கஞ்சுகின்றோ
னென்னையாள்கவுரிபாகன்பூசனையியற்றுவானு
னன்னெறியிதனைச்செய்வான்ஞானவான்பாவிசெய்யான்
பன்னரும்பூசைசெய்யார்பன்றியோகரமோகமேயோ. [உஅ]

பிரவஞ்சமதைத்தையுற்றோன்பேசுருப்பாவிவீயு
*நரகரமாகுஞ்சென்மநாடுறும்வெப்புத்தாகம்
பருகுநீராற்றீராதுபாசிவன்பாதம்போற்றுந்
திரவமுதத்தாற்றீருந்திரும்பத்தாகஞ்சேராதே. (உகூ)

பாருலகாதிவேகப்பாந்தளாற்கடியுணஞ்ச
மாரியன்பரமன்பூசையமுதலாற்றீர்த்திடாதா
லூர்வனமுதலாவுள்ளவிலங்குமுள்படவேதுன்பஞ்
சார்வழிச்செல்லாமாந்தர்சகப்பணிகடிக்கச்சார்வார். (ஙo)

* நரகம்-நரகபாதலம்.

அற்புதமற்புதந்தானிதுவன்றோமனிதராவார்
வற்புறுசனனமோடுமரணமாம்பாந்தள்சூழ்ந்து
முற்படக்கவ்விக்கவ்விக்கடித்திடமுடங்குகின்றார்
சிற்பரனெல்லாம்வல்லசித்தனைத்தேடிலாரே. (௩௧)

கடவுடன்பூசையின்றிக்கதிபெறற்கேதுவில்லைத்
திடமுதலின்றிலாபஞ்செட்டிபாற்பலிப்பதுண்டோ
விடயத்திற்புகுவதல்லாலரவணிமேவார்மாந்தர்
தடையுறமண்பெண்பொன்னிஞசையிற்சார்ந்துதானே. (௩௨)

ஆனந்தகனர்தம்பூசைதரிசனமாற்றுவோர்கண்
ஞானந்தான்பெற்றானந்தமுத்தியுநண்ணுவாராற்
றேனந்தண்கொன்றையார்தஞ்சேவடிபோற்றியின்ப
பானந்தேர்தொண்டர்பாதம்பரவுவேன்பரவுவேனே. (௩௩)

அம்பிகாபதிதன்பூசையமுதபானத்தைமாந்த
ரின்பமென்றறியமாட்டாரிருண்டடர்பாபத்தாலே
யும்பர்கோன்பூசையேகதேசத்திலொருவர்செய்வார்
நம்பியேபத்திபூண்டுபுரிதருநலத்தினாரே. (௩௪)

ஆற்றுறுந்தன்மாதன்மமறிதருமக்கட்பேறெப்
பேற்றினுமருமைப்பேறப்பெறற்கரும்பேறுபெற்று
மேற்றரன்பூசைசெய்யார்பன்றியேயெம்மனோர்க்குக்
கீற்றிளம்பிறையான்பூசைகிடைக்கொணுநிதியமாமே. (௩௫)

நரபதியிதுநமக்கேநவநிதியாகுமன்ன
திரமுறுநிதுவெப்போதுந்திரமுறுநிதியங்கண்டாய்
பிரமன்மாலாதிதேவர்பெறுவதற்கரியதன்றோ
வரமுறுமிதுதான்வேதநிதிகதிவழங்குந்தானே. (௩௬)

இகலறுமிதுதான்கல்லாவிருந்தவனருளிலுண்டாந்
தகவுறுமீதுமேலாந்தருமமென்றறிதியென்றே
மகததேசத்திற்கீர்த்திகேதுவாமன்னர்மன்னர்க்
ககமகிழ்ந்திடவேகாசில்காசிபணறைந்தானன்றே. (௩௭)

ஒன்பதாவது கீர்த்திகேதுச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-உ௭௫.



# சித்திரகுத்தர்பிரலாபச்சருக்கம்



வேறு.

உலகையின்றவுமைதனைநாமுழையுடையநாயகியோர்புடைமேவவே,
நிலைதுசோதியெம்மானொருபாலுற வெழில்கொள்விரசிங்காசனத்தோங்
கிபெ, நிலவும்வாலொளிப்பானுலைவட்போலுறுநெடியமேருவையேவளை
ய்வர்திடுங், கலவமாயிலெறிபசேவகன்கமலச்சேவடியேகதியாமரோ.

முனிவன்யாக்கினவற்கிசொல்வான்மறைமுற்றுணர்ந்திடுகாசிபன்
றன்மொழி, யினியவாய்மைமகிழ்கிர்த்திகேதுவாமிசைகொள்வேந்தனி
யம்புகின்றான்சிவன், புனிதலிங்கமகிமையருச்சனைபுரியுமேன்மைவிபூ
திமுப்புண்டரம், வனையுங்கண்டிகைமாலைதரித்திடும்வகையுஞ்சொல்கெ
ளமாதவன்சொல்கின்றான். (௨)

நன்றுநன்றுநரபதிகேட்டிபானுட்டிலுற்றவறிவின்மையோர்களு
மின்றுகேட்டிப்புமாறுவினைவினையிதுதானுத்தமோத்தமமாகுமே [ததால்
நன்றுமீங்கிவைகேட்டனையாலிவைசொல்லநந்தமக்கானந்தஞ்சூழ்ந்
தன்றமன்னநல்லோர்சகவாசத்தாற்கூடுமிந்தவினைவருங்கொள்கையே.

சாற்றுமேலவர்தங்களுடன்சகவாசமைந்தருத்தாமெனலாகுமா
லேற்றமாகியயாவுந்தருகையாலிங்குனக்கிதுசொல்லத்தகுவதாற்
போற்றுமீங்கிதுநற்கதிக்கேதுவாப்புகலுகின்றசிவகதைப்புண்ணிய [ன்.
மூற்றபாகவுரைப்பதற்கென்னுளமுவகையுற்றதென்றேதுதன்மேயினு

வாய்த்தவிக்கதைமங்களநல்குமால்வாய்திறந்துசொலுமிடத்தம்பலக்
கூத்தன்வந்துகுடிபுகுவானன்றேகுலவுமம்பிகையைங்கரன்கந்தவே
ளாத்தனுந்திபிங்கிமாகாளரோடருங்கணுதிபர்பாரும்வந்தீண்டுவார்
தீர்த்தபாதிபாவுஞ்செறியுமிச்செயலெம்மான்கயிலைக்கணுஞ்சேருமே.

பூவைபாகன்கதைபுகல்கின்றதேபுனிதமாகுஞ்சிவனைச்சிந்திப்பதே,
மேவலாற்சிவபூசையுமாமுத்திவித்து மாகுமுயிர்க்குச்சென்மத்தையே,
நாவும்வித்தைக்கெடுத்திடுஞ்சொதழ றாயவிந்தப் பொருள்கள்ளர்வேந்
தராற், பாவறும்வெள்ளந்தீயிலழிந்திடாபரிந்துநல்க வளர்ந்திடுமுண்
மையே. [௬]

நம்பனம்பைநம்முன்வரற்கேதுவாநல்லவித்தையிதுவலதில்லையே
சம்புவந்தனையாலெளிவந்திடுஞ்சங்கரன்பததூளியின்மூழ்குத
லெம்பிரான்சரிதத்தமுதத்தையேயிமயாநங்கைகணபதிசெய்யவே
ளும்பர்நந்திகணங்களுமுன்பதேயுமைமணாளனருளும்வந்தோங்குமே.

அந்தநற்கதையினனாமுதமேயானந்தப்பெருக்கத்தைப்புரிந்திடுந்
தந்திடுமந்தவானந்தமேமுத்திசத்தியஞ்சத்பசித்தியமும்மதே
வந்திடுமந்தவானந்தமேசிவானந்தமானமகானந்தமாகுமே [யே. [அ]
யிந்தவானந்தமாக்கிக்குமேன்மந்திரில்லைபாமிதுவேவரண்மையுண்மை

ஆனந்தந்தருகின்றருணமலாலன்றியொன்றுமிலைப்பவமாகிய, கா
ணந்தீத்திடுங்காலாக்கினியதாங்கருதுமிக்கதைத் தெள்ளமுதம்மெனு,
ஞானந்தன்னையெல்லார்க்குஞ்சொலத்தகாநல்லசிலத்தவர்க்கு நவில்வ
தே, வானமேவுறுமிப்பொருள்பெற்றுளோன்வடதிசைப்பதிவாழ்வுபதி
த்திடான். [௯]

இனையமெய்ப்பொருள்சங்கரனன்பர்க்கேபெய்துமற்றையர்க்கெய்
தற்கரியதே, வினையிலேலசெலுமைம்புலத்தீயினால்வெந்துவெந்துமெலிந்
திடுந்தாகமும், மனைகருப்பந்தொட்டேசுடுந்தீப்பிணிபழலுமிக்கதையார
முதத்திலோர், தினையளவுபெற்றுளுடன்றீருமேற்சிவன்முத்தியமுத்தி
சேர்வரே. [௧௦]

பிறவிசாகரநீந்தச்சிவகதைப்பிறங்குநாவாய்தனைப்பெறவேண்டுமே,
யறவனார்கதைபோமறையாகமமரும்புராணங்களுக்குமரும்பொருள், க
றைமிடற்றெம்பிரான்சரிதஞ்சொலுங்காதையின்பெருமைக் கொருமட்
டிலை, யிறைவனார்தம்மிலிங்கப்பெருமையையின்னதென்றெவர்சொல்ல
வல்லார்களே. [௧௧]

உம்பர்போற்றுஞ்சிவக்குறிமேன்மைதா னோதுவார்மூன்றுலகினுமி
ல்லையா, லம்பிகைக்குப்பதியிலிங்கத்தின்சிரகத்தில்வாங்கிலடங்குதலில்
லையே, வெம்புமந்தகற்கந்தகன்மேன்மையைவேதம்யாவும்விளம்பவொ
ண்ணுதே, விம்பருற்றசனங்களெல்லாமுய்யவிலிங்கரூபமதாயினனெ
ம்பிரான். (௧௨)

அந்தலிங்கத்திற்பூசனையாற்றிடிலகத்துவந்தருள்செய்வனெம்மா
தியே, முந்துமங்களரூபமதாகுமான்மொழியுமங்களம்யாவுந் தருமென்
றே, நந்துநாகர்கணுதியர்பூசிப்பார்நானுமப்படிபூசனைசெய்வனு,லெந்தை
யாரிலிங்கத்திற்சிறந்துளதினியதின்மதைமாலிங்கமென்பவே. (௧௩)

வாணன்பூசைமகாலிங்கத்தினில்வாய்த்தகூவிளநற்றளிர்மற்றுள
காணுமபச்சிலையுங்கொடுபத்தியாற்காலையிற்றிருநீறொடுகண்டிகை
பூணுமன்பிற்புனைந்தேயருச்சனைபுரிகுவோனவன்புண்ணியமூர்த்திதன்
பேணுநல்லருள்பெற்றிமையோரொடெம்பெருகுமாதவருந்தொழும்பெற்
றியோன். (௧௪)

நமனுமாங்கவன்றன்னைவருத்திடானரையுமூப்புமின்றிக்கதிசேர்கு
வா, னமருநற்றருமங்களியற்றியேயமரர்மாதர்தம்போகங்கணச்சுதல், க
மையிலாதசுவானப்புணர்ச்சியைக்காதலித்திடுங்காட்சியதாகுமா,லுமை
யொர்பாகனிலிங்கார்ச்சனைசெய்வோனொழிவிலாமுத்தி வீட்டின்பஞ்சே
ர்வனே. (௧௫)

நல்லசிந்தையுடையோன்சிவார்ச்சனைநாளுநாளு நயப்புறுவான்பவ
த், தல்லல்கூருமுளத்தேதான்விரும்புறுனவற்றிலோர் கதையுண்டதுகே
ட்டியான், மல்லல்கூர்விந்தமால்வரைச்சாரலின்வாழும்வேந்தனொருவன்

வடிவுளோ, னெல்லுடலுமரிவையர்ப்புல்லுவோனெல்லையில்பவத்தல்லல்செயிச்சையான். (௧௬)

இளையகாமமயக்கத்திளமைபோயிறுசேர்தருமூப்பும்வந்தெய்திற்றுலையபோதுமிளநலமாதராராசைபெற்கொண்டுவிட்டிலன்மேவுதுறவையுந்தன்மனையன்றியின்மாட்சியிற்சாருமுல்லைநல்லார்கற்பழித்தனன், வினையினால்வருந்தீப்பிணிமேலிடவிரணமுற்றமெய்வேதனையுற்றுளான்.

மரணகாலமும்வந்ததடையலார்வந்தடைந்துவளைத்தனர்நாட்டுளோ, ரரணமுற்றவெங்கானத்துப்போயினாரரசன்றனுமவணடைந்தானரோ, கிரணமுற்றவெங்கோடையின்வெப்பமுங்கெட்டிலாப்பசித்தீக்கிளர்வெப்பமும், விரணமுற்றவுடற்பிணிவெப்பமும்வெதுப்பநொந்துவிழுந்துபுலம்புவான். (௧௮)

மனையுமாதரும்பானையுஞ்சேனையுமந்திரத்தவருந்தந்திரத்தரும், வினைசெய்தாசியர்தாசர்கள்கூட்டமுமெத்தைகட்டிலின் மேல்விளையாட்டமுங்; கனருமப்பசுக்கோட்டமுமத்திரர்காவலாளர்களுட்டமுமோடையும், புனையுமாடையுமாபரணங்களும்போனவெங்கென்றுநின்றுபொருமுவான். (௧௯)

பசிக்குந்தாகந்தனக்குந்தணிபவேபரிவினன்னர்புனறருவாரின்றே, பொசிப்புத்தானிலைவேளைக்குதவவேபொருள்கடேடிப் புதைத்தவம்போபவே, யசைக்குமாடைகழித்துப்புனைந்திடவாடைவேறொன்றுதானுமற்றெனரோ, விசைக்குமித்துயரெய்தியுமாதராரின்பநாடுமென்னெஞ்சென்றிரங்குவான். (௨௦]

இனிபிறந்தொழிந்தேகுதலின்றியேயெவ்வழித்துறற்கென்றென்றுநோக்குவான், றனியமன்புரம்போம்வழிதன்னிலேசார்திருப்பின்முள்வாணிரையென்பரே, பனைகள்போனெடும்பாம்புகள்வாயையங்காந்துபார்த்துப்பகைத்திடுமென்பரே, முனைகள்சேரிருப்பாணிமுனைகளுமுதிராக்காய்ந்தநெருப்பெழுமென்பரே. [௨௧]

அறுத்திடும்பிண்டிபாலமநேகமாமசிகளோடும்வசிகளநேகமாம், வறுத்துக்கொட்டுமணற்பரப்பாநெருப்பாற்றுடன்மயிர்ப்பாலமுண்டாமைபோற், கறுத்திடுமிருண்மூடும்வழியுண்டாங்கடினமங்கதிலெப்படிசெல்குவே, னொறுத்துக்காலபடாரடித்திப்பரேயுறவுசேர்நண்பருமொழிந்தார்களே. [௨௨]

ஐயகோவினியென்செய்குவேன்கெட்டேனென்னையேயப்பனேயென்றரற்றியே, வையமாண்டிடுமன்னவன்முட்செறிவனமதிற்புகுந்தேயுற்றுமாண்டனன், மெய்யிலுற்றவிரணத்தூர்க்கந்தத்தால்மின்னனார்களும்விட்டொழிந்தேகினர், தையல்பாகனிலிங்கசமீபத்திற்றழுவுங்காலவன்மேல்வந்துசார்ந்ததே. [௨௩]

மற்றவன்றனைச்சற்றுந்தயவிலாமறலிதூதர்வளைந்துபிடித்தன,வெற்றுமெற்றுமெனக்கசைபாற்கழுத்திறுகக்கட்டிநெருப்புந்தழனிறை,வுற்றநீண்டவழிதனிற்கொண்டுபோயுரத்திற்குத்தியடித்தேபடாவிவன்,நற்றபேர்களைத்துன்மந்திரியுடன்கலங்கப்பேசியகள்வனென்றேசுவார்.

எரிந்தபாறையிற்றள்ளிப்புரட்டினர்யமனுங்காணவிவன்முறையோவெனத், தெரிந்தசெய்தியிற்காலனுநோய்களுஞ்சேணிலோடித்திகைத்தனவென்பவே,பரிந்திருமலர்பார்த்தற்புதத்தினுற்பக்கநின்றிடுஞ்சித்திரகுத்தரை,வருந்துமிங்கிவன்றன்செயிருவினைவகைகள்சொல்லுதிரென்னவகுக்கின்றார். [உரு]

ஈங்கிவன்சனனத்துற்றவாயுவினெல்லைகாறுமியற்றியபாவங்க,ளோங்குமெங்கணக்கேட்டிலடங்குமோ வோர்கணத்திவன்செய்தபவத்திற்கே,தேங்குதீநரகிற்கற்பகாலங்கள்செல்லவேதனைசேரினுந்தீருமோ, பாங்கிலாவிந்தப்பாவியைக்கண்களாற்பார்த்திடப்பெற்றுளோமதிபாவமே.

இந்தப்பாவிசெய்தீவினைதன்னையேயெண்ணிப்பார்க்கினம்மாயுவுநட்டமே,வந்துறிப்படிபாவிகள்செய்தியேவகுப்புத்தானமக்கஞ்செழுத்துன்னவுஞ்,சந்த்ரசேகரன்பூசையியற்றவுஞ்சாற்றுமோர்பொழுதின்றிமுடிந்ததே,நந்தமக்கிந்தவாறிசையுந்தொழிலுயகனமைப்பாற்றள்ளமுற்றுமோ.

இவன்செய்தீவினையானரகத்துறும்யாதனைத்துன்பம்யாவர்கணிக்குவார், சிவன்செயலினமக்குமிச்செய்தியேசேர்வதாற்செய்துதிருவதேதிண்ணம், பவந்தொறுஞ்செயும்பாவிகள்பாவத்தைப்பன்னிப்பன்னிநந்நாவுங்கறுத்ததே, யுவந்துநற்சிவபூசைசற்றும்பெறவுற்றிலோமித்தொழில்போதும்போதுமே. [உஅ]

இதினமக்குச்சுகமொன்றுமில்லையாலீசன்பூசையில்லாமலிருந்திடு, மதிகமாமதிகாரத்தின்பாவத்தாலாவதென்னிதைத்தான்சுட வேண்டுமாற், பொதியிருளில்லுயிர்கள்செய்பாவமேபுந்தியெண்ணிநங்காலங்கள்போக்கினே, மதியணிந்தவன்பூசையில்லாதவன்வாழுநாளின்மரணநன்றுமரோ. (உகூ)

நாதன்பூசைசெய்பான்புவிவாழ்நலநண்ணினுநரகத்துயாருமே,யாதலாலவன்றன்னையும்வாழ்வையுமங்கிமீதிட்டெரிப்பதுநல்லதே,யோதுசீவனேடெற்றபிணமவனுவனிடத்திற்றபைநாமுறவொணு, வேதநாயகன்பூசைசெய்யாதன்றேவிண்ணுளோரும்விதனமுற்றார்களே. (௩௦)

தாதையாகுஞ்சிவன்றனைப்பூசியாத்தறுகணுளனைத்தண்டனைசெய்தற்கா,யோதுகின்றரவுரவமாதியாயுற்றநாலெழுகோடியுண்டாக்கினு,ரீதறிந்துமரன்றனையேத்திடாதித்தொழில்செய்வதென்னைக் கொழிகுவோ,நீதனேயென்றுசித்திரகுத்தர்தாநினைந்துருகிப சினேடுகூறினர்.

**பத்தாவது சித்திரகுத்தர்பிரலாபச்சருக்கமுற்றிற்று.**

ஆகத்திருவிருத்தம்-௩௦௮.

# விந்தமன்னவன் சருக்கம்.



சூதுசூதெனப்புடைத்தசொற்கமாதர்சூழ்ந்திடிற்றுன்பமென்றறி
ந்திருந்துந்தோய்வதென்னநேயமோ, கோதிலாதமாதவக்குழாத்தினித்
தியமேகுறுகிநெஞ்சமேகரைந்துநெக்குநெக்கல்கொண்டுளே, யாதி
ாதவத்தினர்க்களிக்குமுக்கணுபகனருட்கடைக்கணேக்கின் மிக்கவா
யினூற்றுறக்கரைந்தோதியோதியஞ்செழுத்தையுன்னிமேனிபுளகமா
பாய்விலாதிருத்திநேயமுள்ளுறக்குலாவவே. (க)

தேக்குகின்றஞானயாக்னவற்கியோகிசெப்புவான்சித்ரகுத்ரர்வாய்
மகேட்டதென்றிசைக்குநாயகன், வாக்குநெஞ்சமுங்குலைந்துகண்க
ளிரின்மல்கவே மாற்றமோதுவன்முனஞ்செய்வல்வினைத்தொடக்கினு,
ாக்குமிந்தநரகயாதனைக்கடைந்துளோர்தமை யாக்கினைக்குண்மிக்க
தார்தொழிற்கமைந்துளோமரோ, நூக்கினுக்கும்வாக்கினுக்குநோக்
கினுக்குமெட்டொணுத் தொல்லையோனமக்களித்ததொல்லைநீக்கவல்
லமோ. (உ)

முக்கைதகாமியற்றிடுந்தவக்குறையிதல்லவோமுதிருமிந்தநரகலோக
ரசுசெய்யமூண்டதா, லெந்தையார்தமைப்பணிந்திலிங்கபூசைசிந்தை
பாலினிதுசெய்திடாதுவீணிலாயுள்சென்றதென்செய்கோம், புந்தியுற்ற
ரன்பதந்திடம்பெறப்பிடித்துநாம்பூசைசெய்யினேசமுற்றபுத்தி முத்திசி
த்தியா, நந்திபூசையின்றியின்பம்வேண்டளிம்பவித்தினுனறியதேம்பழ
ங்கள்கொள்ளநச்சுமிச்சையொக்குமே. (ங)

சிவன்முத்திபெற்றிடுந்திடங்கொள்சிந்தையோர்க்கலாற்றேவதேவ
னர்ச்சனைக்கண்மேவுசிந்தைசெல்லுமோ, வாவலுற்றுநாமியற்றிடாது
வீணினுளெலாமவத்தமாக்கினேஞ்சிவத்தையன் பினெஞ்சமூத்திலோ
ம், பாவைபங்கர்பூசையாற்றியென்றுமேயழிந்திடாப்பதங்கள்பெற்றஞா
னயோகர்பாதமேவணங்குவோ, மோவிலாதவிறைவர்பூசைசனனகோடி
யிற்றவமுனூற்றிலாநமக்கெவ்வாறுறுங்கொல்சித்ரகுத்தரே. [ச]

பாவசோரர்கொண்டுபோனவாயுள்மீளவாவெனப்பாறையிற்சிரம்பு
டைத்தழுங்கினுலுமீளுமோ, மேவுதந்தைதாயெனக்குவேதநாதநீயலா
ல்வேறிலைக்கடைக்கணுற்றதயைபளிக்கவேண்டுமாற், றேவநாதவுனது
பூசைதன்னிலென்றநெஞ்சகஞ் சேரவைக்கிலிதிலடுத்தசேதமேதுமில்
லையே, யாவலாகவிவைபுகன்றுகேட்பதென்னையென்றிபேலரியபாவவி
னையொழிந்துன்னுரியபூசையாற்றவே. [ரு]

இறைவனின்றனடிப்பசேவைசெய்திடாதுபாவமேயியற்றுமினர்தரி
சனத்தையேயெனக்களித்துளா,புனையுமிந்நரவுரவாதிநரகினுற்றுளோ
ரெலாமுனதுபூசைதரிசனத்தியானமுற்றதில்லையே, மறைகள்சொல்லு
நுமறைதபிலிங்கபூசைதரிசன மனத்தழுத்திநோர்கள்அம்பொ

ய்வமே, நிறைமலங்கொள்புழுவுறைந்தகுழியில்வீழ்ந்தழுந்துவார் திருப ரென்றுபுவிபுரந்துநினைவணங்கிலார்களே. (௬)

இவர்கள்வில்வபத்திரத்திலிங்கபூசைபாற்றிலாரெரிகொளுங் கதைப் புடைப்பின்முடிதகர்ந்திரங்குவா, ரவர்கள்பூசையின்றியேயருந்துகின்ற வினையினு லங்கியின்குலகக்குள்வெந்தழுங்கிமங்குவார்களா, லுவர்க ளெம்பிரானைமேபழித்துரைத்ததீமையா லுறுசுவாலையாணிநாவிலுள்ள ழுந்தவுலைகுவார், தவர்களானசிவபிரான்மெய்யன்பரின்புறச்செயார் ச லமலக்குழிகளுள்வீழ்ந்துதாழ்ந்தழுங்குவார்களே. (௭)

பூதிதூளனத்தினேடுபுண்டரம்புனைந்திலார் புகுந்திருப்புமூக்குழு ங்கொடிப்புள்குற்றவிகுவா, ராதிகண்டிமாலைபூண்டிலாதபொய்யர் நெப்பெலா மனல்கொள்பிண்டிபாலமுற்றடித்திடத்துடித்துளார், சோ திபாட்டுமந்தனத்தையுட்கொளாதபேர்முழுச் சுமடர்தாங்கொழித்தசு க்கிலக்குழிக்குளாழ்குவார், நீதிநீபிடாதசெற்றிமாதமேராக்கூடினார்நெரு ப்புறும்பொருப்பிலுற்றுநின்றுவெந்துநொந்துளார். (அ)

கலமிமாதரிளமையின்பமிறைவனற்பிதஞ்செயார் கரும்பொனுற்ற கம்பமோடுகட்டிவெற்றவெப்ததுளா, ரிலகுசைவசீலமேன்மையெய்தி லார்கண்மலசல மெய்துவெப்பவாரியிற்கிடந்துளார்கடந்திலா, ரலதி ன் ர்களாலயங்கள்கண்டபோதுதடிகள்போ லவனிமேல்வணங்கிலார் கள்சிவபுராணம்வினவலார், குலவுகின்றசெவியிரண்டுமேடியினேடுறுத்தி டக்கொதித்திடுந்தழற்கொள்பாறையிற்கிடந்துகுமிறுவார். [௯]

பாவிகாளேபோசிவன்புராணகாதைதன்னையேபழித்துளீர் சிவன்ற னக்கநற்சனைப்பல்பண்டமு, மேவிமேபகவர்ந்துகொண்டருந்தனிரிவ்வி னை ரிலக் வெப்பதிப்படர்ந்திடுங்கடற்குள்வீழ்ந்தழுந்துவீ, ராவிபோ கும்வேளையேபனுமேனிபூதிபூசிலீ ரரிபதாமிலிங்கபூசைதரிசனஞ்செய்தி லீர், கோவின்மேவுருத்ரகன்னிமின்னனாரை யன்னையாக்குறித்திலிர் பொருட்கொடுத்தனர்கலங்கள்கொண்டுளீர். [௧௦]

அந்தமாதர்மீதுவைத்தபுந்திதன்னையெந்தையா ரடித்தலத்தில் வைத்திலீரடுத்ததுங்கொடுத்திலீர், வந்திடும்விழாச்சிறப்பிலாதியாரை நாடிலீர்மாதராடல் பாடறன்னின்மனம்விரும்பிமேபாடினீ ரிந்தவாறுசெ ய்புநீநோகமிட்டுருக்கிடுமிருங் குழம்பின்மூழ்குவீரெனப்பகர்ந்தகூற் றுவன், முனதுநின்றசித்ரகுத்தர்தம்மைநோக்கிமொழிகுவான்மொழிசிவ த்துரோகர்பாடுபார்க்கமுற்றுறுதென்றே. [௧௧]

சம்புவின்றனருளினீதுகண்டுநாம்பொறுத்துளோஞ் சாற்றிலெம்ம னேர்களாற்பொறுக்குமாறுதானுண்டோ, வெம்புமிந்தவாழ்க்கைநம்மா ல்விட்டொழிந்நல்கூடுமோ விமலர்பூசைசெய்வதற்குவேறுபோதுகண் டிலோ. மெம்பிரானிமாசலப்பெண்மேவுபாகர்கயிலையி லெய்திமேத்துத

குவாய்க்குமோவெமக்குராங்கதே, யம்புபாசனத்தர்போற்றுமாதிபாரைநெஞ்சினி லாதரித்தபூசையாற்றிறலருட்கண்வைப்பரே. (௧௨)

என்றுசித்ரகுத்தரோடுதென்றிசைக்குநாயக னினைந்தழுங்கியேபுலம்புபோதிலம்பொன்மானமேற், கொன்றைதுன்றுமௌலி யண்ணலார்கணங்கள்குறுகினர் கூற்றுவன்பயந்தொழுதெதிர்ந்துசென்றிறைஞ்சின, னன்றுவந்தசிவகணங்கண்மனைநோக்கிமொழிகுவா ரடாபடாதபாடுபட்டதின்றுதானயர்த்திபோ, துன்றுபூதநாதர்வந்துனைப்பிடித்தடர்த்ததுந் தோள்களோடுதோள்பொருந்தவேவரிந்தொடித்ததும். (௧௩)

தாளினாலுதைத்ததுந்துடித்துளம்பதைத்ததுஞ்சக்ரவாளமீதுமுழைஞ்சுதனினுனைப்புதைத்ததும், காளதாயவென்றுகொண்டுநீமறந்த துண்டோ நன்றுநன்றுனக்குநாணமென்பதொன்றுமில்லையால, வாளினாலுடம்பரிந்துசென்னிதாழநாற்றிசை மாறுகொண்டடித்தபுண்கண்மாறிநின்றவில்லைபாற், காளகண்டர்தங்கணங்களென்றுசொன்னபுத்தியைக் கருத்திருத்திலாய்கொலென்னகவலையிற்கலங்கினன். (௧௪)

தருமநீபுரிந்தகுற்றமேவளமென்றுபுகலுவோனுஞ் சம்புபத்தர்தமையடுக்கவென்றசொல்லயர்த்தியாற், கருமமன்றுனக்குநாசகாலம்வா ததாகுமாற் காளகண்டர்தொண்டரிற்பிழைத்தல்கண்டுநின்னையே, யுருமெனக்கதைத்திறத்தினாலடித்துவீழவேயுதைத்திடப் பணித்துளாரிதுண்மையுண்மையாகுமா, லிருமையுந்தருஞ்சிவன்றனன்பரைப்பிழைத்துளாயெந்தவாறுநீபிழைத்திநரகுனக்கெனச்சொனார். (௧௫)

மறலிபேரன்றனன்பர்தமைவணங்கியுய்தியான் பாரிழைத்திடேயலுழைத்திநரகபாதனைக்குளென், றிறையவன்கணங்கள்கூறநடுவனுநடுங்கியே யானிழைத்தகுற்றமொன்றுமில்லையில்லையென்றுவீழ்ந், தறைகழற்சரண்சரணமென்பணிந்துகனகசிங் காசனத்திருத்தியாற்றுபூசைசெய்துகூறுவான், கறைமிடற்றனடியருக்கியான்மனத்தில்வாக்கினாற் காயத்தாற்பிழைத்திலேனும்பாதத்தாணைநானென்பான். (௧௬)

அறிவிலோர்கள்பரமனார்தம்படியருக்கோர்பிழைசெய்தா லவர்கடங்குலத்தினோடுகெடுவரென்பதறிகுவே, னிறையவன்பதத்திலன்பரெனதுதந்தைதாய்கயிற் றென்னுடன்பிறந்துளோர்கடுன்னுகின்றகிளைஞரே, குறைவிலாதநிதியுமற்றுமுள்ளயாவுமவர்களென் குலத்திலுற்றதெய்வநங்கள்குறைபவர்க்கிழைப்பனோ, கறைமிடற்றர்தாளிதங்கோர்சரியதாகுமையன்மீர் காதலன்பர்சிவனெனக்கருத்தில்வைப்பனடியனே. (௧௭)

எனவுதூதரண்ணலார்தம்படியருற்றவிடவயி னெட்டிப்பாரப்பதில்லையானிட்டசட்டமல்லவோ, தனதனுற்றதோழனன்பர்தாளிலுற்றதூள்களென்றலையி லுற்றிடப்படிந்துதாசனென்றிறைஞ்சுமேயன்மனதுதானுமவர்கள்பூசைசெய்திடாதபர்க்குநோயன்னிலா ரியான்செய்குற்றமுற்றுமேபொறுப்பராற், புனிதமுற்றரசமிருக்கவேயவைபயார்விருப்புவார் பொறியிலார்களிறைவர்பத்திபுரிகிலாதயர்ப்பரே. (௧௮)

பத்தியண்ணல்பாலுறூர்கணரகயாதனைக்குளே பட்டொழிந்தசேடமானபன்றியோனியுறுவரென், றெத்திசைக்குமேலதானதென்றிசைக்குநாயக னிசைத்தவாய்மைகேட்டுவெந்தவிறைவர்தங்கணுதியர், தத்துவத்தின்ஞானமெய்துமாறுகூறுவார்களாற் றருமகேளுனக்குமிக்கசம்புபத்தியுள்ளதா, னித்தியஞ்சிவத்தியானமேபுரிந்துகருமமே நீதெரிந்துளாயுனக்குநிகரொருத்தரில்லையே. (கக)

அன்னமேதனுமுன்கணங்கள்விந்தமால்வரைப்புறத் தடுத்தராசனைப்பிடித்தடர்த்ததுட்டனிவனெனத், துன்னருந்தழற்கொடியநெறியினிற்கொடேகினர் சோதியாதிமாதுசன்னிதானமுற்றதூய்மையான், மன்னவன்றனைக்கொணர்ந்தபோதுகண்டுவெள்ளிமால் வரையினம்பியோடுசெம்பொன்வரையினங்கைமுறுவலித், தின்னவாய்மைகூறினனும்மிறையிலிங்கமீதிலே யெய்துகால்படர்ந்துளானையின்றுகாலதூதரே. ()

வந்துசுற்றினர்கள்வீசுபாசமங்கவன்றன்மெய் வரிந்துசுற்றினர்கடியெரிந்தவட்டைமீதிலே, யுந்தியுந்தியேயிழுத்தடித்துளார்துடித்துளானேதுகின்றஞாயமென்னஞாயமீதுரைத்திடீ, ரிந்தயாதனைப்படற்கிவன்புரிந்தபாவமே தீதுகண்டபோதெனெஞ்சுபக்குவிட்டதென்சொல்கேன் முந்துகின்றபுதுமையீதுபுதுமைமானிடத்தர்தம் முடையுடற்சுமப்பதொத்ததுன்பம்யாதுமொழியிலே. (உக)

தாயர்தம்வயிற்றடுத்தபோதிலுற்றயாதனை சாற்றொணாதுபூமிமீதுசரதனனபோதிலே, மேயதுன்பம்வளருமந்தவேளையுற்றநோயுடல் வீடுகின்றபோதிலெய்தும்விதனமோவளக்கொணா, வாயதந்தவுடலெரிந்தசுடலைதங்குதீயிலிட்டடலையாக வேண்டுமிந்தவடவிமன்னன்மெத்தவுங், காயமுறறநோயன்வெய்யதீயடுத்தநெறியையே காணுறப்பயங்கொள்வான்மெய்கருணைசெய்யவேண்டுமே. (உஉ)

புரவலன்னிவன்செய்பாவமென்னைதீக்கடற்குளே புகுந்ததுன்பமோசனம்பொருந்துகாலமென்றுதான், பரவும்வெய்யநரகதுன்பமையவென்படைத்துளாய் பரமநீயருட்கடற்பரப்புசெல்வனல்லையோ, விரவுசென்மகோடிதோறுமரியதன்மமுற்றுளோர் மெய்யநின்னிலிங்கபூசைசெய்யவேவிரும்புவா, ருரவுநாமமரியகாதையுரைசெய்யார்களல்லவோவுறுவரிந்தநரகமென்னவுமையெம்மானோடுரைசெய்தாள். [உரு]

பதினோராவது விந்தமன்னவன்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-ருஉஅ.



# சிவகணவுத்தரச்சருக்கம்

வேறு.

நறைபணியுட்புயற்குழலார்மயற்குழலார்நரைதிரைநோய்நலியகில்லா, நிறைமைபெறுங்கணங்கடமக்கிறைபவராய்க்கயிலையில்வீற்றிருப்பரன்றே, பிறையணியுஞ்சடைமுடியானிமயவரைப் பிடிமருவும்பெரியதோளான், மறைபரவுஞ்சேவடியானடியவர்க்கு மடியவராம்வண்மையோரே. (௧)

அருள்சேர்யாக்கினவற்கிமாமுனிவன்பகர்ந்திடுவானம்மைகூறும், பொருள்சேருந்தெள்ளமுதத்தாரைநுகர்ந்தேமகிழும்புண்யமூர்த்தி,தெருள்சேருமவன்மலர்க்கைபிடித்துநகைத் துரைத்திடுவான்றெரிவைகேட்டி, மருள்சேரும்பவம்புரிந்தோன்படுந்துயரோர் தருமத்தான்மாற்றலாமோ. (௨)

அம்புவியிற்பாதகங்கடன்னையெண்ணினு மெண்ணலாகுமின்றேன், வெம்பவேபுரிபவத்தையாவர்தொகைசொல்லவல்லார்வெள்ளைநீறு, கம்பவுடறனிற்புனையான்வாணலிங்கந்தனைநினையான்கண்டுமில்லான் வம்பவிழ்வில்வஞ்சலத்தாற்பூசியானெய்விளக்கின்மாலையேற்றான். (௩)

நெய்யொடுமன்னந்தன்னைநிவேதனஞ்செய்யானதனைநேயமாய்நம், முய்யுமன்பர்தமக்குதவானமதுசிவபுண்ணியங்களொன்றுமாற்றான், செய்யுறுநல்வினையறியானிவன்றொழிலேதெனிற்றினமுந்தெரிவைநல்லார், மையலுறுமயக்கத்தாலவர்முகம்பார்த்தி தங்கள்செய்துமருவல்செய்வான். [௪]

ஆலயங்கள்புகுந்துதரிசித்தறியான்சிவகதைகேட்டறிந்துமில்லான்
சீலமுறுஞ்சைவர்குலத்துதித்திலான்வில்வநிழல்சேர்ந்துமில்லான்
சாலமணிகன்னிகைக்கால்கண்மணியின்பரிசமுமேசார்ந்துமில்லா
னேலுறுமஞ்செழுத்துறும்பேச்சியம்பிலானன்பர்நெறிக்கெய்திலானால்.

மாதருடன்கூதாடியவரல்குற்றடத்தாடிமகிழ்ச்சியாடிக்
காதலுடன்களியாட்டம்புரிந்துதிரிந்தவர்க்குமொருகதியுண்டாமோ
பாதகனுமிவனரகவேதனையெந்நாளொழிவான்பாவையேநம்
மோதலுறுஞ்சிவதருமம்புரிந்தவரேயிகபரம்பெற்றுய்குவாரே. (௬)

நங்கைகேணமதிலிங்கபூசைசெய்துகதிபெறவேநாடார்மாதர்
கொங்கைசேர்தரும்பாவம்புரிந்தெரியுநரகுறுவார்கொடியமாந்தர்
தங்குவிசுவேசசந்த்ரசேகரமகேசமுக்கட்டலைவவெற்பின்
மங்கைபங்கசங்கரவென்றொருநாமமிவனுளும்வழுத்திலானால். (௭)

ஆனதனாலியமபுரத்தக்கினிகுண்டத்தில்விழுந்தழுந்துகின்றான்
யானினியாம்மதிலிங்கபூசைசெய்பான்மறையவன்றன்கற்பகால

மூனமூறுநரகமூழ்ந்தினாளிசூகரங்கரமாமுருவமெய்து
மீனயோனியிற்பிறப்பனமனுமவற்கரியதண்டமியற்றுவானே. [அ]

பொருந்துசருமன்பாவம்புரிந்தவகையறிந்துதண்டம்புரிதறன்றற்
றருந்தருமராசனென்றேமறலிதனக்கொருபெயர்தான்சார்ந்ததன்றே
யருந்தருமனதிகோரனெனவிருந்துநம்மடியார்வரவேகண்டாற்
றிருந்தவெதிர்சென்றிறைஞ்சிச்சாந்தனுய்வந்தனைகள்செய்வனன்றே.

அணுவேனுஞ்சிவதருமம்புரிந்தோரையணுகானன்பில்லார்பூதி
மணிபூணார்தமக்கதிகோரகாலாக்கினியாய்வதைப்பனன்றே
பணிபூணுநமைப்பணிவோர்மனைமாடுதருவொடுபல்லுயிர்கள்யாவுங்
கணிகெனதிரேகண்டவுடனெதிர்ந்திறைஞ்சிப்பூசனைகள்கருதிச்செய்வான்.

தருமலிங்கபூசைசெய்வோன்மனைகோயிலெனவிண்ணோர்தவத்தோர் சூழ்வா,ருரிமைபெறுந்தோல்வினைஞரெனுநந்நாமத்தினிலன்புடையோ ரென்றாற், பெருமைபெறுமறலிபவர்தமைப்பெரியோரெனப்பூசைபெ ருகச்செய்வா, னருமறையோனென்னினுநம்பத்தியில்லான்றனைப்புலை யனாக்கொள்வானே. (கக)

பன்னுபத்தியில்லாதான்றேவனாயினுங்கும்பிபாகமென்னுந்
துன்னரும்வெந்நரகிலுய்த்துச்சூகரநாயோனியினுஞ்சூழச்செய்வான்
மின்னனையாய்நந்நாமந்திரிபுராந்தகவிசுவநாததேவ
வுன்னருமன்மததகனவந்தகாந்தகவுமாசகிதநாதா. [கஉ]

நெற்றிநயனத்தகணநாதபவபற்கவரநீலகண்ட
வெற்றிவிடையாய்சம்போநருமதாலிங்கவில்வப்பிரியசூலி
கற்றைவார்சடைய¶கவாத்தீசகருணாலயகங்காளநாதா
நற்றவமானேந்துகையாயிந்திரைவந்திதவிபுவேஞானமூர்த்தி. [கங]

காலகாலேசமிருத்திஞ்செயஞானனந்தக்கட்டியேநற்
சாலவுயர்சவுபாக்யமூலமேவியோமகேசாவீமேச
சூலபாணிபசிவனேவீரேசமென்றுமேதாத்திரஞ்செய்வோரை
யேலவெதிர்கொண்டுபததூளிசிரங்கொண்டுகிர்த்தமிடுவனன்றே. [கச]

இவர்களேபரமசிவனெனத்தருமன்பூசிப்பானிமயமானே
புவியின்மீதெவரேனும்பூதியுங்கண்டிகைவடமும்புனைந்துநீங்காக்
கவசமெனநமதுநாமந்தனைச்சொற்றிடுமவரேகயிலைநண்ணித்
தவமேவுங்கணங்களுடனமதுபதாம்புயத்தூளிற்சார்வாரன்றே. [கரு]

அம்புவியிலெவனேனுமரணகாலத்தினமதாலயத்திற்
பம்பிவருங்காற்றேனும்படப்பெற்றானிரையதுன்பம்படப்பெறானு
னம்பிரிபபூசைவிசுவாசமில்லாரடையாளநம்பத்தல்செய்யார்
வெம்பிநாய்கரம்பன்றியர்கோழியுருவினராய்மேவுவாரே. [கசா]

¶ கவாத்தீசன்-பிரமன்பூசிக்கு மெய்ம்மையுடைய கடவுள்.

சுரவிதருவினுக்குதித்தாரேனுமேசுகம்பொருந்தார்துக்கஞ்சேர்வார்
பரவிநமைப்பணியாதபனவனுமேயிகபரத்தின்பயன்பெறுமல்
விரவுமிழிபிறப்புறுவன்பூசையில்லான்றதியன்னமேவினுலுர்
திருவிசியங்கவனுணவுமலப்புழுவைநுகர்வதெனச்செப்பலாமே. [௧௭]

ஆடகமால்வரையணங்கேபூதிகண்டியணிந்திடுநம்மடியார்தங்க
டோடொழுதிலாரிடத்தேநீகருணைபுரிவதுவுந்தகுதியன்றே
நாடதனினமைநிந்தைபுரிபவன்யாரெனில்வேதநவிலுகின்ற
தேடருமங்கியினீறுங்கண்டிமாலையும்புனையாச்சிதடன்றுனே. [௧௮]

நமதுபத்தியிகழ்ந்தவனைநரகுறுமேவானிகருணைநல்கவேண்டா
விமலசைவநெறிபுகுதான்மறையவனுகிலுநரகில்வீழ்தலின்னண
மமலைநந்தங்கையெடுத்துச்சத்திபஞ்சத்தியமீதென்றேயறைகின்றேமா
லிமயமலைப்பெண்ணரசேயெமதுநருமதையிலிங்கமிருக்கத்தானே. [ ]

அன்னவதிசயவிலிங்கந்தனைக்காணக்கதைகேட்கவடியிற்றொழச்
சன்னிதியிற்சூழ்போதவருச்சிக்கப்புகழமணந்தனையேகொள்ளப்
பன்னருங்கண்காதுசென்னிகால்கைவாய்மூக்கிவைகள்படைத்துளாரா
லின்னவைகொண்டெம்மைவழிபடநினையானரகுறுதற்கிசைப்பதேயோ.

கவுரிகேளெழுந்திருக்கையுயர்த்தியுண்மையாகவின்னுங்கழறுகின்றே
முவமையில்வேதங்களெலாமுரைக்குமுத்திநெறியாகுமுபாயந்தன்னைச்
சிவலிங்கபூசையன்றிப்பிறிதுவேறில்லையென்றுஞ்செய்யநீற்றைக்
கவசமாக்கண்மணியைத்தரிப்பதுவேநெறியென்றுகழறுமன்றே. [உ௧]

இறந்திடுமெப்போதெனினுமெவனேனும்பூதியங்கமெங்குமபூசி,
யறந்தருகண்மணிபணிந்தேயெமதுநாமமுங்கேட்கவறையப்பெற்றோன்
பிறந்திறத்தலொழிந்தெமக்குத்தோழனுமாய்க் கயிலையுறப்பெறுவனன்
றே, சிறந்திடுமிங்கிதுவுண்மையுண்மையென்றேயுமைக்கிறைவன்செப்
பினனே. [உ௨]

பன்னிரண்டாவது சிவகணவுத்தரச்சருக்கமுற்றிற்று.
ஆகத்திருவிருத்தம்-௬௫௦.



பதின்மூன்றாவது,

## ஞானவாலனுற்பத்திச்சருக்கம்.



வேறு.

பனகசயனனுமலரினுறைதருபழையசதுர்மறைமுனிவனுஞ்
சனகன்முதலியதவருமலர்கொடுசரணம்வழிபடுதம்பிரா
னனகனதிசயனமலனதிகுணனபயனறிவினனமரர்கோன்
கனகசபையினினடனமிடுமிருகமலமலரடிபணிகுவாம். (௧)

அறிவின்மிகுதவமுனிவன்யாக்கினவற்கிவேதியனறைகுவா
னறியவமுதிசையுததியனவுரைநாயகன்சொலநாயகி
பிறியவதிசயமுடனெழுந்திருதாள்பிடிந்தனள்பேசுவாண்
மறிகொள்கரதலசந்த்ரசேகரவானநாயகசங்கரா. (உ)

அமலவுனதுரையெனதுசெவிநுகரமுதரசமெனவானதால்
விமலகுழையணிமலரினொடுமணிமிக்கபூடணமொத்தவா
லுமதுசின கரமதனிலுறுகுறியூடுதவழ்தருதென்றருன்
யமரமுரல்வனமதனிலுயிர்விடுமரசனுடலிடைபட்டதே. (௩)

மேனியணிதருபூதிமணமொடும்வீசுமவளியவன்மெய்யுற
வானபொழுதினின்மேயகொடுவினையாயதொழிவுறுமல்லவோ
வீனமுறுமபராதவினைசெயிலிறைவவுனைநினைகுவர்களே
லூனமொழிதரஞானமருணிதியுததியுனையலதில்லையே. (௪)

அமரர்முனிவருமடவியுறுபொடியணுவொருடல்படிலதுகொடே
சமையுமுறுவினையொழியுமெனுமுரைசகலமறைகளுமறையுமே
யுமதுவடிவினின்மணமத்துறுபொடியுதவுமுலவைமுன்னுற்றவன்
ன்மனதுலகுறுநரகயாதனைநாதவுறுவதுநீதியோ. (௫)

அடியனுரைசெயவேண்டுமோவுமதடவியுறுபொடியணுவுடற்
படியிலதுகொடுகொடியவினைசெயப்பசாசுமவ்வுருநீங்கியே
முடிவிலொளிபெறுதனுவொடுயர்கதிமுற்றுமென்பதையறிகுவிர்
நொடிசெய்மனுவொடுநீறணிந்திடினுவலுதற்கெளிதல்லவே. (௬)

காலகாலசொல்வேதநீதிகணிற்கவென்னுரைகருதியே
யேலுமன்னவனரகவேதனைநீக்கியாண்டருளென்னவே
சூலபாணிமகிழ்ந்துநந்தியைநோக்கியீங்கிதுசொல்லுவா
ளுலயத்தினிலுற்றகால்படவினையொழிந்திடுமரசையே. (எ)

மீண்டுகாலர்கள்கொண்டுபோய்விடுகின்றவேளைவெகுண்டுசெய்
சண்டவேதனைமண்டவேயரசன்படற்குரியானலன்
புண்டரீகனல்லுலகிலுற்றுறுபோகம்யாவுநுகர்ந்தபின்
மண்டலந்தனிலரசெனும்படிவந்துநம்பணிபுரிவனால். (அ)

அவனையேவிடுவித்திடக்கணநாதர்தம்மையனுப்பெனுஞ்
சிவனுரைப்படிநந்தியேவலிற்சேர்ந்துளோமெனச்செப்பினு
ருவமைதீர்கணநாதரோதுசொல்யமனுணர்ந்தனனுவகையாக்
கவலைசேரரசனைவிடுத்துயர்கனகவாசனமேற்றினன். (௯)

மனதுமகிழ்வுறுபூசையாற்றினன்மருவுசித்திரகுத்தரைப்
பனகபூடணனுர்கணங்களைநோக்கியீங்கிதுபகருவான்
கனகமால்வரைவில்லியார்கருணசமுத்திரமென்னவே
யனகமாமறைபுகலுமுண்மையுமறியவேவெளியானதே. (௧௦)

சுத்தனாருளமுதிலோரணுவெய்தினோரவர்சுத்தரே
யத்திறஞ்சிறிதுள்ளதாலடியனோநுமடியவனென்பரா
லுத்தமன்னிவனம்பைசம்புவினுபயதாண்மலர்வருடியே
யவத்தநல்லருளால்வரங்கொளமாதவஞ்செய்துளானரோ. [கக)

தேவர்மாதவராதியோனுச்சிவன்றேவிதன்றிருமுன்னரென்
னேவல்வார்த்தைகள்பேசப்பெற்றனன்யானனந்தகல்யாணனே
பாவைபங்கர்தமுபயபங்கயபாதரேணுவறிந்துள
மேவினோர்களில்யானுயர்ந்தவிசேடமாயினனுண்மையே. (கஉ)

வீரர்சங்கரர்சரணபத்திவிடாதிருந்திடவேண்டுமால்
வாரமங்கவரருளின்முத்தியின்வாழ்வடைந்திடுவேனெனச்
சாரமாகியமொழிபகர்ந்தருடருமன்வாய்மைமகிழ்ந்திடுந்
தீரானகமைசர்மன்னவன்வடிவுதேவுருவாக்கினார். (கங)

மானமேற்றினர்பிரமலோகமதேற்றினாரயன்வந்தெதிர்ந
தானபூசனையாசனோடுகணங்கள்பெற்றிடவாற்றினான்
ஞானநாயகன்வெள்ளிமால்வரைநண்ணினார்கணநாயகர்
தானமன்பெருகாலமவ்விடைச்சார்ந்துவாழ்ந்திருந்தனரோ. (கச)

இறையதன்பினர்மதனைவென்றிடுமிளையனுமுருவெய்தியே
நறைமலாங்கமழ்ந்தெளிதரும்புனனருமதைக்கரைநண்ணினான்
முறையிலப்புனலாடிநீறுபுனைந்துகண்கண்முகிழ்த்துநின்
றறைதரும்மதுகேட்டபேர்க்குமுன்முத்தியாய்த்துறவேசொல்வான். ()

நருமதாநதிபேசுகந்தருநீயெனக்கருளல்குவாய்
பெருமைசேர்சிவன்மனமுவந்திடுதரிசனம்பெறுபெற்றியாய்
மருவுநுங்கரைவாழ்மரங்களுமசரலிங்கமதாகுமா
லுருவுறும்புனலுள்ளயாவையுமோங்கிடுஞ்சரலிங்கமே. (கசு)

மன்பதைக்குலமிருகபட்சியும்வாழ்தருஞ்சரலிங்கமே
யுன்பவித்திரலிங்கமம்புயனுலகினும்பலவுள்ளதான்
மின்பரப்பியலிங்கபூசனைவிதியினித்தமியற்றுவான்
பொன்பரப்பியவுன்சிவக்குறிபுநுமையொன்றுநிகழ்ந்ததால். (கஎ)

அன்னதேவிநதியின்மரமுநற்புவிபதரிலுற்றிடுமுயிரெலாஞ்
சன்னிதானமுறிற்கொடும்பவங்கிமுத்தியிற்சாருமாற்
றுன்னருங்கணநாதரும்மிவைசூழ்ந்துபூசைபுரிந்துளார
மன்னும்பானியிவ்விலிங்கபூசையின்வானசைவந்திவண்வருவேன். ()

இனையபூசனையாற்றிடிற்சிவரூபமாகுவனென்றுதன்
மனமுவந்தனனன்னதித்திருமஞ்சனத்தொடுகூவிளத்
தளிரிளந்தளிர்கொண்டரன்குறிநளினர்ச்சனையாற்றியே
யினிதுநினைந்தமகிழ்ந்ததன்கரைபெய்தியுற்றனனென்பவே, [கக]

அங்கணுற்றவனிவைபுரிந்திடுமதனைநாடியறிந்துளோ
ரெங்குளானிவனென்னவற்புதமெய்தியங்கதியின்கரைத்
தங்குபட்டினமொன்றதிற்றனிபரசுசித்திரகேதுவாந்
துங்கமன்னவனருகடைந்தனர்கண்டவாறிதுசொல்லுவார். [உ0]

நிருபகேளதிசயமதொன்றிதுபுதுமையாகநிகழ்ந்ததா
னநுமதாநதியின்கரைக்கணோர்பாலனல்லதோரெல்லைநே
ருநவன்மன்மதன்வடிவினனவனுவமையெங்கணுமுணர்கிலோங்
கநதுமன்னவன்முகமதிக்குண்மலர்ந்ததாமரைகண்களே. [உக]

அவனிநந்நவிலிங்கம்யாவையுமவன்வலஞ்செய்துளானவன்
றவறிவிழினுர்வலமதாகவிழுந்துளானவண்சார்ந்திடு
முவமைபற்றவிலிங்கம்யாவுமுவந்துபூசனையாற்றுவான்
குவிகைநகொண்டுவிழுந்திறைஞ்சிக்கைகொட்டிக்கூத்துநின்றுடுவான்.

உவின்வேர்வைகள்பொழியமேனியனோர்கிலான்விழிமூடியே
திடமதாகவிழித்துநின்றுதியானபூசனைசெய்குவா
னிடமதிற்பயின்முனிவர்கண்டிறும்பூதடுத்தனர்சூழ்ந்துளா
ரடல்கொளாங்கவனவரைப்பார்க்கிலனிலிங்கநோக்கமகற்றிலான். [உங]

புனல்கொளும்படிவந்துளோர்பசுநிரைகளாயர்புகுந்துளோ
ரனையவன்றனைநோக்குவாரவனமலனுமயர்த்திலான்
மனநயந்திடுகானவித்தைகள்வந்தகாந்திருவர்க்குநேர்
தனையனன்னவனெனவுரைத்தனர்சைவரானதபோதனர். [உச]

அவர்புகன்றிடுமதிசயத்துரைசித்ரகேதுவறிந்தனன்
கவலுநெஞ்சினனிவனையுற்றெதிர்காணவேணுமெனக்கொடே
பவனவேகதுரங்கமீதிலிவர்ந்தனன்படைசூழவே
தவர்கள்சூழவிருந்தபாலனதருகுசார்ந்தனனென்பவே. [உரு]

கண்டனன்பரிவிட்டிழிந்துயர்கசாதந்துரகதமுடன்
மண்டுசேனையைநிறுவியேதனிவந்துசேர்முனிவோரொடுந்
தொண்டனுகிபபாலன்முன்னதிசயமொடுற்றிடைசூழ்ந்தனன்
றண்டுபோலவிழுந்தெழுந்திருகண்கணீர்வரச்சார்ந்துளான். [உசா]

உடனுறுந்தவயோகசைவர்களுறுவரும்புடைசூழவே
யடைவினுதனமீதிருந்தனரிவர்கள்செய்வதறிந்திலார்
திடமுறுஞ்சிவபுதல்வன்வில்வதளங்கள்கொண்டுசிவன்றனக்
கிடைவிடாதுறுபூசையாற்றியிருந்துளானவனென்பவே. [உள]

கண்ளெங்குழைவெய்தியேமுனிவோர்வணங்கினர்கைம்முகிழ்
கொண்டுவந்துடன்முன்னமுற்றனர்யார்கொனியெனக்கூறினர்
தொண்டனங்கதுகேட்டிலான்மகதேவசங்கரசோதியே
யண்டநாயகவென்பதன்றியங்கவரைநோக்கிலனென்பவே. [உஅ]

அதனைநோக்கினருண்டியற்றிடுமுனிவர்திசயமெய்தினு
ருதபாலனுமெவாடுங்குறாய் பொழுதனவுமேயருந்துற்றுளார்
நதியின்மூழ்கினர்பூதிகண்டிவனைந்துளார்கரபதியொடே
புதியமலர்கொடுகொருமனைதச்சிவலிங்கபூசைபுரிந்துளார். [௨௯]

அந்தமைந்தனுமந்நதிப்புனலாடியுன்னதமாமிலிங்
கந்தனைப்பலபுட்பமுங்கொடுகாதலர்ச்சனைசெய்துளான்
வந்துளோரவரனைவரும்மிவன்யாவனோமுனிவர்க்குறுஞ்
சுந்தரத்திருவுருவினான்பரிசுத்தனென்றுதுதிப்பரால். [௩௦]

உதயமத்தமனத்துமிங்கிவனுண்டியுற்றிலனர்ச்சனை
பலதவிரும்பினனதிசயஞ்சிறுபிள்ளைதன்செயலல்லவாம்
புதியவன்னிவனறிவைமானிடரறிவதன்றுபுகுந்தயா
மதியினாலிவனைப்பிரித்திடமனமிசைந்திலமென்பவே. (௩௧)

அருந்துதற்குவிருப்பிலானிவனருமொன்றுமளித்திலார்
மருந்துபோலுமனங்கொடுக்கினும்வாங்குறானெனமன்னவன்
விருந்தனுக்கினிதானநற்பசுவின்பயந்தருவீரெனப்
பொருந்துபோதினில்வந்தனன்கமழ்போதிலுற்றிடுபோதனே. (௩௨)

பூதிகண்டிபுனைந்துவந்திடுபுண்டரீகனைநோக்கினு
னாதிபூசைபுரிந்தபாலகனரகராசிவவென்றனன்
றிதில்சித்திரகேதுமன்னனமிழ்ந்துசென்றெதிர்தெண்டனிட்
டோதுபூசைபுரிந்தொடுக்கவணக்கமோடுரைசெய்குவான். [௩௩]

உலகெலாந்தருபோதம்புணராதயாவையுமுளகொலோ
விலகுமிங்கிவனுதயமேமுதலிலிங்கபூசையியற்றுவா
னலகிலாதமெய்யன்பினோடுகைகொட்டிக்கூத்துநின்றுடுவா
னலமுறுஞ்சிவனும்பாடுவனுண்டிபொன்றுநயந்திலான். [௩௪]

பாலனாகிலுமாடலொன்றிலனதிசயம்மிதுபார்த்திடுங்
காலைமேவுபசுக்களுஞ்சலபானமுற்றிலகண்டிடும்
வேலைமேவியவாயரும்பசியுண்டிவேண்டிலர்விரதருஞ்
சீலமேவுமுத்தீயுமின்றியுச்சிதமென்றுமகிழ்ந்துளார். [௩௫]

இனிமைசேர்தருமிருடிமாதருமிவனைப்பார்த்தகண்மாற்றிலா
ரனையர்பாலருமனையர்கண்டவருண்டிவேண்டிலராமரோ
தனைவிளக்கெதவர்பார்க்கினும்மிவன்றன்னொருவரைநோக்கிலான்
வினையமேதிவன்முனிவனோவுயர்விண்ணுளோர்களிலொருவனோ. [௩௬]

உரகர்சித்தரியக்கர்மானிடரரசர்தங்களிலொருவனோ
வரன்மகேசனியற்றுகற்பனையாச்சரியமடைந்ததாற்
பரவுமிங்கிவனைப்படைத்தவர்பாலனிங்கிவனுடன்வந்தோர்
விரவுறுங்கிளைகுரவருற்றவர்வினவுவோர்களுமில்லையால். [௩௭]

இவனைவிட்டெனதினியபட்டினமெய்தவேமனமில்லையா
லவமதுற்றதுவாழுநாளனையுதாமீதுமருந்துபர
நவிலுநாவபதைந்துகாறுநமச்சிவாயவென்றறிகிலேன்
பவரிடந்தினிவிவனையொப்புறுபத்திபெற்றிலனினமுமே. (௩அ)

இன்னமன்னையருதரவங்கியிடர்க்குள்விழவிருந்துளே
னுன்னுகின்றநல்லொழிவுவந்திலதுற்றசெல்லமெய்வளவையோ
மன்னுதாயர்தம்வயினகன்றுயர்வையமுற்றிடுபோதிலே
தன்னிபந்தனைநுகரவேபசித்தாகமுற்றவனுயினேன். (௩௯)

வாதபித்தகபத்தினுலுறுமரணமென்றுமருந்துகள்
சீதமுற்றதெனச்செறித்திடுகிம்பவிந்தனமுறுகனல்
காதலித்தனகாய்ந்துளேனுயர்கட்டின்மெத்தையிற்சாய்ந்துளே
னேதமுற்றுறுபாலனுேடிளமைச்சழக்கிலுமுழலுவேன். [௪0]

மாமனேகரயௌவனத்தின்மடந்தைமாரைமுயங்கினேன்
ரேமுறுஞ்சகமோகவாரிகடத்துமன்னெறித்தோணிமீ
காமனேசிவனென்றவன்கழல்கருதியர்ச்சனைசெய்கிலேன்
சோமசேகரரன்பரன்புகுரந்திடத்தனநல்கிலேன். [௪௧]

உண்டுடுத்தணிபூண்டுளெங்களிப்புற்றுலைந்துதிரிந்துளேன்
கண்டிலிங்கமருச்சியேன்கசரததுரங்கபதாதிமேன்
மண்டலந்தனிலரசிலாசைகள்வைத்துமெத்தமயங்கினே
னண்டர்கோன்பதத்தாசைவைத்திலனுயுள்போயவமானதே. (௪௨)

மான்மருண்டிடுநோக்கினர்நிறைமதிமருண்டமுகத்தையே
நான்மருண்டுறநோக்கினேன்சிவலிங்கசேவைநயந்திலேன்
றேன்மருண்டிடுமின்புறுந்தருமாதிமேவுதல்செகமகிழ்ந்
தூன்மருண்டிடினீங்குமீசனையேத்திலோங்குமதுணர்கிலேன். (௪௩)

பஞ்சபாணன்மயக்கில்வானவர்பதியுமேமருள்வானெனி
லெஞ்சுகின்றபுல்லறிவனல்லறிவெய்திடப்பெறுவேன்கொலோ
விஞ்சுகின்றநல்லிளமையிற்சிவபூசைசெய்திலன்வினையிழு
லஞ்சிடாவகைஞானசாத்ரமறிந்தபேரையடைந்திலேன். (௪௪)

கதியடைந்திடுவேன்கொலோசிவகவுரிநாயகசாமியென்
றதிகமாகியதுதிபுகன்றிடிற்பாவகோடிகளகலுமே
மதிகொடாயொடுதந்தைநற்றுணைவாய்த்தநற்கிளைகுரவர்நீ
விதியினுலெனையாள்சிந்தாமணிவிமலனீயெனநினைகிலேன். (௪௫)

அரகராமகதேவருத்திரபகவவீசமதாந்தகா
புரகராவெனையேபுரந்திடுவாயெனப்புகல்வேன்கொலோ
வுமாமதாமெனதுடலினீறுடுகண்டிபூண்டுயர்நருமதைத்
திரமதாகுமிலிங்கபூசனைசெய்திடப்பெறுவேன்கொலோ. (௪௬)

..வளத்தருங்கிறையுசருமதகிரமுற்றிடுகொழுமணித்
தேவனற்குறிதரிசனத்தொடுசிவசிவாவரகரவெனு
நாவினுமமருந்தினித்திடநடலைவாழ்வுறுமுடலைவிட்
..ரவினீத்திடப்பெறுவனேற்சிவனருளினாற்கதியடைகுவேன். (சஎ)

..றிமழுத்திகழபயமோடுறுவாதமுற்றிடுகொதலஞ்
செறிதருங்கணாதர்தாமுயர்தெய்வமானமொடெய்திடுே
பறிதருஞ்சிவரூபகல்கிடவயனுமாலும்வணங்கவே
பிறிதிலாச்சிவபதமதிற்புகுபேறெங்நாளுறுவேன்கொலோ. (சஅ)

ஆவிபோம்பொழுதண்ணலாரடையாளம்பூண்டுபஞ்சாக்கர
நாவிலோதிடினரகுருரெனநாலுவேதமுமோதலான்
மேவுமித்திறஞ்சனனகோடிசெய்மெய்த்தவத்தினிலெய்துமோ
தேவவிப்படிசெய்யின்மூன்றுலகுஞ்செயித்தரசாள்வனே. (சகூ)

எண்டிசைக்குறுபாலர்தம்பதமெண்கணன்பதமால்பத
மண்டர்தம்பதமிச்சியேனுனதாடகக்கமலப்பதந்
தொண்டனேன்பெறவிச்சைகொண்டனனென்றுதொல்லுலகாண்டிடு
மண்டலம்புகழ்சித்ரகேதுமகிபன்சொற்றனனமரோ. (ருo)

பதின்மூன்றாவது ஞானவாலனூற்பத்திச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-சoo.



பதினாலாவது,

## நதிகள்வரம்பெற்றசருக்கம்.



வேறு.

நடுவெழுத்தலங்காரம்.

விஞ்சிய*செங்கதிரவன்பேர்†சந்திரன்பேர்‡மேதினிப்பேர்§விமலை தன்பேர், ¶கஞ்சமலரோன்றிருப்பேர்நடுவெழுத்தைநிரைத்தெழுதிக்கா ணுங்காலே,நஞ்சழுந்துங்கறைமிடற்றெம்பெருமான்றன்றிருநாமநவிலும ந்த, வஞ்செழுத்துஞ்சொலப்பெற்றோரோரெழுத்தின்பொருளுநன்குரைய றிவர்தாமே. [க]

பாக்கினவற்கியனுரைப்பானயன்சித்ரகேதுவுரையாவுங்கேட்டே
பாக்கியஞ்செய்தனைநீசொலுத்தரத்திற்குத்தாநான்பகர்வதென்னே

* அ ந லி
† சோ ம ன்
‡ கா சி னி
§ ப வா னி
¶ அ ய ன்

இடையெழுத்துக்கள், நமசிவாய

தெக்குபுனல்செறிரேவாநதிக்கரையில்வாசஞ்செய்சிவன்றமனச
ராக்குபரன்பதகமலத்தியானவமுதாற்புனிதராவரன்றே. (௫)

மன்னவவங்கதற்கிசைந்தபிரமாணமுன்னுடையமனமேகண்டாய்
பன்னுமிந்நதிக்கரையின்முளைத்துவளர்சரவசரம்பலவுமெல்லாந்
தன்னிகரிலிதிற்றவழ்கால்படுதலான்முத்திநெறிசாருமென்று [யோ
லின்னிலையுற்றிடுமவரவ்விலிங்கவருச்சனையின்முத்தியெய்தல்பொய்

நண்ணுமிந்நதிக்கரையிற்பிறந்துவளர்ந்தரும்பூசைநாளுஞ்செய்வோர்
திண்ணமுறுங்கதிபெறுதலதிசயமோகாசியினிற்சேர்தலொப்பாம் [ங்
விண்ணவருமிவண்மேவவிச்சைகொள்வாரிதுதவத்தான்மேவல்வேண்டு
கண்ணுதல்காசியிலிலிங்கமிவண்போலெங்கணுநிறையக்கண்டிலோமால்.

அரசவிவற்றொருகாதைகேட்டியாலாதியினிற்கங்கைமுன்னும்
விரசுநதிமடந்தையர்கள்யாவருந்தாம்புனிதமுறவேண்டுமென்றே
யுரைசெயிமயச்சாரலதிலிமையோரதிசயிப்பவொருநாற்றிக்கு
நிரைசெய்தழல்வளர்த்துநடுவிமையாமற்சுடர்நோக்கிநின்றாரன்றே. ()

பானுநடுவினிலிருக்கும்பற்கர்குண்டலாபரணம்பலவும்பூண்டார்
தேனனையமொழியிடப்பாற்றேவர்கணநாதர்கள்சேவிப்பவேதங்
கானமொடுகொண்டாடநீலகண்டம்நெற்றியிற்கண்கையிற்சூல
மானவபயமுமுடையகரத்தரருட்பார்வைபன்பர்க்கருள்செய்வாரால்.

நந்திமுதலன்பர்பணிகெம்பீரர்மூப்பிறப்புநாசமில்லோர்
செந்துகிர்போல்வேணியரப்பிரமேயர்மூத்தொழிலுஞ்செய்வோராதி
யந்தமிலாரானந்தர்கல்யாணரத்துவிதர்பொற்கைசித்தர்
சுந்தரவாண்முகத்தர்பரவித்தையருள்பவரெவர்க்குந்தொடரொணாதார்

அந்தமில்செல்வந்தருபுன்மூரலுமைமனோகரராயமலராகிச்
சந்ததம்பார்க்கப்பார்க்கவலங்காரர்வரங்கொடுக்குந்தயவுளோராய்ச்
சிந்தைமகிழ்சாந்தராயன்பர்விரும்பியதளிக்குஞ்செல்வராகுஞ்
சுந்தரராமகேசர்தமைமிதயகமலத்திருத்தித்தொழுதுகொண்டே. (அ)

உகமயுதந்தவம்புரிந்தாருவர்களிற்றைவீகசுந்தரியாங்கங்கை
மிகவரியதவஞ்செய்தாளிவைகண்டுதவர்தேவர்மிகமருண்டார்
மகமேருமுதலானவரைக்குலமுந்தருக்குலமுமண்ணுமன்னோர்
தகவுறுசெய்தவக்கனலாற்கரிந்துபொரிந்தேதாபஞ்சார்ந்தவாலோ. (௯)

அப்போதுதவம்புரிந்தவிந்நருமதையரியமுனைவாணி
யொப்போதில்சோணபத்ரியுயர்கோதாவிரிபத்ரைகிட்ணவேணி
தப்போதில்காவேரிபொருனைவைகைகுமுதைசுதைதாரைபாலி
செப்போகைபெறுநதிகளின்னமுளவரியதவஞ்செய்தவன்றே. (௧௦)

ஆதலாலரியதவம்புரியுமவர்தமிலுமருந்தவஞ்செயிந்த
வோதுநருமதைமுன்னருமைபாகர்பிரசன்னராகியுற்றார்

பாதிவளைப்பார்த்துரைத்தார்நருமதையேவேண்டியநல்வரங்கேளென்னத்
நிதில்வரமென்னிடத்தேயுமையுடனெப்போதுநீர்சேர்தல்வேண்டும். ()

ங்கிருவெயென்றனக்குவேண்டியநல்வரநீரென்னிடத்திலென்று
மோங்குபிரசன்னராயிருந்திடிலங்கதுபோலவுறுதியுண்டோ
ங்கிலடியேன்செய்தவப்பலனதுவேசெடிகோடிகளுரந்தன்னிற்
ங்குபெறமுளைத்ததருச்சிலையிடத்துஞ்சன்னிதராய்ப்பயிலவேண்டும்.

னதிடத்திற்சிவலிங்கவடிவாகித்தேவரீரெந்நாளுந்
தனதிடமாவிருந்தருளவேண்டுமிவைபுரிந்தருச்சித்தார்கட்கெல்லா
மனத்திலிட்டம்யாவுமளித்திடல்வேண்டுமுனிவரொடுவானோர்தங்க
ணினைவிலவையிலிங்கங்கட்கிவைகோடிமடங்கதிகங்கழுவேண்டும். ()

தேவவுன்றனுமத்தாற்புனிதராமதுபோலென்றீர்த்தந்தோய்ந்து
மேவுமருத்துறப்பெற்றோர்முத்தராயிடவேண்டுமிக்ககாசித்
தாவிலெழிலிங்கமொடுதனியிரசமாணிக்கவிலிங்கந்தம்மி
லோவிலவாயெப்போதுமிவ்விலிங்கத்தபிமானித்துறவேவேண்டும். (௧௪)

என்னுடைச்சோமேசகுண்டத்திலிங்கதரிசனம்புரிந்தோரிறவாமுத்தி
தன்னிடைச்சேர்ந்திடவேண்டுமவ்விலிங்கநாகப்பூண்டரித்தல்வேண்டு
மன்னுமதிலதிகசாந்நித்தியநீருறல்வேண்டும்வாய்த்தலிங்கம்
பன்னுமதுசிறிதுபெரிதேனும்பூசிக்கின்முத்திபலித்தல்வேண்டும். (௧௫)

எனக்கருளும்வரம்போலப்பிறர்க்கருளவேண்டாநீரெம்பிரானே
மனக்கருணைபுரியும்வள்ளனீருமக்குத்தரற்கரியவரமொன்றுண்டோ
பனற்கரியவுலகதனிலசத்தர்களுமுத்திபெறும்படிநான்கேட்ட[வென்றாள்.
வினைத்துமளித்தென்பெயர்வைகறைநினைத்தோர் முத்திபெறற்கருள்வா

என்னரேவாநதியாநருமதைகேட்டருள்வரங்களியாவுமீந்தே
பன்னகடைபாகர்மறைந்தார்கயிலைவாசர்பின்னுகங்கையாற்றும்
பன்னரியதவநினைந்துவரங்கொடுத்தற்கெண்ணுறுமப்பருவந்தன்னிற்[ல்
றுன்னுகணநாதர்கங்கைதவங்கண்டோர்பணிந்தும்பின்றுசொல்கின்றா

நம்பகேளிமயவேந்தருளுமுதற்பெண்ணாருங்கைகங்கை
சம்புவேயுனைநோக்கியரியதவம்புரிகின்றாடவத்திமண்டி
யும்பரோடிம்பர்வரைக்குலத்துறுவாருந்துயரமுறுகின்றார
லெம்பிரானருளிலைபலகாலம்போனுலகமெல்லாமிறக்குமென்றார். ()

எனப்புகன்றவுடன்கணங்கள்புடைசூழத்துந்துமிகளெங்குமார்ப்ப[என்
நினைத்தரியதவஞ்செய்மங்கைகங்கைநங்கைமுன்னர்வந்துநின்றானெம்
றனைக்கண்டாளடியற்றுவீழ்தருப்போற்பணிந்தெழுந்துதம்பிரானார்[ன்.
பனைக்கைமதக்கரியுரித்தபரமர்முன்னின்றருந்துதிகள்பன்னுகின்றா

கவுரிமனோகரசந்த்ரசேகரனேகருணாசாகரனேபோற்றி
ரவியஞ்சேர்மகாருத்ரவீரபத்ரநிர்சாமக்...

புவிபுகழும்பூதிதராநீலகண்டநெற்றிவிழிப்புனிதாபோற்றி
கவிஞர்புகழ்*கவர்த்தீசசதாசிவசெங்கதிர்நடுவிற்கலந்தாய்போற்றி. (௨௦)

கதிரொளிசேர்குண்டலர்பரணமிருட்பகவநின்றன்கருணைப்பார்வை,
யதுபெறிலெப்பாவிகளுங்கதிபெறுதனிச்சயமேயந்தப்பார்வை, மதியி
லியேன்வெந்தழலால்வெந்தேனென்றனைப்பார்க்க மதித்தல்செய்வாய்,
துதிபெறுமாதாபிதாதுணைவர்மித்ரர்புரப்போருஞ்சோதிநீயே. (௨௧)

தயிரிபத்தாற்காளவிடந்தரித்தவனேமன்மதசங்காரவண்டத்
துயிரனைத்துநின்னுமமோதிடிற்சுபுத்திமுந்தியுதவுவோனே
யியலுறுமுன்சரணமடைந்தேனெனைக்காத்தருள்புரிவாயிறைவநீமுன்
செயலுறும்ரேவாநதிக்குக்கொடுத்தவரம்போல்வேண்டல்செய்திலேனே.

இப்போதியான்கேட்கும்வரமுலகிலொருவருக்குமெய்துறுதா
லொப்போதிலாதபத்தியுனதிடத்தில்யான்பெறுதற்கோதுகின்றே
னெப்போதுங்காசிநகர்த்தீர்த்தரூபமதாயானிருத்தல்வேண்டு
முப்போதும்விசுவேசராகுநீரபிடேகமுயலவேண்டும். (௨௨)

ஐயநீகாசியிலென்றீரத்தில்விசுவலிங்கமாகவுற்றுற்
செய்யனையளவிறந்தபெருமையுடையவளாகத்திகழ்வேனன்றே
துய்யநீரெனவிலிங்கத்தபிடேகஞ்செய்நின்றுடோய்குவேன்யா
னுய்யும்வரமிவையன்றியதிகவரமெவையுளவென்றுரைப்பாள்பின்னும்.

இறைவநீகாசிவாசம்புரியிலெவருமுத்தியெய்துவாரா
லறையுமிதுவேயெனக்குவேண்டும்வரஞ்சருவவுபகாரமன்றே
யுறைதரும்பொன்னுலகுசத்யவுலகவாசமுமெனக்கேயுதவல்வேண்டா
மறைமுதலேமாநிலத்தின்மன்பதைகள்காசிநகர்வந்துசேர்ந்தே. [௨௫]

திருந்தவரென்னதியாடிப்பூதிகண்டிபுனைந்துகங்காசெலம்வில்வத்தாற்
பொருந்துனதுவிசுவேசலிங்கபூசனையன்பாற்புரிந்ததீர்த்த
மருந்தெனமுக்காலருந்திச்சீவன்முத்தராய்வயங்கமனத்துன்னுமம்
விரும்பியேகற்பாந்தத்தினுமழியாமுத்திதான்மேவவேண்டும். (௨௬)

எனதுமனம்விடயாதிதனிலேகாதெழினீறுகண்டிமாலை
கனைதைபெறுவிசுவலிங்கபூசனைகாசியில்வாசங்கருதல்வேண்டும்
பனகபூடணவெனவேவரங்கேட்குங்கங்கைதனைப்பார்த்துப்பெம்மான்
மனமகிழ்ந்திங்கிவையாவுந்தந்தனமென்றருள்புரிந்துமறைந்தானன்றே.

பின்னர்கோதாவிரியேமுதலானநதிகடவம்பெரிதுசெய்யு
மன்னவர்க்குச்சுகரூபமாநினைத்தவரங்களெலாமருளியப்பான் [தா
மன்னுமிமையோர்வணங்குமறைமுதல்வன் கயிலைமால்வரையைச்சார்ந்
னின்னிலங்காத்தருள்சித்ரகேதுவேயெனப்பின்னுமிசைப்பானன்றே.[ ]

எண்ணுமிதனுளிந்நருமதை'மாநதிதீரத்திருக்கின்றூர்க்கு
நண்ணிபிடுநமக்குமிந்தப்புனன்முக்காலாசமிக்கினலஞ்சேர்முத்தி

---

* கவர்த்தீசன்-சடையின் செறிவுள்ளகடவுள்.

திண்ணமாம்பாவபயஞ்சேராதாலிதற்கினையாச்செப்புதற்கே
மண்ணுலகினதிபுண்டோகங்கைகயிடத்தொருமிவண்வாஞ்சிப்பாராம்.

இந்தநதிக்கரைப்பிறந்தோன்றவம்புரிவோனின்பமுத்தியெய்துவானு
னந்தலிலாநருமதையைத்தரிசித்தாலுஞ்சுகங்கணல்குமன்றே [ன்ற
முந்துசிவபதங்கொடுக்கும்புனலிதுபோன்மொழிவதற்கொன்றில்லையெ
வந்தமலரோன்வாய்மைகேட்டமன்னன்வாலன்றன்வழிகேட்பானால். [ ]

இந்தவிளம்பருவமைந்தன்றந்தைதாயாவரிவன்பிறந்ததெவ்வா
றுந்துசிவபூசையரனுமதோத்திரங்கள்புரியுறுதியீங்கு
வந்தகாரணமுழுதும்விபரமாச்சொல்கவெனமன்னன்கேட்ப
முந்துசித்ரகேதுவேவிசித்ரமிதுவெனமலரோன்மொழியலுற்றான். [ ]

பன்னுமிவன்சரித்திரங்கேட்டாலுனதுகோத்திரமும்பவித்திரங்காண்
முன்னிவன்றன்பரவகோத்திரமாகுமிவன்பவங்கண்மொழியலாமோ
மன்னுநமனுலகிலிவன்போம்வழியின்மாநாகம்வந்துகவ்வித்
துன்னுதுளையெயிற்றழல்வெவ்விடத்தினாற்சூடுண்டுதுடித்தானன்றே. ( )

கரியவிருச்சிகஞ்செய்யவிருச்சிகாட்டுவக்காலிசுடித்தேகொட்ட
வெரியுமிருப்புக்குகையில்வீழ்ந்துருகிப்பிண்டிபாலங்களேற்ற
கெரியுமிவனலற்படும்போதம்பிகைதன்னருளேனுக்கினிமலனைவ
வருகணங்கணமன்பூசைசெயவிவனைக்கொடுநம்பால்வந்துய்த்தாரே. ( )

நமதுபசாரங்கள்பெற்றுநெடுங்காலமேனுவதியினண்ணினனங்
கமர்பொழுதிலங்குள்ளோரானையருச்சனைபுரிதலமலன்காதை [ன்
தமதுளுவந்துரைத்தல்கண்டுகேட்டதனுற்சித்தசுத்திதான்பெற்றெம்மா
விமலமாம்பூசனைநம்முடனியற்றிப்பத்திசித்திமேவினனல். (௫௪)

பரமசிவன்பூசனைநின்மாலியம்பத்தர்கட்களித்துத்தானுந்துய்த்தே
வரமதாஞ்சிவயோகத்தாலயோனிசனுகவாலனுபவ
திரமதாம்படிபெற்றுநருமதாதீரத்தில்வந்துசேர்ந்தே
யுரமதாஞ்சிவபூசையடங்காதபேராசையுடன்செய்வானல். (௫௫)

பூதிகண்டிபலங்காரத்துடன்மெய்புனைந்துளத்திலன்புபூண்டோனு,
மாதிபூசனைபுரிவார்தமைக்காணிற்பாவவினைபகலுமன்றே, நீதிபெறுமி
வர்க்காணிணிறைதருமபலமென்றேநினைந்துயானற், சோதிகொள்சத்தி
யலோகம்விடுத்திவண்வந்தனனென்றைச்சொல்வான்பின்னும். (௫௬)

பாலனிவன்றனையரன்பத்தனுமனைத்தருமபலத்தைநல்குஞ்
சீலமிகுநருமதைமாநதிதனைக்காணவும்பெற்றேன்செழித்துளோனு
வீலமிடற்றான்பர்க்கதிபனுமிவனிந்தநீண்டவாற்றின்
கூலமிசைச்சிவலிங்கார்ச்சனைபுரிந்துநெடுங்காலங்குலவுவானல். [௫௭]

அன்னபான்மைபிளிவன்பின்மன்னவர்க்குமன்னெனவேயவனியா ண்டு, துன்னிபசெங்கோல்செலுத்தியிழிந்துளோரையுஞ்சைவத்தொண் டராக்கி, மன்னுமழுத்தரித்தபிரான்பூசனையெங்கணு நாளும்வளரச் செய்வான், சொன்னவிவற்காணநித்தந்தவர்தேவருடன்யானுந்துன்னு வேனால். [௩௮

யாவருமிங்கிவன்றனைவந்தனைபுரிபவிற்றிருப்பானிறைவகேண்மோ
பூவதனின்மக்கள்யாக்கையிற்புகுதலரிதனிற்புகப்பெற்றாலுந்
தேவர்பிரான்சிவலிங்கார்ச்சனைபெறுவதரிதுசைவசீலமேன்மை
யாவதுதான்செனனகோடியிற்புரிந்தநல்வினையாலடையுமன்றே. [௩௯

ஆங்கதுவந்தான்முத்தியடைவதுநிச்சயமாகுமரசரேறே
பாங்குபெறுமூன்றுலகிற்றருமங்கட்கதிகமாம்பரமன்பூசை
யோங்குமதுவேயுத்தமோத்தமமாநீறுடனேயுருத்திராக்கந்
தீங்ககலப்புனைந்துசிவலிங்கவருச்சனைபத்தித்திடத்தாற்செய்தே. (௪௦

அரகரசங்கரசிவவென்றரனுமங்களும்புகன்றேயண்ணலார்தம்
பரவுமடியார்களுக்குமுபகாரம்புரிந்தருளும்பாக்யவானே
திரமுடனும்வந்தனைசெய்சீரியோன்றிடபத்திசேர்தருனு
முரமுறுசென்மங்கடொறுமரியதவம்புரிந்தவர்க்கேயுறுங்கண்டாயே. (

அன்னதுதானுறப்பெற்றாற்சந்தானந்தழைத்தோங்குமண்ணல்பூசை
தன்னில்வளராதசெல்வமொன்றுண்டோயானுமரன்றாளிற்பூசை
மன்னுதலான்மேலானசத்தியலோகத்துற்றுவாழ்வும்பெற்றேறேனே
ளின்னுயிரெல்லாம்படைக்குமறைப்பொருளும்வல்லமையாவையும்பெ

ஒப்பரும்புண்ணியமிதனையொருகணமாயினுமெவர்க்குமொழிதல மோ, மைப்படிகண்ணார்மயக்கிலுற்றவனங்கவட்குமுத்துமாலேசேலே தப்புதலில்லாதளித்துமுகம்பார்க்குமவன்போற் சங்கரன்றன்பூசைக் கெப்பொருளுமளித்தேத்துமவன்பெருமையெம்மனோர்க் கியம்பொணு தால். [௪௩

எனக்கமலாசனத்தயன்சித்திரகேதுதனக்கிவ்வாறிசைத்தானென்றே
தனக்கிணையிலாதன்றன்பிரமபூவுக்குரைத்ததன்மையெல்லா
மனக்கவலேதீர்சனகமுனிக்குநிகர்சனகனெனுமன்னன்கேட்பப்
பனற்கரியதவம்புரியாக்கினவற்கிமாமுனிவன்பகர்ந்தானன்றே. [௪௪

பதினேழாவது நதிகள்வரம்பெற்றசருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௪௪௪.



# ஞானவாலன்வயிராக்கியச்சருக்கம்.

வேறு.

படியடங்கமுடிபுனைந்துமதனைவென்றவடிவொம்பரிக்குற் றுல
படைத்துளோரையான்பணிந்திடேன், மிடியொடுங்குலைந்தொடுங்கி
பழுகிலாதமெய்ப்பராய் வெப்பநோயராயினும்பிறப்பசாதியாயினுங்,
நடிகொள்கொன்றைமுடியனம்மைபாகனவனும்பர்தம்பிரான் காலகால
னுலமுண்டகண்டனிந்துசேகர, னடியர்செம்பொனடிநினைந்துபொடிபு
னைந்தவவர்களையடியனென்றுமுடிவணங்குமடிகள்கொண்டவடிகளே.

சைவராசமுனிவன்யாக்ஞவற்கியின்னுஞ்சாற்றுவான் சதுர்முகத்
தன்வாய்மைசித்ரகேதுமன்னன்வினவியே, மெய்வருந் றங்கொள்வே
தமுதல்வனனைவயனைமிக்கசீலனனபாலனோடுமென்றன்மனையில்யா,
னுய்வருந்திறத்திபற்றிரத்நவாலயங்களி லுரியபூசைபுரியவங்குவந்துவீற்
றிருந்திடுந்,தெய்வநாயகத்தனைநருமதாவிலிங்கநீ தெரிசனஞ்செய்தரு
ளவையவருகவென்றுசெப்பினன். (உ)

பகருமன்னன்வாய்மைகேட்டபதுமவாசனத்தினன் பாலனோடுமே
புகுந்துபார்த்துளங்களித்துளா, னிகரிலாவிரத்நமிட்டிழைத்தவாலயங்க
ளினீண்டமாட கூடம்வாசல்வெளிமுகப்புநிறையவே, புகரில்வில்வமா
லையாலலங்கரித்தபூசனைப்பொருவிலாத நருமதாவிலிங்கம்யாவுநோக்கி
யே, யகமகிழ்ந்துபாலன்பூசையாற்றவேண்டுமென்னவே யருச்சனைக்கு
கந்தயாவுமரசனல்கவுரைசெய்தான். (ங)

அளவிலாதவாசைகொண்டுபூசையாற்றவன்றனக் களவிலாதநிதிக
ள்கொண்டளிக்கவேயரன்றனக், குளமகிழ்ந்துநதியபஞ்சவமுதவாரியா
ட்டினு னைதும்வில்வடவிசூட்டியன்னவெற்புமூட்டினு, னிளகுநெஞ்
சமுடன்விழுந்தெழுந்துநாமம்பாடினு னிருகைகொட்டிமுன்னர்வட்ட
மிட்டெட்டாடினன், களவிலாதவிளமையன்பணவன்விழைந்தநாடக
ங் கண்டுமன்னன்மனையின்மாதர்கள்களித்துளார்களே. [ச]

அன்னபோதின்மன்னவன்வளர்த்தகன்னிபொன்னனு ளவனும்வந்தி
லிங்கபூசையாற்றிநிர்த்தமாடினன், மன்னவன்றன்முன்னர்வந்தோர்வா
ர்த்தைசொல்லவுன்னினள் வருமரும்புகொங்கைமானைமலரயன்பரிந்து
பார்த், தன்னசந்த்ரசித்ரகேதுவரசனோடுமுரைசெய்வா னன்னமன்னந
டையினங்கணங்குதெய்வநேரணிக், தென்னையாருமிறைவர்கண்டிபூண்
டிலிங்கபூசனை யினிதியற்றிடமிபற்றுமின்பவன்புளாளரோ. [ரு]

அமரர்மாதரிவளுக்குநிகரொருத்தரில்லையா லழகுநல்லவிளமை
செல்வரிவையாவளென்னவே, கமலயன்னுமயன்விறைவவரசர்கோன்
விளம்புவான் கருணைவள்ளலடியர்முன்னர்நருமதைநக்கரைக்கணே,விம
லவில்வவடவியின்கணடியுற்றுமேவினேன் மேவுமவ்விடைக்கண் [illegible]

பின்முறையின் வில்வநீழலில், ஒருமையோர்பாகர்சோமலிங்கருற்றுளாரவர்க்கிவ ளாரியபூசைசெய்துருத்ரவீணைபாடிபாடினாள். [சு]

கண்டுநான்விரும்பியின்னகன்னிதன்னைமகளெனக் காதலால்வளர்த்திடக்கருத்தின்மிக்கவாதரங், கொண்டிருந்தவிவளையம்மவெனதுமாமனைக்கணே குடியிருத்திவாவெனக்குறித்தழைத்தபோதினி, லண்டர்நாதனுமிலிங்கபூசைநாளுமேகாத்திரத்தாலசையுற்ற பத்திபெற்றுளேன்விடுத்தகன்றிலேன், றெருங்கிடூண்டுளேனென்னையபோதியென்றுசொற்றனள் சுருதிநாதவன்னைநீயென்றுகூறுரைத்தனன். (எ)

வந்தென்மாமனைக்கண்மேவிபெற்றைதாபூசைவழுவிலா வண்ணமாற்றியுறைதியென்றுகண்ணனுட்கிபப்பவே, யெந்தைதமூர்த்தையாண்செயுந்தவத்தில்வந்திருந்துளா ளிறைவர்மூன்றுகாலபூசைகுறைவிலாதபொருள்கொடே,முந்திலிங்கபூசைபார்ப்பிமுறைமையோடுமுறைகுவாண் மொழியுமிங்கிவட்பயந்துளார்கள்யாவரமிகிலே, னந்தமுள்ளமாதுவந்தவாறதொன்றுமறிகிலேனையாம் யறிந்திலாதநில்லையீதுபுகறியே. (அ)

என்றசித்ரகேதுமன்னனுக்குவேதனுரைசெய்வா னிவண்முனம்பிறப்பின்வேடனீன்றகன்னிபாகுமாற், குன்றவேடன்மனைவிமைந்தரோடுநீள்வனத்தினிற்குடியிருப்ப னவ்வனத்தோர்கூவிளத்தினீழலிற், றுன்றுகின்றவுத்தமந்திலிங்கமொன்றுமேவுமாற் சோதியானநருமதேசன்முன்புகாளவன்றரு, மன்றமேலாதியாடலாலவ்வில்வமூலமீதிலேமண்கொடுற்றதிண்ணைசுற்றுமேவினதுளாளரோ. (கூ)

ஆடலின்னிமித்தமாபவ்வில்வநீழலைகிடாவணிவரம்புகட்டி நீரதற்குவார்த்துளாளரோ, கூடுங்தநீர்மேமீதிலாட்டுமோறெனக்குளிர்ந்திடப் பொழிந்தநாறுதிர்ந்திடச்செய்சருகலா, நாடுகின்றவர்ச்சனைக்குவாய்த்ததந்தவண்ணமே நாடொறும்புரிந்துளாணினைந்திறந்துளாளரோ, நீடுபூதலங்களெங்குமேசெல்கின்றநவேனு நீளவுண்கணுளிறக்குநேடுவனம்புகுந்துளான். [க0]

வந்தசூரியன்றன்னைநோக்கி வந்தபோதர்தம்மாதைநோக்கி யருகுநின்றசித்ரநக்நரர்மையைப்பார்த், திந்தமங்கைபாரினுள்செய்புண்யபாவமென்னையிங் கிவளிறந்தவாறதென்கொலென்றுநின்றுகேட்டனு, முந்துகின்றகர்ணர்சொல்வர்வனசரன்றன்மாதிவண் மூன்றுபோதுமூன்றினும்பொசிப்பினுளின்றுடனைத், தந்தவேடனிந்தநீள்வனத்தினிற்குரம்பைதான் சமைத்திருந்துளான்றழைத்தகூவிளமுமுள்ளதால். (கக)

மருவுமங்கணநமநாவிலிங்கமொன்றிருந்ததீத வளரும்வில்வங்கிளைநூறாறுபாக்கிகட்டிமாதிவள், சொரிதருங்குளிர்ந்தநீரிலிங்கமீதுமாட்டுவாள் சூழ்ந்துபத்திரங்கள்கொய்துமுடியின்மீதுசூட்டுவாள், விரியுமந்தகிழலிருந்து பண்ணைபாடிமேருவான் மேவுமாறுகொண்டுசுற்றுமுற்றுமே

வளக்குவாள், பருவமங்கைகாலைசென்றவ்வரையடிக்குள்வனமுறும ப
ளப்பன்மலர்கொணர்ந்தணிந்துபார்த்துமகிழுவாள். (கஉ)

அலையமாதுவிந்துவசத்தின்மரணமுற்றுளாளென வவடிறந்சொல
சித்ரகுத்தர்வாய்மைகேட்டநமனவட், கிளைபதாயெனச்சொலாதவுரு
வளித்துமானமே லேற்றியேயுடன்கொடேகிப்பின்புறந்தனுலகினிற்,
புனையுமாசனத்தில்வைத்துப்பூசையாற்றவைகிறாள் பூவைபின்மனுவ
திக்கண்மானமீதுபோந்துளாள், பிளையுநந்தமுலகதன்கணயுநகற்பகா
லந்தான் பெரிதுறநம்பூசைகொண்டிரியமுற்றுவைகிறாள். [கங]

இறைமகிழ்ந்தபூசையாற்றிவருமுதிர்ந்தயோகத்தா லினியதோ
ரயோனிசப்பெணுருவெடுத்திசைந்துளா, ளுறையுமுன்னருற்றசென்ம
வாசம்வந்துநெஞ்சகத் தற்பலிக்கருமதாநடிக்கண்வெற்பின்முழைத
னிற், பிறையணிந்தவேணியண்ணன்மகிழிலிங்கபூசனை பிரியமுற்றியற்
றியுற்றுளாளெனப்பிதாமக, னறையுமந்தவாய்மைகேட்டசித்ரகேதும
ன்னவ னகமகிழ்ந்துமலரின்மேவுமண்ணலோடுமுரைசெய்வான். [கச]

பெய்தையெபெடுத்துநான்வளர்த்தவிந்தமின்னனுளெக்குலத்து
ளாளெனக்கருத்திலேதமுற்றுளேன், வந்தவுன்றன்வாக்கினுலென்னை ய
முந்தவிர்ந்ததான்மருவும்யோனிதனில்வராதமங்கையிங்கிவடனை, முந்
துகின்றமணம்விரும்புகணவன்யாவனுவனுன்மொழிதியென்று வேந்து
ரைப்பமலரின்வேதன்மொழிகுவான், சுந்தரங்கொளிவண்மணஞ்செய
வனும்யோனியுற்றிடாத்தூயவற்களிக்கவேண்டுந்தூயநங்கையிவளேயே.

சிலமிக்கபெண்ணிவட்குஞாலமீதிலதிகமாஞ்சிலமிக்ககணவன்வந்
துசேர்தலேசிறப்புநம், பாலடுத்தபாலனுக்களித்தனன்றதாகுமாற்பால
னஞ்செய்தவனியைப்பரிக்குமன்னவென்றலும், வேலெடுத்தமன்னவ
ன்விளம்புவானென்னையேகன்மிக்கபக்குவங்கொண்மங்கையெங்கணங்
கையல்லளோ, சாலவுற்றவிளமைபெற்றபாலனுக்களித்திடச்சாற்றுமாற
டுக்குமோசதுர்முகத்துமுதல்வனே. [கசு]

அல்லதீங்கிவன்வளர்ச்சிபெய்துமென்றளித்துமேலாசைபூசையன்
றிமாதராசையற்றநெஞ்சினன்,புல்லுமாதர்மணம்விரும்புகில்லன்வல்லி
மெல்லியார்போகமேவிரும்புவார்கள்புரும்விரத்தமெய்துறார்,சொல்லு
ம்வாய்மைநல்லவல்லவல்லமைக்குண்மிக்கநீர்சூழ்ந்துசெய்யில்யான்செ
யுந்தவப்பயன்களாகுமால், வல்லிபாகனர்ச்சனைக்குண்மிக்கசீலமேலை
போய்மாநிலத்திலதிசயங்கள்செய்யவல்லையல்லையோ. [கஎ]

சிவனினைந்திடற்செலாதகாரியங்களில்லையாற்செப்புமெங்கள்பெண்
மணங்கொடலைவன்வந்துசேர்வனுற், றவமிகுந்தபெரிய[illegible]
செய்துளோர்க்கெலாஞ்சார்ந்தி[illegible]
துளா,ரிவன்மிகுந்தபா[illegible]
ங்கைசே[illegible]
[illegible]முரைத்தனனே.

இந்தவேளையன்னபாலனுக்கியான்வளர்த்தபெண்ணினியகன்னி தானநல்கவெண்ணுமென்றன்மனமெம்மான்,வந்தவேளைநல்லவேளைசெல்வமிக்குளேன்வரன்வாய்த்தவேளைதன்னிலே மணம்புணர்த்தவேண்டுமாற், றந்தையேயெனச்சொல்போதுபிரமதேவனுரைசெய்வான்சாற்றுமெண்ணிரண்டதானவாண்டுமேவுதன்மையாய், முந்துமுன்மகட்கிசைந்தகணவனுவன்மணவினைமுற்றுமாறதற்குவந்தகருமம்யாவுமுயறியால்.

என்றுபங்கயததுளோனிசைப்பமன்னன்மனமகிழ்ந்தினியளானமனைவிசந்த்ரவதனியோடியம்புவா, னன்றயோனிவழியின்வந்தநங்கைபங்கயக்கணுணரிதன்னைநாளும்வைத்துநாம்வளர்த்துளோமரோ, மன்றன்மேவுபருவம்வந்ததிவண்மனுளன்வேண்டுவாண்மற்றிவட்கோர்புருடன்றெய்வவடிவன்வந்துவாய்த்துளான், கொன்றைவேணியன்றனன்பனுனதானபாத்திரங்கூடலின்றுபெற்றதாற்கொடுத்திடென்றுகூறினன். [உ0]

மன்னவன்றன்மனைவிசந்த்ரவதனிகேட்டுமிகமனமகிழ்ந்துமேனிபுளகமல்கிவனசமென்கைவளைகள்பூண்,சின்னபின்னமாகவேவணங்கிமூரல்செய்துளாள்செப்புவாளிவட்கிசைந்தகணவன்வந்துசேர்ந்திடி, லின்னிலைக்கணேபளித்தலென்றனக்குமிகவுமேயினியதாகுமிளமைசுந்தரத்தினுலியைந்திடுங்,கன்னல்வேளுமாசைகொள்ளுமென்மகட்குநிகரியார் கன்னியின்னவட்குவந்தகாந்தனுவன்யாவனே. [உக]

வாகைமாலைகைகண்ணீலம்வாழைபோன்குறங்குகள்வார்குழற்கிசைந்தவேணிநீலநாகவண்ணமாந்,தோகையுற்றசனகன்மிக்கபுளினங்காலுமங்கையுந்தூயதாமரைக்குலங்கள்சொல்லுமோகுயிற்குல, மோகைசேருமென்மடந்தையொப்பிலாளிவண்முலை யுண்ணுகின்றபாலனீன்றதாயர்தந்தையுறுதன, மாகுமோருடன்பிறந்தபேர்சகாயர்தாமிலானரியவென்பெணிவளையாதரிப்பனேவறிந்திலேன். [உஉ]

சிந்தனைக்கிசைந்தவாறுசெய்யுநற்குலங்குடிசெப்பும்வேலைதேசபாத்ரனோக்குகாலமூலமும், வந்தவித்தைபாயுவாண்மைகேண்மையோடியாவையும் வாய்த்திடத்தெரிந்தபின்புபெண்கொடுப்பர்மண்ணுளோர், நந்தமுற்றசெல்வமானகன்னிதானநல்குவீர் நல்லபாத்திரந்தெரிந்துநல்குவீரெனச்சொனுண்,முந்துசந்த்ரவதனிசொன்மகிழ்ந்துமன்னன்மொழிகுவான்முறைமையுன்றனெண்ணவண்ணமுற்றுமுற்றதென்றரோ. [ ]

எனதுநெஞ்சமிகவிசைந்தியாவுநீயியற்றுவா யெண்கணேனுமீங்குளானவன்சொல்வாறுமீதெனு, மனமுவந்துரைத்துவேதன்முன்புவந்துதனதுநன்மனைமொழிந்தபடிசொலாதுநிற்கவேதன்மொழிகுவா,னுனதின்மாதுபுகலும்வாய்மைமுன்னுணர்ந்துளோமியா முற்றவீதுதேவர்மாட்டுரைப்பதன்றுமனிதர்பால், வினவுகின்றதிவர்கடாமயோனிதன்னில்வந்துளார் மேவுதந்தைதாயிலார்கள்குலம்விளம்புமாறென்னே. (உச)

அந்தநீதியிவர்களுக்கடுத்திடாதுபெறுமுன்னுறுமெவு கருவிலுற்பவித்தபேர்கள்போலலா, ரெந்தநாளுமீரிரண்டுபெருவமுற்றுளானிவ னிறைவரீசர்பூசைநேசனிந்தலோகமுழுதுமே, முந்துபேரறங்கள்காத்தளிப்பனிங்கிவன்குண மொழியுநீதியாவருக்குமுற்றுறுதெனப்பிதா, வந்தவாறுசொல்லுமிந்தவேலைபாலன்மதனவென் மனமிலச்சையுறவடுத்தவுருவெடுத்துமருவினான். (௨௫)

அன்னவாறுகண்டுசித்ரகேதுமன்னர்மன்னவ னடங்கிடாதகாதல்கொண்டுமாற்றமொன்றுமன்றியே, முன்னர்நின்றமந்திரத்தர்தமையழைத்துநமதுபெண் முதன்மைகொண்டமணமதற்குமுரசறைந்துவரிசைகள், சொன்னயாவுமேயமைப்பிரென்றபின்னரயனொடுந் தொண்டர்ச்சையாவுநல்குசோதிபூசையாற்றியே, கன்னிதானகடிமணத்தின்விதிகள்யாவுமுறைசெய்வான் காமதேவனுருவுகொண்டபாலன்மேன்மைகண்டுளான். (௨௬)

கயிலையுற்றபரமனிந்தவுருவுகொண்டுநாம்பெறுங் கன்னிதன்னைமணமிசைந்துவந்ததென்றுகருதினான், மயிலையொத்தவியலிமன்னன்மகளும்வந்துகண்டனன் மதனையொத்தகணவனென்றுமனதிலிச்சையாயினா, ளபிலையொத்தகண்ணியுள்ளுவந்ததன்குறிப்பையே யருகுநின்றசேடியர்க்குமறிவுறப்பயிற்றினாள், செயல்படைத்தவிதிதனோடுமரசன்வந்துகாலையாஞ் சீர்படைத்தவாலன்முன்புதெரியுமாறுசெப்புவான். [௨௭]

மணமுமக்கியன்றகாலம்வந்ததிங்கதற்குநீர் மன்னவர்க்கியன்றிடுஞ்சடங்குசெய்யவருதிரென், றிணர்கொண்மாலையரசனோடுபிரமனின்றிசைக்கவே யெழுந்துநீறணிந்தரகராசிவசிவாவெனாக், கலைகொள்வேகமோடுரேவநதியதன்கரைக்கணே கடிதடைந்துநீரின்மூழ்கிக்கண்டிபுண்டரந்தரித், துணரொணாவிலிங்கபூசைவில்வநல்லதேடியே யோதொணாதகாதலோடுஞற்றிவீற்றிருந்தனன். (௨௮)

வேறு.

அயனுடனேயரசுமவன்சென்றதுகண்டாச்சரியமடைந்தாரினொன், செயலிதுவோவிதியுள்ளபடியிருக்குநம்மகட்குத்திருந்துகேள்வ, னியலுடையோன்யாவனெனமன்னன்றான்கவலுற்றா னிவனுக்கேயென், …ருபின்மொழியைக்கொடுப்பனிவர்மணவினைபார்த்திடவுமென்கண்கூடுமேயோ. (௨௯)

மானிலத்தின்மானிடர்க்குக்கனகமணிப்பூண்பூணமனமுண்டாமா
ல… னபரிசிவற்கின்றால்விரதவயிராக்கியனுக்கரிவைமோகந்
தாறுறுமோநம்புதல்விபெண்கள்சிகாமணியுமொருதலைவற்சேர்ந்தே
…னமிலாவின்பநலமென்றுறுமோவெனவரசனியம்பினானால். (௩௰)

…லப்புலம்புமரசனைப்பார்த்தயன்புகல்வானெம்பிரானிருதாள்போற்று
…த்தினருக்கிதங்கொடுப்பதேயவர்க்குந்தொழிலரசமதியினாலே

நினைத்தபடிமுற்றுறுமற்றவர்நாமப்பயனுமதுநிகழ்த்தவேண்டா
வனைத்தையுமுண்டாக்கிமுற்றுநடத்திடுமோநாதிமுத்தராதலானும். (ஙக)

தவமுனிவரிதயபூசனையுவக்குமுழுதுணர்ந்தநம்பிரானு
ரவரருளாற்சித்தியாதனவுமுண்டோவெனச்சூட்சியமையப்பேசிக்
கவலையுறுமரசொடடியவ்வாலனிருகரம்பிடித்துக்காதல்கூர்ந்தே
புவனைபெறவினையவாதரவோடுமவன்முகம்பார்த்துரைக்கின்றானால். ()

சங்கரனைப்பூசைபுரிதுங்கனுமரசனிவன்றனதுபெண்ணை
மங்களமாவுமக்கருளமனம்வைத்தானீருமேமனம்வைத்தீரா
லிங்கிவனுமுமைப்போலச்சிவன்மகிழுநருமதாவிலிங்கபூசை
பொங்குபத்தியுடன்பரிந்துபுரிந்துநாடொறும்போதுபோக்குவானால். ()

தவமுனிவர்தாமுமொருமாதர்மணம்புணர்ந்துளார்சங்கரன்றன்
சிவதன்மமதற்கிதனல்விபரீதஞ்சேர்வதிலைச்சைவசீலத்
துவமையிலாப்பெண்ணரசைமணம்புரியிற்சிவபூசைக்குறுதியன்றோ
வவள்பூசையுபகரணங்கொடுப்பதற்கேபதிகாரியாகுமன்றே. [ஙச]

ஆங்கவளாலிதமன்றிவேறில்லைபன்னவள்பூப்புற்றாற்போகம்
பாங்குடனேநுகர்ந்திடுவோன்சிவன்றனக்கற்பிதம்புரியிற்பத்தனுவா
னோங்குலகில்பார்மாதர்மணம்புணரார்யாவர்களுமுற்றுளாராற்
நீங்கறுமாதவர்தேவரிந்திரன்மானவக்கிரகஞ்சேடன்முன்னோர். (ஙரு)

கணபதிவேள்வீரபத்ரன்காலவயிரவனந்திதண்டிபிங்கி
குணமுறுவெங்கணநாதரிவரெல்லாமணம்புணர்ந்துகுடிப்பட்டரான்
மணமகளில்லாதிருந்தால்யாகதானங்களொன்றும்வாய்த்திடாதாங்
கிணமுறுநற்சிவயோகஞ்சேயினுமியால்விபரீதஞ்சேர்ந்திடாதே. (ஙசு)

நானவத்தம்புகன்றிலேனென்வார்த்தையுறுதியதாநயத்திற்சொன்னேன், றேனனையமொழிமாதைமணம்புணர்வீரெனவேதன் செப்பலோடும், வேனில்வேளனும்பாலன்மொழிந்திடுவான்வீரமின்னார்மிக்கபோகந், தானதருமமும்வேண்டேன்வேண்டியதென்னென்றிடில்யான்சாற்றக்கேளிர். (ஙஎ)

வெண்டிருநீறுருத்திராக்கத்துடனைந்தெழுத்திலிங்கமிவையேவேண்டு
மண்டுமுயிர்விடுங்காலேமனைவியராலாவதென்னேமனத்திலாசை
கொண்டிலன்யான்வத்திரபூடணந்தனமுங்குறித்திலேன்வருத்தங்கூர்த
லுண்டதனாலாவதென்முற்பிறப்பின்மின்னாரனேகர்மணமுற்றுளேனால்.

அனையமின்னாருடன்கூடிவாழுனும்வீணாளாயடலுங்குன்றி
யினையுறுங்காலத்தேனுமறியாதாயினுஞ்சிவனையிறைஞ்சிலேனால்
வனைதருகுங்குமகளபகத்தூரிநாவியிளமானார்தங்கள்
புனைபுளகமுலைப்பூசியெனதுதோளினும்பூசிப்புல்கினேனே. (ஙஅ)

வேதமும்வேதப்பொருள்களுணர்ந்தார்தாமுமேதினியையீன்றருள்காரணிநீயென்று, மோதரியவாதிவித்தைசமுதல்வியென்றுமுணர்ந்தென்னைத்தியானித்தேதபணிந்தோரெல்லா,நாதவுன்றன்றிருவருளினாலேயென்றோராடரியமுத்திதனினண்ணியுற்றா, ராதலினானம்மன்னையாள்மேன்மையாளென்றறிந்திங்கவரும்பொருளுமறைகுவாயே. [௧௨]

அந்தரங்கம்யாவையுமேயறியவல்லாளாதலாற்களத்திரமேயுரியளாறா, ளந்தரகசியமுமெனக்கியம்பலாகுமிருநிலத்தின்மணவாளராயினார்கள், வந்தவருட்பண்டமெல்லாந்தாரமென்றேவைத்திடுவரதுபுவியில்வழக்கமன்றோ, முந்துமனையாள்கணவனிதயம்போலமொழிப்படியேநடப்பதுவுமுறைமையாமே. [௧௩]

உரிமையாமென்னிடத்திற்றயவின்றேனுமுய்மிடத்தின்மோகமெனக்கொழிவதுண்டோ, பெருகுபிழைபுரியும்விளையாடல்வேண்டாபேதையேனிடத்தருளின்பிரியம்வைப்பீர்,மருவுமதிரகசியமெற்குரைத்திடீரேன்மாமணியுநிதியமுமேன்வழங்கல்செய்தீ, ரருணமெபறுமுமதுடலிற்பாதிதந்திரதுகொடுநான்சங்கையற்றேயிருக்கின்றேனே. [௧௪]

மானிலத்திற்கொடுக்கவல்லாருமைப்போலுண்டோமறுவற்றீர்மறுவுற்றமதியைவைத்தீ, ரானதொருகோபவிடநாகம்பூண்டீரடுங்காளந்தரித்திருண்டகண்டரானீ,ரூனமுளகுற்றமிவைபொறுத்தீருமையுற்றவென்குற்றமும்பொறுத்தாற்சேதமுண்டோ, பேனமுறுமுவர்த்தெண்ணீர்முகந்துமேகம்பேருலகிலெவ்விடத்தும்பெய்யுமன்றே. [௧௫]

மைந்தர்களும்யானுமேபயந்தீர்ந்துய்யமரணதுக்கப்பிணிதணிக்கவல்லநல்ல, வந்தமருந்ததுசொல்லலாகாதேனுமறைகுவீரெனலோடுமண்ணல்சொல்வான், சிந்தையிலாதரவுனக்கித்தனைதானுற்றாய்செப்பிடுதுஞ்சிவபதமாமிரண்டெழுத்து, முந்துமருமறைமுனிவர்தேவரெல்லாமொழிந்துமுத்தியடைந்திடவேவைத்ததென்பான். (௧௬)

அந்தரியேயிந்தவிரண்டெழுத்தாந்தெய்வவிடநீபடைந்துசுகத்திருத்தியாகின், முந்துமக்கதுபிரியமாகுமென்றேமொழியிதனைரகசியமாவைத்திருந்தோ, மிந்தவருஞ்சிவபதமாமமிர்தந்தன்னையிடைவிடாதோவினைக்கப்பெற்றோன், வெந்திறதீப்பவநீங்கியின்பஞ்சேர்வன்மிகுமிவற்றினொருகாதைவிளம்பக்கேண்மோ. (௧௭)

விந்தவளநாட்டொருசூத்திரகுலத்தோன்விப்பிரர்தம்வேடமேற்கொண்டுசென்றே,முந்துமவர்மனைதொறும்போய்ச்சஞ்சரிப்பான்மூர்க்கனவன்செயும்பாவமொழிவதற்கே,யந்தமலரயன்சித்ரகுத்ரரோடுமந்தகனுமறிந்திடான்வதிகடோறும், வந்துகரந்துறைந்துவாள்கொடுகுறைத்தேமறையவர்களுயிரொடுகைப்பொருளுங்கொள்வான். (௧௮)

அப்பொருளான்மதுபானஞ்செய்வான்பெற்றவன்னையுடன்புணர்ந்தோரன்பெண்ணும்பெற்றான், செப்பருமப்புதல்வியிளம்பருவமேவந்து

சேர்ந்தவுடன்புணர்ந்துபெண்கள்சிலரைப்பெற்று, னெப்பொழுதுமாவி றைச்சியுள்ளிமுன்னுமிழுக்குடையவுண்டிநுகரிச்சையாள, ளெப்பரியப ருவகாலத்திலேனுமுயர்நதியினீராடவுற்றிலானே. (௧௯)

சிவதலஞ்சேவித்திடச்செல்வார்களோடுஞ்சேர்ந்தொருவார்த்தைகளே னுஞ்செப்புகில்லா, னவமுறுபாவங்களெல்லாந்தீர்க்கவல்லவரனுமம்புக ல்வார்வாய்க்கேட்டுமில்லான்,கவலேயறுஞ்சிவயோகத்தவரைக்கண்ணிற் கண்டறியான்வில்வதருக்களேயுங்காணான்,றவறிலவைவளர்த்தறியான்சி வத்துரோகஞ்சைவர்தமக்கபராதந்தான்செய்வானல். (௨0)

பூதியுடன்கண்டிவடம்புனேயகில்லான்புனேந்தவரைக்கண்டறியா னவற்றின்பேரு, மோதியிலானெஞ்சிலவையொருகாலுன்னிலொழியா தகொடும்பாவமொழியுமன்றே,காதலுடன்பிரதோடபூசைசெய்வோர்க் கண்டறியானுலயத்திலுருத்ரகன்னி, மாதரைப்பார்த்திடவேனுஞ்செல லகில்லான்வாழ்பரதாரம்பார்க்கும்வாஞ்சையோனே. [௨௧]

இப்படிபாவங்களிற்றனற்பவாணுளேகவேபுரிந்துதாம்வளர்த்துற்று னுஞ், செப்பருந்தீவினேபுரியுமவர்க்குக்கற்பிற்சிதைந்துமூக்கரியுண்டா ள்பனவப்பாவை, யொப்புடன்வந்துறுமனேவியாளுளன்னுளுடலமெங் குஞ்சீயுதிரமொழுகும்புண்ணு, ளப்படிதுற்கந்தமுடையவடன்மீதிலா சைகொண்டுபின்னுள்சேர்ந்தமர்ந்தானன்றே. [௨௨]

அவன்மரணமுறுங்காலம்வந்ததந்தவரிவைபார்ப்பனமடந்தையவ டான்கண்டாள், கவலேயுற்றேயழுகின்றுளந்தோவென்றுற்கந்தமாம்வடி வத்தைக்கண்டோரெல்லாம்,புவியதனிலக்லப்போவென்றேநாசிபுதைத் தெனேயேதுரத்தினரென்புண்காயத்தை, யுவகையுடனணேத்தனேயேயி னியாருன்போலுன்னுடனுனிறப்பனென்றேயுற்றுளன்றே. (௨௩)

அப்போதுசைவசீலத்தராநம்மருந்தவத்தோர்சிவபூசைசெய்யுமன் ப, ரொப்போதிலாதகண்டிபூதிபூண்டோருரியதம்புத்திரியினுடன்வழிச் செல்கின்றுர், செப்போகையுடன்சிவையேநெறிபார்த்தேகாயென்றன ரவ்வார்த்தையவன்செவியிற்செல்லத், தப்போதிலாததொண்டர்மெய்யி ற்பூதிக்காற்றுமேயவன்மெய்யிற்சார்ந்ததன்றே. [௨௪]

அன்னவனேக்கொடுபோகவருங்காற்றூதரவனுடலின்முடைநாற்ற மாற்றுரங்கட், டுன்னவேயருவருத்தப்புறத்தினின்றேசொல்கின்றுர் கொடும்பாவிதுற்கந்தத்தின், மன்னியதேகத்தவனேப்பாசந்தன்னுல்வரி ந்துதண்டத்தாலடித்துப்பிடித்துக்கொண்டே, தென்னிலங்காவலன்மு ன்னங்கொடுபோயின்றுவிடுவெதவ்வாறென்றுநின்றுசிந்திக்கின்றுர். ()

தூதரெனவொருவன்சேவைகள்செய்வோர்க்குத்துக்கமன்றிச்சுக மடைவதொன்றுமின்றே, யாதவினுனமக்கிவன்பொல்லாத்தேகத்தினரு குசென்றுபிடித்திடவந்தடுத்ததன்றே, மேதினியிலிவனேப்போற்பாவஞ் செய்தோர்விளம்பிடிலெத்தனேபெயரோவிவர்களெல்லா,மோதுநமனுல கமல்லாலெங்குப்போவாருறுநாகயாதனேக்குமொழிவுண்டாமோ.[௨௬]

கூற்றனுமிங்கிவன்பாவமறிந்துதிட்டங்கூறிடமாட்டான்கண்டாற் கோபங்கொள்வான், மாற்றருமக்கினிகுண்டம்பாம்புதேள்கண்மன்னி யவெந்நரகத்திற்றள்ளியின்னோ, னாற்றியபாவந்தன்னாற்கும்பிபாகமதனிலுமிட்டேவறுப்பனந்தோவென்றே, சாற்றரும்பாவியைபிடிப்போமென்றுசீறிச்சார்வார்பின்வாங்குவர்தள்ளாடுவாரே. (௨௭)

வெம்புகொடும்பாவமாங்காட்டையந்தவேலைதனையப்பொருப்பை நீர்த்தூளாக, வும்பர்பிரான்சிவனாமங்காட்டுத்தீயுமுயர்வடவையிடியும் போல்வைத்ததன்றோ, சம்புவின்றன்பெயராகுமிரண்டெழுத்துமொரு தரஞ்சாற்றிடிற்கோடிபவந்தானீங்கி, யும்பருஞ்சேர்வரியமுத்திசேர்வரிங் கவுண்மையிவன்பெற்றதுண்டோதெரியாதென்பார். (௨௮)

நாவதனிற்சிவநாமவமிர்தந்தன்னைநனைத்திடார்நற்கதிப்பேறடைவ தின்றாம், பூவதனிலிதுவேசெய்தொழிலாப்போதுபோக்குவோன்றேவர் வந்துபூசைசெய்ய, மேவுகின்றோன்வேதமுடிப்படியேசொல்லுமிக்க வொளியாணிமுத்தாஞ்சிவநாமத்தை, யாவனெனினும்மனத்தானினை யானாகில்யாதொருகாலத்தளவுந்துயரந்தீரான். [௨௯]

ஒருக்காலுமோரிடத்துமெவன்பாலுற்றுமுலையுமிந்தத்தடுமாற்றமு ற்றிலோமே, பெருக்காமிப்பாவியைப்பற்றிடவொட்டாமற்பெருமலைவு பிறப்பதனாலிறும்பூதேதோ, விருக்காலுமறியாதசிவகடாட்சமெப்படிவ ந்துற்றதுண்டோதெரியாதென்றே, வெருக்கோடுகின்றுநின்றப்புறமும் போகார்மேவியடுக்கவுமாட்டார்மெலிகின்றாரால். [௩0]

இறைவர்திருப்பெயரனந்தமுற்றவேனுமிரண்டெழுத்துக்கிணையா கவியம்பப்போமோ, பிறையணிந்தோனுருவாமிவ்விரண்டெழுத்துமித னிடைச்சம்புவுமிகவும்பிரியராவா, ரறைதருசிவாவென்னும்வார்த்தை தானேயமலனார்சிவபதமாயமர்ந்ததன்றே, முறையிலானிவனிதனைக்கே ட்டதுண்டோமுழுப்பாவிக்கிவ்வாறுமுற்றிற்றென்பார். [௩௧]

அம்பிகாபதிநாமவமிர்தபானமாகம்பூரித்திடவுண்டமலன்முன்னர்க், கம்பிதமாய்நின்றுமவன்றன்பாதங்கண்டுதொழவேண்டுமென்றுகம லன்மாய, னும்பர்பதிமுதலமரர்விரும்புவாரவ்வுத்தமனைப்பெற்றவரே செல்வராவார், நம்பனடியார்பாதசேவைதானேநண்ணரியபுத்திமுத்திந ல்குமன்றே. (௩௨)

மூவுலகுஞ்சிவநாமந்தனக்குநேராமொழிவதனுக்கொன்றுண்டோ வரையின்சாரன், மேவியிருந்தருந்தவங்கள்புரியும்பேறுமிக்கவிதற்கிணை யாகவிளம்பலாமோ, நாவில்வைநவின்றிடாமேதனடாவாணாளவமாப்போ க்குகின்றீர்சனங்களேயோ, தேவபிரான்றிருநாமம்புகலுஞ்சைவதேசிக னைவணங்கானைச்சுடுங்கண்டீரே. [௩௩]

அரனாமம்புகலாதானாவுங்கேளாவர்செவியுஞ்சுணங்கனுஞ்செவியே யாகும், பரமனீறுதிதரியாததேகம்பார்மடந்தைபெடுக்கரியபாரமாகும்,

விரவுசிவபதம்விருப்புஞ்செல்வமெல்லாமேவுகின்றவிடமாகுமுயிராவந் தருமிடமாமேலானமுத்திவீடுதாமிருக்கு மிடமெனவுஞ்சாற்றலாமே. [ருசு]

மறையோடுமுனிவருஞ்சிவபதத்தின்மகிமைதனையறிந்திடவேமாட்டாரன்பே, நிறைஞானங்கொடுத்திடுமெந்நாமமேன்மைநிமலனவனறிவனெந்தலோகத்தேனு, மறையுமதிரகசியமுமமுதபானமாவதுவுமிவையன்றிப்பிறிதொன்றில்லை, யிறைநாமவருச்சனைசெய்தாற்பொற்பாதவின்னருளாலானந்தமெய்துவாரே. [ருரு]

பரமமுத்திதந்தருளுஞ்சிவநாமத்தின்பரிசறியோம்பகர்ந்திடவுங்கேட்டிலோமாற், செரைமரணநீக்கவேயரனுண்டாக்குந் திருப்பெயரிங்கிதைச்சொல்லார்கற்பகால, நரகுறுவருண்மைபேயிந்தவாய்மைநாமத்திவன்றுனென்றுற்றுனுகு, முரமுடைநாமிவன்பாற்செல்லாமைக்கேதுவொன்றிலையென்றேதூதரோதுகின்றார். [ருசா]

சங்கரன்றனுமங்கள்பகர்ந்துகொண்டேசமன்முன்னர்வந்தடைந்தார்சாற்றுகின்றார், பொங்குபுவிதனிற்பவத்தாற்சுறுத்தமெய்யான்புகல்சனங்கட்கிடரிழைக்குப்புன்கணுள, னங்கமெலாந்துற்கந்தவிரணமுள்ளானழிபனவப்பாவையுடன்கூடியுற்றுன், மங்குமவனருகுசென்றேமவன்றனுவிவாங்கவெம்மான்முடியாமல்வந்தேமென்றுர். (ருஎ)

பிறந்திறக்கும்பிணிதீர்க்குமருந்ததானபெருமான்றன்றிருநாமம்பேசகில்லான்,சிறந்தசிவன்பதநினையான்கண்டியோடுதிருநீறுபுனைந்திலான்கொடியபாவி, பிறந்திடும்போதவனருகினுற்றேமேதோவெமதுளத்தில்வெருவரல்வந்தெய்தவந்தோ, மறந்தழைக்குமரசேயென்றுரைத்தபோதிலந்தகன்சித்திரகுத்தர்க்கரைகின்றுனல். [ருஅ]

ஆங்கவன்யாரெனக்கேட்டவுடனேசொல்வாரறைந்தூதர்கள்வார்த்தைமெய்ம்மையாகுந், தீங்குபுரியவன்பாவமளவேவில்லைதீர்க்கும்வகைபரிகாரந்தானுமில்லை, யோங்குபுவிமணலணுவையெண்ணினுலுமுற்றவவன்செயும்பாவமெணக்கூடாதாற், ருங்குறுநெற்றியிற்பூதியங்கந்தன்னிற்சங்கரன்கண்மணிமாலைதரித்திலானே. (ருகூ)

நினைத்ததுவுமிலன்காலகாலனுமமருச்சனைவார்த்தையுமில்லைநிமலன்றன்பேர்,தனைத்துதித்தவுடன்பிரமகத்தியாதிதனிப்பாவபஞ்சிமலைசாம்பராமென், றனைத்துளவேதமுங்கூறுமதனைச்சற்றுமறிந்திலாரெளிதாகவரனைப்பூசித், தெனைத்துளபோகமும்பொசித்தேதமுத்திசேராரீனர்நரகத்துறுவரெனச்சொன்னுரால். [சு௦]

நான்மறையின்சாரமாம்வார்த்தைகேட்டுநமன்மகிழ்ந்துசித்திரகுத்திரரைநோக்கித்,தேன்மலியுங்கொன்றையான்சிவனுமத்தின்றிறமறிந்துசெப்பவல்லாருமைப்போலுண்டோ, வான்மகிழும்சிவனுமஞ்சனனமாகுமறிகடலைக்கடத்திவிடுந்தோணியன்றே, மேன்மைபெறுமிதன்மகிமைகேட்கின்முத்தியெனவுரைப்பப்பின்னுமவர்விளம்பலுற்றுர்.[சுக)

தருமமேவந்தேபந்தச்சூத்திரன்றான் றனிகிடந்தவிடத்தினுக்குச்சேனாதாக, வொருவில்வமுள்ளதுமந்தாரையாதியுபர்மரஞ்சூழ்பொதும்பர்மேனுடைப்பாங்கர்ப், பெருமைபெறுமாலயமொன்றதனைச்சூழப்பெருந்தைசவசீலத்துப்பெரியராஞேர், மருவுவர்சம்மனைகளோடுமாங்கனேகவொருசெல்வர்புதல்வியொடும்வழிச்செல்வாரால். [சஉ]

செல்கின்றவவருடன்சென்மகனைநோக்கிச்சிவையோன்னெறிபார்த்தேகென்றுரைச்சொ, லொல்கின்றசூத்திரன்றன்காதிற்புக்கதுயிர்விடுங்காலத்திலதுகேட்கப்பெற்றான், மல்கின்றபாவங்களெல்லாம்போக்கும் வள்ளலார்நாமங்கேட்டதனுற்றூதர், புல்கின்றிலாரென்றபோதுகாலன்புனல்வருணனெனுடுமவன்பாற்போயினனால். [சரு]

வருணனைக்கொண்டவனுடலைப்புனிதமாக்கி வானவர்களோடுஞ்சித்ரகுத்தரோடுந், தருமனவனருகில்வந்துவில்வமாலை சாத்திவணங்கினனந்தச்சமைபந்தன்னி, லருகுமவனங்கத்தினூடேகின்றுமாகமுநாக்கும்மூக்கும்வாலுந்தீந்த, கருகுகருநாகங்களநேககோடிகாணுறவேபுறத்தில்வந்துமாண்டகண்டார். [சச]

அதிசயமுற்றவர்நின்றாரந்தப்போதிலவைகாணவயனுடன்மாலாங்குவந்தான், றுதிபெறுமாயனைவணங்கிப்புதுமையீதுசொல்லுமெனயமன்கேட்கச்சொல்லுகின்றான், கதிதருமெய்ச்சிவனுமந்தன்னை*பாவற்காலத்திலிவன்செவியிற்புகவேபெற்றான்,விதிமுறையிற்புண்ணியத்தாற்செய்தபாவவினையரவினுருவின்வந்துவீந்ததன்றே. [சரு]

இங்கிதனுலிவன்புனிதனுகப்பெற்றானிவனம்மால்வணங்கலுறுந்தகையனுனன், பங்கமுறுமிவன்பாவகோடியெல்லாம்பரமசிவனுமமேபோக்கிற்றன்றே, யங்கதுமாத்திரமன்றாற்சிவன்முன்னேகியானந்தநடம்புரிவனிவன்றான்கண்டீர், பொங்குமிவன்புண்ணியத்துக்களவோவிவ்வுலப்புவிதனின்மற்றுளதருமம்பலபோலன்றால். [சசு]

அவைகளினின்பங்கனுகர்ந்தொழிந்தபின்னாருகிரையத்துறுசனனமொழிதயின்னஞ், சிவநாமபானந்தானவைபோலன்றாற்செனனமரணத்துக்கச்சிறையைநீக்கு, முவமையிலாவப்பெயரைநினைக்கிற்கேட்கிலோதிடிற்பாபப்பகைகளெல்லாமோட்டித், தவமுதல்வனுகுமாதிக்கைலகுஞ்சாற்றரியபேரின்பந்தருங்கண்டாயே. [சஎ]

சகலமுனிவோர்தேவர்நாகருண்ணுஞ்சாற்றருமாரமுதிதுவேயிதனையுண்ணார், புகலருஞ்சென்மக்கடலிலழுந்துவார்கள்போற்றருநற்கதிபெறவேவேண்டினோர்க, ளகமகிழந்துசந்ததமுஞ்சிந்திப்பாரென்றருமறையுமரும்பொருளையறிந்தோர்தாமு, மிகவுமெடுத்துரைப்ப ரிதுவல்லான்மேல்வீடுதரும்புண்ணியம்வேறில்லையன்றே. [சஅ]

* ஆவற்காலம் - இறுதிநாள்.

சிந்தைமகிழ்சிவநாமமகிமையிந்துசேகரனல்லாலொருவரறிவாரில்லை, வந்தவிதையறிந்தோரையாமெல்லோரும்வந்திப்போமறையின்முடிமணியதாகு, மிந்நாமத்தையரனருளினாலேயாம்வணங்குவோமெவரும்பணிவதீதே, முந்துதவம்வருத்தமல்லாலிதனைப்போலமுத்திநலந்தரவெளிதொன்றில்லையாமே. [௪௯]

அரும்பாவிபெறவரிதுதருமசிலரடைந்திடுவர்சிவனாமமிதனைநீத்தே, பொருந்துறுகாயம்வருந்தத்தவங்களாற்றிப்போகம் வேண்டிடுவோர்கையுற்றதேனை, வருந்தியெழுமகவினுக்குக்கொடுத்திடாமல் வனத்தினிற்போய்க்கொணர்ந்திடவேசென்றவேட, னிருந்தபடுகுழிமுள்ளில்வீழ்ந்தல்போலவிரும்பிறவியிடர்க்கடல்வீழ்ந்தழுந்துவாரே. [௫0]

சாற்றரியசிவநாமம்பிறவிநோய்க்குச்சஞ்சீவியெனமாயன்சாற்றலோடுங், கூற்றுவனுமுளமகிழ்ந்தானயனோடே மால்குற்றுயிராய்க்கிடக்கின்றோன்றன்னைப்போற்றி, யேற்றமுடன்முன்னின்றேயியம்புகின்றானெம்பிரான்சிவநாமமிறக்கும்போதி, லூற்றமொடுஞ்செவியுறவேபெற்றாயுன்போலொருவருண்டோநீசிவனுக்குரியோனென்பான். [௫௧]

உன்னைநான்சிவனெனவேபாவிக்கின்றேனுனக்கிணையா வுலகத்திலொருவரில்லைப்,பன்னுமனத்தினிற்றோன்றும்படிபாவங்கள்பண்ணியதல்லாற்றருமஞ்செய்திலாயே, யின்னிலையுற்றனையிறக்குங்காலந்தன்னினிறைவர்சிவநாமங்காதுறப்பெற்றாயா, லன்னதனாற்செயும்பாவமெல்லாநீங்கியம்புவியிற்சீவன்முத்தனெனவுற்றாயே. [௫௨]

மனைமனைவிசெல்வமெல்லாநீத்துக்கானின்மலைமுழைஞ்சு தனிலிருந்தேதவங்களாற்று, முனைவருக்குங்கிடையாதசிவனாமந்தான்முடியுங்காற்பெற்றனையாலருள்பெற்றோரி, லுனைநிகரார்முக்கண்ண னுருவஞ்சார்வாயூற்றமுடனிருக்குங்காலரனமத்தி, னினைவுறினுமரணமுறுங்காலந்தன்னினினைத்திடச்சொற்றிடக்கேட்கநிகழ்ந்திடாதே. [௫௩]

ஆங்கதுதானேதினாலென்னிற்பாசத்தவராழூகைகோழைநெஞ்சையடைத்துக்கோற, நீங்குறுபாவச்செயலாற்சித்தியாதாற்றிருவருள்பெற்றுடையோர்க்குச்சிவலிங்கத்தின், பாங்குபெறுதரிசனமெய்ப்பூதிகண்டிபரிவுடனேபுனைதல்சிவபற்கவீச, வோங்குமிந்துசேகரமாதேவவென்றேயோதிடக்கேட்கவும்பெறுவருண்மையாமே. (௫௪)

சங்கரலிங்கத்திற்பூசனைசெய்வோர்கடாண்மலர்நஞ் சென்னியின்மேற்றரிப்பவாமாற், பங்கமுறுமரணகாலத்திலீசன்பதிகனைக்கக்கேட்கவடையாளம்பூண, விங்கிவர்பெற்றவர்முத்தியடைவரல்லாரெய்திலர்நிச்சயஞ்சிவன்றாளறியவென்றே, செங்கண்மால்கையெடுத்துப்புகன்றுநின்றான்சேயிழைநங்கணத்தரங்குச்சென்றானன்றே. (௫௫)

மாணிக்கமானமுங்கொண்டணைந்தநந்தமாகணத்தர்தமைமாயனயனுங்கண்டே, சேணிற்சென்றடிவணங்கிப்பத்தியோடுஞ் சிதமொழியுட

னெங்கேசெல்விரென்றார், காணுற்றகணங்கள்சொல்வாரிவன்முன்செய் ததருதருநற்புண்ணியத்தான்மரணகாலைப், பூணுற்றசிவனுமஞ்சைவர்வாக்காற்பொழிபமுதமெனச்செவியிற்புகப்பெற்றானே. (௫௬)

அதனுலிங்கிவனையண்ணலருளினுலேயரதனமானத்தேற்றியமரர்போற்ற, முதலாருங்கைலைவரையெம்பிரான்றன்முன்கொடுபோய் விடவத்தோமைந்தீநாப்பண், பதமூன்றிநின்றுதவம்புரிந்தோர்க்கேனும்பரியுயிர்போங்காலரியபரமனும, "முதவலரிதந்நாமம்பொருள்கட்கெல்லாமுட்பொருளாமபீட்டமெல்லாமுதவுந்தானே. (௫௭)

நம்பனுர்சிவநாமமகிதிக்குநேராய்நவகிதியுமொப்பலவாஞேர்கள்கேட்டீர், நும்பரிவுபெறும்பூசைபெற்றுளேரனைகொடிவரையிற் சிவன்முனங்கொண்டேகுவோமென், றம்பொனொளிர்தெய்வவுருவவனுக்கீந்தேபரதனவிமானத்தின்மிசையினேற்றி, யிம்பர்கொடுவந்தனர்நங்கணத்தர்நங்காயிருஞ்சிவநாமத்தியற்கையீதாமன்றே (௫அ)

அம்பிகையேசிவநாமவமுதபானமருந்துமருந்தவர்நமக்காவசியமாவா, ரெம்பெயரிவிதுவேயந்தரங்கமானரகசியமாஞ்சைவமணிமனக்கொளென்றே, நம்பனுரைத்திடக்கேட்டிப்படியோவென்றுநாயகிதானறிந்துசிவநாமந்தன்ன, லும்பர்பிரான்றனைப்பூசைசெய்தாளென்ன நந்திவிசுவாவசுவுக்குரைத்தானன்றே. (௫௯)

மீண்டுமுரைப்பான்முத்திவிளைப்பதற்கேவித்தாகு மிதுவன்றிவேறென்றில்லைக், காண்டகுசங்கரன்பூசைசுகமேல்குங்காதலினுலதையியற்றவேண்டுமென்ற, வாண்டகைநந்தியைவிசுவாவசுவென்போன்வீழ்ந்தடியிறைஞ்சித்தோத்திரஞ்செய்தறைகின்றான், னீண்டசடைவிசுவேசன்பூசையாற்றிநிகரில்கணுதிபரானீர்நீரேயென்பான். (௬0)

உமதுபதபூசைபுரிவோர்கடாமேயுமைபாகன்றிருவருளான்முத்திசேர்வா, ரமலனடியார்கடமைப்பூசைசெய்தாலரன்பூசைபுரிந்ததுவேயாகுமன்றே, விமலனுக்கப்படியன்றோவன்பர்தம்பான்மேவிய மெய்க்கருணையந்தவடியாரோடு, மமர்தருநற்சகவாசஞ்சிவபுராணவமுதவாரியைநிகர்ப்பதாகுமன்றே. (௬௧)

துங்கமுறுசங்கரனைப்பூசைசெய்வோன்சுரனவனுகிலுமசுரனுகிலுந்தா, னங்கவனைத்தேவரெல்லாம்வந்திப்பாராலரியதொருசிவயோகராகுநந்தஞ், சங்கதரிசனஞ்சிவன்றனருளாலுற்றேன்சாற்றரியவமுதுபதந்தயிடேகஞ்செய், மங்களமாம்புனல்பருகிமேற்றெளிந்தேன் மனையுடனேகுலந்தழையவாழ்வுற்றேனே. (௬௨)

முன்னுநான்சிவபுராணங்கள்கேட்டமுதன்மைதருந் தருமந்நாலன்றேவின்றும், பன்னுமன்றன்வாக்கமுததாரைவாக்கப்பரிவினுடன்செவிவாயாற்பருகலானேன், றுன்னியசென்மங்கடோறுமிளமைமேவுந்

தோகையன்னார்மோகவலைச்சிமிழ்ப்புற்றேய்ந்தே, னன்னபோதான்பூ
சையாற்றிலேனலைபவுன்றனருளினின்றுசெய்யப்பெறறேன். (௬௩)

இப்பிறப்பிற்புனிதனேயாயினேன்யானிக்கதைகேட்டோர்களெல்
லாமிறைவனார்த, மொப்பரியசிவநாமமோதினாலுமுயர்நாமமகிமையினா
ற்கதிப்பேறுற்றா, ரப்பரிசால்யானுமுத்திசேர்வேனென்றேயந்தவிசுவாவ
சுவாங்கந்தர்ப்பன்றான், செப்பினனப்பருங்கயிலைகாவல்பூண்ட திருநந்
திதேவனுளமகிழ்தர்த்தானே. (௬௪)

இருபதாவது சிவநாமமகிமைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௭௨௬.



இருபத்தோன்றாவது,

# பெண்மணிசிவபூசைச்சருக்கம்.



வேறு.

அறுகொருகுடங்கைநீர்கொண்டண்ணலார்பூசையாற்றிற்
பெறுதல்பேரின்பமென்றுபேசிடக்கேட்டிலாரோ
மறுகுறுமாதரார்க்குமாகிதிப்பூசைசெய்தே
சிறுகுசிற்றின்பங்கொள்வார்சிற்றினமாந்தர்தாமே. (௧)

யாக்கினவற்கிசொல்வானிப்படிசொல்லாநின்ற
வாக்கினன்வீரசித்தின்வார்த்தைபெண்மணிதான்கேட்டே
தேக்கியவன்பினோடும்வணங்கியேசிவபோதத்தி
னோக்கியகுரவர்நீரேயெனக்கெனநுவலுகின்றாள். (௨)

உம்முடைத்தயவுபெற்றேனென்னிடத்துவகையுண்டே
லம்மைதந்தருளுஞ்சைவவித்தையெற்கருள்வீரென்ற
கொம்மைவெம்முலைதன்வார்த்தைகேட்டலுங்கூறுகின்றான்
செம்மைசேருனக்கிப்போதுசெவ்வியன்றென்றுசொல்வான். (௩)

இன்னமுஞ்சிறிதுகாலஞ்சென்றபின்னிறைவன்யோக
மன்னியசைவசீலத்தொருமுனிவருவன்கண்டா
யன்னவனுனக்கிவ்வித்தையறைகுவன்புருடன்கோபந்
துன்னிடாமுன்னமேகுன்மனைக்கெனப்பின்னுஞ்சொல்வான். (௪)

புருடனெத்தகையனேனும்பொற்றொடிக்கற்பினல்லா
ரருடருசிவனவன்றாமெனநினைத்தல்வேண்டுந்
தெருடரிலவனுக்கேற்றசெயல்வேண்டுமவன்றனேவ
றருமகிழ்வுடன்சரீரத்தளவுமேசார்தல்வேண்டும். (௫)

அவனுயிரிறக்கிற்றானுமாருயிரிறத்தல்வேண்டும்
புவனியிலவன்றனோடும்புகிற்சொற்கம்புகலாமன்றே

தவமிதுகுமரனார்க்குச்சாற்றுமீதின்றேற்பாவ
மிலைவகணீபுரிவாயென்றானேங்கினளழுதுசொல்வாள். (௬)

சாற்றுமித்தன்மையெல்லாமெய்ம்மையேதருமசீல
மாற்றுநற்கணவற்சேர்ந்தவரிவையர்புரிவதாமான்
மாற்றாமதுபானஞ்செய்பதிதனாமணாளனோடும்
போற்றுறச்செய்துபாவம்புகச்சொலுமனுநூலுண்டோ. (௭)

பணவனேயெனினும்பூதிபதியடையாளமாலை
யணகமாமிலிங்கபூசையவையிலான்பதிதனாவ
னுணவரும்பஞ்சபாதகத்தரோடுறைவர்மூட
ரணகொண்கனுடனேசாதலாகாதென்றறையும்வேதம். (௮)

சாற்றரும்பதிதற்சார்ந்தார்தமரொடுநாசமாவா
ரேற்றமாஞ்செல்வமேனுமெனக்கதுவேண்டாவன்றே
மாற்றருமவனைவிட்டுக்கற்பழியாமைமன்னி
யாற்றருந்தவங்களாற்றற்றருமமாயிழையார்க்கன்றே. (௯)

அன்னவன்பேச்சினாலெற்காவதொன்றில்லையையா
நன்னெறிக்கதிபேசேநாடுவேன்சிதடரேனு
முன்னிபசாத்தியத்தையுதவுசாதனங்கைவாய்த்தாற்
பின்னவர்யார்சொன்னாலும்பிடிப்பரல்லால்விடாரே. (௧0)

நினைத்தகாரியங்கைகூடாதெனிற்சிறுமகவுநீங்கு
மனத்துறறன்னைச்செந்தீமலரெனக்கையாற்பற்றிப்
பினைச்சுடவிட்டவாபோற்பேதையேனனதுகாட்சி
தனைப்பெற்றேன்மூடந்தீர்ந்தேன்றலைவன்மூடதையுந்தேர்ந்தேன்

இனியவனுடனேகூடியிறந்துவிட்டேனேயாகி
லனகநானெடுத்தசென்மமவத்தமாயொழியுமன்றே
கனமுறுபதிதன்றானேகளேபரமாவன்கண்டீ
ரினமலாப்புருடார்ச்சேர்ந்தேயென்பலன்பெறுவேனையா. (௧௨)

அவனிடத்தவகுணங்களுற்றவாலருவருத்தேன்
சிவனையோர்தரமுமிக்தச்சென்மத்திற்பூசித்தில்லேன்
பவமுறுஞ்சென்னமானேன்பராபரலிங்கந்தன்னைத்
தவமுறப்பரிசித்தில்லேன்றரிசித்தலுமில்லேன். [௧௩]

அஞ்சமிர்தத்தினோடாளஞ்சுமேபாடிநன்றாச்
செஞ்சுடர்க்கலவைச்சந்தின்சேறபிடேகஞ்செய்தே
நஞ்சணிமிடற்றினார்க்குநல்லவில்வத்தினோடு
கஞ்சநன்மலர்கள்சாத்திக்கண்களிகூர்ந்திலேனே. [௧௪]

பாலுடன்றயிர்தேன்கன்னல்பலகனிச்சாறுமாறு
போலுறவபிடேகத்தைப்புரிந்துகையிலாத்ததில்லை

யேலமார்சுவைபன்னத்தின்பிறங்கனேவேதித்திலேல
ஞாலமுண்டவன்முன்கையாலவினயாடஞ்செய்திலேன். [கரு]

சிவாலயந்திருமெழுக்காற்றெளித்திலேனலகிட்டில்லே
னவாவுடனுருத்ரவீணையரன்முனம்வாசித்திலேன்
றவாமனத்தோடுமெண்ணலந்தரியர்கஞ்சாரேன்
பவாலயமானசென்மபயமெவ்வாறொழிகுவேனே. (கசு)

பூதிகண்டிகையணிந்துபுவனநாயகன்விழாவைக்
காதலென்கண்கள்காணுதொழிந்தனகடவுணும
வாதரவமிர்தபானமென்றனுவருந்திலாதாற்
காதுகள்சிவபுராணகதைகளைக்கேட்டிலாவே. (களஎ)

மங்களவிலிங்கநாதன்மருவிடுங்கோயிறன்னைப்
பொங்குமன்புடனேகால்கள்புரிவலஞ்சூழ்ந்தவில்லேத்
தங்குபாவங்கடீரத்தலேவணங்கியதேயில்லே
யங்கந்தான்பிதக்கணங்களன்புடனுற்றவில்லே. (கஅ)

இத்தனைநாளும்பாவமியற்றினேனிறைவனூர்தம்
முத்தமக்கோயின்மண்டபாதிகளுகுற்றவில்லே
னத்தமுநல்கிலேனென்றவள்சொலும்போதுவீர
சித்துவின்சேனைபோயச்செழுநகர்சூழ்ந்தவன்றே. (கக)

ஆர்த்திடுமாவங்கேட்டான்பெண்மணிபவடன்கேள்வன்
சாத்தகிவேடராசன்றனையர்களோடும்போந்தே
வேர்த்தனன்வெகுண்டெதிர்த்தான்வீரன்றன்சேனாநாதர்
பார்த்தனரெதிர்ந்துதாமும்பதகனைப்பிடித்துக்கொண்டார். (உ0)

கட்டினர்கொண்டுபோய்த்தங்காவலனுறையுங்கோயில்
கிட்டினர்கண்டவேந்தன்கேட்டனனிதுவேதென்றே
பட்டினமிதனிலுற்றான்பாதகன்கிராதர்வேந்தன்
றுட்டனிங்கிவன்றன்செய்திகேட்டியென்றிறைஞ்சிச்சொல்வார்.

சிவபத்தியில்லான்வெய்யகுறும்பன்றித்தொழிலன்சேர்ந்த
விவனையேபிடித்துக்கொண்டேயிந்நகர்நினதேயாக்கிப்
புவனநாயககின்னீதிபுரிவதற்கமைவித்தோமா
லவனியிலிவன்றன்செலவமளவிடற்கரியதெந்தாய். (உஉ)

தீர்த்தயாத்திரையிற்செல்லுஞ்சிவநெறிமாந்தர்தம்மை
யார்த்திவனடித்துக்கொல்வோனரிவைபர்முயக்கநீக்கான்
கார்த்தகந்தரனைப்பூசைபுரிதருங்கருணைஞான
மூர்த்திநீபுரக்குநாட்டினமுடனுற்றிடலாகாதே. (உரு)

சாமிநீதயாசமுத்ரமாகையாற்சிறியனென்றே
பூமிபோற்பொறையுற்றூபால்யாமிதைப்பொறுக்கலாற்றேங்

திமனத்திவனிருப்பதன்றான்பத்திசேராக்
கோமுறைபவன்றனூர்நீக்கொளுவிடவேண்டுமென்றே. (உ௪)

இவன்புனைபூண்கடம்பிற்கண்மணியொன்றுமின்றாற்
சிவன்றனதக்கமில்லாச்சிங்காரவாரந்தாங்க
லுவந்தமங்கிலியமில்லாவொளிப்பணிபூண்டதொப்பாம்
பவம்புரியிவனைவைப்பதன்றெனப்பகர்ந்திட்டாரால். (உ௫)

அவருரைகேட்டலோடுமரசனுமுளத்திற்கொண்டே
சிவசிவாமகேசவென்றுசெப்பினன்சிவலிங்கத்தி
னுவகைசேர்சந்நிதானத்துற்றனன்பூசையாற்றிக்
கவலுறாதிறைஞ்சியேத்திக்கருதிவீற்றிருந்தானன்றே. [உ௬]

மற்றதுகண்டசேனாபதிகண்மந்திரிகளானோர்.
குற்றமேயிழைத்தவேடன்கொடியசாத்தகியென்பானைப்
பற்றினர்பிடித்தடித்துப்பகர்சிரந்துணித்திட்டாரா
லிற்றதுள்ளிருந்தவேந்தற்கியம்பினர்மடநல்லாரே. [உ௭]

சிவன்றனைச்சிந்தைசெய்தேயிருந்திடும்வீரசித்தாந்
தவன்றனதருகிற்பற்மாவதியொடுசார்ந்துநின்றே
கவன்றநெஞ்சுடையளானபெண்மணிகண்கலுழ்ந்தே
புவந்திடுமொழிவுபூண்டேனினியருளுதவுமென்றாள். (உ௮)

அன்னதுகேட்டவீரசித்தெனுமரசன்சொல்வா
னின்னினிதுக்கம்வேண்டாந்திங்களொன்றெமதூர்நீங்கி
மின்னனாய்வருதிநீதான்விழைந்தனமுடியுங்கண்டாய்
பன்னியநாளாகுசம்பரித்திநீயிருத்தியன்றே. (உ௯)

புறத்தினிலிருந்துதுக்கம்போக்கியேசிவத்தியான
மறப்பயனென்னவாற்றியொழிந்தபின்னாலயத்திற்
சிறப்புடன்பூசைசெய்தேயுறையெனச்சேனையோடு
முறப்பெறுங்கிளையோடூர்போயான்பூசைபுரிந்துற்றானால். (௩0)

மங்கைபெண்மணியுந்தங்கைமாதர்களோடுங்கூடச்
சங்கையிறுக்கமாற்றிச்சூதகஞ்சார்ந்துபின்னாட்
பொங்குதண்புனலினாடிப்பூதிகண்டிகைபுனைந்தே
யங்குறுமுபவாசங்கள்விரதங்களாற்றுவாளால். [௩௧]

மைந்தர்கடங்களோடும்வள்ளலாராலயத்திற்
புந்திகொள்பத்திபூண்டுபுகுந்தருச்சனைசெய்துற்றாள்
பைந்தொடிகிளையார்தாமும்பணிபுரிந்துற்றார்சொன்ன
வந்தநாற்றினத்தில்வீரசித்துவந்தடைந்தானன்றே. [௩௨]

தண்புனலாடிப்பூதிகண்டிகைமாலைசாத்தி
யெண்பெறுவில்வமாதிதிரவியமேந்திக்கொண்டே

பண்பெறுமிலிங்கபூசைபரிந்தனன்புரிந்திருந்தா
னண்புறுமவன்சொல்லாற்றுநங்கையும்வந்துகண்டாள். [௩௩]

விரதத்தாலிளைத்தமெய்யுமெய்த்திருநீறும்பூதி
தெரிவுற்றேபணிந்துபூசைசெய்வதுஞ்சிவசிவாவென்
றுருகிச்சொலுரையுங்கண்டான்வீரசித்தரசனுற்றாள்
பரிவுற்றதங்கைமார்தம்பத்தியும்பார்த்தானன்றே. [௩௪]

அதிசயமுற்றனப்போதரிவைதன்னிளையாரோடு
மதிபெறுமரசன்பாதம்வணங்கியேசூழ்வந்துற்றாள்
பதியெனுமரசேயுன்றன்பரிவருள்புரிதியென்று
துதிசெயுமவளைநோக்கியுவந்ததென்சொல்லுகென்றான். [௩௫]

என்றலும்வணங்கிநின்றேபெண்மணியியம்புகின்றாண்
மன்றல்சேருமையாள்பாகன்மாதேவன்பூசையாசை
நன்றதுநல்காயென்னநாரியர்வனத்திற்சேர்த
லன்றுநின்னுறையுண்மேவிவந்துவந்தாற்றாயென்றான். [௩௬]

எனவுரைபுகலக்கேட்டாள்பெண்மணியியம்புகின்றாண்
மனையினிற்செல்வந்தன்னின்மகவின்மேலாசையில்லே
னனைமலர்வில்வக்கானினருமதாதீரந்தன்னிற்
புனைதருமிலிங்கநாதன்பூசைமேலாசையென்பாள். (௩௭)

பூதிபுண்டரம்புனைந்துபுனையறுகலர்கள்கொண்டே
யாதியைச்சோமலிங்கநாதரைப்பூசையாற்று
மீதுசீவனமாவுற்றேயிறந்திடவாசையீசன்
பாதமேசாட்சியென்றுபகர்ந்தனள்பின்னுஞ்சொல்வாள். (௩௮)

அன்னபானீயம்வேண்டேனரனுமவமிர்தபானந்
தன்னையேவிரும்புகின்றேன்றழுவணைபஞ்சுமெத்தை
யின்னவற்றாசையில்லேனிறையவன்பாதமாகு
நன்னிழற்றுஞ்சுமாசைபெற்றுளேனுயினேனே (௩௯)

அரகராகருணைவாரியமலநான்செல்வம்வேண்டேன
பரவுமேபுருடன்றாயர்தந்தையர்பலரும்வீந்தார்
கரவுறுகுடும்பவாழ்க்கைகடிந்துளேன்காலனூரில்
விரவுறாவண்ணம்பூசைவிசுவேசற்பணிவேனென்றாள். [௪௦]

பிறையணிவோன்பாதத்திற்பெரிதுறுநினைவினாலே
யறைதருதினந்தினப்பேர்ப்பிரளயபயமுமற்றே
னிறையருள்பெற்றுய்வேனுக்கிதனினுமதிகமாகப்
பெறுவதென்னென்றுநின்றுபெண்மணிபேசினாளே. [௪௧]

இருபத்தொன்றாவது பெண்மணிசிவபூசைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-எ௬எ.

—∞—

இருபத்திரண்டாவது,

# சித்திரகேதுநாட்டுச்சருக்கம்.



வேறு.

நெஞ்சமேகொடும்பிறவிக்கடலுளாழ்ந்துநேசமின்றாய் நெட்டுரநெ
ங்கராவால், வஞ்சவினைச்சுறவினால்வருமைந்தாழ்வால்வலைகாரனுங்கூ
ற்றால்வருந்தாவண்ணங், கஞ்சன்மாலறியாதகடவுண்மூர்த்தி கங்கைவே
ணிபனிமபமங்கைபாகன், செஞ்சரணந்தனிற்பூசைபுரிந்துநாளுந்திருக்
கோயில்பணிந்துமுத்திக்கரைசேர்வாயே. (௧)

திருந்தியபாக்கினவற்கிமுனிவன்சொல்வான்சிவநாமவருச்சனையே
புரிவேனென்று, வருந்துமனத்துடனின்றுபத்திகூரமடந்தைபெண்ணி
ன்மணிவகுந்தவார்த்தையெல்லா, மருந்தவனும்விரசித்துவேந்தன்கேட்
டேயறைகுவானணங்கேநீபண்ணலார்தம், பொருந்துதிருவருட்குறித்
தாம்பெருமைபெற்றாய்பொருவரும்பத்தியிற்புனிதம்பூண்டுளாயே. (௨)

உலகினுயிர்க்குயிராகியுலகுமாகியுலகினுக்கும்வேறாய்ஞானினைக்கி
ன்முத்தி, நிலவவருணைதிமுடியான்றன்னைப்போற்றி நினைத்தனையான்ம
னவாக்கும்புனிதமுற்றாய், நலமிகுசானுவியாடப்பெற்றோர்முத்தி நண்
ணுதல்போற்சிவநாமநவில்வோர்முத்த, ரலகற்றுமுமைபாகர்தம்மை
நெஞ்சத்தாதரித்தாய்பேரின்பமடைகுவாயே. (௩)

அரனுட்டனைநெஞ்சத்துறுதியாக்கொளதுபுருடார்த்தங்களொரு
நான்குநல்கு, மரணமொடுசெனனவியாதியுமேபோக்குமங்கைநீமுற்பிற
ப்பில்வழிபட்டாபா, லுரமாகுமிப்பிறப்பிலதனாலன்றோ வுறுதிபெறும்ப
த்திபெற்றாய்கதியுஞ்சேர்வாய், பாவார்தம்பயம்பாபபயமாபத்துப்பயமி
யமபயம்பரமனுமந்தீர்க்கும். (௪)

நல்குரவின்பயந்தீர்க்குநல்லமுத்திநற்கீர்த்தியழகுதயிரியநன்மேன்
மை, மல்குசோபனங்கள்சுவர்க்காதிபோகமாதருமமுத்தியுமேவாய்க்கு
ங்கண்டாய்,செல்கதிதந்தருள்பரமனுமமோர்காற்செப்பான்கேளானுயிர்
சேர்பிணமதாவ, னல்லறருந்தீநரகிலழுந்துவானணங்கேயுய்வகைசிவ
ன்பேரறைகிலானே. (௫)

என்றனக்குச்சிவநாமவமிர்தபானமினிதருந்தத்தெவிட்டுகின்றதில்
லைமாதே, நன்றிபெறுமதனாற்பான்செல்வம்பெற்றேனதனருச்சனைநா
மப்பத்திகாதை, துன்றுமிவைநான்குமெய்தலரிதுகண்டாய்சொல்லுமி
வையுற்றதினஞ்சுதினமாகுஞ், சென்றவையெல்லாஞ்சிவார்ச்சனைக்கே
செலுத்திலதுவேசென்மசபலமாமே. (௬)

பவமகற்றுஞ்சிவகாதைதகேட்கப்பெற்றபலன்காதுபடைத்ததற்குப்
பயனுமன்றே, சிவமுறுமிக்காதைதனைப்புகலமுன்னாட்செய்தவத்தால்வ
ந்தபயனுமன்றே,யிவைபுகலக்கேட்டிடப்பெற்றிலையேயாகிலெமதுசெ

ன்மவாசையொழித்திடுமாறின்றே. யவமகற்றியின்பமருளுமங்காசையா
ன்பர்சகவாசத்தாலடையலாமே. (எ)

ஓங்குமின்பம்பாவுறல்குஞ்சிவநாமம்போலுறுதிதரும்பொருளுலகி
ற்கண்டதில்லை, யாங்கெனினுமிதற்கிணையாவொன்றுண்டென்றேயியம்
புவோன்மிகுபாவபுத்தியாகுந், திங்குறுகற்பழிமடந்தைசிறுவனென்றே
செப்புகென்கையெடுத்துச்சத்யமாக, விங்கிதுபோன்முத்திநலங்கொடு
ப்பதற்கொன்றில்லையென்றவர்சனைப்பார்த்தியம்புகின்றாள். (அ)

பபபத்தியுடன்வணங்கியரசேயந்தப்பகர்வரியசிவவித்தை தனைப்ப
கர்ந்தே, யபர்வுற்றவெனைப்புனிதம்பெறச்செயென்றாளாங்கதுகேட்டிடு
மரசனைதன்பின்சொல்வான், மயர்வற்றசிவமனுவங்கதுதான்சைவமாத
வத்துக்குரவர்தம்பாற்பெறநீவேண்டுஞ், செயலுற்றதிதுவெனத்தாமதமம
தாகச்செப்பலும்பெண்மணிகேட்டுத்திகைத்தாளன்றே. (கூ)

சோகமுற்றுப்பூமியின்மேல்விழ்ந்துயிர்த்துத்துடிக்கின்றாள்பெண்
மணிசுந்தரஞ்சேர்செல்வ, ஞகமுற்றதுயருடன்கண்ணீர்கள்சோரவயர்
வாளைக்கண்டங்கோவங்கோவிந்தப்பாகையொத்தசொல்லிசிவபத்திபெ
ற்றும்பரகதிதந்திடும்பஞ்சாக்கரமில்லாமற், போகின்முத்தியில்லையென்
றேயென்செய்வோமப்புனிதமனுப்பெறிலன்றேகதிதானென்றான். ()

அண்ணலாரஞ்செழுத்தினுபதேசசந்தானதுவின்றேற்சைவாசாரத்தி
ன்சீல, நண்ணுறாதெனப்பெரியோர்சொல்வரன்றேநானிலங்காவலசனக
நவிலக்கேளாய், திண்ணமுறுமிவற்றிலொருகாதைசொல்கேஞ்சிவலிங்க
நிறைந்தகங்காதீரந்தன்னிற், றண்ணளிசேரரசுபுரிசித்ரகேதுத்தனிபரச
னொருவன்சிவபத்திசார்ந்தான். (கக)

இரதகசதுரகதபதாதியுள்ளோனெண்ணரியநிதிக்குவையா பரண
மாதி, சுராபிவகைபத்திரிகளரிவைமார்கள்சொல்லரும்பல்வகையிவைக
ட்களவையின்றாற், பரவுதிருநீறுடனேயுருத்திராக்கம்பரிந்தணிந்தபரிச
னங்கடாமுமஃதே, திரமுறுமச்சைவசீலத்துவேந்தன்றிருநீறுகண்டிபு
ணைபரிமேற்கொண்டான். (கஉ)

கானகவேட்டம்புரியச்சென்றான்றுட்டக்கடுவிலங்கின்றொகுதியை
யுமாசடாத்தி, யூனமுறச்செய்யாதுகருணைசெய்தே யுற்றமயின்மான்ம
ரைகடமையும்பற்றி, ஞானமுறுபூதியிஞானமாட்டிநாதனர்கண்மணியி
ன்மாலைபூட்டி, யானசிவனுமங்கூய்ச்செவியின்மாட்டியாட்டியோட்டிடு
வனந்தக்காட்டிற்றானே. (கங)

அவனுட்டிற்காட்டிலுற்றமிருகந்தானுமரன்பூதி கண்டியணியாதவி
ல்லை, சிவனுமவிலிங்கமுடன்வில்வநீழல்சேர்ந்திலாநதிக்கரைகளெங்கு
மில்லை, தவமேவுந்தருக்களதனீழல்சார்ந்ததனியிலிங்கந்தனைத்தலைக
ள்வணங்கித்தாழ்ந்தே, நவமானதளிர்மலர்கள்கனிகள்கொண்டேநாளு
மேயருச்சனைகணயந்துசெய்யும். (கச)

மாந்தரெல்லாஞ், சேருறுகாலங்கள்வந்தவுடனேயந்தத்தேகமொடுந்தெ
ய்வவிமானங்களேறிக், காருறுகண்டன்கயிலைபுகுவர்சில்லோர்கடவுளரா
ய்ச்சிவலோகங்கலப்பரன்றே. (௨௨)

சிவலோகந்தனிலேகுநெறிக்கணுற்றதெய்வமந்தாரத்தருவினிழன்
மேவும், பவமாற்றும்பரமசிவலிங்கபூசைபரிந்தாற்றிப்பிரசாதந்தனைநுக
ர்ந்தே, தவமேவுஞ்சிவனாமகீர்த்தனங்கடாம்புரிந்தானந்தக்கூத்தாடிச்
செல்வார், நவநவமாத்தருநீழன்மலர்ப்பாய்மேவிநற்கனிகணுகர்ந்தின்ப
நயந்துசெல்வார். (௨௩)

இனியபவபூபத்தின்வகைதானுகர்ந்தேயின்னமுதநதிபருகிமெல்லச்
செல்வார், நனிமகிழ்வினுடன்செல்லும்வழியிலோங்குநடைகாவணப்ப
ந்தர்மலர்விதானம், பனிதருநன்னீழறனிலரம்பைமாதர்பாங்குகவரிகள்
வீசவழகாலத்தி, கனிவுடனேதாங்கிநாடகங்களாடிக்கருதுருத்ரவீணையி
ன்கானங்களார்ப்பார். (௨௪)

இடையிடையேகணநாதர்வந்துபூசித்தேத்திடமாலயன்முதல்வான
வர்களெல்லாந், தடையறவேவந்துதொழக்கைகள்காட்டிச் சார்வார்கள
வைவிண்டுபொறிக்குச்சாற்றும்,விடையவனுக்கன்பருருத்திரன்கண்மா
லைவிபூதிதிரிபுண்டரத்தின்மெய்யர்துய்ய, ரடையவிலிங்கார்ச்சனைசெய்
தருமசிவரஞ்செழுத்தேயெப்போதுநவிலுநாவர். (௨௫)

ஈசனார்பூசனையின்பிரசாதங்கொண்டிருந்தேதகசுத்திபெறுமியல்பி
னோர்க, டேசுபெறும்விமானங்களேறிக்கொண்டுசிவனிருக்குங்கயிலைவ
ரைச்செல்கின்றார்பார், பேசுமவர்பெருமையென்னமனைவியாரும்பிள்
ளைகளுமப்படியேகின்றார்கண்டாய்,பாசமுடன்சிவதருமம்புரிந்தவந்தப்
பாக்கியத்தினாலன்றேபடர்கின்றாரே. [௨௬]

செல்கின்றார்தமைச்சேடன்றேவிகாயத்திரிமடந்தையபிராணிசா
யாதேவி, மல்குமிவர்தாம்வனசக்கரங்கள்கூப்பிவணங்கித்தோத்திரம்பு
ரியும்வரிசைபாராய்,வெல்கின்றசிவபூசைபுவியிற்செய்தார்வெள்ளிவரை
யினும்புரியப்போகின்றாராற், சொல்கின்றவிவர்கடமைக்காணப்பெற்
றோர்தோகையேநல்வினையின்றொகையுற்றோமே. [௨௭]

இவர்கள்சிவனுறையுமந்தப்புரத்திலேகுமியல்பினோரிவர்களைநாங்
காணப்பெற்றா, லுவமையில்புண்ணியம்பெறலாங்கயிலைக்கேகிலுவர்
கடரிசனநமக்குக்கிடைப்பதன்றே,தவறிடாதெதிர்கடிதுவந்துபார்த்துத்
தருமநீபெறுகசென்மசபலமேதாற், சிவனடியார்பாததரிசனந்தான்பெற்
றசெல்வமிதுபோதுமெனத்திருமால்சொல்வான். [௨௮]

இவ்வாறுதிருமாதுவின்றோனாரானோரெல்லோருங்கேட்டிடவேயுர
த்துச்சொல்லு, மவ்வார்த்தையானங்களேறிச்செல்லுமரனடியார்தாங்
கேட்டெம்மண்ணலார்தம், மெய்வாதவருளிதுவோவெனச்சிந்தித்தே

துவலையுடன்செல்குவார்கயிலைக்கேகிச், செவ்வானமேனியான்றிருப்
பாதத்திற்சேர்ந்துபின்னும்பிறவாதநெறிசேர்வாரே. (௨௯)

சனகசேனிப்படிமன்னவன்றனாட்டிற்சனங்களெல்லாநித்தியசோப
னங்கள்பெற்றே, மனமகிழ்ந்துபுத்திரர்மித்திரர்களோடும்வாழ்வரங்ங
னேநூபபழுமில்லைகண்டாய், கனகபூடணங்களிக்குமாதரில்லைகாதல
ரைப்பெறாரில்லைகணவன்பூசை, பன்கபூடணன்பூசைபுரிகுவார்கள்பா
லர்களாரொருவர்களுமிறப்பாரில்லை. (௩௰)

மாற்றவடன்செறும்பகைசேர்பாதரில்லைவள்ளல்பூசையிற்போது
போக்குவார்க,ளோறறமுளவவர்களற்பத்தொழிலாற்பூசசெய்துவரேசிவ
பூசைமுடிவிலன்னேர், சாற்றும்வரங்கேட்பதுநும்பாதபூசைதன்னிலே
யிடபத்திசாரச்செய்யு,மூற்றமனவண்டுநுந்தாட்போதிற்செந்தேனுண்டி
ருக்கவுதவுமதுபோதுமென்பார். (௩௧)

எமதுமனம்பூதியுடனுருத்திராக்கமிலிங்கபூசனைசிவபுராணகாதை,
யுமையடைந்தோர்பதிபூசையிவற்றிலென்றுமுறுதிபெறும்பத்திபெறவு,த
வவேண்டும், கமழ்டைாலுபதிலிங்கபூசைசெய்யுங்காட்சிகண்கள்பெற
வேண்டுங்கைகளுணு,மமலசோடசவரிசையுபசாரத்தோடருச்சனைசெ
ய்திடவெமக்கேயருள்செய்வாயே. (௩௨)

நாக்குனதுநாமமேபுகலவேண்டுநாதநின்கீர்த்திகள்காதுகேட்கவே
ண்டு,மூக்குநின்மாலியமணங்கள்கொள்ளவேண்டுமுறைமையான்மார்பி
ருதோண்முழந்தாணெற்றி, யோக்கனமெட்டால்வணங்குவோரைமுத்
தியேந்திழைகவிவெதில்லையெங்கள்கால்கள்,பாக்கியஞ்சேர்காசியெல்
லைசூழப்பண்ணும்பண்ணவநெற்றியினீறுபரிக்கப்பண்ணும். (௩௩)

இறைபவனீசகலகாமியங்கள்செல்வமீந்திடுவாயென்றுமெமக்கவை
கள்வேண்டா; முறைமையில்பாமுரைத்தமனோரதந்தின் வண்ணமுற்று
விப்பாயெமதுடைச்சந்ததிகளெல்லா, மறிவுடனெம்போலியற்றப்பெற்
றுனுங்களவர்செய்பலமும்பெறுவோமவ்வாறுய்ப்பாய்,மறைபுகலுகின்ற
மாமுதலோராகிவாழ்வுபெற்றாரவர்நின்னைவணங்கலாலே. [௩௪]

எம்பிரானுனைப்பூசைபுரியப்பெற்றோரெய்தாதபேறுண்டோ சிவ
னேசம்போ, தம்பிரான்பாலலோசனகபர்த்திசந்திரசேகரபக்தர்க்கருளு
நாத, வம்பிகாபதியேநீயென்றுநீங்காதமர்ந்திடுவாயெமதிதயகமலந்தன்
னி, னப்பியஞானமதாகும்போகுட்டின்மீதேநாதநீநங்கைதனைத்தழுவி
க்கொண்டே. [௩௫]

எங்களுடையஞ்சலிக்கைவிளையாகவிசைத்திமுன்னுமதோத்திர
ங்களடாயே, யங்கதனிற்றந்திரியினிசையாக்கொண்டேயடியேமைப்புரந்
தருள்வாயாயெனவென்று, கங்கைநதிக்கரையாளுஞ்சித்ரகேதுக்காவல

றுட்டும் மல்லோ நம்பு நல்வாரென்னப், புங்கவன்யாக்கினவற்கிமுனிவன், ஞானப்புவியரசன் சனகனுக்குப்புகன்றானன்றே. [௨௧]

இருபத்திரண்டாவது சித்திரகேதுநாட்டுச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அ௦௩.



இருபத்துமூன்றாவது,

## மந்திரமூர்த்திச்சருக்கம்.



வேறு.

நசைசந்தாடியென்முதலேயெனநாடோறும்வணங்கு நல்லோரிடம் வல்லார்தருநாணுகியகோன்போய், வசைசந்தாடியின்வருபொன்னியின் வளரன்புமிகுந்தேமாறாதுறு சுகவாரியைமருவும்படிசெய்வா, னிசைசந் தாடியினுமைநாயகியொருபாலொளிவீச விமையோர்புடைசூழுந்திரு வாரூரிலிருந்தே, யசைசந்தாடியபெருமான்பணியாடுந்திருவடிக்கே யன் பர்டியபணியாடிகின்றாடிப்பணிவோமே. [௧]

அருள்யாக்கினவற்கித்திருமுனிவன்பகர்கின்றானமர்சித்திரகேதுந் தனியரசன்திருநாட்டோர், மருண்மாமுயலகன்மீதினிலாடும்பதமீதின் வந்தித்திடு சிந்தைச்செயல்வன்பத்தியின்மிக்கார், தருமன்னனுமதுகண் டுளமகிழ்கொண்டனனுரைப்பான் சயிலேந்திரன்மகள்காந்தனல் லுயர் பூசனைபெற்றே, னிருமாநிலத்தெனைநேர்பவர்யார்சங்கரனருளாலின்பந் தருமனைமைந்தாகள்பொருள்வாய்த்திடுமென்பான். [௨]

அடியார்க்கருள்பானென்குலத்தருந்தெய்வதமவன்றனடிப்பூசனை த னிற்காலங்களைவைபோக்குவனன்றே, முடிவற்றிடுமுயிர்க்கேயுயிராகும் மவன்றனையே முடிசாய்த்தடிபாவாமலிருப்பார்களுமுளரோ, கடியுற்றி டுகயிலைக்கிரிவளனுஞ்சிவன்மகிமைக்கதையுஞ்செவி தனிற்கேட்டிடக் கையுமெனதுளமு, நொடியெட்பொழுதேனும்மவமுயலாவணமரன்ற னேக்குமருச்சனைபாவனை நுவலும்படிபுரிவேன். [௩]

மனதுற்றவையாவும்பெறுசைவந்தவருடனேவாசம்முறும்படிக்கே முனநான்செய்ததவத்தாற், பனகத்தையணிந்தோனருடரவே யதுபெ றுவேன்படருஞ் சமன்பயமுஞ்சென்மபயமுந் தவிர்வேனே, யனகச்சிவ சம்போகிரியீசாவுமைகாந்தாவடியேனுன்றனடிப்பூசைவிட்டகலா தருள் வாயே, யுனதற்புதவடியார்தமக்குதவுங்கருணையனென் றுரைத்தாசை யற்றுயர்பூசையினுள்போக்குவனன்றே. [௪]

இவ்வாறுயர்தருமன்னவர்திலகன்மனைமைந்தரிறையன்பர்களுடன் பூசைசெய்திருந்தானவினைருநா, ளவ்வானவருயர்கந்தனவனமேயென அளிஞ்சேரலங்காரவனத்தேகின னதின்மாமைப்புன்னைக, ளமவானுயர்

னுசாதனமுன்னை யருந்றும்வினைபல்லாமனுமுனமிடபுகல்கென்றான், றளங்கொண்டிடுமலராசனன்புகல்வானரசேசின் சரணக்கழன்மணிரா சர்கடலையிற்புனைவதுவே, யிளந்தண்பிறைகுடும்பரன்பூசைத்திறமதனு லெண்ணற்றிடு செல்வப்பொருள்யாவும்படைத்தனையே. [கக]

நீயேசிவனடியார்களிலதிகன்னருச்சனையானினதுள்ளமும்புனிதம் வெகுமானன்னுனக்கிணையா, தூயாய்சிவதருமத்தினிற்காலங்கழிக்கின்றாய்துணைமாதர்மைந்தர்கண்மைந்தர்கடொழிலுற்றனரிதுவே,தாயே யெனப்புவிகாத்திடுநின்பாக்கியமன்றோதனிப்பாக்கியமேலாகியதருமத் தினனீயே,சேயேயனையாய்நானுனைத்தெரிசித்ததினாலே திறம்பெற்றன ன்றருமத்துறுசித்தித்திருவோனே. (கஉ)

ஒருலோகத்துநினக்கேயிணையிலையானினைக்கண்டோருறுசெல்வமி வ்வளவாமெனவுரைக்கின்றவருளரோ, வருமாதருமத்தாலின்பந்தருசெ ல்வமளித்தேவைபந்தவருப்பச்செயவந்தேபிறந்தனைநீ, திருமாதுறைந ன்னாட்டினிற்றவயோகியர்போலேசெந்துக்களும்பசுவும்பகைதீர்ந்துற்ற னவன்றே,தருமாச்சரியம்மாமிதுநின்னாட்டுபர்வனத்திற்றருவும்மிருகமு ஞ்சங்கரன்றனிநாமஞ்சொல்வனவே. (கங)

இப்பாக்கியமேபுண்ணியத்தாற்பெற்றனைநீயேயிறையேயுன்றன்றி ருநாட்டவர்சன்றிருநாமத், தொப்பேதுமிலமுதப்பெருக்கருந்தித்தெவி ட்டிலராலுமைபாகத்தன்கயிலாயமுன்புவியாகவந்துளதாற், றப்பாவள ம்பெறுநின்றனையேகண்டதுசிவன்றன்சாற்றுந்தரிசனமாநுதல்விழிச்சங் கரன்றனே, செப்போகையிற்றரைகாத்திடுமணியேபநினதுருவாய்ச்சேர் ந்துற்றனனேவிப்புவிசிவலோகமதாமே. (கச)

எங்குஞ்சிவலிங்கங்கணிறைந்துற்றனவிதனுலிறைதேவியும்வினை யாடுதற்கமைத்திட்டனகொல்லோ, புங்கந்தருமிவ்வாலயமின்பக்கடன் முத்திப்போகத்திருவுறைதானமதாகப்பொலிவுறுமே, துங்கந்தருமிலிங் கார்ச்சனையானந்தமொடியற்றுந் தூயோர்நிறைந்திருக்கின்றனரரசேநி னைக்கண்டா, லங்கந்தருசிவபூசையின்மிகுபத்தியுண்டாமாலருமாதவஞ் செய்தோயுனைப்பணியிற்றவமதுவாம். (கரு)

இத்தன்மைகொளுன்றேசமதுற்றோர்கதிபெறுதற்கிசைக்கின்றதெ ன்னின்னாட்டினிற்பவம்பொய்யபவையிலவே, முத்தன்சறுவேசன்றனை யெல்லோர்களுந்தொழுவார்மோகத்திருடனைநீக்கிடவருமுச்சுடர்நீயே, மத்தந்தருபவவெற்பினையிடிக்கும்மிடிபுவிமேல் வளர்கற்பகஞ்சிந்தாம ணிமன்னுஞ்சுரபியுநீ, நித்தன்சிவசீலத்துடையாய்நீயெனல்பொய்யோ நின்றன்குலதன்மஞ்சிவதன்மக்கிழங்காமே. (கசு)

பணிவார்பிறப்பிறப்புந்தவிர்த்தருள்செய்வதுசிவன்றன்பாதாம்புய மத்தின்மிகு[illegible]பதிபடைத்தாய், தணிபாதறங்காத்தேதபுவிபரிக்குந்திறத் தாலுன்றன்பூசைக்குக்கனிபூவிலைதருவுந்தருமன்றே பணிசேர்சிவன்றி

ழுன்னரின் மன்றுநடிக்குமானந்தநடங்கண்டவர் விழைபாவையுமகனு மனிலாவதிசயமாமிவை நான்கண்டதிலே யாநின்னியனுட்டுலைறகிளியா வையுமரன்பேரியம்புவவே. [௧௭]

தருவுள்ளனயாவும்பணைந்தைகேட்டிடபரன்றன்றுளிற்றனிர் கனி கொண்டருச்சனை தான்புரிந்துளவான், மருவுள்ளமலர்க்கூவிளமெல்லா மதிலைபால் வாதன்றிருநாமஞ்சொலிப்பேயர்ச்சனைசெய்தா, லருள்வன் அருளென்றெயினத்தொடும்வந்திளந்தளிரா, லருச்சித்தனபுடைசூழ்வ னவைவைகிற்பனபாராய்,திருவுள்ளனின்செல்வமதுவேசெல்வமெயாசே கிவனும்மிதுகண்டேயதிசயமுற்றனனன்றே. (௧௮)

இவையாவுங்கண்டதனன்மனமிவன்விட்டபலேகா திசன்றனிவா சம்பெறுமிந்தாவினிலென்றன், றவமேயுமிவ்வுடல்சங்கரன்றனக்கற்பணை ம்புரிந்தே தான்மேவுவன்சிவனுமேவஞ்செழுத்தோதுமித்தருவே, யவனிக் கிடுகுருவாமன்னனிபுண்ணியசேடத்தவதாரஞ் செய்தனைவேதஞ்சொ ன்மபக்காரெனுஞ்சிவனுர், நவமாகிறைதரமண்டலவனமும்புரிவித்தாய் காதன்னுனாதிதபத்தினினுளும்முறைந்தனனே. (௧௯)

செல்வத்தவனிபேயெனத்திகழ்பாரதிபதிசொ திருவார்த்தையை க்கேட்டேமகிழ்திகழ்சித்திரகேது, நல்வித்தவன்சிவவித்தையினுயருத் தமந்தனைபெறவில்வாயள விலவாகுமவ்வமுதக்கடலிடையே, கல்வித் திறனுடையனெனதுளமன்புடன்முழுகக் கருத்துற்றதெனத்தாமரைவே தன்புகல்வான்மால், வெல்வித்திடுசிவதன்மமிரத்னாகரமலவோவேண்டு ம்முனக் கவற்றுட்சிலவிளம்பத்தகுமென்பான். (௨௦)

பூபாலகநீசெய்தவிபாத்தன்மமுமுளவோபுகழுன்னடை நலம்யா வையும்புகல்கின்றனவதுதான்,பாபாகரங்கெடுக்கும்மதுவெனக்கும்பலர் தமக்கும் பவம்பாவையுந்தடுக்கும்வெகுசுகிர்தங்கள்கொடுக்குங், கோ பாதிபன்மனுஞ்சிவதருமத்தியலிவனிற் குறுகப்பயங்கூர்வன்னென க்கூறும்மதுகேட்டே, மாபாவனைக்கருளுஞ்சிவன்மகிழ்வித்தையின்மகி மை மறையாதுரைசெய்வாயெனமறையோனுரைசெய்வான். (௨௧)

உலகத்துளபலவித்தையிற்சிவவித்தையிங்கிதுவே யுயருஞ்சிகைம ணியாமதுதருமத்தவர்பெறுவார், தொலைவற்றவங்கதன்மேன்மையென் போல்வார்சொலற்கெளிதோசொல்லுமதன் *சொருபந்தெரிந்திடமாய னும்யானு,மலகற்றிடுகாலம்மருந்தவமாற்றியுமறியேமவ்வித்தைவெந்தெ ருப்பாம்பவமலைபாம்பருந்திகட்கே, தலைமைப்பரம்பரனேயதனருமை த்திறனறிவான்றகுமப்பொருள் மகிமைக்கொருகதைசாற்றுவன்கேண் மோ. (௨௨)

மன்னுமுன்னாளிற்பிரமவமன்றிமற்றுள்ள மாமந்திரமெனுமூர் த்திகள்வரதன்னருள்பெறவே, யுன்னுவிமயச்சாரலணைந்தங்கிமிசைமெ

* சொரூபம்-சுருக்கவிகாரம்.

ற்றாயிரம் யுகமாதவஞ்செய்தேயிளைத்துறுங்காற், றுன்னுப்பிரணவம ந்திரமொருமாமுனியாகத் தோன்றத்திகழுயர்மூர்த்தியையொருமந்திர மூர்த்தி, யென்னுயகர்யார்நீரிவண்வருதற்றிறமுரையிரென்னப்பிர ணவ மாமுனியுன்னிச்சிலபுகலும். (உங)

நானேருறுமோமாமுருமுனியாகுவன்மேனு ணுதன்சிவனுமப்பொ ருடணைப்பெற்றிடவிங்ஙு, னானேவெறுத்தாகாரமற்றுயர்மாதவம்புரிந் தேனுஞற்றுந்தவமிவணேசெயச்சிறக்குஞ்செயல்கேளாய், தேனேர்மொ ழியுமையாள்சிவனுடல்பாதியும்பெறவேதிகழிட்பிரணவலிங்கரைப்பூசித் ததுபெற்ற, டானேநிகராகுந்தவத்தானம்மிதுவவர்பாற்றணிமாதவம்பு ரிந்தேசித்திசார்ந்தார்சிலர்தாமே. (உச)

முனிவானவர்சிட்டாதிகளுயர்சித்தர்களிசையேமுயனுரதர் முத லோருயர்தருநாகர்கந்திருவர், தனையேநிகர்நந்தீசனைமுதலாங்கணநாதர் தனிமேருமந்தரம்விந்தமோடிமயத்திருச்சயிலங், கனைபாற்கடன்முத லாங்கடலரவின்குலந்தருக்கள் கடவுண்மணிநவமாநிதிகாற்கோடகன் சேடன்,வனைபைந்துளவினன்மாமலர்வாணன்கலைமங்கை வானத்திறை யிந்த்ராணியைமுதலாந்தெய்வமாதர். (உரு)

சிவவித்தையின்ஞானம்பெறவேண்டிக்கற்பகாலஞ் சிந்தித்தன்ர்த வமாற்றினர்சித்தித்திலரன்றே, யவமுற்றனமென்றேபினுமருமாதவமொ ருநூ ருங்கற்பமிழைத்தாரதினும்வந்திலனரனே, குவிவுற்றனரனேவோர் களுமிவ்வாலயமதனிற்குழுமிக்கொடுதாமந்தணமிருந்தார்குறித்திடுவார், தவமுற்றனர்பஞ்சாக்கினிநடுவட்சலமன்னந்தானின்றிமெய் கிரிசத்துற ச்சார்ந்திட்டனமன்றே. [உகா]

அரிதாகியபெருமாதவம்வெகுகாலம்வருந்தியாற்றுற்றனமன்றே யி திலணுவும்பலனின்றே, பெரிதாகுநம்வாணுள்களுங்குறுகுற்றனவின் னும்பின்னுள்ளன நாளுநதவமிதுசெய்தலிற்பேறெ, னுரையீரிவைசெய் தும்மிதுவரையுநலமிலேயே யுயருஞ்சிவஞானம்பெறவிதனுன்முடியா தாந், தெரிவார்க்கரிதுணர்வாயதபீடங்களளிக்குஞ் சிவபூசனைசெய்த ன்றியுறுதென்றுளந்தேர்வார். [உஎ]

இதனுனமக்கடையாப்பொருளரிதாவொன்றுமில்லை யிந்நாட்செய் ததவமற்பமிங்கெய்தும்பயனிலேயே, யதனுற்றுயர்பெற்றேமருச்சனைசா தனமன்றேலருமாதவத் துடல்விட்டிடின்ஞானம்பெறலரிதான், முதல் வன்சிவபூசைத்தவஞ்செயின்ஞானமும்வருமே முன்செய்தவம்வேண் டாசிவஞானம்பெறவேண்டு, நதிவேணியன்றனைப்பாவித்துநயந்தர்ச்ச னைபுரிவோஞானம் பெறநாமித்தனைநாட்செய்தவமவமே. [உஅ]

சிறுபாலன்விண்மதியர்தனைக்கவரப்பெரிதாசை செய்தாலெனச் சிநதித்திடுபெயம்பெற்றிலம்யாமே, கிருபாநிதிசிவனர்ச்சனைசெய்தார்க்கு முன்வருவான்கேடில்லதோர்திருநீறுகண்டிகைமாலேதரித்தே, யறுகாகி லுமிளங்கூவிளந்தளிராகிலுங்கொண்டே யாராதனைசெயினெஞ்சிலபீ

டங்களளிப்பான், மறுகாவலைகமனத்தாலைசயைப்பொடியாக்குறுங்
கலாய்வளர்பத்திதந்தாண்டானதுவருதல்லரிதாமே. [௨௯]

தரும்பத்திதழைத்தோங்கியமனத்தோடிமிலிங்கந் தனைப்பூசனைபு
ரிந்தாற்பெறற்கருமுத்தியைச்சார்வோ, மரும்புற்றிடுமனத்தன்புகொண்
டிலிங்கத்தினில்வில்வார்ச் சனைசெய்திடவெகுகாலங்கடவமாற்றின
டைவார், விரும்பத்தருமப்பூசையிலுமையாண்மணவாளன்மிகுநெஞ்சி
லபீட்டங்களளிப்பனெனவியந்தே, திரும்புற்றமனத்தோடிமிலிங்கத்
துறுபூசை செய்வோமெனமந்த்ரம்பலசெய்தேமுடித்தனரே. [௩௦]

இருபத்துமூன்றாவது மந்திரமூர்த்திச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அ௩௩.



இருபத்துநான்காவது,

# மந்திரமூர்த்திகள்பூசைச்சருக்கம்.



வேறு.

வல்லியப்பணிபவல்லியமுழுங்கவல்லியன்மூலேசிலைகாம
வல்லியங்கயற்கணல்லியங்கோதைதமாதுமைகண்டுகண்களிப்ப
வில்லியன்மேருவில்லிலைபங்கமுயின்வில்லிலைபவென்றவெம்பெருமான்
விலங்கியகனகசபையின்மாறுமலாடியேவெள்ளியஞ்சபையிற்
சொல்லியபதுமப்பாதமாறுடித்தொக்கமென்றுடியாரூரிற்
சோதியாசனத்திலிருந்தசைந்தாடித்தொண்டர்தமிதயமதாகு
நல்லியற்கமலாசனத்தினிலசையாதிருந்துலகளித்திடுங்கருணை
நம்பரென்றுணர்வாரிம்பரோடும்பர்நாளுமேபணிபவாழ்பவரே. [௧]

அருமறைநெறித்தபாக்கினவற்கிமுனிசொல்வான்பிரணவமூர்த்தி
யறைந்திடுமிவ்வாறனைவருங்கூடிப்புரிந்திடுமந்தணந்தெளிந்தே
பொருவருமுன்னைத்தவத்தினாற்சித்தசுந்தராப்பூதிருத்ராக்கம்
புனைந்திளம்பிறைசேர்வேணியானிலிங்கபூசனையாதாவினராய்த்
தரும்பரன்பூசைத்திரவியங்களிலேமுக்கியம்வில்வமேயென்றுந்
சங்கரனிலிங்கார்ச்சனைபுருடார்த்தஞ்சித்திகடந்திடுமென்று
முருகியவன்பான்முன்னுளோர்பூசித்துயர்கதிபெற்றுளாரென்று
முமபரோடிம்பர்யாவருமிச்சையுற்றிதுபுரிவரேயென்றும், [௨]

சதுசென்மத்தின்பயத்துடன்மிருத்துபயமுமேதீர்த்திடுமென்று
மீனஞானத்தாலியற்றினுமகேசன்பூசனைக்கிரங்குவனென்றுந்
திலாத்திடஞ்சேர்பத்தியுற்றவராய்த்தேவர்களிருடிகளெல்லாந்
திகழ்தருநீறும் [illegible] புனைந்தார்வென்றிருந்தனமணிபுனைந்தார்

சோதிபேசகலசுகங்களுங்கொப்பானென்றுகூவிளந்தளிர்முதலாச்
சொல்லரும்பூசைத்திரவியங்களினாற்றுக்கயோகங்களைநீக்கி
யாதிலைப்பூசைபுரிந்துகாலங்கள்போக்கியேயிட்டசித்திகடா
மடைந்தனர்வித்யாமூர்த்திகணீருமர்ச்சனைபுரிதிராலன்றே. [௫]

தவத்தினாற்பரமன்வந்திலனென்றுசலித்திடாதரன்றிருப்பூசை
தான்புரிந்திரேனினைத்தவைபெறுவீர்சகலசித்தியுந்தருமிலிங்கஞ்
சிவக்கொழுந்தாகும்பிரணவமூர்த்தியிருந்துளனவன்றனைப்பூசை
செய்குவீர்பூசைமகிழ்வதுபோலத்தவந்தருமத்துளஞ்செய்யா
னுவப்புறுமுள்ளங்கையிலமுதமும்போலவைக்குமேயிருப்பிடமாரு
முன்னைமேசர்சிவலிங்கார்ச்சனைவிடுத்தேயுறுதவஞ்செய்துடல்வருந்து
மவத்தமாமூடர்தாகமுற்றதனுக்கமுதயாமுதகமுன்னுறக்கண்
டதைவிடுத்தினகத்தபச்சிறுநீரருந்திடவிரும்புமாறதுவே. [௬]

மங்கைதன்மணாளன்சங்கரன்பூசைபுரிந்தவனருள்பெறுமவனை
வண்மைசேர்செல்வமுடையவனதனைவிடுத்துமற்றொன்றுசெய்திடுவோன்
சங்கைபொன்றின்றிமலத்தினைநுகரும்பன்றிநாயோனியிற்சனிக்குஞ்
சாற்றரும்பாவியகலைதபாகுந்தண்ணமுதக்கடலுமே
மங்குதலில்லாச்சுகத்தினையளிக்குமாயிடிற்சிவனவன்றனை
மனத்தினிலிருந்தாலானந்தஞானம்வருதற்குக்கேட்கவேண்டுவதோ
திங்கள்வேணியன்மகேசனைத்தியானஞ்செய்திடமடிமைசெய்யாத
சிந்தையோன்முத்தன்பூசையிற்காலம்போக்கிடவாசைவேண்டியதே.

வில்வமேமுதலபூசையின்பொருள்கள்கொடுவரவுழைத்திடவேண்டும்
விமலநாம்வாணலிங்கத்திற்பூசைவிளைந்துசீதப்புனலுடனே
செல்வநல்கிபகூவிளந்தளிர்கொண்டியற்றிடிற்போகமுத்தியுமே
சேரலாமந்தோவிப்படிக்கிவைந்தபூசையிற்சிந்தைசெய்யாம
னல்வினைபுரிபாதொழிந்தனமென்றேநான்மறைமுறையிடுமென்றே
நாரிபோர்பாகர்பூசனையன்றிநாளிலத்ததிகமொன்றுண்டோ
சொல்வரந்தருமற்றுகைபால்பானும்பூசையின்றொழில்புரிகினதேறை
றுக்கமேசல்கும்பிறப்பினிற்பயமுந்துறந்தனன்சிறந்தனனன்றே. [௭]

பாவமோகமதாஞ்சுடர்விழும்பதங்கப்பரமனைமத்தனற்கிரையாம்
பண்ணவன்பூசைமருந்துகையிருந்தாற்பிறப்பிறப்பெனும்பிணிபடா
தேவநாயகன்றனிலிங்கபூசனையேசெய்திடவேண்டுமோல்வருத்தஞ்
சேர்ந்திடுந்தவத்தாலாவதொன்றில்லைபன்றிடும்பிரணவமூர்த்தி
நாவினாலுரைத்தவுண்மைகள்கேட்டவித்தியாமூர்த்திகளெல்லா
நன்றுநன்றுடலைவருத்துறுந்தவத்தாற்பாம்பலம்பெற்றிலமென்றே
பாவலாற்பூசைபுரிந்திடவொருப்பட்டெழுந்தனர்கங்கைநாடி
யருந்திருநீறுபூணர்ந்தகண்டிகையுமணிந்தனரஞ்செழுத்துரைத்தார்.

றைபவனிலிங்கபூசனைபுரியவெண்ணினர்கங்கையின்கரையி
லிலங்கிபவில்வவிருக்கமொன்றுமிருந்தனகண்டேவர்தனாரான்

முறைமையால்வித்யாமூர்த்திகளெல்லாமுன்னினர்துன்னினரிலிங்க
மூர்த்திகடம்மைப்பூசனைபுரிந்தேயிருந்தனர்முயலுமப்போதின்
மறைமொழிபுணர்ந்தகாசிபன்முதலாமாதவர்வந்துகண்டுவந்தே
வணங்கினர்நின்றாரந்தவேளையிற்றன்மந்திரமூர்த்தியிற்சிலர்தாம்
பிறையணிபரமனுமதோத்திரங்களரகராகிரீசமகேச
பிஞ்ஞகாமுன்வந்தருளுவாயென்றுபெருகுடன்பாலுருகுவரால். (அ)

ஏழையர்க்கருளுமன்மதகனுமேலொடுகீழ்முன்னும்பின்னு
மிடம்வலமெங்குமுனையலாலறியேமெந்தையுமன்னையுநீயே
மாழையொண்கண்ணிபாகனின்னல்லான்மற்றொருவரையுநான்மதியேன்
மனோகரலிங்கந்தனையிடைவிடாமன்மகிழ்ந்தியாந்தழுவிடுகின்றோந்
தாமுறுமெய்ம்மைப்புரந்திடுகென்பர்சிலர்சிலர்லிங்கபூசையினிற்
சார்தருமுத்திதானுன்னடையதனைத்தந்தருள்புரிதியென்கின்றார்
வாழுறுமிந்த்ரபோகமும்வேண்டேன்மலர்ப்பதம்வேண்டுவமென்பார்
மன்னுமெய்ப்பத்தியென்றுநீங்காமலுன்பதத்துறவெனமதிப்பார். (கூ)

இப்படியுநிலயாம்புருடார்த்தங்களுன்குமேபெறுகுவமென்றே
யேத்துவார்வணங்கிக்கூத்துமாடுறுவாரெதிர்நிற்குங்காசிபர்முதலா
மொப்பருமுனிவர்தங்களைநோக்கிப்புபர்சிவபூசைக்குவேண்டு
மோதுசாதனங்கள்சொல்லுவீரென்னவிருடிகளுரைத்திடுகின்றார்
தப்பறுபூசைக்குரியநல்வசனங்கேட்டிரேல்வேதத்திற்சாற்றுஞ்
சங்கரன்பூசைவிதியையோதுதுமாற்சந்தியாவகைறையெழுந்தே
மைப்படிகண்டன்றனைநினைந்தப்பார்ச்சவுசகன்மந்தனைமுடித்து
மன்னியசிவதீர்த்தங்களிலாடிப்பூதிகண்டிகைவடம்புனைந்தே. (க0)

கூவிளநீழன்மேவியஞ்செழுத்தும்பிரணவமுதலுறக்குவித்தே
கூறும்வில்வத்தைநோக்கியேபூசைச்சாதனமானகோத்தருவே
மேவுமென்வணக்கங்கொண்டருளென்றுமூலத்திற்பவனடிவிடையின்
மிருடர்தம்முருவமுடிசிவரூபம்வேதமெயதனுடைத்தளிர்க
ளோவில்வேதாந்தரூபமாம்பணைகளுவைக்கெலாம்வணக்கங்கள்புரிந்தே
யொளிதருபானுவுடன்பிறந்தருளுமுயர்தருவினுக்கெலாமரசே
மேவியபூசைப்பலன்றருநிமித்தம்விருக்கமேயெனச்சொலிவணங்கி
விரும்பியேசூழ்ந்தஞ்சலிசெய்துநின்றுவில்வணப்பங்கேளெனப்புகன்றே.

வேதரூபமாதாமுன்னிடைத்தளிர்கள்பூசைக்குவேண்டுவவெல்லாம்
விரும்பியேகொய்கேன்பொறுத்தருளென்றுவிமலனைநினைந்துகொண்டெடுத்தே
போதுடைத்தளிரின்காம்பினைப்பிடித்தேசலத்தினிற்றோய்த்துத்தன்றனியே
யேர்தருமிலிங்கந்தன்னின்முற்புறமேலுறும்படிசாத்திடவேண்டுங்
காதலினாலோரருச்சனைக்கொருகாற்கடிபுனல்கைதொடவேண்டுங்
கருதுமங்கதற்பின்பலமலர்புனையிற்கத்தரிப்பூமுனஞ்சாத்தித்
தீதறுநெய்தற்றாமரைமலர்காம்பிலாமலேயருச்சனைசெய்து
செண்பகமெனவஞ்சாதிபோடலரியெருக்கிவைகாம்புறச்சேர்க்க. [ ]

மிக்கமந்தாரைசெய்யபேதமியெனினும்வெண்மலரேனுங்காம்புறினு
 மேவிலதெனினுமருச்சனைசெயலாம்வேறுவேறுமனுக்கொண்டே
தொக்கநன்மலர்களருச்சனைசெய்யிற்றொலைவிலாப்பவமெலாந்தீர்ந்தே
 சொல்லருங்கயிலைதன்மனையாகச்சூழ்ந்துவீற்றிருந்திடுவானூற்
றக்கநன்மலரெத்தனையிருந்தாலுஞ்சிவன்மகிழ்வதுவில்வத்தளிரே
 சாற்றுமோர்வில்வத்தருச்சனைப்பயனைச்சிவனன்றிச்சதுர்மறையறியா
வக்கணிபவர்க்குப்பூதிகண்டிகைநல்வில்வத்திலிருக்கின்றவாசை
 யம்பிகையிடத்துமில்லைபால்வில்வமெப்படியுறினுமாமன்றே. [௧௩]

கூவிளந்தளிர்கள்பழுதிலாதுறிலங்கதிற்சிவன்மிகமகிழ்கூர்வான்
 குலவுமாங்கதுதான்கிடைப்பதற்கரிதாற்கூறுநற்றளிரருச்சனையே
மேவிடுந்தருமசீலருக்கன்னதுறாதெனிற்புழுக்கடிபழுது
 வீழ்சருகதன்றாள்சாத்தினுமகிழ்வன்வில்வத்தூணறுய்ப்புனற்குழைத்தே
நாவில்சந்தனமாச்சாத்தினுமகிழ்வனெத்தனைகாலமத்தளிரைத்
 தள்ளிடான்சேமித்தணிதலுமாகுமவ்வருச்சனைபுரியாம
னுவினிலுணவுகண்ணுயில்புரிதனன்றலவாங்கதிலாம
 னுதனல்லுபசாரத்தொடும்புரியும்பூசனைநயந்திடானன்றே. [௧௪]

பானுவந்துறுதநாளெலாமுலகிற்படரிருணீங்கிடாவதுபோற்
 பத்தியால்வில்வார்ச்சனையரற்கியற்றுன்பாபங்கணீங்கிடாவன்றே
ஞானநாயகன்றீவினையொழித்தற்கேநல்கினதத்தருநம்ப
 னுமெவ்வில்வத்துற்றிடுகாற்றைநயத்தல்போற்றென்றனுநயவா
னனசூரியன்றன்னிடத்தில்வந்துதித்தான்சந்திரனவனிடத்துதித்த
 வரியகூவிளமிங்கிவைகளுக்கெல்லாய்காரணமம்புலிச்சடையோன்
மானமதில்லாவினையகூவிளத்தின்றளிரினலருச்சனைபுரிவோன்
 மாநிலத்தழியாப்பாக்கியவானன்னவன்செயல்யாவரேவகுப்பார். ()

கடிகமழ்கரவீரத்தின்மின்போதாலருச்சியான்கிளையொடுங்கலியிற்
 கடிபடுவானுன்மாலைமந்தாரஞ்சண்பகமாலைசாத்திடுவோன்
கொடியவெம்பாவகோடிகணீங்கிக்கூறருமுத்தியிற்சேர்வான் [ழிப்பா
 குறியபேதயெனினும்வங்கநன்மலர்கள்சாத்துவோன்கொடுவினையொ
னெடிதருஞ்சாயங்காலையிற்புன்னைநூற்றிகழ்த்தாமரைதும்பை
 நுவல்குருக்கத்திபாரிசாதத்தினுண்மலர்மாலைசாத்திடுவா
னெடியவனறியாவடிநிழற்சேர்வனீளறுகாலருச்சிப்பா
 னிலத்தினிலுள்ளமலரெலாஞ்சாத்தும்பலத்தினைப்பெறுகுவானன்றே.

வேறு.

குளச்செந்நெலரியேகட்லைவெள்ளெள்ளுக்கோதும்பைகாரெள்ளுக்கடுகு
வளத்துறுசம்பாவரிசிவாலாநெல்லரிசிவண்டினையொடுசாமை
கிளத்தியபாசிப்பருப்பிந்தவகையிற்கிடைத்ததானியத்தருச்சிப்போ
ரளப்பரும்பாபகோடிகணீங்கியருங்கதிபெறுகுவரன்றே. [௧௭]

அரும்பிரதோடந்தனிற்பனித்தாரையாரபிடேகமாற்றிடுவோர், விரும்புபாறயிர்நெய்தேனபிடேகம்விமலனுக்காட்டிடப்பெற்றோர்,பொருந்துறுபரிமேதப்பலன்பெறுவார்பூசைதாளெருபகற்புரிபின்,வருந்துறுபிரமகற்பகங்கள்புரிந்தமாபவமொழிந்திடுமன்றே. [௧அ]

கூவிளந்தளிராற்றினந்தொறும்பிரதோடத்தினிற்குபேரன்றனுளிலாவலாலருச்சிப்பவர்பலன்யாவரறைகுவர்யாமுமேயறிபோ, மேவுமிங்கதனற்சிவபதமென்றுமேலவர்சொலக்கேட்டிடுவோர், நூவலராகக்கண்ணிடந்தடியிற்சாத்தினன்றூயமாயவனே. (௧௯)

அருச்சனைமலரிலொன்றுதான்குறையவரிவிழிசாத்தியவடியிற்,றெரித்திடம்பத்திமுத்திமேல்வீட்டிற்செல்வதற்கமைத்தசோபானம் விரித்தகூவிளஞ்சாத்தினர்க்குமூவுலகும்விருத்தியாய் விட்டகாணியதாம்,பரித்தசென்மந்தோறிழைத்தபுண்ணியத்தால் வருமெனமுனிவரர்பகர்ந்தார். (௨௦)

இருபத்துநான்காவதுமந்திரமூர்த்திகள்பூசைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-அ௰௫.



இருபத்தைந்தாவது,

# சித்திரகேதுமகிமைச்சருக்கம்.



வேறு.

கொஞ்சுதலையுடையமின்னார்க்கன்புபூண்டுகொடுமைதலைக்கொண்டுசெற்றுங்குழைவிலாமல், விஞ்சுதலையுடையநெஞ்சேவிளம்பக்கேளாய் விமலர்பதத்தன்புசற்றுமேவிலாயே, மஞ்சுதலையுடையநெடுமாடவீதிமணியாரூர்வீதிவிடங்கேசன்பாதத், தஞ்சுதலையுடையபத்திபெற்றதாலேயாடரவம்பெற்றபேறார்பெற்றாரே. (௧)

மறையுணர்யாக்கினவற்கியமுனிவன்சொல்வான்மாதவர்சொல்வினவுமந்த்ரவடிவரெல்லா, முறையுடன்கேட்டுளமகிழ்ந்துசிவன்பாற் பத்திமுதிர்ந்துபூசனைபுரியமுயற்சியானு, ரறைபுனலினுடிப்பணிவெண்ணீறுடியங்கமெங்கும்புண்டரங்களணிந்துமேலா, மிறைவர்திருக்கண்மணிமாலிகையும்பூண்டேயினியவுபகரணவகைபாவுமெண்ணி. [௨]

வில்வமாயிரந்தொட்டுக்கமலநூறுவிளங்குமிதழ்முளரிநெய்தன்மிக்கசாதி, மல்லிகைவெள்ளெருக்கலரிதும்பைமத்தைமந்தாரைகொழுந்துமாதவிமென்§கைதை, சொல்லியவிம்மலர்க்குவையுந்தொடையுமாட்டுந்தூயதிரவியமும்விண்ணோர்சுதையும்பூணு, மெல்லியவெண்பட்டாரமிரத்நக்காம்பின்விளங்குசாமரங்கவிகையாவுங்கொண்டே. (௩)

§ கைதை-சாபத்தினல்விலக்கப்பட்டது.

முப்பத்துநான்காவது,

# காலாக்கினிச்சருக்கம்.

வேறு.

மாவிலந்தைபலாசுதாதகிவன்னிமாமருதங்
கூவிளந்தளவம்பலாமலர்கொன்றைபுன்னைகுரா
நாவனீழலின்மேவிவாழ்தருநான்மறைப்பொருளான்
மூவர்பாடியதேவநாயகமுதல்வனைத்தொழுவாம். (க)

முனிவன்யாக்கினவற்கிசொற்றனன்முளரிமேலுறைவா
னினிதுகூறியவாய்மைகேட்டனமியாங்கடாமெனவே
மனமகிழ்ந்திடுபிதிர்கண்மாதவவேடமாய்வருவோ
ருனதுளத்தினில்வைத்தியாலெனவோதுவார்பினுமே. (உ)

கேட்டியால்விசுவாவசுப்பெயரோய்கிளத்துவமியா
நாட்டின்மிக்கதோர்மைந்தரின்மையினல்லையொன்றிலையே
தேட்டிலுற்றிடுபுதல்வருஞ்சிவபத்திசேர்ந்துளரேற்
பீட்டின்மிக்கவராவர்சங்கரர்பிரியமெய்துவரே. (ந)

பெருகுசந்ததிபெற்றிலார்கள்பிதிர்க்கடம்மொடுமே
யுருகுதீயவெநரகிலுற்றிடுவார்களுண்மையதே
வருகடன்மறைசொல்லுமூன்றெனமாதவத்துடையோர்
தருவினீழலுளோர்பிதிர்க்களினோர்கடங்கடனே. (ச)

இருமைமாணியினெறிநனூலுறலிருடிதங்கடனே
தருமபன்னியொடேமகஞ்செயலமரர்தங்கடனே
யருமைசேர்தருபுதல்வரைப்பெறலதுபிதிர்க்கடனே
யொருமைசேர்தருமவைகண்முக்கடனுதவவேண்டியதே. (ரு)

இனையசந்ததியுதவவேண்டுவ*தெவிசுவாவசுவே
நினையுவந்துசொனேநெடும்புவிநீயுறைந்திடுநாட்
புனையும்வேணியன்பூசைசெய்குவைபின்னர்யார்புரிவார்
மனையின்மைந்தர்செய்கடனிலாதுறின்மறையுகின்பெயரே. [சா]

எவன்மனைக்கிடைபரமனர்ச்சனையின்றியுற்றிடுமே
லவன்வணங்கிடுபிதிரயன்பதியதிலுறைந்திடினுங்
கவனமோடுறுநரகிலாழ்குவர்காதன்மைந்தர்கடாஞ்
சிவன்மகிழ்ந்திடுபூசையில்லிடைசெய்தன்மாதவமே. (எ)

தனதினற்புரிபூசைநாடொறுமேதழைத்திடவே
மனதுவந்திடுமாதரோடொல்வேளைவந்துறுபோ
தினிதுகூடிநன்மைந்தரைத்தரவேணுமன்றிமினோர்
நனியுறுஞ்சிறுபோகம்வேண்டிடினரகநிச்சயமே, (அ)

---

* எ-குறுக்கல்விகாரம்.

வேறு.

நானுமேசிவபூசைசெய்துறுசந்ததிக்குமதுதவியே
மானவன்புரிபூசைவழிவழிமன்னிநாளும்விளங்குநீ
ஞானமொன்றியமணிமயச்சிவலிங்கபூசைநயந்துளா
யினவிக்கினமெய்திடாதுசெயினியமைந்தர்கள்வேண்டுமே. (௯)

இங்குனக்குளபூசையின்பொருளெண்ணிறந்தனவல்லவோ
பங்கமற்றிடுமுன்குணத்திசைபாவைமாதருமுற்றுளார்
பொங்குபுத்திரரிலையெனப்பழிபூணுறுதகன்முன்னநீ
தங்குசந்ததிவாய்த்திடச்செய்திசங்கரன்பணிநமையவே. [௰]

நட்பினெய்தினமுன்னிடத்தினில்பாங்கடாமெந்நாளினுந்
திட்பநல்கியசிவனையர்ச்சனைசெய்திநீயதனுளியாம்
பெட்பின்மேவியநேயமங்கதுபெருகுமுன்னிடையன்றியு
நுட்பவறிவிலரேனுநீதிடினுட்பராமெனநோக்குவாய். (௧௧)

பனவர்தங்குலமுற்றுடன்சிவபத்திபெற்றிடுமெங்கண்மே
லுனதுசிந்தையிலுவகையெய்தவுரைக்கவேணுமதேகொலோ
புனையும்வேணியர்தமையருச்சனைபுரியுமைந்தர்பவுத்திர
ரினையர்தங்களைநோக்குகின்றதுமேலதாகியவின்பமே. (௧௨)

சாற்றுமப்படியுடையனேமுத்தனன்னவன்றந்தைதாயரும்
போற்றிடுங்குலமுழுதுமேயுயர்புனிதமாஞ்சிவபூசனை
யாற்றிலார்தமைப்பெற்றபேர்நரகத்திலாழ்பவர்நீபெறு
மேற்றமாம்புதல்வர்சிவன்பணியுறுவர்காரணமுரைசெய்கேம். (௧௩)

நீறுகண்டியணிந்துசிந்தையினித்தனைத்தொழுபத்தியே
தேறுமாதரைநல்லவேளையறிந்துசேர்ந்திடிற்சைவநூ
லாறுசேர்புதல்வரையுயிர்ப்பர்களவர்களுன்னிலுமிக்கதாய்
நூறுசேரொருபதின்மடங்குநுண்ணியர்களாவர்கடிண்ணமே. ()

அவர்கடஞ்சிவபூசைகண்டுளமகிழ்தியென்றரனன்புசேர்
தவர்களானபிதிர்க்கள்சொற்றனகேட்டுவந்தனன்சம்மதித்
துவகையுற்றிடுமவர்களுக்குறுபூசையாற்றினனுண்மையாஞ்
சிவன்மகிழ்ந்துறுமவனதன்பமுதுண்டயன்பதிசேர்ந்துளார். (௧௫)

மற்றிவாறுநிகழ்ந்தபின்விசுவாவசுத்திறல்வாய்மையோன்
கற்றைவேணியன்மெய்த்தியானமுடன்களங்கள்களித்துற
நற்றினத்தினின்மேவியேசுரதத்திலின்பநயந்துளான்
பொற்றிரட்சடைபூதிகண்டிபுனைந்தமைந்தர்பிறந்துளார். [௧௬]

வந்தசந்ததிதாயநேகர்தம்வதனநோக்கிமகிழ்ந்துளான்
முந்துமங்கவர்தங்களுக்கரனுபநாமமுறையாகவே

தந்தனன்னுமைகாந்தனேடுசதாசிவன்சருவேசுர
னிந்துசேகரனீலகண்டன்புராந்தகன்னிறையென்றரோ. [௧௭]

மாதவச்சிவபத்திபெற்றிடுமைந்தர்கற்றனர்நான்மறை
யோதுசாத்திரமோடுருத்திரவத்தியாயமுவந்துளார்
நீதிபெற்றிடுசைவசீலநெறிக்குண்மிக்கனர்சிவகதை
த்திலாகமமோடுறுஞ்சிவதருமமாம்பொருடேர்ந்துளார். [௧௮]

அரியதோர்சிவபூசைசெய்திடுமுறுதிபெற்றனரனைவரு
முரியமைந்தரைநோக்கியேமகிழ்வுற்றனன்விசுவாவசு
தெரியுமாதவர்யோகர்கண்டனர்சிந்தையிற்பரிவெய்தினர் [ன்·
வரிசைமைந்தரைத்தழுவினன்றந்தைவாழியூழியென்றே சொ

அந்தமைந்தர்கடந்தைதாளிலிறைஞ்சியஞ்சலியத்தரா
யுந்துமன்பொடுரைப்பரையவுனுளுறுந்தயவாலெமக்
கெந்தவெம்பவமுந்தணிந்திட வீறில்செல்வமளித்திட
முந்துறுஞ்சிவபத்தியுந்தருதருமநீமொழிவாயென்றார். (௨௦)

மைந்தர்சொல்லியவாறுணர்ந்துமகிழ்ந்துசொல்வனியானெனச்
சிந்தைசெய்துரைசெய்குவானுறுசிறுவர்காடிடசித்தர்தா
மந்தமற்றிடுபத்தர்தாந்தொழவரியவின்பமளித்திடு
மெந்தையார்பதகமலமேயிதயத்திருத்திடவேண்டுமால். [௨௧]

ஆசையிற்செலுநெஞ்சைபண்ணறனன்பாலறியத்தகுந்
தேசுபெற்றிடுசரணபங்கயமீதிருத்திடல்செய்குவீ
ரீசனர்பதமயனுமாயனுமிந்த்ரனுமற்றையாவரு
நேசமாவிதயத்தில்வைப்பதுநிகரதற்கிலையுலகிலே. (௨௨)

அனையசேவடிநினைவினுல்வினைவாகுமின்பசமுத்திர
மினையதெய்திடினுலகமியாவையுமெய்திடப்பெறலாகுமே
வினையெனும்பவவடவிசுட்டிடுமெங்கியாம்விசுவேசர்தாள்
புனையுமன்பொடுபோற்றிடிற்சனனக்கொடுந்துயர்போக்குமே. ()

நவநிதிக்குவையனையமைந்தர்கள்கேண்மினந்தலினுதனை
யவமுறும்பலதேவரோடுவமித்திடுமறிவவையொணு
வுவமையற்றவிந்நினைவெனக்குமுமக்குமுற்றிடவேண்டுமாற்
சிவனருச்சனையன்றிமற்றுளதேவரைத்தொழறீயதே. (௨௪)

என்றுவேதமுணர்ந்துளோர்களியம்பியுற்றனர்மைந்தகா
ணன்றுணர்ந்திடுமிவையினோர்கதைநவிலுவேனதுகேண்மினே
வொன்றுமிங்கிதுகேட்குறிற்சிவபத்தியுற்றிடுமேலைநாட்
குன்றெடுத்தவனுக்குமாமதகுமரன்வந்துபிறந்துளான். (௨௫)

அமையுநாரணன்மைந்தனெஞ்சினிலரனையும்பலகடவுளோர்
தமையுமேநிகரெனநினைந்திடுபுத்திவந்தநுசாரவே

சுமையிலாதுபர்காலவங்கியின்மாலையாய்வரல்கண்டன
னிமையுநின்றிலனோடிவந்துறுதந்தைலோகமதெய்தினன். (உசு)

தாதைதாளில்வணங்கிநெஞ்சொடுமுடனடுங்கிடச்சாற்றுவா
னேதையாவெனையேவலைந்ததுகாலவங்கியெங்கேகுவேன்
மாதயாநிதியாயடைந்தவர்தமையளித்திடவல்லபே
ரோதபாதிசையெங்குமோடிவலைந்ததுற்றதுநோக்குவாய். (உ௭)

இதனையேதடைசெய்யவல்லமையில்லையோஙினக்கெம்பிரான்
சுதனசக்கரமாயினுங்கதையாகிலுந்தொடநினைகுவா
யதனமாக்குறுமிதனைநீகடிதாற்றிலுய்குவனென்னவே
மதனுரைக்குமவ்வளவிலிந்திரனயனுமாதரொடெய்தினர். (உஅ)

வந்துமாயனையேவணங்கினர்கண்கணீர்வரவாடியே
முந்துமாமுகவொளிமழுங்கினர்மொழிதளர்ந்திடவுரைசெய்வா
ரெந்தையேபிரளயமதுற்றிடுமங்கியண்டமதெங்குமே
யுந்துறுவலைவுற்றதெங்ஙனமேகுவோமுயிருய்குவோம். [உகூ]

இனையவெய்திடவரனிடத்தபராதமேதுபுரிந்துளோம்
புனைதுழாயவவென்றனர்பினுமயன்சொல்வானரன்பூசைசெய்
மனையின்வைகினன்காலவங்கிவலைந்கிடற்கபராதமாம்
வினையிழத்திலன்வந்தவங்கியுருத்ரனுமிதுமெய்ம்மையே. (௩0)

காலவங்கியிதுறவலைந்திடுகாரணம்மெனவோதுவாய்
சீலநீசிவபூசனைக்குறுதாழ்ச்சிசெய்ததுமுளகொலோ
வாலமுண்டவனர்ச்சனைக்குறுபண்டமியாதையயர்த்தனை
மாலதாய்மலர்வாடல்வண்டுணல்வரதன்மேலருச்சித்தியோ. (௩க)

ஆதிபூசையைநீறுகண்டிமெயணிசெயாதுசெய்தாய்கொலோ
பூதிமந்திரமானதன்றியோர்புனையுமந்திரமுள்ளதோ
வீதலாற்சிவபூசைமந்திரமீனமாஞ்சுரமானதோ
சோதிசேர்தருவில்வநீரிடைதோய்த்திடாதருச்சித்தியோ. [௩உ]

தூபநீறொடுசேர்தஞ்சாத்தலிலாய்கொலோகமழ்தூபமுஞ்
சேயதீபமுமாதரத்தொடுதிருமுன்காட்டிலையோசிவ
னேயமாமபிடேகத்தின்பொருணீமறந்ததுமுண்டுகொ
லாயரோமமதுற்றவன்னமருத்துவித்ததுமுளகோலோ. (௩௩)

பழுதுசொத்தைகலந்திடாக்கனிபாகுதேன்கறிவர்க்கமு
மிழுதினோடுநைவேதனத்தொகையாவுஞ்செய்தலிலாய்கொலோ
முழுதுமஞ்செழுத்ததுகொடேயபிமந்திரித்திடுமுறைமையாற்
றொழுதல்செய்திலைபோலுந்நாமமறைவழிதுதித்திலைபோலுமால். [ ]

இறைவிமுன்னிறைவனையருச்சனைசெய்திலாய்கொலிலக்குமி
[illegible]

வறைதரும்மிலிங்கார்ச்சனைக்குளதாமதங்களுண்டாயதோர்
குறைதருந்திரவியமுண்டோமனங்குழைந்ததோத்திரமில்லையோ.

வேறு.

என்றுபிரமதேவன்றனியம்புமொழிநாரணன்கேட்டே
அன்றுபயத்தினொடுஞ்சொல்வான் றூயாயுயிர்போம்வேளையினு
நன்றுதருகண்ணுதல்பூசைநான்றன்வழுவல்செய்யேனாற்
பின்றுமுகாந்தகாலத்தும்பிறழாதியற்றல்புரிவேனே. [௩௬]

மாதேவன்பூசனைப்பிரியமருவாமனத்தோடேயிருக்குங்
கோதேயனையதேகத்தாலாவதென்னேகுழவிமனை
தீதேதருசெல்வங்களிவற்றானுமாவதென்செப்பாய்
பூதேசனையெக்காலத்தும்பூசைசெய்யார்க்காவதுண்டோ. (௩எ)

தந்தைபுனிதன்றனக்குதித்தோன்றானேசிவனைப்பூசைசெய்வான்
சிந்தைமகிழ்தேவுத்தமனம்பிகைதன்பாகன்சிவபூசை
வந்தமுறைமையாற்புரியான்வாணாள்செல்வம்வீணுமே
யெந்தைபூசையமுதன்றியமுதம்வேட்டோனெரியுண்போன். (௩அ)

ஆழிதன்னாலவன்முடியைப்பறுத்தல்வேண்டுமெகிலேசன்
வாழியுமைகேள்வன்பூசைமுன்னுந்தவத்தாற்பெற்றேனே
யூழிநாதன்பூசையிலாஞசமுறுவனுவன்றானே
பாழிவையந்தனக்குற்றபாரமவனாலாவதென்னே. (௩௯)

பூசைக்குதவுந்தேகத்தைப்போற்றல்வேண்டுமெல்லாத
வாசைக்குதவுஞ்சடலத்தையாழியாற்கொய்திடல்வேண்டு
தேசனுமஞ்சொல்லாதநாவைச்சிதைத்தல்செயவேண்டு
மாசிலரன்பூசையிலழுந்தென்மனமந்திரத்தைமறவாதே. (௪௦)

திருநீறுடன்கண்டிகைமாலைதிரிபுண்டரத்தைமறந்திலனு
ஞருகுமனத்தின்மோகமுறேனுறுங்காற்கேடுதான்வருமே
மருநீடியகொந்தளவுமைதன்மணவாளன்றன்பதகமலத்
தருநீழலிலென்மனமிருக்குமதுசத்தியஞ்சத்தியமாமே. [௪௧]

இதனுக்கெம்மான்பதங்கரியேயிதுபேதிக்கிலென்மனத்தை
விதனத்தேகந்தனைச்சுடவேவேண்டுமெனவேகியமித்தேன்
சுதனொப்பானென்றாரகன்றய்தந்தையானசோதியையே
முதன்மைப்பூசைபுரிவதுவேவேலையாகமுயல்வேனே. (௪௨)

ஈசன்றனைச்சிந்திப்பதல்லாலெனக்கேயிச்சையொன்றிலையாற்
றேசனவன்மங்களவுருவந்தேர்வார்பெறுவர்மங்களமே
யாசையாகியவன்றனையேபருச்சிப்பேன்வேண்டியவெல்லா
நேசமுடனேதந்தளிப்பனிதியமெனக்கன்னவன்றானே. (௪௩)

அந்தத்தனத்தையார்விடுவாரமலன்பாதரேணுவே
யெந்தத்தருமந்தனக்குமேமுதன்மையிறைநாலாக்கினியான்

மூந்தத்தகன்மானவண்டமுழுதுமுமைதன்வேர்வையினாற்
பிறந்தபடைத்துவிளையாமெம்பெருமான்பாதம்பணிவேனே. (சச)

என்னத்திருமாலயனுடனேபுகலும்போதிலிந்திரனு
மின்னற்கதிரும்வானோரும்விரவினார்கண்டயன்வெகுண்டே
பன்னிப்புகல்வான்காலத்திற்பரமர்புரிகாலாக்கினிதான்
றுன்னற்கேதுவிலையெவரோவபராதத்தைத்துணிந்துளரால். [சரு]

ஆங்காரத்தாலெவனோடாவமலன்பூசையியற்றாதான்
பாங்காயானுமாதவனும்பதுமைதானும்பாமகளு
நீங்காதரனைப்பூசித்தோநீவிர்செய்யாதிருந்தீரா
லெங்காத்துபருற்றிடவிவ்வாறெழுந்ததுநானறிந்தேனே. (சசு)

அதனுக்கேதுஞ்சந்தேகமிலையகோவிதாச்சரிய
மதமுற்றிடுமித்தேவர்களிலெவரோவள்ளறனைப்பணியா
ரிதனைக்குறித்தேநின்மலனுமிறைநெற்றியிற்கணெரியெழுந்தே
விதனத்துடனேயாவரையும்வீட்டும்படிக்குவெகுண்டதுவாம். (சஎ)

துப்யமதுசூதனனேநஞ்சோதிபத்தியில்லாத
வெய்பவவரால்யாவரையும்வீட்டும்படிவந்தெழுந்ததே
செய்யவேண்டுஞ்செயலென்னேயவர்கண்மட்டிற்செல்லாதா
னேயுகமையும்விடுவதிலேமேலென்செய்வோநவில்வாயே. (சஅ)

அந்தோவாலவிடம்போலவகாலந்தான்வந்தடுத்ததுவா
லெந்தோகாலகாலர்தமதாணையாலெல்லோர்தமையும்
வந்தோர்காலாக்கினிசூழ்ந்துவளைத்துக்கொண்டதாவினியா
முந்தோகையினிலெவணடைவோமிருந்துப்போலமுளைத்ததுவே. ()

எங்கேபுகுந்தாலிதுவெய்தாதியம்பீரிமையாநயனத்தீர்
நங்காதலியரொடுகோடிக்குளிங்ஙன்விடுத்துநாமகல்வோ
மங்கேபோகிலின்புற்றேயமைதற்கிடமுண்டோவென்றே
சங்கேந்தியும்வேதனுமமரர்தாமும்போய்ப்பாதலம்புகுந்தார். [ருo]

அதலந்தன்னிற்குசாம்பதேசத்திலடைந்தாரமரரவர்
விதனந்தன்னையரவரசன்கண்டானெங்கேமேவினீர்
முதன்மையுடையீரெல்லீரும்வருகாரணந்தான்மொழிதிரென
வதனைக்கேட்டோர்புகல்வரெம்மிலிபரோசிவனையவமதித்தார். [ருக]

அன்னவாற்றால்யாவரையுமடர்ப்பான்காலாக்கினிபடைந்த
துன்னையடைந்தோநீபுரப்பாயுன்பால்விடத்தியுள்ளதான்
மன்னுமதுதான்றடைபுரியுமென்றேமதித்துவந்தோற்றே
மென்னவகைபாற்புரத்தியுன்றலாமோவென்றேன்றியம்பியே. (ருஉ)

பரமன்பூசைபுரியாதபாவியுடனேகலந்தவெ
[illegible]

விரவுங்காலந்தன்னிலேயூழிவிளைழந்தெனவெருவா
வரவினுட்டைவிடுத்தாமையண்ணலிடத்திற்புகுந்தாரால். [ருங]

கூட்டத்துடனேயமரர்வரக்கூர்மமூர்த்திகண்டுநீர்
நாட்டமுடனேயெங்குவந்தீர்நடுக்கமேதுபுகறிரென்றே
யீட்டமுடையமழைமேகமிடித்தல்போலவியம்பிடலும்
வாட்டமுடையமாயவன்றன்வினவிச்சிலசொல்வகுப்பானல். [ருச]

கமடத்திறைவரேயுமக்கென்கடுங்கோபந்தான்காலவங்கி
யமடுற்றிடவேயெமையடர்த்துவருகின்றதுகண்டதுதீர்ப்பா
னுமிடத்திடராலுற்றனமாற்கோபம்புரிதலுசிதமன்றே
நிமிடத்தெமைக்காத்தருள்புரியநினையீர்நீதியிதுவுமக்கே. (ருரு)

ஒருவன்றுயரால்வந்துற்றாலுதவிபுரிதலல்லாமல்
வெருவும்படிக்குவெகுண்டிடுதன்மேலோர்செயலோவிவைவிளம்பீர்
தருமமன்றிதெனவெகுண்டுவிண்டவுடன்கச்சபர்புகல்வார்
பெருமையுடையீரரனருளாற்காவலாழிபெற்றீரே. [ருசு]

பரமன்பூசைபுரியாதபாவியொருவனுறிலவன்றன்
சிரமன்புவியிலுருண்டோடச்செய்யகில்லீருருத்திரன்றன்
வரமன்கோபத்தங்கிவரிலெவரைவிடும்யாவையும்வல்ல
வுரமன்காலாக்கினிசிவதூடணனையுணர்ந்துகொல்லுமன்றே. [ருஎ]

இப்போதெனமாப்பிரளயந்தானெய்திற்றேவென்பயமென்றே
தப்போதில்லாக்கூர்மர்சொற்கேட்டரியற்புதமெய்தினன்சாற்று
மொப்போதில்லாவிவர்நன்றேயுரைத்தார்சிவதூடணனுக்கு
மைப்போதுற்றசிந்தையனைக்காண்பதெவ்வாறெனமருள்வான். (ருஅ)

அயனேபரமற்பிழைத்தோனையறியஞானமில்லோமாற்
பயனேர்நெய்க்கொப்பரைமூழ்கியறியவேண்டுமெனப்பகர்ந்தே
வியனேதருமெய்ச்சைவனல்லாதவனையறிந்துவிரகதனு
லுயநாநீக்கப்பெறுவோமேலதனாற்சுகமுற்றிடுவோமே. [ருகூ]

சொற்றுமயனேயுபாயமொன்றுண்டதுகேடுயசைவனல்லா
னுற்றவிடத்திலாழிதனையுருட்டிலவன்சென்னியையுருட்டு
மற்றங்கவன்றனெத்தூரத்துறினும்படுத்துவருமன்றே
பெற்றதிதனுக்கேயன்றேபெருமானருள்சக்கரந்தானே. [சூ0]

நமக்குப்பகைநற்சைவனல்லானவன்றனுறைவைநாடியே
யிமைக்குமுன்னந்தலைதகர்த்தாற்சுகமுற்றறிவுமெய்தலாங்
குமைத்தலவனையிப்பொழுதன்றெப்போதினுமிக்குறிக்கொள்வோஞ்
சமைக்குமிதுவல்லாற்செய்யுங்கருமமென்னேசாற்றுதியால். [சூக]

இவ்வாறிழைத்தோமெனிற்றுயரக்கடலின்வடவைவிடரெய்தோஞ்
செவ்வான்வேணிவிசுவேசர்ச்சிந்தியாரைச்சேரோணு

எவ்வாறிந் தட்புத்திபத்திசென்மாந்திரஞ்செய்தவத்தடைவா
ரெவ்வாதியாதுமிவைக்கெனமால்வேதன்றனைப்பார்த்துரைத்தனனே.

முப்பத்துநான்காவது காலாக்கினிச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௩௫௮.



முப்பத்தைந்தாவது,

## கூர்மச்சருக்கம்.



வேறு.

ஆடாரணைசிலந்தியெறும்பரவுநாகமடவிமயில்பாக்கனோடலவனுரை காடாருங்கருங்குரீஇதமக்குமேலாங் கருணைபுரிந்தளித்தருளுங்கடவுணீயே, பீடாருமிவைகளிலொன்றல்லேன்பொல்லேன்பேதையேனுன தருளும்பெறுகுவேனே, தாடாழுமவாக்கருளுங்கயிலையாம்வேதண்டத் தாய்மேருகோதண்டத்தாயே. [௧]

கற்றவன்யாக்கினவற்கிசொல்வான்மாயன்கமலத்தோனுடன்றேவர் கணங்கள்கேட்பச், சொற்றிடுவன்சைவனல்லாற்காணஞானச்சுடர்தோன்றமுனங்கூறல்செய்வோமென்ன, வுற்றவருநன்றதுவேசெய்யுமென்னவுபாயக்கொப்பரைகிறையாறுநெய்யூற்றி, மற்றதுதீயெழக்காய்ந்தபின்னர்மாயன்மாமாதுமூழ்கியேசுத்தரானார். [௨]

அயனுடனிந்திரன்வாணியிந்திராணியவர்களும்வீழ்ந்தெழுந்துசுத்தராயினாராற், சயமுறுதேவர்கண்மாதர்மைந்தரோடுதாம்போய்மூழ்கிச்சுத்தசைவரானார்,மயல்செயுமன்மதனொருவன்றனதுநெஞ்சின்மதித்தமதியினைநினைந்தேமாழ்கிமூழ்குஞ், செயலதுசெய்திலனின்றானதனைக்கண்டதிருமாதின்கேள்வனுந்திருமால்சொல்வான். [௩]

வாடாவேடாமதனுதுட்டாகட்டாமதிகேடாமங்களங்கணல்குமெங்க, ளேடாருங்கொன்றையினன்றன்னையென்னென் றெண்ணினுய்சடையிலிளம்பிறையைக்கொண்டே, பீடாரும்புவனங்களெல்லாமேலாம்பேரொளிகாட்டியதேவதேவனன்றோ, தோடாருங்குழையுடையான்றாடணத்தீதூரத்தேயுறினும்வந்துசுடுங்கண்டாயே. [௪]

அங்கதனுனீயடலையாகின்றுயையப்பாவையோவுனக்கடாதகன்ம, மெங்கிருந்துவந்ததந்தோபுவனமூன்றுமிடத்துமுனதெழினலம்போலில்லையன்றே, சங்கரனைத்தூடணஞ்செய்புத்தியெங்குச்சமைந்ததனக்கடமகனேமகனேநீதான், மங்குதல்செய்திடுமிந்தச்சத்யமென்றுமனத்திலுறச்சற்றுநீமதித்திலாயே. [௫]

சத்துருவாம்பிள்ளைநீயெங்கேவந்தாய்சாற்றிலிங்கிதுட்டுதுமைபுதுமை தானே, யத்தனிடத்தபராதஞ்செய்தவன்மேலாழிசெலுத்தாமலுறனுசி தமன்றே, நித்தனெனக்களித்ததுதூடணஞ்செய்வோரைநிக்கிரகஞ்செ ய்பவன்றேவடவைபோலுஞ், சித்திபெறுசக்கரமுன்னுடலைக்கூறுசெ ய்தலாலதன்கோபந்தீர்ந்திடாதே. [௬]

திரிபுரத்தையெரித்ததிரிநயனனுக்கேசினம்வரச்செய்தவனெவனேசி தைகிலாதான், பரிபுரச்சேவடியதனூற்காலற்காய்ந்தபரமனெனும்பானு முன்கச்சோதம்யாமே, கரியுரித்தோன்றனைநிகராந்தேவர்யாரங்கசவெவ ருமவனடிமைக்கடிமைகண்டா, யெரியுருவற்கபராதஞ்செய்திறந்தோரெ ண்ணிறந்தோரிதிற்பயந்துநடந்துளோமே. [௭]

அவனாணைப்படிநடவேனுகிலென்னையந்தகன்கைவசமாக்கிவிடுவ னன்றே, யிவண்மேவுந்தேவர்களுமுனிவர்யாருமீசன்மகிமைகள்காணக் குருடர்கண்டாய், சிவன்பாலவிழிப்பொறியோர்கோடியொன்றிற்சிறித ண்டகோடியெலாஞ்சிதைப்பதாமே, பவன்மேன்மையாரறிவாரனந்த கோடிபகுவாய்பெற்றுடையோர்க்கும்பகரொணுதே. [௮]

அன்னவன்றன்மகிமையவனறிவனன்றேயணுவுமகமேருவுமேயொ ப்பென்றுற்போ, லென்னமதியாலெமையேயீசனேடுமிணையென்றேது ன்மதியாலெண்ணினையே, யுன்னுடலைச்சுடவேண்டுநாசகாலமுற்றதனு லுனக்கிதுவந்துற்றதிந்தப், புன்னினைவேயுன்னுயிர்கொள்யமனுமென் றேபொறிப்பறக்கவுறுக்கியரிபுகன்றானன்றே. (௯)

ஆங்கதுகண்டேபுருவநெறித்துக்கோபித்தயன்புகல்வானரன்றன க்கேயபராதஞ்செய், தீங்கிழைத்தவிவன்றனைப்பார்த்திருக்கின்றீரித்தீய புத்தியுமக்கெங்கேவந்ததந்தோ, வோங்குபரன்றனைமதியாமதிகேடுற்ற வுவன்றனைப்பார்த்திடிற்கொடியபாவமன்றோ, வீங்கிவனைக்கொல்லவெ ன்றன்படையுமுற்றதிவனையிழந்தோமென்றேயெண்ணுவீரே. (௧௦)

சங்கரனைத்தூடணஞ்செயிவன்றனுக்கைத்தலையையறுத்தேநரகக் குழியிற்போடீ, ரிங்கிவன்றான்யமனேவுஞ்சவளஞ்சாமமெனுநாய்கள்க டித்துங்கத்தீர்க்கப்பட்டே, யங்கிநரகிற்கிடக்கக்கடவனென்றேவயன்பு கலக்கோமளவம்புயப்பெண்கேட்டுப், பொங்கியகண்ணீரினுடன்கோப த்துற்றபுருடனுடன்பணிமொழியாற்புகலுகின்றாள். [௧௧]

சம்புவினுக்கபராதம்புரிந்தானேனுந்தாதைநீரிவற்கோறறகுதியன் றே, வம்புறுகாலம்போக்காதிவனையண்ணன்மகிழ்பூசைகடிதினிற்செய் திடவேபண்ணு, மிம்பரிலிங்கிவனுமெண்ணமெய்தப்பெற்றானிணையி லழகிவனைப்போற்கிடைக்குமோதா, னம்புதல்வன்றனைப்பாருமுன்ன மேமெய்ந்நம்பரைப்பூசித்திடவேநவின்றிரீரே. (௧௨)

காலகாலங்களினிகழ்ப்பியாதகாரணத்தாலிவனிழிந்தோனாயினனும், பாலனுமவன்றன்னைப்பிதாநன்றாகப்பயிற்றிலவன்சிலநடைபடைத்தோனவன், சாலவேசிவலிங்கத்தைகற்பித்தந்தத்தனையனரன்பூசைசெயத்தானையயானோர், ஞாலமினைக்கண்டுமகிழ்ந்துறுவர்துநயந்துசெய்யாதருந்துயரநண்ணினீரே. (௧௩)

அமுதவிலிங்கத்தைநும்மைநன்பூசையாற்றிலதுபோற்செல்வமேதுசொல்வீர், நமதுசெல்வமாம்புதல்வன்பூசியாமனற்பொறியாம்பெயர்ப்பயனின்றற்றேனென்றே, விமுதுயராற்கமலைசொன்னவார்த்தைகேட்டுவிண்டுவிழிநீர்சொரியவிளம்புகின்றான், குமுதவிதழாயுனதுமைந்தன்றன்னைக்குழகனைப்பூசித்திடெனக்கூறிலேனே. (௧௪]

வாராய்மைந்தாமதனைவிடியற்போதின்வள்ளலைப்பூசித்திடுபூசித்திடென்றே, யாராதகாதலினாற்புகன்றிலேனோவவனிரதிசமேதனாய்த்தூங்கினேனே, சீராயிங்கிவனிட்டவினையனன்றோசிவபூசைகாலையினிற்செய்யானேனும், போராதபத்தியினின்மத்தியானம்பிரதோடத்தேனுமேபேணிலானே. [௧௫]

ஈங்கிவன்றன்பாக்கியமில்லாதானன்றோவிலக்குமியேபூசியாதிருந்தவாற்றாற், றீங்கிதனாலென்செய்வோஞ்சிவனைப்பூசைசெய்யவல்லபிள்ளைதனைப்பெற்றிலோமே, பாங்கிலிவன்பரமனையர்ச்சனைசெய்தானேற்பாலர்பாலரைப்பெறவும்வேண்டுமோதான், பூங்குழலாயிவன்பூசைபுரியில்யானப்புராந்தகனாவேன்சிவன்றாள்கரிகண்டாயே. [௧௬]

பரிந்திவனர்ச்சனைபுரியிற்காலவங்கிப்பயநமக்கேன்வருஞ்செல்வத்தளவையுண்டோ, தெரிந்திவன்முன்புரிந்திலனான்மரணகாலஞ்சேர்ந்துழிநாமினியென்னசெய்வோங்கண்டா, யெரிந்துமனைவேம்பொழுதிற்கூவறேட்டவென்னுகின்றோர்செயல்போனீயிசைத்தாயென்றே, கரிந்ததிருமேனியரிபுகலக்கேட்டகாரிகைகண்ணீர்கலங்கியழுதாளன்றே. [ ]

கண்டிரதியுடனழுதாண்மாமியோடுகாதன்மருகியுங்கலங்கியரற்றனோக்கி, யண்டர்பதிமனைவாணியரம்பைமாருமாகுலித்தார்பேராரவாரமாக, மண்டுகுரன்மலைமுழைகடோறும்புக்குமாறுதொனிபுகுந்துளதெண்டிக்களாவிக், கொண்டவண்டமுற்றுமேயுண்டகாணிற்குலவுகருமேகவினங்குமுறல்போலும். [௧௮]

அட்டகசமட்டமாநாகம்பூமியசலங்கள்சலங்கொள்கடல்கூர்மனாதி, நட்டமொடுசலங்களுற்றகலங்குகின்றநங்கையர்களழுமோசைகயிலைமேவு, மட்டளகத்துமைசெவியிற்புகுதலோடுமருங்குகின்றவிசையைதனைப்பார்த்துச்சொல்வாள், பட்டவிந்தத்தொனியேதோநமதுவெள்ளிப்பருப்பதமுநடுங்கவேபரந்ததென்பாள். [௧௯]

ஏழுபாதலமுமேநடுங்குகின்றவெங்கணுநங்கயிலையாதாரமாக. வாழுகின்றதிதுவேயிப்படிநடுங்கின்மற்றைப்பதநடுக்கமுறல் வருப்பமென்னே, சூழுமாப்பிரளயகாலத்தினேர்ப்போசொல்லுவாயெனத்தேவிகேட்டலோடுந், தாழுமவளாச்சரியமுடையளாகித்தாயேநானிதொன்றுமறியேனென்பாள். [௨0]

ஆங்கதன்பினவட்கைப்பார்த்தரம்பைசொல்வாளண்ணலாரதிர்ந்திடுவரவர்தம்பாற்போயிங்கிதனைவினவிவந்துகூறுகென்னவெழில்விசையைதான்பகர்வாளிமயமாதேயோங்குகின்றமகேசரெங்கேயுற்றுளாரோவுற்றவரோடியாதேனுஞ்சொல்லுரைக்கவல்லேன், பூங்குழலாயெனைவெகுளிலென்செய்வேன்யான்புவனமெலாநடுங்குவதுபகல்வன்கேளாய். ( )

தேவர்களிலொருவனவன்கேடுசூழ்ந்திமையோன்றங்களொடுசிகராமென்றே, மூவர்கட்டம்புரமெரித்தமுதல்வன்றன்னைமுன்னினுனின்னுடையகணவன்றானே, யாவர்கட்குமேலானதேவதேவனெல்லவரும்பூசனைசெய்யீசனேச, னேவறவெங்கணுநிறைந்தோனொப்பிலாதோனொருவனெனவேதமெலாமுரைத்தவன்றே. (௨௨)

காலகாலேசனகிலேசனேராய்க்கடவுளரில்யாருளார்கருதும்போதின், மாலுமயனேமுதலாந்தேவரெல்லாமற்றைவனுக்கமைகிங்கரர்களன்றோ, சாலுமவன்றான்சிருட்டிதிதிசங்காரகாரணனும்விசுவேசன்றானேயன்றோ, வாலமுண்டோன்றிருவருளையடைந்தோரன்றோ வளவிலாச்செல்வமுற்றேயமர்கின்றாரே. (௨௩)

கந்தருவர்தேவர்சித்தர்பூசைசெய்யுங்கடவுள்கலியாணகுணவாரிபோல்வ, னந்தமற்றசவுரியவீரியனவற்கேயாரொப்பாரிமைப்பதன்முனயனேமாலே, யிந்திரனேமுதலமரர்தமையுண்டாக்கியளித்தொடுக்கிலீலைபுரியிறைவனை, சுந்தரனைக்கணவனெனப்படைத்தாயம்மாசொல்லரியவருந்தவநீ செய்துளாயே. [௨௪]

உன்றனக்குக்கமலைமுதலணங்கனைருமுலகளந்தோன்முதலாயவமரர்யாருந், துன்றியதாசியர்தாசர்தாமேயன்றேசோதியைப்பூசித்ததனலிவைபெற்றாரே, கொன்றைவேணியன்கொழுநனாகத்தந்திருமரனுமைந்தர்களாகச்செல்வம்பெற்றா, யின்றுனதுபாதசேவைகடாஞ்செய்யுமெங்களுடைச்செல்வமேசெல்வந்தானே. (௨௫)

யாங்களேழுவுலகாளிறைஞ்சத்தக்கோரிறைவியுன்பாதந்தொழுவோரெய்தாதென்னே, பூங்குழனீயாதிசத்தியுலகமீன்றாய் பொருவருமித்தொழில்புரியும்பொருளுநீயே, நீங்கலாய்சிவனையென்றுமுனையல்லாமனிமலனொருகருமநினைக்கலாமோ, வோங்கியவுன்செல்வமன்றோசெல்வமம்மாவுன்பெருமைதன்னையெவ்வாறுரைசெய்வோமே. [௨௬]

அருமறைகள்பாவுமுனையறியமாட்டாவறிந்தோர்களழிவிலாப்பதத்திற்சேர்வா, ரொருமுதல்வியேயென்னவிசையைசொல்ல வுற்றபோ

கூவிளநீலம்புனிதமான, கந்தமுறுமஞ்சனங்கொண்டி லிங்கபூசைகாதலி ற்செய்தேவணங்கிக்களித்தானன்றே. (௩௪)

காதல்பெறுகச்சபரைக்காலவங்கிக்கடவுள்பார்த்துரைக்கின்றனீயே சைவன், ஈதகலவெப்பொழுதுமருச்சிக்கின்றாய்சிறந்தவிந்தலிங்கமு காந்தருக்கே, யோதரியபிரியமுற்றதன்றேவிந்தவுயர்பூசைசெய்வதனு லுலகந்தாங்கு, மேதமில்சத்துவமுற்றாயிந்தவில்வத்தெழில்வனம்வைத் தனையுலகத்திசைவைத்தாயே. [௩௫]

இந்தக்கூவிளத்தளிராலிலிங்கபூசையென்றும்விடாதருச்சிப்பாயி வைசெய்வோர்கள், சிந்தித்தகருமமெல்லாஞ்சித்தியாமென்றேபிரளயா னலன்றான்செப்பக்கேட்டே, முந்துற்றகூர்மர்தாஞ்சொல்வார்செல்வா முதுபசியாலுற்றநீதயிர்நெய்தேன்பால், சிந்தொக்கவெந்தைக்குநிவேத னங்கள்செய்ததுளநுகர்ந்திளைப்புத்தீர்வாயென்பார். (௩௬)

இழுதிலிச்சையுடையனீயினமநேகமிருக்கின்றவவற்றையெல்லா நுகர்தியையா, பழுதிலிந்தப்புவனமெல்லாந்திரிந்ததாலேபலவுகஞ்செ ன்றனபசிதான்பெரிதேயன்றோ, வெழுதியினியெங்கேதான்போகின்றா ய்நீயெண்டிசையுஞ்சென்றுளாய்நினையாரேனுந், தொழுதுபசியாற்றுவா ரிலையேநின்றன்சூழ்பசிக்கேற்றிடும்போசிப்புப்பெற்றிலாயே. (௩௭)

உனதிளைப்பாற்றுதற்காசையுவைக்குளியாவருற்றுளாரெல்லோரு முன்னைக்கண்டே, மனதுபயத்தாலோடிப்போயினாரலெனமகிழ்ந்துகூ ர்மர்சொல்லவந்தோன்றானுந்,துணைவுடனங்கவன்காட்டுந்தயிர்பானெய் தேன்றேயமுதலியாவையுமேயநேகமுழி, கனையுடனின்றேபருகியிளை ப்பினோடுங்கடும்பசிதீர்ந்துடறடித்துக்களித்துளானல். (௩௮)

தகுங்கூர்மருடன்சொல்வானீகொடுத்ததயிர்நெய்தேன்முதலாம் பானங்களாலே, மிகுந்ததாகந்தவிர்ந்தேமெய்பூரித்தேன்மேவுமிலிங்கார் ச்சனையின்மகிழ்ச்சிபெற்றேன், றிகந்தமெல்லாம்போயலைந்தவருத்தந்தீ ர்ந்தேன்சென்றகாலங்கள்யுகபயுதங்கண்டாய்,புகுந்திடும்வைகுண்டாதி யுலகந்தன்னிற்பூசைசெய்தகொருகோடியிலிங்கமுண்டே. (௩௯)

உனதுசிவலிங்கம்போலெங்குங்காணேனுறுபோகமுத்திதரற்கிது போலில்லை, யனகன்பூசனைபுரிவாய்நீமயக்கையகற்றுசிவதருமங்களநே கஞ்செய்வாய், சனனதுக்கங்கூட்டுமோணவமும்பாசத்தருக்கையுநீக்கிடு மிலிங்கபூசையென்று, மனதுடன்செய்வாய்சிவார்ச்சனையைபாவர்ம ன்னிறைவரெனக்குவரதராமே. (௪௦)

அண்ணலடியார்போல்பாரதிவுளார்கேபறிந்தனசொல்லெனக்காலா க்கினிதான்கூறக், கண்ணுதல்வெண்ணீறுருத்திராக்கம்பூண்டகச்சபர்ச ங்கரனையுளத்திருத்திச்சொல்வா,ரெண்ணருமெய்ப்பொருளேநீயெனைக் கூறென்றலிலழிற்றங்தமகவினுரைகேட்டபோலும், புண்ணியனே யானறிந்தவாறுசொல்கேன்பொறுத்தருளியினிதாகக்கேட்கவேண்டும்.

கவித்தபலப்படு குழியிலழுந்துகின்றோர் காரணனைப்பூசியார் குடும்ப
ந் தாங்கித், தவித்திடுவராசாபாசங்களார்ப்பச் சாகின்றோர் சங்கரன் சீரறிய
மாட்டார், குவித்தமனத்தால் வாக்காற் கிரீசன் மேன்மை குறித்திடச் சோ
ர்ந்திடப்படுமேயுலகத்தேயுற், பவித்தசனஞ் சங்கரார்ச்சனையிலென்றும்ப
லகாலம்போக்கிடவே வேண்டும் வேண்டும். (௪௨)

அம்பிகாபதிபூசையான் மலாபமதைத்தவிர வொன்றில்லையர்ச்சனையி
ன்மேன்மை, செம்பதுமன்முதலோரானம்மாலே தான்சிந்தனை செய்திட
ப்போமோ வேதஞ்சொல்லு, நம்பனீறணிந்து சுத்தசலம் வில்வத்தானமா
ந்தமாஞ்சிவநாமத்திலிங்கபூசை, யிம்பரிற் செய்பவனே பாக்கியவானந்த
விலைநாமத்தானுமியற்றுவோமே. (௪௩)

இந்தமனுவரன் பூசைச்சித்திநல்குயிதயசுத்தியுடன் முத்தியாவுமீயு,
மந்துமிலிங்கார்ச்சனையாகிதியினாலே மொழியுநவநிதிபிறந்ததவைமெய்ய
ன்றோ, வந்தமனுப்புருடார்த்தஞ் செல்வமெல்லாமரியமூத்தியிவைக்குந
ற்காரணமதாகுஞ், சிந்தையினிற் சிவபூசைப்புந்திவாய்த்தல் சென்மகோ
டியிற்புரிந்ததருமந்தானே. (௪௪)

இதுசிவலாபசாதனமாமன்றேயிதனாலே பெருந்தகைமையெய்தப்
பெற்றோ, னதிகமாஞ்சாதுக்களுலகந்தன்னிலரிதறிந்தவறிவுறலுமரியதா
குங், கதிதருமவ்வறிவினுடன் பூதிகண்டிகையணிந்துகைப்போதுகொண்
டொளு, மதியணிவான் பூசைபுரிமாதவத்தோன் வாய்த்தசகவாசமேவாஞ்
சிப்பேனியான். (௪௫)

பொழுதுசிவார்ச்சனைதனிலேபோக்கனன்றப் போதுபோக்குவர்ச்சே
ருநட்பேநன்மை, முழுதறிவாற்பரன்ஞானம்பெறவே வேண்டுமுற்றலரித
துவதனாற்பூசித்தென்றுந், தொழுபவர்பாற்கூடியேயிருக்கவேண்டுந் தொ
டர்வதனாற்பரனிடத்தோர்துளிநீரானும், வழுவறக்கொண்டன்பினிற்பூசி
த்தால்யார்க்குமனதினுக்குமெட்டாதஞானமன்னும். (௪௬)

ஒருதிவலைத்தண்புனற்குப்புத்திமுத்தியுளதேற்சங்கானிடத்திற்பத்தி
யோடுங், கருதிநறும்பூவில்வங்கொண்டுபூசைகாதலிக்கிற்கதிபெறுதல்கே
ட்கவேண்டா, மருவுருவோடரனுள்ளகாலமெல்லாம்வாழ்வுறவேவேண்
டினோர்புனல்கொண்டேனுந், திருமருவுமிலிங்கபூசனைதான்செய்யிற்சி
வன்பிரியமாகியருள்செய்வன்றானே. (௪௭)

ஆங்கவனையோர்பொழுதுசிந்தித்தன்பாலடிவணங்கிலருச்சிக்கிலகி
லமெல்லாந், தாங்கரசுபுரிந்துபின்னர்முத்திமாதுநன்கேள்வனெனப்பு
ணரத்தகுவரன்றே, தீங்குபெறுமறிவினர்சிவனைப்பூசைசெய்யாதார்சே
ர்ந்துநிறைந்துறைவதற்கே, யோங்குநரகுற்றுளவாற்பரமனபூசையுஞற்
றுதானருந்துயருக்குறையுளாவான். [௪அ]

குடிவாழ்க்கைதனிலிருந்தேயரும்போகங்கள்குறித்திடுவோராயிடி
னும்பரமன்பூசை. படிபார்க்கேயுமவாகியவர்கள்சொற்கொண்டான்

சைசெயிந்நயிலைபடைத்துவாழ்வார், நெடியான்கண்மலர்சாத்துமிமலன் பாதமினைவாகக்கூவிளதற்றளிர்கள்கொண்டே, படிமீதிற்சடையாமலரு ச்சிப்போர்கள்பாக்கியத்தாரெனக்கூர்மர்பகர்ந்தாரன்றே. [சகூ]

முப்பத்தைந்தாவது கூர்மச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கசகூஎ.



முப்பத்தாறாவது,

# மன்மதவதைச்சருக்கம்.



வேறு.

ஈனமேவியமாதர்சிற்றின்பமேயிச்சைகொண்டனன்பேரின்பமிச்சி யே, ஞானமேவுமுடறனைப்போற்றுவேனுன்பதாம்புயம்போற்றப்பெறு வனோ, வானமேவியதேவரிறைஞ்சிடவாரிவாரிவிடத்தைநுகர்ந்திடு, ஞா னவாரிதியேசபைநாடகநாடகத்தவருக்கருணுதனே. [க]

முந்துமைந்துமடக்கியபாக்கினவற்கிபாகுமுனிமொழிவானுறுப் பைந்துமாகத்தடக்கியுரைத்தசொலகிலநீறுமனலும்வந்தேயுறை தந்துளார்சைவநீதிக்கமடகேள்சார்ந்தனனின்னதுசகவாசத்தாற் சிந்தையுற்றிடுபாலவிலோசனர்ச்சேர்ந்துபேரின்பம்பெற்றிருந்தேனரோ

அவர்ப்பிரிந்துபெருந்துயராற்றினேனவையனைத்துமுனதுசிவலிங்க முவப்பினேடுதரிசனமுற்றதாலொழிந்துளேனிந்தப்பூசையினுய்ந்தனன் றவத்தினுற்பெறுகின்றசிவப்பிரசாதமுண்டுபசிதவிர்ந்தேனிதை யுவப்பினேடுமுடலமெடுத்துளோருற்றுநோக்கினும்பாவமொழிகுவார்.

முன்னரின்னசிவப்பிரசாதத்தைமொழிந்ததான்முந்தராயினர்சித்த ர்கள், மன்னுகின்றசிவார்ச்சனைபோலகின்மாவியமுத்திசாதனமாகுமா, லன்னதைப்புசித்தோர்கொடும்பாவங்களனைத்து நீங்கியனுருவாகுவா ர்,பன்னுமின்னதருந்திபன்றேபுவிப்பாரந்தான்முடிப்புவிற்பரித்துளாய்.

என்றுசொல்லும்பிரளயவங்கிசொல்லினிதுகேட்டிடுங்கூர்மனவ னுள், நன்றுநான்மகிழப்புகல்வான்சிவனுடகஞ்செயும்லீலைமகிமையா, லொன்றுநின்றவுலகநிலைக்குநாமேலாகுகின்றனர்யான்பாரங்கொள்வனோ ன், றன்றிநுந்தமக்கும்பெனக்கும்மவனையன்றிபொராண்மையுமுண் டரோ. [ரு]

பலவகைப்படவேபுவனங்களைப்படைத்தளித்தழிக்கும்பரிலீலைசெ ய், தலைவனன்னவற்காகாதசெதன்னையத்தலைவனலருட் பார்வைசற்றே கிடைக், நுலகந்தாங்கும்பெலஞ்செல்வஞானமுமுற்றுளேனத்தன்றன் பாதநூளின்கண், மலரருச்சிக்கின்மாலுமன்னருடன்னைவந்திக்கின் மற்றிரேப்பயமுண்டோ. [கா]

மதியணிந்தகிரீசன்பதியெனமாமறைக்குலந்தாமறைகின்றதா, னதி கனிந்தவெம்மையபலியாவருமளக்கொணாதவிவனென்றேவாக, நிதிசெய் பாதந்தொழுவோனுளத்தினிற் றூயஞானவிளைந்திடுந்துன்பஞ்சேர், விதிதருஞ்சனனப்பயந்தீர்ந்துபரமிக்கவீடுபெற்றுய்வதுமெய்ம்மையே. [ ]

உலகவஞ்சனையுற்றபிராந்தர்களுற்றதென்னதியான்செய்துளேனெ ன்பார், மலினமாறுமிமானமற்றேறதலைவனைத் தனைவினைதன்னையுந்தேர்ந் துளோர், தலைவன்செய்திடெனப்பாவர்தாமெலாந்தவஞானிகளாங்கவ் விற்றேறரைக்கு, மலகிலாவுயிர்கட்குமருந்திசெய்நாட்டுவிப்பதாமவ்வனா றன்பான்மையே. [அ]

எவ்வுலோகத்தும்வைகுண்டலோகத்துமிருக்குந்தேவர்கட்டம்மைத் தான்பேணல்செ, யவ்வளவுமற்றோர்சிவனேயுலகியாவுமாட்டிநடத்தும் ப்ரதாபனுந், செவ்விசேர்தருநாரணனாதியோர்சென்னதுக்கங்கள்சேர் வார்திரமில்லார், நவ்விசேர்தருமைகயனையனைநாடிபேதுக்கந்தீர்வர்ந ல்லோர்களே. [௯]

ஈங்குவந்ததுநீர்கிரீசனுமெங்கைதபார்தந்திருவருளாலன்றோ, வோ ங்குநுந்தமைப்போலெனக்கேநெஞ்சமுவக்குந்தன்மையரியாவரு மில் லையாற், றிங்கிலாநுந்திருவருளாற்சிவன்றேவதனைப்பூசனைசெய்துளே ன், றுங்குமிந்தப்புவிபோரனுவதாஞ்சங்கரன்னருளாற்பாரமில்லையே.

வேறு.

அவனருள்சிறிதின்றாகிலகிலநான்சுமந்துய்வேனோ
வுவமையில்கனலோயென்னக்கூர்மன்றானுரைத்துறுங்காற்
றவலருங்காலந்தாமுமநேகங்கள்சார்ந்தவங்கட்
கவலைகூர்பயமுண்டாக்குங்காந்தியொன்றுறமேவண்டார். [௧௧]

ஆங்கது கண்டகாலவனலர்தாமறிகிலாம
லோங்குறுகூர்மன்றன்னைவினவிடவுரைசெய்வானாற்
பாங்குறுநும்மைக்கண்டுபயந்தநாரணரேயாதி
யேங்குறுதேவர்பாரால்விளைந்ததிங்கிதெனத்தேர்வார். (௧௨)

சித்தசனுலேவந்ததிதுவெனத்தெளிந்துகொண்டா
ரித்தனைகேடுசூழ்ந்தானிவன்றனைக்கோறுமென்றே
யத்திரமேவினர்களனைவருமவைகளெல்லா
மத்தனைச்சூழ்ந்துநின்றுவதைத்திடாதொழிந்தவன்றே. [௧௩]

அந்தவேள்சிவனைநிந்தைபறைந்தினேலவற்கே
வந்திடுந்தேவர்தம்மினிகர்சொலவல்லாரில்லை
முந்துமங்கவனைச்சிந்தைசெய்திடின்முனிவர்தாமும்
பைந்தொடிமாதர்மோகவாரியிற்படுவர்தாமே. (௧௪)

பூங்கணையவன்றானேவிற்பொருவறுமுனிவர்நெஞ்சாந்
தீங்கறுவெற்பையேவச்சிரமெனப்பிளக்குமன்றே

யாங்கதாச்சரியமாகுமழகன்மன்மதனவன்ருன்
பாங்குசேர்தவரைத்தன்கைப்படுத்திடியேவசஞ்செய்வானே. (கரு)

அனையனும்மிடத்தின்மோகபாணம்விட்டழுத்தவல்லான்
மனைவிநுஞ்சுவாகாதேவிமருவியேகாலம்போக்கும்
வினைபுரிந்திடுவானன்னுன்விண்ணவர்படைகளாலே
வனைவுற்ருனசஞ்செய்யவருமும்மையறிந்திலானே. (கசா)

தீரன்மன்மதன்ருனும்மைக்கண்டிடிற்றிருவன்னுரை
வாரமதாகக்கூடிவழிபடப்பணிப்பனன்றே
சாருநீரவ்வாறெய்தில்வநதகாரியந்தாழ்வாகுங்
கோரமாமபராதஞ்செய்குற்றமும்வருங்கண்டீரே. (கள)

பரமனைநிந்தைசெய்யும்பாவியைக்கண்ணுற்ருலுந்
திரமுறுபாவஞ்சேருமதுதீரச்செய்யுஞ்சாந்தி
யுரமுறுநூறுபேதஞ்செய்யினுமொழிவுருதா
லரனுறுபத்திபெற்ருேரபராதன்றனைச்சேராரே. [கஅ]

சேர்ந்திடிற்றுக்கமாகுஞ்செஞ்சுடர்ப்புலிங்கமொன்று
போந்தவன்றலைமேல்வீழ்ந்துபொடித்திடச்செயுமென்றீசற்
கார்ந்திடும்பத்தியோடுங்கூர்மன்ருனறையக்கேட்டே
சார்ந்திடுங்காலவங்கித்தலைவர்தாஞ்சாற்றுகின்ருர். (ககூ)

பண்புறுங்கூர்மநின்றன்மனத்தரன்பத்திசேர்ந்தாய்
திண்பெறச்சென்மந்தோறுஞ்சிவபூசைசெய்தார்க்கன்றி
யெண்பெறவெய்திடாதாவிதுகதிக்கேதுவன்ருே
விண்பெறுதருமவாரியாம்வியப்பாகுமன்றே. (உo)

என்றனர்காலவங்கிகூர்மன்சொல்லிதயத்தெண்ணிக்
குன்றனபுலிங்கமொன்றுவிடுத்தலுங்குலைந்தாரியாருஞ்
சென்றதுவண்டமெல்லாஞ்செறிந்ததுதேவர்கண்டார்
நின்றனர்திகைத்தாரேகநெறியொன்றுங்காணேமென்பார். [உக]

அண்டமுற்றளாவிற்றென்றேநடுங்குவாரதனைத்தானும்
கண்டனன்மருண்டான்றுன்பங்களைசிவன்மகிமைநெஞ்சங்
கொண்டனன்கூர்மன்காலவனலர்முன்குறுகிவந்தே
யெண்டருபொறிதானென்னைவிடுத்துளீரெற்றுக்கென்னும். [ ]

இப்பிரமாண்டந்தானேர்பிண்டமென்றெடுத்துண்பேனே
முப்புவனங்கள்வெவ்வேருகவேமுறையினுண்கோ
தப்புதலின்றியென்பாற்சதகோடிபுலிங்கமுண்டா
லப்பொறிமேன்மையாரேபுகல்வராங்கவற்றிலொன்றே. [உ௩]

இந்தலோகத்தையானேயுண்பனென்றெதிரேயோடி
முந்துமால்பிரமனிந்த்ரனேமுதன்முறைமைபூண்ட

வந்தவானவரில்யாரையாகுதியாகக்கொள்வே
னுந்துமங்கவரையெல்லாமொருங்குதுய்த்திடுவேனென்னும். [௨௪]

அகிலங்கடம்மையாங்களடர்ப்பதற்கரியதன்றே
யிகலறுமெங்கடம்மையாதுகாரணத்தாற்றந்தீர்
புகலுமிப்புவனமூன்றும்யாங்கடுப்த்திடப்போதாதாற்
றகவுறுமெமக்கிலக்கார்கண்டிலோஞ்சாற்றுவீரே. [௨௫]

யாஞ்செயற்பாலதென்னேயியம்புதிரென்னலோடும்
வாஞ்சையாலதிசயித்தேகூர்மருமகிழச்சொல்வார்
பூஞ்சடைச்சிவனைமற்றைப்புத்தேளிர்கிராமென்றே
தாஞ்சொலும்பழிசேர்காமன்றனைப்பொடிபடுத்தியென்றார். [௨௬]

என்னவேகாலவங்கியியம்பலும்புலிங்கங்கோபந்
துன்னவேபுகலுகின்றதிவனையேசுடுவதற்குப்
பன்னியென்றனைப்பணித்தீர்பரமன்செய்லீலையாலென்
சின்னமதொன்றேயண்டர்செகம்பொடிபடுக்குமன்றே. [௨௭]

எங்கேனும்பெரியதாயகருமமொன்றிருந்ததென்றா
லங்கேயென்றன்னையேவல்காரியமற்பன்றன்மேற்
பொங்கோதத்துடன்விடுத்தல்போதுமோபுல்லிதன்றோ
நுங்கேண்மைப்பெருமைக்கீதோசம்மதநுவலுவீரே. [௨அ]

நானிலத்தெவரேனுந்தாநகங்கொடுகுறைப்பதன்மேல்
வானகத்திர்திரன்றன்வச்சிரம்விடுப்பாருண்டோ
யீனமாங்கொதுகின்மேல்வெற்பெடுத்தெறிந்த...ர்ப்ப...போலத்
தேனலர்மாலைமார்பீரென்வயிற்செப்பினீரே. [௨௯]

அரியயனிந்திராதிதேவரையடர்த்துவெற்றி
புரிவதுமெளியதென்றுபுகல்காந்திப்பொறியைநோக்கித்
தெரிதருகாலவங்கிமகிழ்ந்துயர்சிவலீலைக்கே
யுரியவுன்வல்லபந்தானெக்குமென்றுரைக்குமன்றே. [௩0]

ஆயினுமரனைநிந்தையறைந்திடுமதனையின்னே
போயினிப்பொடித்தியென்னச்செப்பலும்பொறியொன்றேகித்
தீயவனுடலந்தீயத்தேவர்களேவச்சூழ்ந்து
மேயினபடையெலாமின்மினியெனப்பறந்தவன்றே. [௩௧]

அரன்றனைநிந்தைசெய்தவவனுடல்சாம்பராக்கி
யுரந்தரும்புலிங்கஞ்சாந்தமுற்றதாலும்பரெல்லாம்
வரந்தரும்வள்ளல்செய்தலீலையைமனத்துட்கொண்டே
பரந்ததங்கிளைகளோடும்பயந்துதம்பதங்கள்புக்கார். [௩௨]

சிந்தனையின்றியன்பாச்சிவபூசைசெய்திருந்தார்
மைந்தர்காள்சகலதேவவந்திதன்சிவலோகமுடீர்
நிந்தனையின்றிநீவிர்பயபத்திநியமம்பெற்றே
வந்தனைபுரிவீரின்றேன்மதனைப்போலாவீரன்றே. [௩௩]

ஈதுநிச்சயமாங்கண்டீரிப்படிவராமலீசன்
திருப்பூசைசெய்வீர்செவ்வுளமகிழ்ச்சிகூர்ந்
பூதலத்தாகுமின்பமுத்தியும்பொருந்தச்செய்வன்
வேதங்கள்பணிவோன்பாதஞ்சரணமென்றடைவர்மேலோர். [௩௪]

எத்தனைகாலமீசன்பூசனைவழுவின்றாகிப்
பத்தியாற்புரிவாரன்னகாலமும்பழுதுறாதான்
முத்தனையாராதிக்கமுயன்றிடிற்சுகங்களுண்டாம்
புத்திரர்நீரிப்பூசைப்பொருள்கட்குவிசாரம்வேண்டாம். (௩௫)

அடவியிலுள்ளபத்ரமலர்பலங்கொண்டுநாளுந்
திடமுறக்காலைதன்னிற்சிவதீர்த்தந்தன்னின்மூழ்கி
விடையவனிலிங்கபூசைதியானமும்விரும்பிச்செய்வீ
ருடையவனுருத்திராக்கம்புண்டரமுவந்துபூண்பீர். (௩௬)

பொருள்பலநாடிக்கொண்டுபுனிதனாலயத்துட்சென்றே
யருள்புரிலிங்கபூசையுபசாரத்தாற்றுவிரான்
மருள்புரிசோம்பலின்றிவருகாலந்தப்பாவண்ண
மொருமையாற்பணியிற்பாவமொழிந்தின்பம்பெறலாமன்றே. (௩௭)

கனவினுமற்றைத்தேவர்தங்களைக்கருதும்பொல்லா
நினைவுறினமங்களந்தானிகழ்வுறுமதுசெய்யன்மின்
வினவுநீர்செய்யவேண்டும்விமலனர்ச்சனையேயின்பந்
தினமருள்சுரபியாங்கதயனுக்குந்தெரிந்திடாதே. (௩௮)

வாய்த்திடுகாலந்தன்னின்மகிழ்ஞானபூசைசெய்வீர்
நீத்துப்பின்புரிவமென்னினிலைவராமில்லைக்காய
மேத்துறுகாலந்தாழ்க்கிலின்னமுதமுநஞ்சாமாற்
பூத்தவன்புடையோர்துன்பம்புகினும்பூசனைவிடாரே. (௩௯)

செப்பருந்தலைமைபாதஞ்சிவார்ச்சனைச்செல்வத்திற்கே
யொப்பரும்விக்கினங்களுறுமனத்துறுதிசேரி
னப்பெருங்கேடுவாராதபீட்டங்களனைத்துநல்கு
மிப்பெருந்தருமமொப்பாந்தருமங்களில்லையன்றே. (௪௦)

எத்திறத்தேனும்பத்தியையந்திடவிறைவன்பூசை
நித்தியம்புரிதிராயினித்தியம்பெறுதிரன்றே
முத்திதந்திடுமென்னிற்றான்முதல்வனைப்பூசையாற்றிற்
பத்திசேர்சைவசீலம்பலிக்குமெய்யுண்மையீதே. (௪௧)

புனிதன்பூசனைப்பொருட்குட்புண்ணியப்பொருள்விபூதி
யிலிதுகொண்டிறைவன்பூசையியற்றிடிற்பிரியமாவன்
றனியிவற்றினிலநாசிகதையொன்றுசாற்றுகின்றேன்
பனிமதிவேணிக்கன்பன்பனவர்கட்கதிபனானேன். (௪௨)

வினையகன்னகரில்வாழ்வோன்விமலனைப்பூசைசெய்வோ
னிசைபெறுமவன்றானோர்நாளிறைவர்தீர்த்தேசர்தம்மை
நசைதருகனவிற்காணப்பெற்றனனுதன்முன்னந்
திசைபெறுஞ்சைவசீலரநேகரைத்தெரிசித்தானல். (௪௩)

செஞ்சடையவன்றீர்த்தேசன்றிருக்கோயிலதனிற்சேர்ந்தே
யஞ்சமுதத்தினோடுகூவிளமலரின்வர்க்கம்
விஞ்சுமாபரணவர்க்கம்வெண்படாங்கலவைச்சந்த
மெஞ்சலில்கனியின்வர்க்கமிறைமகிழ்நிவேதனங்கள். (௪௪)

பொற்புறுந்தூபதீபவரிசையாம்பொருள்கள்கொண்டே
யற்புடனடியாங்களை [illegible]
பற்பலவியற்றுவார்போற்பத்திபாற்றுலானபாற்
சொற்பெறவியற்றிச்சூழ்ந்துவணங்கினன்றுதியுஞ்செய்தான். ()

அஞ்செழுத்தெண்ணிப்பூசைப்பலனரன்றனக்கேயாக்கி
யுஞ்சனனோர்சாருற்றான்றாகம்வந்துறுதலோடுந்
தஞ்சமாம்புனலருந்தச்சார்தலுமாங்குச்சார்ந்த
வெஞ்சலிலாதசைவர்கண்டனரிதனைச்சொல்வார். (௪௬)

பனவவிப்பானீயந்தானருந்திடேல்பரமனைவே
தனமதுசெய்ததன்றாற்சங்கரன்பத்திபெற்றாய்
புனலிதுசுத்திபாகப்பூதிதான்றெரித்தபின்ன
ரனகனுக்கற்பிதஞ்செய்ததன்பின்னரயின்றிடாயால். (௪௭)

என்றவர்புகன்றபோதிற்பூதியெங்குற்றதென்றா
னன்றவரளிப்பநீரிலஞ்செழுத்தோதிப்பெய்தே
கொன்றைவார்சடையனார்க்கற்பிதமெனக்குறித்தபின்னர்ச்
சென்றதைநுகர்ந்தேயாங்கணிருந்தனன்சிறிதுகாலம். [௪௮]

சாற்றருநீறளித்தசைவர்தாஞ்சிவதன்மங்க
ளாற்றவும்புகலக்கேட்டேயவர்தமைச்சிவனெமென்றே
போற்றினன்குரவர்நீரேயென்றவர்ப்புகன்றபோதி
[illegible] [௪௯]

ஆதலாற்புதல்வர்நீருமரன்பூசைப்பொருள்கட்கெல்லாம்
[illegible]
காதல்சேரமுதமேனுநீற்றினைக்கலவாதற்றா
[illegible] [௫௦]

அணிபரிவட்டநீறுபரிசித்தேயணிதல்வேண்டுந்
தணிமடைப்பள்ளிவேறுசங்கரர்க்கமைக்கவேண்டும்
பணிவுடன்பாகஞ்செய்யுமவர்களும்பரமன்பூதி
பணிபணிந்தமைக்கிற்பாகதோடங்கண்மாறுமன்றே. [ருக]

சமைத்திடுங்கலத்துநீறுதரித்திடவேண்டுமவ்வா
றமைத்ததைவேதனங்களரனமுதாகக்கொள்வா
னிமைத்திடுபொழுதுமில்லாவிளமைசெல்வங்கள்வாணு
ளமைத்தமின்னார்மின்கூட்டமவற்றுசையொழிகுவீரே. [ருஉ]

பானுவின்கிரணநீற்றுப்பாலலோசனனைநாளு
மானவன்புடனேபூசித்தடிபணிந்தேத்துவோர்க்குத்
தானவனுகுஞ்சோதிமுத்தியுந்தருவானென்றே
மானவனுனவிஸ்வாவசுமைந்தர்க்கிசைத்தான்மன்னே. (ருங)

முப்பத்தாறுவது மன்மதவதைச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-கசருக.



முப்பத்தேழாவது,

## வருணராசச்சருக்கம்.



வேறு.

படவரவம்புலிபயிலுங்கானம்போலப்படர்பசுளச் சடைமுடியுஞ்சுடர்கண்மூன்றுஞ், சுடர்விழியுந்திகழ்வதனும்புயமுங்கொன்றைத் தொடையணியும்புயவரையுந்தோடுங்காதும, புடைவிரியும்புலியுரியினுடையுமெய்யன்பொய்பருளம்புகுதாதான்புவனமீன்ற, கடலனையவிழிகாணடிக்குந்தாளுங்கண்டுளார்பிறவிவெள்ளக்கரைகண்டாரே. (க)

வேதயாக்கினவற்கிமுனிவன்சொல்வான்மிக்க விசுவாவசுவாந்தைவார்த்தை, காதல்புரிமைந்தர்கடாந்தலைமேற்கொண்டார் கடவுளிவனெனக்கருத்திற்கொண்டுதாழ்ந்தார், தாதையுன்றனுபதேசம்விசுவசித்தோந்தழைத்துளோம் யாங்கண்முன்செய்தருமந்தன்னுன், மாதவஞ்செய்சிவபத்தியுறும்பிதாவை வாய்த்துளோமற்றையர்க்குக்கிடைத்திடாதே. [உ]

எந்தைசிவபத்திபெறுமத்தன்றுனேயிகபரந்தந்தருள்குரவனவனையல்லாத், தந்தைவயிற்றிற்பிறந்தானுடலைவிட்டத்தகும்யாங்கணினதிடத்திலுதித்தலாலே, வெந்துயரந்தீர்ந்தனமெங்களைநீபெற்றமேன்மையாலுன்றனக்குந்துக்கமின்றாற், சிந்தைமகிழ்சம்புவித்தையெல்லாமுன்றன்றிருவருளானின்னிடத்தேதெரிந்துளோமே. (ங)

இப்பிறப்பிற்சைவனுமுன்னிடத்தில்யாங்களுதித்தமையினன்முத் தாரனே, மப்பரொடுமைந்தர்களுஞ்சைவாசாரமடைந்துளரேற்செல்வ ரவரென்னும்வேத, மொப்பில்சிவப்பிரசாதநுகர்தாய்தந்தையுதவுமைந் தர்சரைமரணமொழிந்தமேலோர், தப்பில்காலாந்தகரைப் பூசைசெய் வோர்தங்களுக்குமிருத்துபயமில்லைத்தானே. [௪]

யாங்களுஞ்சென்மக்கடலைநீக்குமெந்தையிந்துசேகரன்றேவரெல் லாம்போற்றும், பாங்குபெறுநீண்டசெங்கைப்பதுமஞ்சூலம்பரித்தகளகந் தரனைப்பணிதல்செய்வோம், பூங்குழலாளுமயைவண்மைந்தர்தம்மை யொருவில்சரணெனக்காலம்போக்குகின்றோந், தீங்ககல்வோம்பின்ன ரொருவரையுநெஞ்சிற் சிந்தியோங்கனவினிலும்வந்தியோமே. (௫)

எமதுசுத்தமனத்திலுமையிதயப்போதிலிலங்குசரணம்புயனையவ டன்றோளி, லமைதரவேயணைத்ததுணைக்கையினனையவளாகந்தனிற்ற ரித்தகளபாவி,திமிர்தரவேசெம்மைவெண்மைபடைத்தமார்பந்திகழ்பா னையருணவுதயம்போற்சேப்பாங், கமழ்தருசெங்கமலச்சேவடியினனைக் கடவுளையேகாதலினற்பணிகுவோமே. [௬)

எனப்புதல்வர்புகன்றமைகேட்டதிசயித்தேயீசனன்பனும்விசுவா வசுசொல்கின்றான், வனப்புடையீர்நுமதுசகவாசத்தாலென்மன்னுகு லத்தோடியானும்புனிதமானே, னனப்பதுமன்விண்டுவிந்திராதிதேவரறி ந்தனரென்குலமேன்மைநும்மையின்று, நுனிப்பரும்பூசனையிலிங்கம்பு னிதமானேனும்வார்த்தைபழுதருந்திப்பூரித்தேனே. (௭)

மறைபரவுவிசுவேசர்மகிமையின்னமன்னுபலமென்றருமோவறிகி லேனு, னறைதருமிச்சிவசீலரவையேநன்மையதைநோக்குங்கண்களே புனிதமாகு, மிறையவன்பூசனைகாதைவிரும்பிநாளுமிருந்திடுவோமென விசுவாவசுதான்கூறி, நிறைதருதன்மைந்தரவர்மைந்தரோடுநிகரில்சூரி யன்போலவிளங்கினனே. (௮)

மன்னர்குலந்தன்னில்வந்தவனைகேளாய்மற்றிப்பேற்றினிலரனர் ச்சனையினலே, பன்னருங்காலம்போக்கவேண்டுமந்தப்பாக்கியத்தாற்சி வபத்திமைந்தர்தம்மை, யின்னிலத்திலீன்றிடுவர்குடும்பவாரியிடையழு ந்திச்சிவபூசைமறந்தாரெல்லாந், துன்னுவர்தீநரகினிலத் துயர்வராமற் சோதிபூசையிற்போதுபோக்கல்வேண்டும். (௯)

வேறு.

என்னவேபுகல்கின்னரன்சொலிராசகன்னிசெவிக்கொடேயிசர்பூ சையி னேசமாயினளிவைபகர்ந்திடுமெவன்முனம், பன்னுகின்றனளையநீ பகர்கின்றவிக்கதைகேட்டுளோர்பாவநாசமதாகுமால்விசு வாவசுப்பெய ருற்றுளான், மன்னருஞ்செல்வம்யாவருற்றவர்சிவன்மகிழ்ந்திடுபூசனை வ ரத்தினன்மனைமக்களோக்கல்செழித்துளான்புணர்மாதரு, முன்னருஞ் சிவனைப்பராவிடுமுறுதிபெற்றனர் நிலமூநல்லோதுகாலமும்வித்தும்வாய் த்திடினுமூதொழிற்பயன்விளையுமே. (௧0)

சாற்றிடுஞ்சிவ வாசகத்தருத்தனையர்புண்ணியருபராக்தன்மையோர் தரிசனமுறிற்கொடுவினைகள்வந்தெதிர்சாருமோ, வாற்றருந்தருமங்களை யருவுற்றரன்பணிபுரியுமென்றறிவுமேளார்புகல்வார்களைதயொன்று தாலுளதறைருவே. னேற்றமாமிதுவினவிடுறோர்களரன்பணிக்குரியோர்க ளாயிடுவர்சொற்றிடுமவருமின்பமதுறுவர்பாக்கியவானுமே, மாற்றருஞ்சி வனுலயத்தினில்வந்துநோக்குறப்பெற்றனன்மன்னுமிங்கதனுற்சிவன்பிரி யம்பெறும்பணிவாய்த்ததே. (கக)

யான்சொனுற்சிதிபாசலிங்கிருபிரமனுதியருலகெலாம்பெய்துறும்பிர சித்தமுன்னிவுயிர்களிற்றுளனெக்கைதான், காண்செறிந்திடுகொன்றை வேணியர்பூசனைப்பிரியத்தினுற்றனகராசிபிரத்தராசிகணக்கிலாதசெல்வ த்தினல்,வான்செலுற்றுமயர்புட்பகந்தவன்வந்துநாடொறுமவனுளமகிழ றும்படியெவ்லவனன்றிடமருவுவன்பணிபுரிபவன், ஞன்செயிந்திடுபெ ருமையாலவன்றனபதிப்பெயர்தன்னெறடுந்தருமதேனுவெனுந் திருப்பெ யர்சாற்றவேற்றமிருந்துளான். (கஉ)

ஐயனங்கவன்றுய்பவாஞ்சிவதருமம்யாவையுமாற்றிடுமாலயம்மென லாகுவானவன்பெற்றபுத்திரியாமெனக், குப்பவேசிவனுலயங்கனகத்தி னைவமணிபினுலுஞ்செய்கனகோபுரம்பிரகாரமண்டபமுடையதாற் செய்பவங்கருந்துமுகின்றவசோகமாவனமுளததிற்றிகழுமாம்பிரந்தாளி புன்னைதமாலங்கூவிளஞ்சிறுபெருந், துப்பசம்பொடுகந்திதாழைதுலங் குமேளவல்குராமராசொன்னசன்பகமந்தைதும்பையொடற் கமின்ன னதுன்னுமே. (கங)

அலர்கொடாமரைநெய்தலுங்கமழ்மொட்டைப்படியாகவேயமைந்தி டுங்குளிர்சோலைமாலைபதாபொழுங்கின்விளங்குறுங்,குலவுமங்கதிலுறுத ருக்குலம்யாவுமேசிவசங்கராகோதைசேர்மகதேவவென்றிசை கூறுமன் பர்முகத்தினு, விலைபிடுங்கழைதழைபுநன்மலர்கனிகள்காய்களுமேயளித் திந்துமண்டலமுற்றளாவியெழுந்துநின்றுவளர்ந்திடு, முலகுறுந்தவர்தே வர்வந்தவனுளமலர்த்தொகைகொண்டரற்குரியபூசனைபுரிகுவார்பரிந்தி ன்பநாடகமுறுவரே. (கச)

அந்தகந்தவனத்தில்வந்தெதிர்யன்பிளல்கியத்தைதமெய்யன்பர்த ங்களிலதிகசத்தியமிரதன்றனமதேசனுந், சுந்தரச்சிவலிங்கவர்ச்சனை செய்தலான்மனைவந்திடான் சொல்லுமிப்படிநாடொறும்புரி வானலைக் கொண்முழக்கினன், முந்துமீண்டுவிறுலகினிற்சுதவந்தகர்ந்திடுகங்கை யின்மூரிநீள்கரையிற்றினந்தொறுமுதிருமன்பினிமுறைமையா, லெந் தைதான்சிவபூசைசெய்திடுமதினையாலிருவிகடாமிந்துவந்தெழுவெழு வாரிகளொழுவதென்னவிளைந்தவே. (கரு)

சங்கரன்பதபூசைசெய்திடுமன்பர்தங்களிலெனதுடைத் தந்தை பரம்பரையில்வேதந்தனக்கினிற்ககாலமே, மங்களத்தொசெய்திலிங்கபூசனை

ரெனமூர்த்தியாகியபுண்ணியங்கண்மொழிந்திடுங்கடலரசனே, யுன்னரு ஞ்சிவனன்பனுகியசினதுதொண்டர்கடொண்டரியா மோதுபுண்ணியமு ருவுகொண்டனநீசெய்பூசையுவந்துளோம். [உக]

ஐயநின்றெரிசனமுறத்தவமாற்றியுற்றனமெமதுளத்தாதரப்படியே யணைந்தனைகாட்சிதந்தனையாமரோ, செய்யதோர்சிவபத்தர்தங்களில திகனீசிவதத்துவந்தெரியவெங்கடமக்குரைத்தருள்செய்தியாமதைவின வினு, லுய்யுமாறுருவம்படைத்திடுபயனடைந்திடுவாமரோ வுனதுநற்சக வாசநாளும்விரும்பினேமஃதுறுவதோ, மெய்யராஞ்சிவபத்தரோடுறும் வாசமுத்தியளித்தல்போன்மிக்கயாகதவங்கடாமு மளித்திடாதிதுமெய் ம்மையே. [உஉ)

கடவுளன்பர்களுடனுறைந்திடுமவர்கடம்முடிமீதிலே கங்கையும்பி றையுங்கலந்திடுவேமெனச்சமர்புரியுமே, யடைவுடன்சிவபத்தரோடுறி லதுபரன்படிவம்பெறற்கமையுமென்றிடிலந்தகன்பயமுறுவ துண்டுகொ லோவெமக், குடைமையாப்பெறல்வேண்டுமெற்றிவையன்றிவேறிலையின் னெறியுற்றதுன்பமெலாமகற்றுமெனச்சொல்புண்ணியமூர்த்திகணடை யறிந்தனன்வருணராசன்மகிழ்ந்தனேரைவணங்கியே நாதனர்ச்சனைபெ றுவதேயரிதாமெனச்சிலநவிலுவான். (உங)

இடைவிடாதுபரன்றனர்ச்சனைசெய்குவோர்பரமானந்தமெய்துவார் கணினைத்தயாவும்விநோதமாயவர்க்கெய்துறும், விடையவன்பதபூசையி ன்பலன்யானெவாறுதெரிந்துற விளம்புகேனெனவேபுகன்றிடப்புண்ய மூர்த்திகள்வினவியே,சடைமுடித்தருள்பரமனைப்பணிவருணனைப்பணி வுற்றனர்சாற்றுவாரிவிலிங்கமேன்மைதனைப்பகர்ந்திடுகென்னவே,யடவி நீறணிவுற்றனன்னவிலிங்கரைப்பரிசித்தன னகமகிழ்ந்தவர்சொல்லதாம முதுண்டபூரிதனுரைசெய்வான். (உச)

வேதம்யாவும்விளம்புமேன்மையிலிங்கநாயகர்நாமங்கண்மிக்கபாவ மொழிப்பதாகவுங்கேட்கவேண்டுவதாகவும், போதவுள்ளனமின்செறிந் தனவோடவைத்தபசும்பொனே போலமேனிவிளங்கலாலிவராட்கேச னெனும்பெயர், மேதினிக்கண்விளங்குமிங்கிவர்தம்மிடத்திலுதித்தலா ன்மேருவானதுபொற்பொருப்பெனமிக்கமேன்மையைமருவுமே,மாதவ த்தவர்தேவர்வைகிடமவைகொண்மூவிலேவேலினுன் வையமாகியவை யமஞ்சுருவாணியாகவுமருவுமே, (உரு)

அதனில்வானவர்வாசமாகியவாலயங்களநேகமாமாழியேழுமகழ்க் கிடங்கதன்வேரளாவுறுமேழுபார், முதன்மைசேர்தருதாழ்வரைக்கிடை யமன்தாலயமொன்றுறுமுற்றுமாங்கதன்மூலமேவன லாறுமொன்றலே மோதுமால், விதனமேபுரிதீவிடத்திரைகோரமானவராத்திரைவெற்பெ னச்சொல்விரிச்சிகத்திரைவச்சிரத்திரைவீசுறும், பதனமாகியவிருகரை க்கணுமுனைபடைத்திடுகெண்டகப்பலவரைக் குலமலைகயின்குலமுஞ் செறிந்துறும்பாங்கரே. [உசா]

நந்தனங்களநேகமுற்றுளவவைகளிற்றழைகூவிளத் தண்டருக்களநேககோடிகளுண்டதன்றிறமெவர்சொல்வார், மருவுமாங்கவைகளின்மணித்திரளாலிழைத்திடுமாலய மதுரவாரமுதச்சமுத்திரமலர்வனத்திரள்வளைவுறும், பெருமைசேரர்ச்சனைப்பெரியோர்கடாமுமநேகர்தாம்பெறுமவ்விடைதோறும்வைகுவராயவாலயம்யாவினு, முரிமையாற்றினமுற்றருச்சனைபற்றியேமனமகிழ்வொடு முருகுவான்பெரியோர்கடம்மொடுகாலம்போக்கினனுறைவனே. (உஎ)

இந்தவாறவனுற்றிடுஞ்சிவலிங்கம்யாவுமருச்சியாவின்பமுற்றொருமணிமயச்சிவலிங்கவீசனையன்புறுஞ், சிந்தையாதரவோடுபூசனைசெய்வனுங்கவர்கருணையாற் செய்தருங்கருமங்கள்யாவையுமையலின்றியியற்றுவா,னந்தலிங்கரைவந்துவந்தனைசெய்தசித்திரகுத்தரே யாதியோர்கள்செய்காரியங்களுமழிவிலாமலியற்றுவார், முந்துமம்மணிமூர்த்திமேவியவாலயத்தினின்மூலத்தின் மூரியாரிருளானிறைந்தசமுத்திரங்களநேகமே. [உஅ]

அந்தவந்தமிலந்தகாரசமுத்திரங்களினூழிவா யங்கிபோற்சுடுமணைகடாமுமநேகமுற்றுளதிவிடங், தந்தகுட்டம்விரிச்சிகங்கணிறைந்தவாரிமலக்குழி சாற்றுசுக்கிலமூத்திரக்குழிதாமுமுற்றதநேகமே, கொந்தழற்சிகைபோற்கொதிக்குமிரத்தவெப்புறுவாரிகள் கொடியவச்சிரமனையபற்செறிகிருமியின்றிரள்சேர்குழி, வெந்துதீயெழக்காய்ந்தவாயுதகோடிபோடயப்பாவைகள் விமலனன்பரலாதபேர்பயமேவுறும்படிமேவுமே.

அனையபாவியர்தங்களுக்கெனவரனமைத்துளவவைகளை யந்தவந்தகனைக்கியேமகிழ்சிந்தையுற்றனனுறைகுவா, னினையமாநரகங்கள்காத்திடுகாலதூதரநேகராலிறைவனன்பரலாதபேர்தமை யீர்த்துவந்தவற்றுழ்த்துவார், வினைசெய்பாவியர்மேவும்வெந்நரகொன்றினுக்கொருகோடிபேர் மேவியேமிகுகோபமுற்றுடன்விதனதண்டமியற்றுவார், புனையும்வேணியனன்ப ரல்லரையிடரிழைத்திடவேநமன் பொருவிறன்படையோடுரைத்திடல்புகலுவேனதுகேண்மினோ. [௩0]

இன்னவாய்மைகள்வினவினோர்சிவபத்திபெற்றுறுவார்களாலெந்தவேளையுமேவெணீறுகண்டிமாலைதரித்திடா, ரன்னபாதகர்துக்கமாக்கடலாழ்குவோரவருறைதரு மவனிவேர்கள்சஞ்சரிப்பதுபூதியிற்றிரிபுண்டர, மன்னுதாளனமக்கமாலிகைகாதுகந்தரமார்புதோள் வனைகிலார்வினையவெந்நரகத்தில்வந்திடருறுவராற், பன்னுகாலையுமாலையும்பரமற்கருச்சனைபுரிகிலார் பரவுமந்திரராசனைபஞ்சாக்கரமனுவெண்ணிலார். [௩௧]

இவர்களேமலவடைசேர்நரகத்தழுந்தியருந்துவோரீசனைக்கணமேனுமர்ச்சனைசெய்துகாலங்கள்போக்கிலார், கவர்கொளுஞ்சிகையங்கி

வெந்நரகத்துறக்கடவார்களாற் காசிமாநகர்முதலவானசிவத்தலங்களில் வாசமா, மவர்கள்ஞானமுறுஞ்சிவானுபவக்கடற்குளழுந்தியே யண்ணலார்கதையமுததாரையினனைந்துமகிழ்ந்துடன், சிவன்மகிழ்ந்திடுதருமமாகியபுனல்செறிந்திடுபந்தரிற் சேர்குவாரவர்கயிலைமாமலைமீதும்வந்துசிறப்பரே. [௫௨]

அந்தமேலவர்முன்புநீவிர்செறிந்திடக்கடவீரலீரண்ணலாரடியார்கள்வாழ்வுறுமப்பதிக்கணமர்ந்துளோர், முந்துமாங்கவர்தம்மொடும்முறவாகுமாலைசமுயற்சியோர்மொழிதரும்மவர்நாம்வணங்கிடமுதல்வர்வாழ்கயிலைச்செல்வார், சிந்தைசேர்சிவனன்பர்முன்னமதுக்கிரட்படிவங்கொடே சென்றிடச்செய்வதன்றுசாந்தகுணத்தொடுற்றிடுதேகமாய், வந்தனோர்பதபூசைசெய்துவணங்கிடக்கடவோமியாம் வாலவெண்பிறைசூடிவைத்திடுமாணையிப்படியாகுமே. [௫௩]

அறமிலேசமுமற்றபாவியொர்காரணத்தினிலண்ணலையகத்துள்வைத்துளனேலவன்சிவபத்தரோடு மடைந்தரும், பெறல்பொருந்தியெலாரும்வந்தனைசெய்யமேவுவனாரணன் பிரமனாதியராலளக்கவொணாசிவார்ச்சனைமகிமையே, சிறிதறிந்தவனடிவணங்குறுமவன்மகத்துவமறிகிலஞ்சிவனையன்பொடு பூசைசெய்தவர்தமைவணங்கினவர்க்குமே, சறுவசீவதயாபரன்பிரசன்னமாகுவனவன்மகா சரணவர்ச்சனை சகலமங்களமுஞ்செறிந்திடுதானமே. [௫௪]

நிகரிலாச்சிவதருமமேசரைமரணநீக்கிடுதருமமாநெடியபாவமதானபன்னன்மலைக்கடுக்குநெருப்புமா, மகமயக்குறுதுன்பமாம்விடநோய்தணித்திடுமமுதமா மையவென்சொல்வனற்பர்தாமரனர்ச்சனைப்பலனறிகிலார்,மிகமயற்புரிமாதரார்விடயக்கராநிறையிருள்புகும்விதனமானகருங்கடற்குள்விழுந்தழுந்திடுவார்களாற், சகலசீவதயாபரன்சிவனைப்பழித்திடுமவர்கடாஞ் சங்கரக்குலமாகுவார்நமதண்டனைக்குரியாகளே.

பூதிகண்டிகைபுண்டரத்தொடுமைந்தெழுத்தரனர்ச்சனைபோற்றிடப்பெறுவோர்களும்புரிபூசனைக்குரியார்களே, யாதுமத்தருமத்திலிச்சைபடைந்திடார்சிட்சையடைகுவார் யாவனாகிலுமரணகாலையி லீசனாமமிசைத்திடிற், நீதகன்றுயர்சிவபதத்திடைசேர்வனாலிதுநிச்சயந் தெளிந்ததூதர்கள் கேண்மினென்றுநமன்பகர்ந்திடுவானெனா, மூதுணர்ந்திடுசைவசீலநெறிக்குணின்றிடுதருமனா மோதுறுங்கடலரசன்புண்ணியமூர்த்திகட்குரைத்தானரோ. [௫௬]

முப்பத்தேழாவது வருணராசச்சருக்கமுற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧௪௬௫.



முப்பத்தெட்டாவது,

# உருத்திராத்தியாய வியாக்கியானச்சருக்கம்

வேறு.

திருவடியிற்கண்மலருநரசிங்கத்தின்றிகழுரிவெண்பட்டானவுடையுமார்பிற், பெருவராகக்கோட்டிலாமையோட்டிற்பெருகொளியாரமுங் கொண்டார்புரங்கள்வேவப், பொருவடிவெங்கணைகொண்டார்விடையாக்கொண்டார்புனையதட்சட்டையும்பூண்டாருடலிற்பாதி, கருவடிவந்தாங்கொண்டார்கயிலைவாழுங்கடவுண்மாவிடத்தில்வைத்தகருணைதானே.

அருண்முனியாக்கினவற்கிசொல்வான்பின்னுமாழியரசன்றருமவடிவோர்தம்மை, யொருமையுடன்பார்த்துரைப்பானம்பொன்மேருவுயர்வரையினிமனுலபத்தின்மீதே, பெருமைவளியுலகமதன்மிசையேயங்கிபெயர்வருணனிருதிபிங்கலன்வலாரி, யொருமைசேர்கடிமலரோன்மாயன்பானுவுடுபதிமீதிவருலகீசானலோகம். (உ)

ஆங்கதன்மேற்றிரிசூலபாணிலோகமதன்மிசையேமேருவின்றன்சிகரசோதி, யோங்குசுடர்க்கடற்போலநிறைந்தமீதே யுயர்ந்தநடுக்கொடுமுடிமேற்கயிலைமேரு, வீங்கதனிற்கொடுமுடியாயிரமாமங்கேமேவுதேவர்கடமக்குமாமகூடர், பாங்குறுமுப்பரிகைபிரகாரஞ்சூழ்ந்தபடரொளியாலயங்கள்பலபலவுண்டாமால். (௩)

உயர்ந்திடுமாராமங்களுள்ளவாங்க ணுளதருப்போலொருலகிற்கண்டதுண்டோ, பயன்றருதீங்கனிநறும்பூப்பருவந்தப்பாப்பலதருமவ்வனத்தில்விசுவேசராகு, நயந்தருமுன்னதவிலிங்கர்ப்பூசைசெய்ய நாடுகின்றோர்தங்களெதிர்வணங்கிநாளும், வியந்தநறுந்தளிர்மலர்தீங்கனியுநல்குமென்கவிகைபோற்குழைந்துமேவுமன்றே. (௪)

பூணருக்கங்காப்பிரவாகமோடுபொன்னியெனவோடுமங்கேபொருந்திலிங்கந், தானருவபிடேகஞ்செய்யவமஞ்சனமதாமந்தாரந்தருக்கள் வாய்ந்த, வானருவதன்கரையிற்புறுநூறாவிமணந்திடு சந்தனக்குழம்புமாறுமோவோடு, வேனிறவில்லாவவ்வனத்திலிங்கர்விற்றிருக்குமிடை பலவிளங்காநிற்கும். (௫)

அந்தமிலாவந்தவிலிங்கங்கட்கிலம்பொற்றாமரைமலர்களாதனங்கள், சுந்தரஞ்சாத்திடவிளங்கும்பூவின்மாரிதன்னைருமாரிபொழிசந்தக்காவில், வந்துமையாளுடனைமையாளன்னைலாடன் மகிழ்ந்திடச்செய்தெரியாதிருப்பனுங்கட், சுந்தரஞ்சேர்மணிமயமுப்பரிகை யெல்லைத்தொலையாதங்கதன்சிறப்பார்சொலவல்லாரே. (சு

முத்தனுமையுடனுறையுமந்தக்காவின்முச்சுடர்மின்னிரையுடுப்பேர்மொழிவோரில்லைச், சித்தசனைவென்றபிரான்றேககாந்திச் செஞ்சுடராலமைமழுங்கித்தேயுமாலோ, பத்தருறையுப்பரிகைபலவுண்டங்கட் பகராயுசம்போசனையுன்னதத்தூண்பத்தி, யுத்தமமண்டபமொன்றங்கதனின்மஞ்சமுபர்சிங்காசனகோடியுளதாமன்றே. (௭)

மாமணியின்சாந்திரத்தசெம்படாத்தின்மணமலர்கள் பரப்பியிறைந்திருக்குமாங்கே, தூமணிவெண்ணகையுமையா *டொட்டலைசெய்வாள்சுடர்மணியின்பிரபையெல்லாஞ்சரற்காலத்தி, னுமதிமுன்னுடுக்கிரைபோலாகுமீச னடிக்கமலப்பேரொளியால்வைகுண்டாதி, நாமவுலகினிலுறையுந்தேவரெல்லாநளினபதகதாவமிர்தபானங்கொள்வார். (௮)

அந்தவத்தக்கோடிமுடியாலயங்கடோறுமமர்ந்திடுந்தேவர்கள்காலந்தவறாமல், வந்தனைசெய்தேசிவன்றனருளினாலேமாறாதசெல்வசுகவாழ்வுற்றாரான், மூதுமருமறைதெரிந்தமுனிவர்தேவர்முதல்வனைசிவனென்றுமவன்றன்பாதம், பிந்தாவன்பினிற்பூசித்துளோர்கள்பெருகுமுத்திபெறுவரென்றுபேசுவாரால். (௯)

இன்னபரிசாற்றேவர்பாருமேருவிருஞ்சிகரந்தனிற்சூழ்ந்தேயிருக்கவீச, னுன்னதமாங்கயிலாயசிகரந்தன்னிலொளிர்மணிமண்டபத்தரியாசனத்திலேறிக், கன்னியுமையோடும்விளையாடல்செய்துகருதருமுத்தொழில்புரிந்தேயுறுவன்கண்டீர், பன்னரியலீலையிலிப்படிசெய்தாலும்பரனுண்மைநிர்க்குணமலால்வேறில்லை. (௧௦)

அறிவிலருசிவலிங்கார்ச்சனையிலேபற்றனசிலதேவர்கிளைந்தண்ணறன்னைச், சறுவசந்ததாகர்த்தன்சறுவசீவதயாபரன்மெய்ச்சறுவகாரணனுமற்றனைக், குறிகுணங்களில்லானத்துவிதமானகோமானென்றறிந்தருச்சித்தநாதன், கிறுபையினாற்செகசாலசிருட்டியாதி கிரமத்தின்முத்தொழிலும்புரிகின்றாரால். (௧௧)

இத்தன்மையன்சிவனென்றுணராமாந்தரிரத்தவெப்புமலக்குழியினிடரினாழ்ந்தே, பித்துறுசென்மப்பிணியினகப்பட்டுழற்பெருநாற்றயோனிவழிப்புகுந்துமாழ்கிச், சத்துருவாமைம்புலனுற்றவிப்பரீசன்றனையல்லான்மற்றையதேவரைத்தான்பூசை, சித்தமுடன்புரியிலன்னோர்பதமுமுக்கட்டேவருளாலன்றியவர்க்குதவலாகா. (௧௨)

வேறு.

கடவுண்மிருத்திஞ்சயர்பூசைகருதிப்புரியவோர்கால
மடைகல்கொள்ளார்புண்ணியமூர்த்திகணீர்கேண்மினம்பையோடும்
விடையில்வருவாரன்றியேவேறுந்தேவர்தமைக்கனவி
னிடையுநினையாமவர்மகிமையெவர்க்கும்புவியிற்றெரியாதே (௧௩)
புவியின்மாந்தரிற்றுறந்துகோபத்தேனும்புறம்போந்து
சிவபோந்திதனைநினைத்தாலயத்திற்புகுநிகர்பதங்

* தொட்டலை-மகளிர்விளையாட்டு

